உ
திருமால் துணை.

# கலித்தொகை

## மூலமும்
## நச்சினார்க்கினியருரையும்.
## நான்காவது முல்லைக்கலி.



(௱௦௧.) தளிபெறு தண்புலத்துத் தலைப்பெயற் கரும்பீன்று
முளிமுதற் பொதுளிய முட்புறப் பிடவமுங்
களிபட்டா னிலையேபோற் றடவுபு துடுப்பீன்று
ஒளிபுட னிரைத்த ஞெகிழிதழ்க் கோடலு
மணிபுரை யுருவின காயாவும் பிறவு
மணிகொள மலைந்த கண்ணியர் தொகுபுடன்
மாறெதிர் கொண்டதம் மைந்துட னிறுமார்
சீறரு முன்பினோன் கணிச்சிபோற் கோடுசீஇ
யேறுதொழூஉப் புகுத்தன ரியைபுட னொருங்கு;
அவ்வழி, முழக்கென விடியென முன்சமத் தார்ப்ப
வழக்குமாறு கொண்டு வருபுவரு பீண்டி
நறையொடு துகளெழ நல்லவ ரணிநிற்பத்

துறையு மாலமுந் தொல்வலி மராஅமு
முறையுளி பராஅய்ப் பாய்ந்தனர் தொழூஉ;
கரு மேற்பாட் டுலண்டி னிறனொக்கும் புன்குருக்க
ணோக்கஞ்சான் பாய்ந்த பொதுவனைச் சாக்குத்திக்
கோட்டிடைக் கொண்டு குலைப்பதன் றோற்றங்கா





ணஞ்சி ரசையியல் கூந்தற்கை நீட்டியா
னெஞ்சம் பிளந்திட்டு நேரார் நடுவட்டன்
வஞ்சினம் வாய்த்தானும் போன்ம்;

உக சுடர்விரிந் தன்ன சுரிநெற்றிக் காரி
விடரியங் கண்ணிப் பொதுவனைச் சாடிக்
குடர்சொரியக் குத்திக் குலைப்பதன் றோற்றங்காண்
படரணி யந்திப் பசுங்கட் கடவு
ளிடரிய வேற்றெருமை நெஞ்சிடந் திட்டுக்
குடர்கூளிக் கார்த்துவான் போன்ம்;
உஎ செவிமறை நேர்மின்னு நுண்பொறி வெள்ளைக்
கதனஞ்சான் பாய்ந்த பொதுவனைச் சாடி
நுதிநுனைக் கோட்டாற் குலைப்பதன் றோற்றங்கா
ணிரு ளென்னு னருங்கங்குல் வந்துதன்
றுளிற் கடந்தட்டுத் தந்தையைக் கொன்றானைத்
தோளிற் றிருகுவான் போன்ம்;
எனவாங்கு;
கூச அணிமாலைக் கேள்வற் றரூஉமா ராயர்

மணிமாலை யூதுங் குழல்;

௩௬ கடாஅக் களிற்றினுங் கண்ணஞ்சா னேற்றை
விடாஅதுநீ கொள்குவை யாயிற் படாஅகை
யின்றனை வாயமக ளோள்;

௩௯ பகலிடக் கண்ணியன் பைதற் குழலன்
சுவன்மிசைக் கோலசைத்த கைய னயலது
கொல்லேறு சாட விருந்தார்க்கெம் பல்லிருங்
கூந்த லணைகொடுப்பேம் யாம்;

௪௩ கோளாள ரென்னொப்பா ரில்லென நம்மானுட்
டாளாண்மை கூறும் பொதுவ னமக்கொருநாட்
கோளாள னாகாமை யில்லை யவற்கண்டு
வேளாண்மை செய்தன கண்;

## நான்காவது முல்லைக். ௪௧௯

௪௭ ஆங்கு, ஏறும் வருந்தின வாயரும் புண்கூர்ந்தார்
நாறிருங் கூந்தற் பொதுமகளி ரெல்லாரு
முல்லையந் தண்பொழில் புக்கார் பொதுவரோ
டெல்லாம் புணர்குறிக் கொண்டு.

இஃது "ஆயர் வேட்டுவ ராடூஉத் திணைப்பெய, ராவயின் வரூஉங் கிழவரு முளரே" என்னும் (க) சூத்திரத்தில் 'திணைநிலைப்பெயராகிய கிழவருங் கிழத்தியரும் உளர்' என்னும் விதியாற்கொண்ட அத்தலைவிக்கு அவள் தோழி ஆயர் ஏறுதழுவுகின்றமைகாட்டி அவள் அதுகண்டு வருந்தாமல் ஆண்டுப் பெற்ற நன்னிமித்தங் கூறித்தெளிவித்து, *அதனை அவ்விதியாற்கொண்ட தலைவற்குங்கூறி, மீட்டும் அத்தலைவிக்குத் தீத் சுற்றத்தார் கூறியிருக்குங் கூற்றினையுங் கூறி, தலைவனும் இன்னும் ஒருஞான்று ஏறு தழுவி நம்மை வரைந்துகொள்வனென்று ஆற்றுவித்தது.

### இதன் பொருள்.

தளிபெறு தண்புலத்துத் (உ) தலைப்பெயற் கரும்பின்று
முளிமுதற் பொதுளிய (௩) முட்புறப் பிடவமுங்
களிபட்டா னிலைபோற் (௪) றடவுப (௫) தூடிப்பின்று

க. தொல். அகத். சூ. உக.
உ. "தலைப்பெய றலைஇய தண்ண றுங் கானத், திருள்படப் பொதுளிய பாசரை மாஅத்து" முருகு. கூ - கo.
ங. பிடாவென்பதுமுட்காலையுடையதொரு புதல்; மழைக்குத் தளிர்த்து அரும்பிக் குலைபாகப் பூப்பது; இதன்பூ நீண்ட காம்பையும் வெண்ணிறத்தையுமுடையது (அ)"முட்பிடவார்சிறுநெறி" (ஆ)"வான்பிசிர்க் கருவியிற் பிடவுமுகை தகையக், கான்பிசிர்தப்கார்தொடங்கின்றே" (இ) "சிறுசுரும் பிடவின் வெண்டலைக் குறும்புதல், கண்ணியின் மலருந் தண்ணறும் புறவில்" (ஈ) "குறும்புதற்பிடவி னெடுங்காலலரி" (உ) "நிலவெனத், தொகுமுகை விரிந்த முதுகாற் பிடவின்" எனவருதலும் காண்க. பிடாவென ஒரு மரமும் உண்டென்பர்.
ச. "தடவென் கிளவி கோட்டமுஞ் செய்யும்" தொல். உரி. சூ. உங.
ரு. (அ) "கார்தட் டுெப்பிற் கமழ்மடல்" மலை. ஙஙக. என்பதும் (ஆ) கலி. ருக: ங - ச வது அடிக்குறிப்பில் கார்தட்டுெப்பென வந்திருப்பனவும் ஈண்டு அறிதற்பாலன.
கூ. கோடலென்பது பெரும்பாலும் முல்லைநிலத்துக்குரித்தாகக் கூறப்படும்ஒருபூக்கொடி; இதன்குலைக்குப் பாம்பின் படமெடுத்தநிலையும்

(பிரதிபேதம்) * இதனை, † ஞெகிழிதழ்க் கோடலும்.

## கூஉ0 கலித்தொகை க0க.

ஞ (க)மணிபுரை யுருவின காயாவும் பிறவு
மணிகொள மலர்ந்த கண்ணியர் தொகுபுடன்
மாறெதிர் கொண்டதம் மைந்துட னிறுமார்
சீறரு முன்பினேன் (உ)கணிச்சிபோற் கோடுசீஇ
யேறுதொழூஉப் புகுத்தன ரியைபுட னொருங்கு

எ - து: மழைபெய்ப் பெறுகின்ற குளிர்ந்த நிலத்தே நின்ற கார்காலத்து முற்பட்ட மழைக்கு *அரும்பீனுகின்ற முன்புஉலர்ந்த முதலிடத்தே தழைத்த முள்ளைப் புறத்தேயுடைய பிடவம்பூவும், (ங) கள்ளுண்டு†களித்தலுற்றவ

இதன்பூவுக்கு விளக்கும் உவமையாகக் கூறப்படுகின்றன; இஃது இடையராற் சூடப்படுவது; இது பெரும்பாலும் வெண் காந்தளுக்கே பெயராய்வருமென்பர்; இங்குச்செங்காந்தட்கு வந்திருப்பது புண்டரீக மென்பது செந்தாமரைக்கு வருவதுபோல அருகியவழக்கு; (அ)"குருவுடையன கொடிமிடைவொடு குலைவிரிவன கோடல்" (ஆ) "வெஞ்சின வரவின் பையணந் தன்ன, தண்கமழ் கோட ரூதுபிணி யவிழ" (இ) "அணர்த்தெழு பாம்பின் றலைபோற் புணர்க்கோடல், பூங்குலை யீன்ற புறவு" (ஈ) "கோடலங் தீப மேந்தி" (உ) "வரிவெண்கோடல் வாங்குகுலை வான்பூப், பெரிய சூடிய கவர்காற் கோவலர்" என்பவற்றால் இவை விளக்கும்; இதுவும் மகளிர்வளையலும் ஒன்றற்கொன்று உவமையாதல் இந்நூற்பக்கம் சசு: க-ஆம் குறிப்பால் அறியலாகும். தோன்றி யென்பதும் இதன்வகைபோலும்.

க. (அ) "மணிக்காயா" பொருந. உ0க. (ஆ) "மணியெனத், தேம்படு காயா மலர்ந்த" ஐங். சஉ0.

உ. கணிச்சி, மழுவின் வேறுய தொருபடை; இதனை, "கையது கணிச்சி யொடு மழுவே மூவாய், வேலு முண்டத் தோலாதோற்கே" என்பது வலியுறுத்தும்.

ங. (அ)"காளா தந்து கறவுகொடைடு தொலைச்சி, யில்லடு கள்ளின் றேப்பி பருகி............தோளோச்சி வலன் வளையூஉப், பகன்மகிழ் தூங்குந் தூங்கா விருக்கை" பெரும்பாண். கசக - கசசு. (ஆ) "தசும்பு துளங்கிருக்கையென்றது தன் களிப்புமிகுதியால் தன்னை யுண்டாருடல்போல அத்தசும்பிருந்து ஆடும்படியான இருப்பென்றவாறு; இச்சிறப்பான், இதற்கு, 'தசும்புதுளங்கிருக்கை' என்றுபெயராயிற்று" பதிற். சஉ: கக.உரை.(இ) "துழந்தடு கள்ளின் றேப்பியுண் டயர்ந்து, பழஞ்செருக் குற்ற வனத்தர்ப் பாணியும்" மணி. எ: எக - எஉ. (ஈ) "அரிய லார்ந்த வனத்தர்" தனிகை. திருநாட்டு. க00.

(பிரதிபேதம்) * அரும்பியீனு கின்ற, † களிந்ததுற்றவனின்மை ‡ விளர்ந்ததுப்பு.

ஈன்று, பின்னர்க்(க)தீயைக் கடைந்து, அதிற்பிறந்த நெருப்பைச்சேரநிரைத் தாற்போன்ற அலர்ந்த இதழினையுடைய செங்காந்தட்பூவும், நீலமணியை யொக்கும் நிறத்தினையுடையவாகிய(உ)*காயாம்பூக்களும் பிறவும் அழகுகொள் ளும்படி சூடிய கண்ணியையுடையவர் சேரத்தொக்கு ஏறுதழுவுவாரோடே மாறுபடுதலை ஏறட்டுக்கொண்ட தம் மைந்தினைச் சேரநிறுத்துதற்கு மகட் கொடை நேர்ந்த ஆயர் சேரக்கூடி, பிறரால் சீறுதற்கரிய வலியினையுடைய இறைவனுடைய குந்தாலிப்படைபோலே கூரிதாகக் கொம்புகளைச் சீவி, ஏறு களைச் சேரத் தொழுவிடத்தே புகுதவிட்டார். எ - று.

தண்புலத்துநின்ற பிடவும் காந்தளும் காயாவும் பிறவுமென்க. இவை (ங)முதற்பொருட்கேற்ற அடையடுத்துநின்ற ஆகுபெயர். ஈன்றென்பது இறந்த காலமுணர்த்துஞ் செய்தெனெச்சம். (ச) ஞெகிழியுடனென்னாது ஞெலிபட னென எச்சமாகக்கூறுதலின் இவ்வாறு பொருள் †கூறினும். "ஞெலிகோற் கொண்ட பெருவிறன் ஞெகிழி" (ரு)என்பதனானும் இது வினைச்சொல்லாம்.

அவ்வழி, முழக்கென இடியென முன்சமத் தார்ப்ப
வழக்குமாறு கொண்டு வருபுவரு பீண்டி
நறையொடு துகளெழ நல்லவ ரணிநிற்பத்
(௬)துறையு மாலமுந் தொல்வலி மராஅமு
முறையுளி பராஅய்ப் பாய்ந்தனர் தொழூஉ

எ - து: அவ்விடத்து ஏறுகளைத் தழுவிப்‡போக்கும்படியை உட்கொண்டு வந்து வந்து திரண்டு மழைமுழக்கென்ன இடியென்ன நடுவானநிலத்தின்

---

க. "தீயி னன்ன வொண்செங் காந்தட்,... ......... .....நெருப்பி னன்ன பல்லிதழ்" மலை. கசரு-கசக.

உ. "காயாம்பூங் கண்ணிக் கருந்துவராடையை" கலி. ௧0அ: ௧0.

ங. ' தளிபெறு....................பிடவமும் " என்பது பூங்குயிலென்பது முதலாகிய தன் பொருட்கேற்ற அடையடுத்து நின்ற நோராகுபெய ரென்பதற்கும் (கோவையார். க: பேர்.) செய்தென்னும் வினை

யெச்சத்திற்கு நிகழ்கால வாய்பாடும் சிறுபான்மையுண்டென்பதற்கும் (தொல். வினை. சூ. ௩௧. நச்.) உகரவீறுசிறுபான்மை நிகழ்காலம் பற்றி வருமென்பதற்கும் (இ - வி. சூ. ௨௪௬.) மேற்கோள்.

௪. "கொடு மழைக் காற்று தங்கட் குளிர்பெயன் மாறவெண்ணி, நெடு மலை யெடுத்துக் காட்டு கெட்டிதழ்க் கார்தட் கொள்ளி"

௫. பெரும்பாண். ௧௭௮.

௬. (அ)"யாறுங்குளனும் வேறுபல் வைப்புஞ், சதுக்கமுஞ் சந்தியும் புதுப் பூங் கடம்பும்" முருகு. ௨௨௪-௨௨௫. (ஆ) "ஆலமும் கடம்பு நல்யாற்று நடுவும், கால்வழக் கறுங் லைக் குன்றமும்பிறவு, மவ்வவை மேய வேறு

ரேதிபேதம்) * காயாம் பூக்களுமழகுகொளனும்படி, † கூறிற்று. ளெனிகோத், ‡போகும் படியை யுணர்கொண்டு வந்து வந்து.



முன்னே ஆரவாரமெழப் புகையொடு தூகள் வழ ஏறுதழுவினர்க்குக் கொடுத் தற்கு நல்லமகளிர் திரண்டுநிற்ப * நீர்த்துறையிலும் (க) ஆலமரத்தின்கீழும் பழையவலியினையுடையமராமரத்தின்கீழும் உறையுந்தெய்வங்கட்குச் செய்யும் முறைமைகளைப் பரவித் தொழுவிலே பாய்ந்தார். எ - று.

"வளிவழக் கறுத்த வங்கம்" (௨) என்றாற்போல வழக்குப் போக்குதன் மேல்நின்றது.(௩) இடி ஏற்றின் இடிப்பிற்கு உவமம். அவர்பாய்ந்த அளவிலே தோழி தலைவியை அழைத்துக்காட்டுகின்றாளாக மேற்கூறுக.

கடு மேற்பாட் டிலண்டி னிறனெக்கும் புன்குருக்க
ணேக்கஞ்சான் பாய்ந்த பொதுவனைச் சாக்குத்திக்
கோட்டிடைக் கொண்டு குலைப்பதன் றோற்றங்கா
ணஞ்சீ ரசையியல் கூந்தற்கை நீட்டியா
(௪)னெஞ்சம் பிளந்திட்டு நோரா நுவெட்டன்
வஞ்சினம் வாய்த்தானும் போன்ம்

எ - து: உயர்ந்த கொம்பிடத்தே வைத்த(௫)உலண்டினது நிறத்தை யொக்கும் புல்லியநிறத்தைத் தன்னிடத்தேயுடைய எருத்தினது நோக்கை அஞ்சானாய் அதின்மேலே பாய்ந்த இடையனைச் சாவக்குத்திக் கொம்பிடத்தே

எடுத்துக்கொண்டுஉடலைக்குலைக்கின்றதனுடையதோற்றரவைக்காணும்;அழகிய

- வேறு பெயரோ, யெவ்வழி ஞெயு நீயே" பரி ச: கஎ - எ௦. (இ) "துறைமிசை நினதிரு திருவடி தொடுகர்"சிலப். உச. 'குறமகள்'

க. (அ) "ஆலும் கடம்பு மணிமார் விலங்கிட்ட" கலி. க௦ச: உசு. (ஆ) "கடவுளாலத்து" நற். ஙசங: ச; புறம். கககூ: க.

உ. புறம். ஙசஅ: க.

ங. "உருமி னதிருங் குரல்போற் பொருமுரா, ளைல்லேறு" கலி. ககங: உச - உரு. என்பதும் அதன் குறிப்பும் இங்கே நோக்கற்பாலன.

ச. "நெஞ்சம் பிளக்கிட்டு நேரார் நடுவெட்டன், வஞ்சினம் வாய்த்தானும் போன்ம்" என்பது 'இட்டு' என்னு மிடைச்சொல் அசைநிலையாய் வருதற்கு மேற்கோள். நன். இடை. சூ. உஉ. மயிலை; விருத்தி; இரா. இ - வி. சூ. உஎஎ.

ரு. உலண்டென்பது தான் வெளிப்படுதற்கு வழியின்றித் தன்னுடம்பைத் தானூற்கு நூலாற் சுற்றிக் கூடாக்கிக் கொண்டு அதனுளிருந் திறக்கும் இயற்கையையுடையதொரு புழு; அந்நூலியற்ற அதுவே வல்லது. அது காட்டிலமிர்தென்று சிறப்பிக்கப்படுவது; அதனூலால் சிறந்த ஆடை செய்தலுண்டு; இவை (அ) "வரியுடல் குழக்குடம்பை னு றெற்றிப், போக்குவழி படையா துன்னுயிர் விடுத்தலி, னறிவு புறம்போய வுலண்டது போல" (ஆ) "போக்குவழி கண்டிடை

(பிரதிபேதம்) * நீர்த்துறையும் ஆலத்தின் மிழும்.



தலைமையினையுடைய மனமசைந்த இயல்பினையுடையளாகிய துரோபதையது தூய்ய கூந்தலிலே கையை நீட்டிய* துச்சாசனனுடையநெஞ்சைப் பிளந்து போகட்டுப் பகைவர்கூடவே தான்சொன்ன வஞ்சினத்தை வாய்க்கச்செய்த வீமசேனனைப்போலும். [1]எ - று.

போலும் போன்மெனத் திரிந்தது. †"னகாரை முன்னர் மகாரங் குறுகும்" (க)என்பதனன் மகரங் கான்மாத்திரையாய் நின்றது. புன்குருக்கண், ஆகுபெயர். சாவக்குத்தியென்பது "சாவ வென்னுஞ் ‡செயவெ னெச்சத் திறுதி வகரங் கெடுதலு முரித்தே" (உ) என்பதனல் வகரங்கெட்டது.

௩க (ங)சுடர்விரிந் தன்ன சுரிநெற்றிக் காரி
விடரியங் கண்ணிப் பொதுவனைச் சாடிக்
குடர்சொரியக் குத்திக் குலைப்பதன் றோற்றங்காண்
படரணி யந்திப் பசுங்கட் கடவு
ளிடரிய(ச)வேற்றெருமை நெஞ்சிடந் திட்டுக்
குடர் ‖கூளிக் கார்த்துவான் போன்ம்

---

புகாதூறு மூலண்ட, மாக்கியிடு கூடதனை யாத்திடுதல் போல" (இ) "குடம்பையுளுலண்டுபோலக்கோட்படும்வினையன்"(ஈ) "வாலுலண்டு கோற்றருத, தேன்புரிந்தி யார்க்குஞ் செயலரகா" (உ) "அரக்குலண்டு செந்தே னணிமயிற்பீலி, திருத்தகு காவியோடைந்து" (ஊ) "தூவிலு மூலண்டினு காரினு மியன்றன" என்பவற்றால் அறியப்படுகின்றன; இங்கே அதனிறம் புற்கென்றநிறமென்று சொல்லப்படுகிறது. இவ்வகை ஆராய்ச்சியால் இது பட்டுப்பூச்சி யென்பது விளங்கும்.

க. தோல். மொழிமரபு. சூ. கக.

உ. சாவ வென்னும் எச்சத்து இறுதிக்கணின்ற வகரவுயிர்மெய் கெட்டு நிற்றற்கு, "கோட்டிடைச் சாக்குத்தினன்" என்பது (தோல். உயிர் மயங்கு. சூ. எ. நச்; இ - வி. சூ. அ௫) இவற்றிலும், 'சாக்குத்தினன்' என்பது (தோல். உயிர்மயங்கு. சூ. எ. இளம்.நன். உயிரீற்று. சூ. கக. மயிலை. விருத்தி. இரா); இவற்றிலும் மேற்கோளாகக் காணப்படுகின்றன. 'சாக்குத்தினன்' என்பதனை முதனிலைவினை வினைமாத்திரையாய் நில்லாது வினையெச்சப் பொருட்டாய் நின்றதென்பர் பிரயோக விவேக நூலார். பிரயோக. ௩௰.

ங. "வள்ளுரு ணேமியான் வாய்வைத்த வளைபோலத், தென்னிறின் விளங்குஞ் சுரிநெற்றிக் காரியும்" கலி. ௧௦௩: ௯-௧௦.

ச. (அ)"ஏற்றெருமைநெஞ்சம் வடிம்பினிடர்திட்டு" கலி.௧௦௩: ௫௩. என

வும் (ஆ) "எற்றெருமை புகைத்தடரு மிருணிறத்த வெரிகுஞ்சிக்,

(பிரதிபேதம்) * தச்சவாசனுடைய, † 'மகர முன்னர் மகரங்குறுகும்' ‡ செய்தெனெச்சத் திறுதி, || களிக் காத்தயான். ,



எ- து: மதிவிரித்தாற்போன்ற சுட்டியைப் பெற்றியிலேயுடைய கரிய எருது முழைஞ்சியுடைய மலைபிற்பூவாற்செய்தஅழகையுடையகண்ணியை யுடைய பொதுவனைத் * துகைத்துக் குடர்சரியும்படி குத்திக் கோட்டிடைக் கொண்டு குலைப்பதனுடைய தோற்றரவைக் காணாய்; பல்லுயிரும் வருத் தத்தை அணிகின்ற ஊழிமுடிவிலே (க)பசியதிறத்தைத் தன்பாகத்தேயுடைய உருத்திரன் வருத்தத்தைச்செய்த எருவிய எருமையையேறுகின்ற(உ)கூற்றுவ னுடையநெஞ்சைப் பிளந்துபோகட்டு அவன் குடரைக் கூவிக்கிட்டு அவற்றின் வயிற்றை நிறைவிக்கின்றவனைப்போலும். எ - று.

எருமை, † ஆகுபெயராய்க் கூற்றுவனை உணர்த்திற்று.

௨௭ (௩)செவிமறை நேர்மின்னு நுண்பொறி வெள்ளைக்
கதனஞ்சான் பாய்ந்த பொதுவனைச் சாடி
நுதிநுனைக் கோட்டாற் குலைப்பதன் றோற்றங்கா
ணரிரு ளென்னு னருங்கங்குல் வந்துதன்
றுளிற் கடந்தட்டுத் தந்தையைக் கொன்றானைத்
தோளிற் றிருகுவான் போன்ம்

எ - து: செவிமறுவாயிருக்கின்ற விளங்கும் நுண்ணிய சிவந்த பொறி களையுடைய ஆயர் நேர்ந்துவிட்ட வெள்ளை யெருத்தினது கோபத்தை ‡ அஞ்சா னாய் அதன்மேலே பாய்ந்த பொதுவனை நுதிபைத் துகைத்து முனையினை

யுடைய கோட்டாலெடுத்துக் குலப்பதனுடைய தோற்றாவைக் காணுப; வருதற்கரிய கங்குலிலே அரிய இருளென்று கருதாஜய் வந்து துரோணு சாரியனைக் கொன்ற (ச)சிகண்டியைத் தன்முயற்சியாலே வென்று கொன்று தன் ப்ோ.ாால். ஈலையைத் திருகும் || அச்சுவத்தாமாவைப்போலும். எ - று

கூற்றம்" நைடத. பேரர்புரி. கூ௰. (இ)"கூற்றினொருமை யேறணிந்த சண்டையொலி" காசி. மணிகன்னிகை.கஅ. எனவும் வருதல் காண்க.

க. பயெ நிறமென்றது அந்நிறத்தையுடைய உமாதேவிபாரை.

உ. "சுடர்பொதி மூவிலை வேலுடைக் காலனைத் தண்டமதா, வுடறிய சேவடி யான்" தேவாரம்.

ங. (அ)"செம்மறு வெள்ளை" (ஆ) "கில்லைச் செவிமறை கொண்டவன்" கலி. ௧0௫: ௨உ, ௧0எ: அ. (இ) "நுண்பொறி வெள்ளை யடர்த் தாற்கே", "பொற்பொறிவெள்ளை யடர்த்தாற்கே", "தூநிறவெள்ளை யடர்த்தாற்கு" சிலப். கஎ: ச, ரு, எ.

ச. துரோணரைக்கொன்றவன் திட்டத்துய்மனும்வீமரைக்கொன்றவன் சிகண்டியுமாதலால் இங்கே சிகண்டியை யென்பது திட்டத்துய்மனை

(பிரதிபேதம்) * தொகைத்து. † ஆப்பெயராய்க், ‡ 'அஞ்சாறுப்த் தன்மேலே பாய்ந்த பொருவீனைத் தகைத்த முன்னிறு அனிபோதும் முனையினையுடைய' என்பது முந்திய படிப்பு. || அசுவத்தாமாவைப்போலும்.

## நான்காவது முல்லை க. 

சேர்வெள்ளையென்க. நுதியென்றது முனை ; எனவே, தலை யென்பது தோன்றிற்று *"நுதிக்கோலஞ்செய்து"(க) என்றாற்போல.

எனவாங்கு அசை.

இங்ஙனம் தோழி காட்டக்கண்டு ஈங்கணவற்கும் இங்ஙன மாகுமோ வென்று அஞ்சின தலைவியது அச்சத்தை ஆண்டெப்பெற்ற ஈன்னியித்தக்கண்டு தோழி †போக்குவானாக மேற்கூறுகின்றான்.

௧௪ அணிமாலைக் கேள்வற் றருஉமா (௨) ‡சாயர்
மணிமாலை யூதுங் குழல்

யென்றிருக்க வேண்டியதென்று தோற்றுகிறது. வியாசபாரதத்தில் அசுவத்தாமா திட்டத்துய்மனை அவனுறங்குகையில் காலாலுதைத்து நிலத்திற்றேய்த்துத் தன்வில்லின் நாணகயிற்றினால் அவன் கழுத்தைக் கட்டி இழுத்து அவனை மிதித்து வருத்தாநிற்க, அவன் வலியற்று, 'குரவன் காதலா! யான் புண்ணிய வுலகடையுமாறு என்னைப் படைக் கலத்தால் விரைந்து கொல்' என்று வேண்டவும், 'குரவனைக்கொன்ற பாவிகட்கு நல்லுலகங்களில்லையா; ஆதலால் நீ படைக்கலத்தால் கொல்லத் தக்காயல்லை' என்று மறுத்து மீட்டும் தன்கால்களால் உயிர் நிலைகளில் உதைத்துக் கொன்றான்" என்று காணப்படுஞ் செய்தியும் பின்பு, "வீடுமனைக்கொன்ற சிகண்டி எதிர்த்துப் புருவங்களுக்கிடையே வில்லால் அடிக்க, அவனைக் கத்தியால் இருதுணியாகத் துணித்தா னென்று காணப்படுஞ் செய்தியும் இங்கே அறிதற்பாலன. வில்லிபுத் தூரரும், "பருவாலகற்றி யிருவர்வீரரையும் பாசறை வாயிலி னிறுத்தி, மருவரும் கமல மாலையான்கடப்ப மாலையானென மனங் களித்துப், பொருவரு முனைக்குக் குரிசிலா யெல்லாப் போரினும் புறமிடா தடர்த்த, துருபதன் மதலை வரிசிலைத் திட்டத் துய்மனை மணித்தலை துணித்தான்", "கயில்புரி கழற்காற் றந்தையைச் செற்ற காளையைப் பாளையத் திடையே, துயில்புரி யமையத் திமைக்குமுன் சென்னி துணித்தனன் சுதனெனக் கலங்கி, வெயில்புரி வதன்முன் வல்லிரு ளிடையே யுணர்ந்தவர் வெருவுட னரற்றப், பயில்புரி சிலைக்கைச் சிகண்டியை முதலோர் பலருமவர் தனர்கள்பாஞ் சாலர்", "உத்தமோ சாவு முதாமனு முதலிட் டுள்ளவர் யாவரும் பிறரும், தத்தமோ கையினால் வந்தெதிர் மலைந்தோர் தலைகளாற் பலமலையாக்கி" என்று கூறியிருக்கின்றார்; வில்லி. பதினெட்டாம். ௨௧௧ - ௨௧௫.

௧. கோவையார். ௨௧௦.

௨. "அழல்போலு மாலைக்குத் தூதாகி யாயன், குழல்போலுங் கொல்லும் படை" குறள். ௧௨௨௮.

(பிரதிபேதம்) *, தநிக்கோலஞ் செய்ததென்றுற்டேசல. † போந்தினுளாக மேற்கூறுக. அணிமாலைக். ‡ சூயன்.

எ - து: ஆயர் ஊதுகின்ற குழல் நீலமணிபோலுங் காயாம்பூவாற் செய்த மாலையினை அணியும் இயல்பினையுடைய கேள்வனை நமக்குத் தருதற்கு நன்னிமித்தமாக இசைத்தது காண்; நீ அஞ்சாதேகொள்ளென்றாள். எ - று.

அது, மங்கலமான பண்ணைத் தருதலின் நிமித்தமாயிற்று.

௩.௯ கடாஅக் களிற்றினுங் கண்ணஞ்சா வேற்றை
விடாஅதாநீ *கொள்குவை யாயிற் படாஅதை
மீன்றன †வாயமக டோள்

எ - து: தோழி, தலைவனிடத்தே சென்று ஆண்மைசெய்த நிமித்தத்தை ஆராய்ந்துபார்க்கில், மதத்தையுடைய களிற்றினுங்காட்டிற் றறுகண்மையை யுடைய ஏற்றை நீ கைசெயிழவிடாது கொள்வை; இப்பொழுது இவ்வாய மகள்‡தோள் எனமகளிர் தோள்களிற்காட்டில்||வெற்றிக்கொடியை உண்டாக் கினவாமென்றாள். எ - று.

௩.௯ பகலிடக் கண்ணியன் பைதற் குழலன்
சுவன்மிசைக் கோலசைத்த கைய னயலது
கொல்லேறு சாட விருந்தார்க்கெம் பல்லிருங்
கூந்த லணைகொடுப்பேம் யாம்

எ - து: பின்னர்த் தலைவியிடத்தே வந்து எம்முடைய பலவான கரிய கூந்தலினையுடையவனை யாம் கூடுதற்குக் கொடுப்பேம்; கொல்லேற்றைச் சாடு தற்குச்சமைந்திருந்தவர்களுக்கென்று ÷நமர்கூறி, கூற்றம் தலைவனையொழிந்த பகற்பொழுதிலேஅலர்ந்த கண்ணியையுடையவன் வருத்தத்தையுடைத்தாகிய குழலினையுடையவன் ×சுவலின்மேலே கோலைவைத்தகையையுடையவனாகிய வினைவலபாங்கினோர்க்கு அயலதாயிருக்குங்காணென்றாள். எ - று.

அயலதென்றது ஏறு தழுவுதற்கு அரிதென்னும் + பொருட்டு. இம்மூன்று பெயரும் ஏறுதழுவினவர்களை நோக்கிக் கூறிற்று.

௪௩ (க)கோளாள ரென்னொப்பா **ரில்லென நம்மானுட்
டாளாண்மை கூறும் பொதுவ னமக்கொருநாட்

க. "தாளாள னென்பான் கடன்பட வாழ்பவன், வேளாள னென்பான்

விருந்திருக்க வுண்ணுதான், கோளாள னென்பான் மறவாதா னிம்மூவர்,கேளாக வாழ்த லினிது" (திரிகடுகம்.கஉ.) என்றுஞ் செய்யுளினும் இப்பகுதியிலுமுள்ள எதுகைச்சொற்கள் ஒப்பு நோக்கற்பாலன.

(பிரதிபேதம்) * கொன்னுமையாயிற், † ஆயர்மகள், ‡ தோன்மகளிர், தோள்விரமகளிர், || வெற்றிக்கொம்பையுண்டாக்கின, ÷ நமர்கூடிக்கூறுந்தலைவன் × அவன் மேலேயிருக்கின்ற கையையுடையவனு;மொழிந்தவினைவல, + பொருட்டாயிற்று, இம்மூன்று, ** இல்லை யெம்மாதுட்.

## நான்காவது முல்லை க.   கஉள்

*கேளாள ளுகாமை யில்லை யவற்கண்டு
வேளாண்மை செய்தன கண்

எ - து: யான் முற்கூறிய நிமித்தமேயன்றித் தலைவனைக் கண்டு என் கண்கள் உபகாரத்தைச் செய்கையினாலே ஏறுகொள்ளவல்லார் என்னை யொப்பார் பிறரில்லை யென்று நம்முடைய பசுத்திரளிலே நின்று தனது தாளாண்மையைக் கூறுந் தலைவன் பின்பு ஒருநாளிலேயாயினும் ஏறுதழுவி †நம்மைத் தனக்குக் கேளாக ஆளுந் தன்மையையுடையனுகாமை இல்லை யென்றாள். எ - று.

தாளாண்மை - முயற்சியை. ........ஆண்டு ‡போதவன். நம்மை, நமக்கு; உருபுமயக்கம். கண் வேளாண்மை செய்தலாவது, (க)இடக்கண் துடித்தல்; வலக்கண் || துடிக்கலாதிருத்தலும் நன்னிமித்தமாதலிற் செய்தனவெனப் பன்மையாற் கூறினள்.

சஎ × ஆங்கு, ஏறும் வருந்தின வாயரும் புண்கூர்ந்தார்
(உ)காறிருங் கூந்தற் பொதுமகளி ரெல்லாரு
(௩)முல்லையந் தண்பொழில் புக்கார் பொதுவரோ
டெல்லாம் புணர்குறிக் கொண்டு

எ - து: அவ்விடத்தில் ஏறுகளும் வருந்தின; இடையரும் புண்மிக்கா ரென்று எல்லாம் (விலக்குகையினாலே) தம்மைக் கொள்ளுதற்கு நின்ற

---

க. (அ) "கண்ணகி கருங்கணு மாதவி செங்கணு, முன்னிறை கரந்தகத் தொளித்துநீ ருகுத்தன, வெண்ணுமுறை யிடத்திலும் வலத்திலுங்

துடித்தன" சிலப். ௫:௨௩௭ - ௨௩௮ (ஆ) "போக மகளிர் வலக் கண்க டுடித்த" சீவக. ௨௪௭௩. (இ) "வலந்துடிக் கின்றதோ நான் செய் தீவினைச், சலந்துடித் தின்னமுந் தருவ துண்மையோ, பொலந் துடி மருங்குலாய் புருவங் கண்முதல், வலந்துடிக் கின்றில வருவ தோர் கிலேன்" (ஈ) "வஞ்சனை யான்வனத் திழைக்கு நாளிடை, வஞ்சனை யால்வலந் துடித்த வாய்மையா, லெஞ்சல வின்றுதா மிடந் துடித்தநா, லஞ்சலென் றிரங்குதற் கடுப்ப தியாதென்றாள்" கம்ப. காட்சிப். ௩௨, ௩௫. என்பவைகளும் (உ) கலி. ௪௬: ௪௪ - ௨௨. அடிக் குறிப்பில் இடந்துடித்தல் நன்மைக்குறியென்பதை யறிவிக்கும் மேற் கோள்களும் ஈண்டு அறிதற்பாலன.

௨. (அ) "நாந்தகா பிருங்கூந்தல்" (ஆ) "காறிருங் கூந்தலார்" கலி. ௫௪: ௫, ௯௫: ௨.

௩. "முல்லையங் தண்பொழில்" நாற். ரு. ௩. மேற்கோள்.

(பிரதிபேதம்) *கோளாளருகாலை, † ம்மைக்கொள்ளுதல்யானுமே ‡ பொதுவன்தன்மை மைக்கு ||துடித்தலாயிருத்தலும், X ஆக.

௬௨-ஆம் கலித்தொகை ௧௦௨.

பொதுவரோடே தாம் புணர்தற்கு வேண்டும் நிமித்தங்களைப் பெற்று நாறு கின்ற கரிய கூந்தலையுடைய பொதுமகளிரெல்லாரும் முல்லையையுடைய குளிர்ந்த பொழிலிடத்தே விளையாடுதற்குப் புக்கார்; நாமும் பொழிலிடத்தே விளையாடுதற்குப் போதுவாயாகவென்றான். எ - று.

அச்சூத்திரத்துட் பொதுவனென்னும் பெயர் முதலியனவும் அச் சாதியிற் றலைவர்க்கு வருதலுங் *கொண்டவாறுணர்க. "புறத்திணை மருங்கிற் பொருந்தி னல்ல, தகத்திணை மருங்கி னளவுத லிலவே" என்னும் (க) சூத்திரத்திற் கைக்கிளை பெருந்திணைக்கும் தலைவருந் தலைவியரும் பலராய் வருவரென்றலின், இதன் கணிதகத்துத் தலைவருந் தலைவியரும் பலராகக் கூறினர். இது சிறப்பில்லா ஆசுரமாகிய கைக்கிளை.

இதனால், தலைவிக்கு * கினைதல் பிறந்தது.

இது கொச்சகம் இரண்டும் வந்தமையிற் கலிவெண்பாவின் †வேறுபட்டு

(கOஉ.)கண்ணக னிருவிசும்பிற் கதழ்பெயல் கலந்தேற்ற
தண்ணறும் பிடவமுந் தவழ்கொடித் தளவமும்
வண்ணவண் டோன்றியும் வயங்கிணர்க் கொன்றையு
மன்னவை பிறவும் பன்மலர் துதையத்
ழு தழையுங் கோதையு மிழையு மென்றிவை
தைஇனர் மகிழ்ந்து திளைஇ விளையாடு
மடமொழி யாயத் தவரு ளிவள்யா
ருடம்போ டென்னுயிர் புக்கவ ளின்று;
க ஓஒ இவள், பொருபுக லல்லேறு கொள்பவ ரல்லாற்
திருமாமெய் தீண்டல ரென்ற கருமமா
வெல்லாருங் கேட்ப வறைந்தறைந் தெப்பொழுதுஞ்
சொல்லாற் றரப்பட் டவள்;
கஉ சொல்லுக; பாணியே மென்றா ரறைகென்றார் பாரித்தார்
*மாணிழை யாறுகச் சாறு;

---

க. தொல். அகத். ௬. ஒ௫. இச்சூத்திர வுரையிலும் அகப்புறமாகிய கைக்கிளை பெருந்திணைக்குச் சிறபான்மை தலைவரும் தலைவியரும் பலராகவருவ ரென்று கூறி, "ஏறம் வருந்தின........." புணர்குறிக் கொண்டு" என்பதை மேற்கோள் காட்டினர்; நச்.

(பிரதிபேதம்) *கதைத்தல். † வேறுபாட்டிலக்க.

நான்காவது முல்லை உ. கஉக

கடு சாற்றுள், பெடையன்னார் கண்பூத்து நோக்கும்வா யெல்லா
மிடைபெறி னோராத் தகைத்து;
கள தகைவகை மிசைமிசைப் பாயிய சார்த்துட
னெதிரெதிர் சென்றார் பலர்;
க௯ கொலைமலி சிலைசெறி செயிரயர் சினஞ்சிறந்
துருத்தெழுந் தோடின்று மேல்;
உக எழுந்தது துக

மேற்றனர் மார்பு
கவிழ்ந்தன மருப்புக்
கலங்கினர் பலர் ;

௨௫ அவருள், மலர்மலி புகலெழ வலர்மலிர் மணிபுரை நிமிர்தோள்
பிணைஇ
யெருத்தோ டிமிலிடைத் தோன்றினன் றோன்றி
வருத்தினன் மன்றவவ் வேறு ;

௨௮ ஏறெவ்வங் காணு வெழுந்தா ரெவன்கொலோ
வேறுடை நல்லார் பகை ;

௩0 மடவரே நல்லாயர் மக்க ணெருந
லடலேற் றெருத்திறுத்தார்க் கண்டுமற் றின்று
முடலேறு கோட்சாற்று வார் ;

௩௩ ஆங்கினி,
தண்ணுமைப் பாணி தளரா தெழூஉக
பண்ணமை யின்சீர்க் குரவையுட் டெண்கண்ணித்
திண்டோட் டிறலொளி மாயப்போர் மாமேனி
யந்துவ ராடைப் பொதுவனோ டாய்ந்த
முறுவலாண் மென்றோள்பா ராட்டிச் சிறுகுடி
மன்றம் பரந்த துரை.

*இஃது ஆயன் தலைவனாய் ஏறுதழுவினமை †சுற்றத்தார் கண்டுநின்று கூறியது.

முதற் பொருள்.

(பிரதிபேதம்) * இது, † சுற்றத்தார்க்கண்டு.

கண்(௧)ணக னிருவிசும்பிற் கதழ்(௨)பெயல் *கலந்தேற்ற
தண்ணறும் (௩)பிடவமுந் தவழ்(௪)கொடித் தளவமும்
வண்ணவண் டோன்றியும் (௫)வயங்கிணர்க் கொன்றையு
† மன்னவை பிறவும் பன்மலர் துதையத்
தழையுங் கோதையு மிழையு மென்றிவை
தைஇனர் மகிழ்ந்து ‡திளைஇ விளையாடு
மடமொழி யாயத் தவரு ளிவள்யா
‖ருடம்போ டென்னுயிர் புக்கவ ளின்று

எ - து: இடமகன்ற பெரிய விசும்பிலே விரைந்துவருகின்ற மழை தன்னிடத்தே கலக்கையினாலே அதனை ஏற்றுநின்ற + தண்ணிய நறிய பிடவமும் படர்கின்ற கொடியினையுடைய முல்லையும் நிறத்தினையுடைய வெளவிய (௬) தோன்றியும் விளங்குகின்ற கொத்தினையுடைய கொன்றையும் இவை

---

௧. (அ) "அகலிரு விசும்பில்" பெரும்பாண். ௧. (ஆ) "அகலிருவானத்து" மது. ௨௧௭; மணி. ௧௧: ௧௧.

௨. "தண்ணுளிக் கேற்ற பைங்கொடி முல்லை, முகைதலை திறந்த நாற்றம் புதன் மிசைப், பூமலர் தளவமொடு தேங்கமழ்ப்பு" குறுந். ௩௮௨.

௩. "தளிபெறு தண்புலத்துத் தலைப்பெயற் கரும்பீன்று, முளிமுதற் பொதுளிய முட்புறப் பிடவமும்" கலி. ௧0௧: ௧-௨.

௪. "கொடித்தளவமே" சீவக. ௧௬௫௧.

௫. "கொன்றை பொன்னிணர்", "நீடுசுரி யிணர சுடர்வீக் கொன்றை" நற். ௨௪௧: ௪; ௩0௨: ௫.

௬. தோன்றி, ஒருபூங்கொடி. மழைக்குத்தளிர்க்கு மியற்கையையுடையது; அதன் மலர் செந்நிறமானது. அம்மலருக்கு விளக்கும் பவழமும், கோழிச்சேவலின் றலைக்கு அம்மலரும் உவமையாகக்கூறப்படுகின்றன. இவற்றை, (அ) "வீடுகொடிப் பிறந்த மென்றகைத் தோன்றி, பவழத் தன்ன செம்பூத் தாஅய்" (ஆ) "கார்க்கேற், றெரிவனப் புற்றன தோன்றி" (இ) "நலமிகு கார்த்திகை நாட்டவ ரிட்ட, தலைநாள் விளக்கிற் றகையுடைய வாகிப், புலமெலாம் பூத்தன தோன்றி" (ஈ) "வான்றோன்றி, வில்விளக்கே பூக்கும் விதர்ப்பகாலை" (உ) "மாகதத்

தண்டித் ேறேன்றி விளக்கெப்ப" (௯) "தோன்றி தோன்றுபுபுதல் விளக்குறூஅ" (எ) "ஒண்சுடர்த் தோன்றி" (ஏ) "தோன்றி யொண் பூவன்ன, தொகுசெக் கெற்றிக் கனைக்கொள் சேவல்" என வருவன வற்ருல் அறிக.

(பிரதிபேதம்) * கலந்தெற்றத் தன்னன்றும், † இன்னவும் பிறவும், ‡ நினைவினையாடு, || உடம் பொடின்றுயிர், ✝ கன்னிய.

## நான்காவது முல்லை ௨. சஅக

போல்வனபிறவும் பூத்த பலமலர்கள் நெருக்கும்படி (க) தழையும் கோதையும் இழையுமென்று சொல்லுகின்ற இவற்றைக் கட்டினராய் அணிக்துமகிழ்ந்து நினைத்து விளையாடும்,மடப்பத்தையுடைத்தாகிய மொழியினையுடைய, ஆயத்தாருள்ளே * இன்று உடம்போடே என்னுயிர்க்குள்ளே புக்கவளாகிய இவள் யார்தானென்ருன் தலைவன். எ - று.

இழை, பூண்வடிவாகக் கட்டினது.

௯ †ஒஒ இவள், (௨)‡பொருபுக னல்லேறு கொள்பவ ரல்லாற்
திருமாமெய் தீண்டல ரென்று கருமமா
வெல்லாருங் கேட்ப வறைந்தறைந் || தெப்பொழுதுஞ்
சொல்லாற் றரப்பட் டவள்

எ - து: அதுகேட்ட பாங்கன், ÷ஒஒவென வியந்து இவள் பொருகின்ற Xபுகற்சியையுடையநல்ல எற்றைத் தழுவுமவரல்லது அழகினையுடைய மாந்தளிர்போலும் =நிறத்தையுடைய மெய்யைச் சேராரென்று எல்லாருங் கேட்டிருப்ப இதுகாரியமாகப் பலகாலுஞ் சாற்றிச் சாற்றி எப்பொழுதுஞ் சொல்லிய சொல்லாலே ✝அடிப்படக் கொண்டுவரப்பட்டவளென்ருன். எ - று.

கரு சொல்லுக

எ - து: அது கேட்ட தலைவன், அச்சுற்றத்தைநோக்கி இவன் ஏறுதழுவி இவளைக் கொள்வனென்று அவர்க்குக் கூறுகவென்ருன். எ - று.

பாணியே மென்று றறைகென்றுர் பாரித்தார்
மாணிழை யாறுகச் சாறு

க. தழை, பலவகையான தளிர் அரும்பு பூ முதலியவற்றாற் செய்து ஓரங்களை ஒழுங்காகக் கத்தரித்து இளைய மகளிர் உடுக்கும் உடை விசேடம்; "முடித்த குல்லை யிலையுடை நறும்பூச், செங்கான் மராஅத்த வாலிணர் இடையிடுபு, சுரும்புணத் தொடுத்த பெருந்தண் மாத்தழை, திருந்துகா ழல்குற் றிளைப்ப வுடீஇ" முருகு. உ0௧-உ0௪. "அரிய தாமே சிறுவெள் ளாம்ப, லிளைய மாகத் தழையா யினவே", "அணித்தழை நுடங்க வோடி மணிப்பொறிக், குரலங் குன்றி கொள்ளு மிளையோள்", "அம்பூந் தொடலை யணித்தழை யல்குற், செம்பொறிச் சிலம்பி னிளையோள்" புறம். உ௪௮: க-உ, ௩௪0: க-உ, ௩௪க: உ-௩. என வருதல் காண்க.

உ. "கொல்லேற்றுக் கோடஞ்சு வானை மறுமையும், புல்லாளே யாய மகள்" கலி. க0௩: ௬௨-௬௩.

(பிரதிபேதம்) * கின்றுடம்போடே, † ஒழிவன், ‡ பொருபுகழினல்லேறு, பொருபுகழ் கல்லேறு, || எப்போதும், ÷ ஒவெனவியந்து, × புகழ்ச்சியை, = சிறத்தினையுடைய, ✚ படிபடக்.



விடின் நின்னையின்றி *இறையினெல்லையில்சாமற் கழன்ற வளையினையுடைய இவட்கு இனிப் பிறைமையொக்குந்திருநுதலிற் றேன்றியபசலை ஒருகாலமும் வாராமல் மறையும்படியாகப் போமென வரைவுகடாயினள். எ - று.

இதனல், தலைவற்குப் புணர்ச்சியுவகை † பிறந்தது.

இது "பரத்தை மறுத்தல்வேண்டியும்" என்னும் (க) சூத்திரத்தாற் கைகோளிரண்டற்கும் பொதுவாகப் பொருள் கூறவும் பெறும்.

இது தாழிசையல்லா இடைநிலைப் பாட்டுப்பெற்றுப் புல்லாது விடுவாயெனக் குறைந்துவருதலின் யாப்பின்வேறுபட்டகொச்சகம். (அ)

(கஉ௫.) பொன்மலை சுடர்சேரப் புலம்பிய விடனோக்கித்
தன்மலைந் துலகேத்தத் தகைமதி யேர்தரச்

செக்கர்கொள் பொழுதினா னொலிநீவி யினநாரை
முக்கோல்கொ ளந்தணர் முதுமொழி நினைவார்போ
லெக்கர்மே லிறைகொள்ளு மிலங்குநீர்த் தண்சேர்ப்ப;
சா அணிச்சிறை யினக்குரு கொலிக்குங்கா னின்றிண்டேர்
மணிக்குர லென்னிவன் மதிக்குமன் மதித்தாங்கே
புள்ளரான்ற வொலியவா யிருப்பக்கண் டவைகானற்
புள்ளென வுணர்ந்துபிற் புலம்புகொண் டினையுமே;
க0 நீர்நீவிக் கஞன்றபூக் கமழுங்கா னின்மார்பிற்
றார்நாற்ற மெனவிவண் மதிக்குமன் மதித்தாங்கே
மலர்பதத் தசைவளி வந்தொல்கக் கழிப்பூத்த
மலரென வுணர்ந்துபின் மம்மர்கொண் டினையுமே;
கச நீணகர் நிறையாற்று மனிவுடன் வதிந்தக்காற்
றோண்மேலா யெனநின்னை மதிக்குமன் மதித்தாங்கே
கனவெனப் புல்லுங்காற் காணளாய்க் கண்டது
கனவென வுணர்ந்துபிற் கைபற்றுக் கலங்குமே;
எனவாங்கு;

---

க. தொல். கற்.௬ கஎ. இச்சூத்திரத்திணுரையிலும் இவர் இச்செய்யுளை இச்செய்திக்கே மேற்கோள்காட்டி, இதனைக் கைகோ ளிரண்டிற்குங் கொள்கவென்பர்.

(பிரதிபேதம்) * இனி இறைபிணொல்லை. † பிறந்தது. இது தாழிசை............கொச்சகம். இல பாதழை மறுத்தல்வேண்டியும்.

ஈருஉ கலித்தொகை க0உ.

எ - து: அவரும் ஆண்சென்று தழுவுதற்கு யாங்கள் * தாழ்த்திரே மென்றார்; அதுகேட்டு அவள் சுற்றத்தார் மாட்சிமைப்பட்ட இழையினையுடையாள் வழியாக நிகழ்த்தும் ஏறுகின்ற விழவைப் பரக்கச்செலுத்தி இவனையன்றி மற்றும் ஏறுதழுவுவார் உளராயினும் வருகவென்று பறையறைகவென்றார். எ - று.

கடு † சாற்றுள், பெடையன்னர் கண்பூத்து ‡நோக்கும்வா யெல்லா
(க)மிடைபெறி னேசாத் தகைத்து

எ-து. இந்தவிழவினைப் || பெடையையொப்பார் தங்கண்கள் பொலிவு பெற்று இவ்வழகைப் பார்க்குமிடமெல்லாம் நின்று பார்க்கும் பரணைப் பெறுவார்களாகில் அது தகைமையையுடைத்தென்றார். எ - று.

இதற்குமுன் உள்ளனவும் மேல்வருகின்றனவும் கண்டகூற்றத்தார் கூறியதாகப் பொருளுரைக்க.

கஎ தகைவகை மிசைமிசைப் = பாயிய ரார்த்துட
× னெதிரெதிர் சென்றார் பலர்

எ - து: அழகினையுடைத்தாகிய வகுப்பையுடைய அவ்வேறுகளின்மேலே பாய்கைக்குச் ✝ சேர ஆர்ப்பரித்து ஏறுகளினெதிரேயெதிரே பலருஞ்சென்றார். எ - று.

கஅ கொலைமலி சிலைசெறி ** செயிரயர் சினஞ் †† சிறந்
துருத்தெழுந் தோடின்று மேல்

எ-து: அப்பொழுது அவ்வேறுகள் கொலைத்தொழின்மிக்க ‡‡ சிலைசெறிந்த குற்றத்தைச்செய்யுஞ் சினமிக்கு வெவ்விதாயெழுந்து அவர்மேலே ஓடிற்று. எ - று.

உக எழுந்தது துகள்

எ - து: அப்பொழுது துகள் எழுந்தது. எ - று.

|| || ஏற்றனர் மார்பு
கவிழ்ந்தன மருப்புக்
கலங்கினர் பலர்

எ - து: அவர்களும் மார்புகளை எதிரே கொடுத்தார்; அவற்றின் கொம்புகளுங் கவிழ்ந்து குத்தின; அதனால், தழுவினவர்கள் பலரும் கலங்கிப்போனார். எ - று.

---

க. மிடை - பரண்.

பிரதிபேதம்) * தாழ்த்திரென்றார், † சாற்றுவன், ‡ நோக்குவாயெல்லா, || பெடையொப்பார், = பாயப்பார், பாய்மார், × னதிர்சென்றார், ✝ சேர வாரவாரித்து. ** செயிரினஞ். †† சிறந்து, செறிந்து, ‡‡ சிலைச்செறிந்த, || || ஏற்றனமார்பு.

கூ௬ பலதிணைந் தினையும் பைத னெஞ்சி
னலமர றேயு ழுழக்குமொன் றோழி
மதிமருள் வாண்முகம் விளங்கப்
புதுநல மேர்தரப் பூண்கநின் றேமே.

**இது தோழி தலைவியது ஆற்றமை கூறித் தலைவனை வரைவுகடாயது.**

**இதன் பொருள்.**

பொன்மலை (௩)சுடர்சேரப் புலம்பிய விடனோக்கித்
தன்மலைந் துலகேத்தத் *தகைமதி யேர்தரச்
செக்கர்கொள் பொழுதினா னொலிநீவி யினநாரை
முக்கோல்கொ ளந்தணர் முதுமொழி நினைவார்போ
லெக்கர்மே லிறைகொள்ளு (உ)மிலங்குநீர்த் தண்சேர்ப்ப

எ-து: (௩)பொன்னையுடைய அத்தகிரியிலே ஞாயிறு சென்றுசேர, அஞ்ஞாயிறு †உடனேபட, ஞாயிறின்றி வருந்தின உலகைநோக்கி உலகங்கொண்டாடும்படியாகத் தகைமையினையுடைய மதி எழாநிற்க, செக்கர்வானத்தைக்கொண்ட அந்திக்காலத்தின்கண்ணே, (௪) முக்கோலைக் கையிலே கொண்ட அந்தணர் முதியமொழியை நினைக்கின்றவர்களைப்போலே, இனமான நாரைகள் ஆரவாரத்தைக் கைவிட்டு இடுமணன்மேலே இறத்தலைச் செய்யும் இலங்குகின்ற நீரையுடைய சேர்ப்பனே! எ - று.

(௫) அந்தணர், காஷாயம் போர்த்த துறவர்கள். முதுமொழி - பிரணவம், பெரியநாரைசிறகுசிவந்திருத்தலானும்மூக்குத்‡தரையிலேசென்று||குத்துதலானும் அதனை முக்கோலை ஊன்றியிருந்தஅந்தணரோடு ÷ ஒப்புரைத்தார்.

(௬)நாரை பகற்பொழுதெல்லாம் பல்லுயிர்க்கு வருத்தஞ்செய்து இரை கவர்ந்து அந்திக்காலத்து ஓர் ஆரவாரமின்றித் தீங்குசெய்யாதாரைப் போலே

க. "தினக ரன்கரந் திகழ்க மண்டலம், பனிகொள் செக்கர்தம் படமதாகவே, யினிய வந்தனைக் கெறியும் வேலைசேர், புனித ரொத்ததப் புன்கண் மாலையே" வில்லி. குருபோர். கசஉ.

உ. "இலங்குநீர்ச் சேர்ப்ப" கலி: கஉடு: கரு.

௩. "அத்தமென்னும், பொன்னஞ் சிலம்பு கதிரோன் மறைதலும்" இறை.

ரு. கஅ. மேற்கோள்.

சு. இந்நூற்பக்கம் ௯அ: உ - ஆம் குறிப்புப் பார்க்க.

௬. "சிறுமீன் கவுட்கொண்ட செங்தூவி நாராய்" ஐந் - எழு. கஅ.

எ. "கூர்வாய்ப் பறைதபு பெருங்கிழ நாரை, வஞ்சினை தூங்கி யார நுண்ணூ, நீங்காப் பழனப் பெருநகர்க் கூடல்" கல். கூக: உ - சு.

(பிரதிபேதம்) * தகைமதி. † உடனேபட்டு. ‡ தகையிலே. || குத்தநலாறுமுக்கோலே, ÷ ஒப்புத்தார்.



குவிந்திருக்குஞ் சேர்ப்பன் என்றதனால், நின்னாட்டின் மகளிர் பிரிந்திருந்தார் உயிர்போதற்கு வேண்டுந் தீங்குகளைப் பகற்பொழுதெல்லாங் கூறி அந்திக் காலத்து ஆரவாரத்தைத் தவிர்ந்து நல்ல மகளிரைப் போலே ஒடுங்கி உறைகின்றார் என உள்ளுறையுவமங்கூறியவாறு உணர்க.

க அணிச்சிறை யினக்(க)குரு கொலிக்குங்கா னின்றிண்டேர்
மணிக்குர லெனவிவண் மதிக்குமன் மதித்தாங்கே
யுள்ளான்ற வொலியவா யிருப்பக்கண் (உ)டவைகானற்
புள்ளென வுணர்ந்துபிற் புலம்புகொண் டினையுமே

எ - து: அழகினையுடைத்தாகிய சிறகினையுடைய குருகுகள் இராக்காலத்து ஒருகால் ஒலிக்குமிடத்து நின்னுடைய திண்ணிய தேரின்மணியினோசையென்று இவள் மிகவும் துணியாநிற்கும்; துணிந்த அப்பொழுதே அப்பறவைகள் உள்ளடங்கிய ஒலியையுடையவாய் ஆரவாரியாதிருக்க, அதனைத் தன் (௩)மனத்தாலே தேர்மணியொலியல்லவென்று கண்டு, பின்னர் அவ்வொலியைக் கானலிடத்துப் பறவைகளொலியென்று உணர்ந்து, பின்பு தனிமைகொண்டு வருந்தாநிற்கும். எ - று.

௰ நீர்நீவிக் கஞன்றபூக் கமழுங்கா னின்மார்பிற்
றார்நாற்ற மெனவிவண் மதிக்குமன் மதித்தாங்கே
யலர்பதத் தசைவளி வந்தொல்கக் கழிப்பூத்த
மலரென வுணர்ந்துபின் மம்மர்கொண் டினையுமே.

எ - து: நீரைக் கைவிட்டு மேலாய் நெருங்கின பூ அலர்ந்து நாற

மிடத்து நின்மார்பிற் கிடந்த மாலையினது காற்றமென்று இவள் மிகவுந் துணியாநிற்கும்; துணிந்த அப்பொழுதே அப்பூக்கள் அலருஞ் செவ்வி

---

க. இந்நூற்பக்கம் ஏகஉ: ௫ - ஆம் குறிப்புப் பார்க்க.

உ. (அ) "அணிகடற் றண்சேர்ப்பன் றேர்ப்பரிமா பூண்ட, மணியரவ மென்றெழுந்து போந்தேன் - கனிவிரும்பும், புள்ளரவங் கேட்டுப் பெயர்த்தே னொளியிழா, யுள்ளுருகு நெஞ்சினே னாய்" ஐந்-ஐம். ௬௦.
(ஆ)"இமைமலைக்க ரகன்கானற்சேர்ப்பன், கமோமணியரவமென்று-கொமெக்குழாய், புள்ளரவங் கேட்டுக் கலுழ்ந்தான் சிறுகுடிய, ருள்ளரவ ரானுவ ரென்று" ஐந் - எழு. ௫க.

௩. காணுதலென்பதற்கு விளங்கவறிதலென்று மேலகேசியுரையாசிரியர் பொருள் கூறுதலால், இங்கே அது காதினுல் விளங்கவறிதலின்மேல் நின்றதென்றலுமாம். "நம்பி தந்த கீத மோச யக்து காண வோடினர்" (சீவக.உ௩கஎ) என்புழி, காணவென்பதற்கு, கேட்கவென்றுபொருள் கூறியிருத்தலும் இங்கே அறிதற்பாலது.

## ஐந்தாவது நெய்தல் கூ. எ௮௫

மிடத்து அவற்றை அசைத்த காற்றுவந்து தன்மேற்பட, அதனைக் கழியிற் பூத்த மலரினது மணமென்று உணர்ந்து, பின்பு மயக்கங்கொண்டு வருந்தாநிற்கும். எ - று.

கச நீணகர் நிறையாற்று ணினையுகள் வதிந்தக்காற்
(க)றேண்மேலா யெனநின்னை மதிக்குமன் மதித்தாங்கே
(உ)நனவெனப் புல்லுங்காற் காணளாய்க் கண்டது
கனவென வுணர்ந்துபிற் கையற்றுக் கலங்குமே

எ-து: உயர்ந்தமனையிலே மனத்தைநிறுத்துதலைமாட்டாளாய்(௩)நின்னை நினைத்து அவசத்தாற் சிறிதுதுயின்றவிடத்துத் தன்தோண்மேற்கிடந்தாயாக நின்னை மிகவுந் துணியும்; துணிந்த அப்பொழுதே மெய்யென்று கருதித் தழுவுமிடத்து உன்வடிவைக் காணளாய்த் * தான்கண்டது கனவாயிருந்த தென்று அறிந்து பின்பு செயலற்றுக் கலங்காநிற்கும். எ - று.

†எனவாங்கு

எ - து: என்று; எ - று. ஆங்கு, அசை.

கக (ச)பலநினைந் தினையும் பைதனெஞ்சி
னலமரு ணோயு ளுழக்குமென் (ரு)றோழி

க. (அ) "துஞ்சுங்காற் றோண்மேல ராகி விழிக்குங்கா, னெஞ்சத்தராவர் விரைந்து" குறள். கஉகஅ. என்பதும் (ஆ) "வேய்புரை மென்றோ ளின்றுயி லென்றும், பெறுஅன் பெயரினும்" குறிஞ்சி. உசஉ-உசங. (இ) "பாயல்கொண் டென்றோட் கனவுவார்" கலி. உச: எ. (ஈ) "இளையோள், பெருந்தோ ளின்றுயில் கைவிடு கலனே" அகம். கக: கங - கச. (உ) "நறுநுதலா, ராவி தளிர்ப்ப வவர்தோண்மேற் றுஞ்சினார்" (ஊ) "நல்லா ரவர்தோண்மேற் றுஞ்சினார்" சீவக. கபௌ, கபௌக. என்பவைகளும் (எ) "மென்றோட் டுயில்பெறும்" (கலி. கoச: உச) என்பதும் அதன் குறிப்பும் இங்கே அறிதற்பாலன.

உ. "நனவினா னல்காக் கொடியார் கனவினா, னென்னெம்மைப் பீழிப்பது" குறள். கஉகஎ.

ங. "நனவிற்றான் செய்தது மனத்த தாகலிற், கனவிற் கண்டு" (கலி. சக: ங - ச) என்பதும் அதன் குறிப்பும் பார்க்க.

ச. (அ) "பலநாடு நெஞ்சினேம்" (ஆ)"பலவுழு மனத்தோடு பைதலேன்" கலி. ருடு: கக, சக: கஎ.

ரு. "ஆய்நலம் பெயர்தரப், புரியுளைக் கலிமான்றேர் கடவுபு, விரிதண்டார் வியன்மார்ப விரைகநின் செலவே" (கலி. கஉச: கக - உக.) என்பதும் அதன் குறிப்பும் பார்க்க.

(பிரதிபேதம்) * நாங்கண்டது. † எனவாங்கு அசை.

99

எஅக கலித்தொகை கஉஎ.

மதிமருள் வாண்முகம் விளங்கப்
புதுநல மேர்தரப் பூண்கநின் றேரே

*எ-து: பலவற்றையும் நினைத்து வருந்தும் நோயையுடைய நெஞ்சாலே சுழலுதலையுடைய காமநோயிலே அழுந்தும் என் றோழியுடைய மதியென்று மருளும் ஒளியினையுடைய முகம் விளங்கும்படி புதிய நலம் எழுதலைச் செய்ய நின் தேர் குதிரையைப் பூண்பதாகவென வலைவுகடாயினான். எ - று.

இதனால், தலைவற்குப் புணர்ச்சி யுவகை பிறந்தது.

இஃது ஒத்தாழிசைக்கலி. (௧)

(௧௨௭.) தெரியிணர் ஞாழலுந் தேங்கமழ் புன்னையும்
புரியவிழ் பூவின கைதையுஞ் செருந்தியும்
வரிஞிமி றிமிர்ந்தார்ப்ப விருந்தும்பி யிசைபூதச்
செருமிகு நேமியான் றார்போலப் பெருங்கடல்
வரிமணல் வாய்சூழும் வயங்குநீர்த் தண்சேர்ப்ப;
கொடுங்கழி வளைஇய குன்றுபோல் வாலெக்கர்
நடுங்குநோய் தீரநின் குறிவாய்த்தா ளென்பதோ
கடும்பனி யறலிரு கயலேர்கண் பனிமல்க
விடும்பையோ டினைபெரு கிவளைநீ துறந்ததை;
குறியின்றிப் பன்னாணின் கடுந்திண்டேர் வருபதங்கண்
டெறிதிரை யிமிழ்கான லெதிர்கொண்டா ளென்பதோ
வறிவஞ ருழந்தேங்கி யாய்நலம் வறிதாகச்
செறிவளை தோளூர விவளைநீ துறந்ததை;
காண்வர வியன்றவிக் கவின்பெறு பனித்துறை
யாமத்து வந்துநின் குறிவாய்த்தா ளென்பதோ
வேய்நல மிழந்ததோள் விளங்கிழை பொறையாற்றாள்
வாணுதல் பசப்பூர விவளைநீ துறந்ததை;

அதனால்;

இறைவளை நெகிழ்ந்த வெவ்வநோ யிவடீர
வுரவுக்கதிர் தெறுமென வோங்குதிரை விரைபுதன்
கரையம லடும்பனித் தாஅங்
குரவுநீர்ச் சேர்ப்ப வருளினை யளியே.

(பிரதிபேதம்) *எ - ஐ: என்று பலவற்றையும்.

இதுவுமது.

இதன் பொருள்.

தெரியிணர் ஞாழலுந் தேங்கமழ் புன்னையும்
புரியவிழ் பூவின கைதையுஞ் செருந்தியும்
(க)*வரி(உ)ஞிமி (ங)றிமிர்ந்தார்ப்ப (ச)விருந்தும்பி யினைபூதச்
செருமிகு (ரு)நேமியான் றார்போலப் பெருங்கடல்
வரிமணல் வாய்சூழும் வயங்குநீர்த் தண்சேர்ப்ப

எ - து: போரின்கண் மிகுகின்ற சக்கரத்தையுடைய திருமால் திருத்தோளிற் சேர்ந்த மாலைபோலே பெரிதாகிய கடற்கரையில் அறலையுடைய மணலிடத்தே விளங்குகின்ற கொத்தினையுடைய(சு)ஞாழற்பூவும் தேன்நாறு

க. "வரிஞிமிறு" குறிஞ்சி. ககக.
உ. "பாம்பின் நீங்குரணிறக்குவங்குழல்போ, லிரங்கிசைமிஞிறொடு தும்பிதாதூத" கலி. நங: உஉ - உங.
ங. "இமிர்ந்தார்ப்ப" கலி. கஙக: க.
ச. "இருந்தும்பி யினையூத" கலி. கஉங: உ.
ரு. பலமலர்கள் விரவி நீளக் கிடத்தல்பற்றி, 'நேமியான்றார்போல' என்றார்; (அ) "பொருகடல் வண்ணன் புனைமார்பிற் றார்போற், றிருவில் விலங்கூன்றி" கார். க, எனவும் (ஆ) "அகலிரு வானத்துக் குறைவிலேய்ப்ப, வரக்கிதழ்க் குவளையொடு நீல நீடி, முரட்பூ மலிந்த முதுநீர்ப் பொய்கை" பெரும்பாண். உகஉ-உகச. (இ) "எருவை கோப்பவெழிலணி திருவில், வானி லணித்த வரிபூதும் பன்மலராற், கூனிவளைத்த சுனை" பரி. கஅ: சஅ - ருo, எனவும் வருபவற்றைநோக்குக.
சு. ஞாழல் - நெய்தனிலத்துக்கு உரித்தாகக் கூறப்படுவதொரு பூமரம்; (அ) அது "ஊர்க்கா னிவந்த பொதும்பரு ணீர்க்காற், கொழுநிழன் ஞாழன் முதிரிணர்கொண்டு, கழுமமுடித்துக் கண்கூடு கூழை" (கலி. கூஉ: க - ங) என்பதன் விசேடவுரையில் 'ஞாழன் முடித்தாளென நெய்த்தறலைவிபோலவும், ஊர்க்கா னிவந்த பொதும்பரென்றதனுன்

மருதத்துக்கண்டான் போலவுக்கூறி' என்றும்(ஆ)செய்தற்கு, 'மரம், புன்னையும் ஞாழலும் கண்டலும்' (தொல். அகத். சூ. கஅ. உரை.) என்றும் இவ்வுரையாசிரியர் எழுதியிருத்தலானும்(இ) செய்தற்றிணைக் கருப்பொருளுக்கு, "கழுஞாழல் கையினேந்தி என்பதனாற் பூவுங் கூறினார்" (சிலப்.பதி.விசேடவுரை) என்று அடியார்க்குநல்லார் எழுதியிருத்தலாலும் (ஈ) பரிபாடலும் புறநானூறும் ஒழிந்த மற்றைத் தொகை நூல்களினும் சீவக. சிலப். மணி முதலிய நூல்களினும் (பிரதிபேதம்) * வரியின்று.

**எஅ** கலித்தொகை கஉஎ

இன்ற(க)புன்னைப்பூவும்தளையவிழ்ந்தபூக்களையுடையனவாகிய(உ)தாழம்பூவும் தளையவிழ்ந்த பூக்களையுடையனவாகிய (ங) *செருந்திப்பூவும் வரியினையுடைய

---

நாற்கவி உச-ஆம் சூத்திரத்திலும் இது செய்தற்கே உரித்தாகக் கூறப் பட்டிருத்தலானும் அறியலாகும். இம்மரம் எக்கரிற்செழித்துவளர்வது; (உ) அது ஐங்குறுநூற்று ஞாழற்பத்தால் அறியலாகும். இதன் அரை யும் கொம்பும் கருநிறமுடையன; அவற்றை(ஊ)"ஏனோன்போ னிறங் கிளர்பு கஞலிய ஞாழலும்" (கலி. உ௯: ச) என்பதும் (எ) 'ச்யாமா' என வடமொழியிலுள்ள பெயரும் (ஏ) "செவ்வீ ஞாழற் கருங்கோட் டிருஞ்சினை" அகம். உ௪0: ங. என்பதும் வலியுறுத்தும். அவ்வரை பொரிந்திருப்பது; அது (ஐ) 'பொரியரை ஞாழலும்' சீவக. ௫௧௫. என் பதனால் அறியப்படும். செய்தனிவத்து மகளிர் இதன்குழை கொய்தும் இதனாலாக்கிய தழையுடுத்தும் இதிற்றூக்கிய ஊசலாடியும் இன்புறுவ ரென்பதுமரபு; அவற்றை (ஒ) "ஞாழன் மலரின் மகளி, ரொண்டழை யயருந் துறைவன்" ஐங். கசஎ. (ஓ) "கொய்குழை யரும்பிய குமரி ஞாழல்" நற். ௫௪: க.(ஔ) "கானன் ஞாழற் கவின்பெறு தழையள்" ஐங். ககக. (ஃ) "ஞாழ லோங்குசினைத் தொடுத்த, தாழைவீழ் கயிற் றூசல்" அகம். உ0:௫-௬. என்பவை வலியுறுத்தும். இது செறிந்தபூங் கொத்தினது; (அஅ)"இணர்ததைஞாழல்" பதிற். ௩0: க. என்பதனால் உணர்தற்பாலது. இது பசிய அரும்புள்ளது; (ஆஆ)"பசுஙகேணஞாழல்" குறுந். அச. என்பதனாற் பெறப்படும். இதன்பூ, பொன்னிறமும் சிறிய

உருவமும் நன் மணமும் வண்டினமொய்த்தலுமுடையது; அவற்றை (இஇ) "பொன்னிணர் ஞாழல்" ஐங். கசுக. (ஈஈ) "ஐயவி யன்ன சிறவீ ஞாழல்" குறுந். ருO.(உஉ) "கறவீ ஞாழல்" நற். கூ: க.(ஊஊ) "கணங்கொள்வண் டார்த்துலாங் கன்னி நறுஞாழல்" என்பவற்றால் அறிக. இப்பூ, பசப்புக்கும் சுணங்குக்கும் உவமையாதல் இந்நூல் கருக: கக - ஆம் அடிக்குறிப்பிற் காட்டப்படும். ஞாழலென்பது குங்குமம், ஒருவகைக் கொன்றை, கோங்கு, புலிநகக்கொன்றை முதலிய பலமரத்துக்கும் பெயராமாயினும் செய்தற்கருப்பொருளில் அதுபலினியையேகுறித்து வருமென்ப; பலினி யென்பது வடமொழிச் சிதைவு.

க. புன்னையின் செய்தி கலி. கருசு: கரு-ஆம் அடிக்குறிப்பிற்காணவாகும்.

உ. தாழையின் செய்தி கலி. கருக: சO ஆம் அடிக்குறிப்பிற் குறிக்கப் பெறும்.

ரு. (அ) "பாசிலைச், செருந்தி தாய விருங்கழிச் சேர்ப்பன்" (ஆ) "எக்கர் ஞாழல் செருந்தியொடு கமழ" (இ) "வண்டுபட, விரிந்த செருந்தி வெண்மணன் முனைக்கர்" (ஈ) "செருந்தி, யிருங்கழி தாழு மெறிகடற்

(பிரதிபேதம்) * செருந்திப்பூவும் சூழ்ந்துகிடக்கும் விளங்குகின்ற சேர்ப்பனே, எங்ஙனம் சூழ்ந்துகிடக்குமென்னில் யாரியின.



மிஞிறு சிறிதே ஒலித்து மிக ஆரவாரிப்பக் *கரிய தும்பிகள் தம்மில் இயைந்து தேனையூதச் †சூழ்ந்துகிடக்கும் விளங்குகின்ற கீரையுடையசேர்ப்பனே! எ-று.

கடலினது புலவுநாற்றமாகிய தீங்கினைப் பூக்களின்மணம் போக்கினவதனை அக்கடல் அறியாதிருக்கின்ற சேர்ப்பனென்றதனுன், நின்வருத்தத்தைத் தீர்க்க ‡ வேண்டுமென்று கருதி அவள் நின்னிடத்தே வந்து தீர்ந்த நிலையை நீயறிந்திலையென மேல்வருகின்ற தாழிசைப்பொருளையுள்ளுறுத்து உள்ளுறை யுவமந் தந்தவாறுகாண்க.

கூ கொடுங்கழி வளைஇய குன்றுபோல் வாலெக்கர்
(க) கடுங்குநோய் தீரநின் குறிவாய்த்தா ளென்பதோ
கடும்பனி யறலிகு கயலேர்கண் பனிமல்க
விடும்பையோ டினைபேங்க விவளாநீ துறந்ததை

எ - து: முன்னர்க் கடியதாகிய நீர் பின்னர்ச் சுவறுதலின் அறுதியை

புடைத்தாய் விழுகின்ற, கயலையொத்த கண் நீரற்று(உ)மல்குகின்ற அளவாய் நிற்க, வருத்தத்தோடே கெட்டு அழும்படி இவளை நீ துறந்தது, நின் மனம் நடுங்குதற்குக் காரணமாகிய காமநோய் திரும்படியாகச் சுறவு முதலியன வற்றையுடைமையாற் ‖ கொடிய கழிகள் சூழ்ந்த மலைபோல் உயர்ந்த வெண்மையையுடைய இம்மணலிடத்து நீ செய்த குறியிடத்தே தப்பாமல் வந்தாளென்பதோ? எ - று.

என்பதோ என்றது என்று சொல்லப்படுவந்தாளென்னும் பொருட்டு நில்லாது வாய்த்தாளென்னுஞ் சொல்லுணர்த்திய செய்கையின்மையுந் தானும் உணர்த்திப் பிரிவிலசைநிலையாய் நின்றது. இஃது "ஆக வாக வென்ப

. . . . . . . . . . .

தண் சேர்ப்ப" (உ) "பொன்னடர்ந் தன்ன வொள்ளிணர்ச் செருந்தி" (ஊ) "பருதியஞ் செல்வன்போ லிணரூழ்த்த செருந்தியும்" (எ) "அரும்பலர் செருந்தி நெடுங்கான் மலர்" (ஏ) "தலைநாட் செருந்தி தமனிய மருட்டவும்" (ஐ) "செருந்தி, காலை யேகன கம்மலர் இன்ற சாய்க் காடே" (ஒ) "பொன்னியன்ற, தட்டலர்ந்த பூஞ்செருந்தி" என்பவற்றால் செருந்தி நெய்தற்குரித்தாதலும் அதன் பூவினியல்பு முதலியனவும் அறியப்படும்.

க. "நடுங்குநோய் செய்தவர் நல்காமை நினைத்தலிற், கடும்பனிகைம்மிகக் கையாற்று வாழ்ந்தாங்கே, நடுங்குநோ யுழந்தவென் னலனழிய மணனேக்கி, யிடும்பைநோய்க் கிகுவன போலுமஃ தெவன்கொலோ" கலி. கஉ: கஙு - கசு.

உ. "கன்னிறை நெடுநீர் கரந்தன வடக்கி" என்பதும் அதனுரையும் இங்கே அறிதற்பாலன. சிலப். கஉ: சஎ; அடியார்க்கு.

(பிரதிபேதம்) * காரியதாகிய. † சூழ்ந்தவிடக்குமென்க, கடலினது, ‡ வேண்டுமென்று கருதி யவண்டத்தே, ‖ கொடியதாகிய.



தென்று, * மாவயின் மூன்றும் பிரிவி லசைநிலை" என்னும் (க) சூத்திரத்து என்ப † தென்றதற்கு உதாரணமாகக்காட்டினும்; அதனானுணர்க. ஏனையவும் இவ்வாறேகொள்க.

கo (உ)துறியின்றிப் பன்னாளின் கடுந்திண்டேர் வருபதங்கண்

டெறிதிரை யிமிழ்கான லெதிர்கொண்டா ளென்பதோ,
வறிவரு ருழந்தேங்கி (ங)யாய்நலம் வறிதாகச்
செறி(ச)வளை தோளூர விவளைநீ துறந்ததை

எ - து: தன்னறிவு வருத்தத்தே அழுந்தி அழுது ஆராய்ந்தநலம் சிறிதாகையினாலே முன்புசெறிந்தவளை தோளினின் றுங்கழன் றுவிழும்படி இவளை நீ துறந்தது, எறிகின்றதிரை யொலிக்கின்ற கடற்கரையிலே நின்னுடைய கடியதாகிய தேர் இன்ன காலத்தே வருமென்னுங்குறிப்பின்றிப் பலநாளும் வருங்காலத்தை(ரு)மனத்தாலே நோக்கி எதிர்கொண்டாளென்பதோ? எ-று.

திரையொலியால், தேரொலி கேட்டற்கு அரிதாகவும் அவ்வொலிகேட்டு எதிர்கொண்டாளென்றான்.

கசு கானவர வியன்றலிக் கவின்பெறு பனித்துறை
யாமத்து வந்துநின் குறிவாய்த்தா ளென்பதோ

---

க. தொல். இடை. சூ. கூஉ. இச்சூத்திரத்தின் இவுரையிலும்,'என்பது' என்றது என்றுசொல்லப்படுவதென்னும் பொருள்தந்து நில்லாது வாய்த்தாள், எதிர்கொண்டாள் என்னுஞ்சொற்கள் உணர்த்திய செய்க் நன்றியைத் தானும் உணர்த்தி நின்றதென்பதற்கு "நடுங்குநோய்... ......துறந்ததை" "எறிதிரை... .....துறந்ததை" என்னும் பகுதிகள் உதாரணமாகக் காட்டப்பட்டுள்ளன.

உ. களவொழுக்கத்துத் தேரேறிச்சென்று தலைவர்கூடுதற்கு, "குறியின்றி ........தோளூர விவளைநீ துறந்ததை" என்னும் பகுதி மேற்கோள்; தொல். பொருளி. சூ. கஅ. நச்.

ங. "மென்றோள் நெகிழவுந் திருநுதல் பசப்பவும், பொன்போல் விறற் கவின் றொலைத்த குன்ற நாடற்கு" ஐங். உகூ௦.

ச. வளையென்றது தொடியை; அது முன் 'செறி' என அடைகொடுத்தலானும் பின் 'தோள்' என இடங்குறித்தலானும் துணியப்படும். தொடி, வளையென்றும் வழங்கப்படுதற்கு, குறள். கஉஎச, கஉஎரு, பரிமேலழகருரையும் சான்று பகரும். 'முன் வளைகழல நின்றார்க்கு வருத்தமிகுதியால் தொடியுங் கழன்றன வென்க' (சீவக. சஅக. விசேடவுரை) என்பதும் இங்கே அறிதற்பாலது.

ரு. இந்நூற்பக்கம் எஅச: ங - ஆம் குறிப்புப்பார்க்க.

(பிரதிபேதம்) * ஆவியன் மூன்றும். † என்பதற்குக் காரணமாகக் காட்டினும்.

*வேய்நல மிழந்ததோள் விளங்கிழை பொறையாற்றாள்*
*வா ணுதல் பசப்பூர விவளைநீ துறந்ததை*

எ - து: மூங்கில் நன்னலனிழத்தற்குக் காரணமான தோள்களிற் கிடந்து விளங்குகின்ற பூண்களை அத்தோள் பொறுத்தலைச் செய்யாமல் மெலிந்து(௧)வாணுதல்பசப்புப்பரக்கும்படி இவளைநீ துறந்ததுநோக்கினோர்க்குக் காட்சி வரும்படியாகப் பண்ணினதோர் அழகைத்தான்பெறுகின்ற இப்பனித் துறையிலே ஈடுபோமத்தே நீ வந்து செய்த நின் வரவு உணர்த்திய குறியிலே தப்பாமல் வந்தாளென்பதோ? எ - று.

தன்மெலிவு தோள்பொறுமைக்குக் காரணமாய் நின்றது. ஆற்றாளையென்னும் முதல்வினை நுதல்பசப்பூரவென்னுஞ் சினைவினையோடு முடிந்தது. (௨) †இவளையென்றது இங்ஙனம் நன்மை செய்தவளையென்றும், நீயென்றது அங்ஙனங் குறைந்துநின்ற நீயென்றும் பொருள் தந்தன.

தாழிசைமூன்றும், பொச்சாப்பென்னுமெய்ப்பாடு ‡பயந்தன.

௧௮ அதனால்
இறைவளை நெகிழ்ந்த வெவ்வநோ யிவடீர
வுரவுக்கதிர் தெறுமென வோங்குதிரை விரைபுதன்
கரையம (௩)‖லடும்பளித் தாஅங்
(௪) குரவுநீர்ச் சேர்ப்ப வருளினை ÷யளியே

எ - து: வலியினையுடைத்தாகிய நீரையுடைய சேர்ப்பனே! நினக்குச் செய்ந்நன்றிக்கேடு உண்டாம், ஆகையினாலே அதுதீர வலியினையுடைய ஞாயிறு சுடுமென்று கருதி ஓங்குகின்ற திரை தன் கரையில் நெருங்கின

---

௧. (அ) "நீ துறத்தலிற், பல்லோரறியப் பசந்தன்று நுதலே" (ஆ) "வாணுதல் பசப்பச் செலவயர்ந் தனையே" ஐங். ௫௦, ௩௦௩. (இ) "நுதலூரும் பசப்பு" (ஈ) "பிறைநுதல் பசப்பூர" கலி. ௨௮: ௧௫, ௬௯: ௧0.

௨. "அந்தா மரையன்ன மேனியன் யானகன் றாற்றுவனோ" (கோவையார். ௧௨) என்பதன் விசேடவுரையில் 'நின்னையென்புழி உயிரினுஞ்

சிறந்த நின்னையென்றும், யானென்புழி இருதலைப் புள்ளினோருயிரோ ருகிய யானென்றும், அச்சொற்களால் விளங்கி நின்றன' என்று பேராசிரியர் எழுதியிருப்பதும் இங்கே அறிதற்பாலது.

௩. அடும்பின் செய்தியை, கலி. ௧௪௪: ௩௦-ஆம் அடிக்குறிப்பிற் காண்க.

௪. (அ) "உரவுநீ ரழுவத்து" மணி. ௭: ௧௨௫. (ஆ) "உரவுநீர் ஞாலத்து" பு - வெ. பாடாண். ௪௩. (இ) "உரவுநீர் நிலத்து" கம்ப. பால. ஆற்றுப். ௧௨. உரவு - வலி; உரவுதலெனின், உலவுதலென்றுகொண்டு, பரத்தலென்றலுமாம்.

(பிரதிபேதம்) * விளியாமத்தே, † மெனொன்றது. ‡ பயன், || அடும்பவிழ்தாங்கு மூரவுநீர், + அளிமே.



அடும்பை விரைத்தணித்தாற்போல இவளுடைய இறையில் வளைகழன்ற வருத்தத்தையுடைய நோய்தீரும்படி அருளினையாய் வரைந்துகொள்ளென வரைவுகடாயினாள். எ - று.

(க)வளைகழலுதல் வெளியாக வருத்தத்தைவிளக்குதல்பற்றிச் சுரிதகத்து வளைநெகிழ்தலைக்கூறினாள்.

இதனால், தலைவற்கு அசைவு பிறந்தது.

இஃது ஒத்தாழிசைக்கலி. (௧௦)

(௧௨௮.) தோடுறங் கருளா தவர்போ னின்று
வாடை தூக்க வணங்கிய தாழை
யாடுகோட் டிருந்த வசைநடை நாரை
நளியிருங் கங்கு னந்துய ரறியா
தளியின்று பிணியின்று விளியாது நரலுங்
கானலஞ் சேர்ப்பனைக் கண்டாய் போலப்
புதுவது கவினினை யென்றி யாயி
னனவின் வாரா நயனி லாளனைக்
கனவிற் கண்டியான் செய்தது கேளினி;

க௫ அலந்தாங் கமையலெ னென்றுனைப் பற்றியென்
னலந்தாரா யோவெனத் தொடுப்பேன் போலவுங்
கலந்தாங் கேயென் கவின்பெற முயங்கிப்
புலம்ப லோம்பென வளிப்பான் போலவும்;
க௬ முலையிடைத் துயிலு மறந்தீத் தோயென
நிலையழி நெஞ்சத்தே னழுமேன் போலவும்
வலையுறு மயிலின் வருந்தினை பெரிதெனத்
தலையுற முன்னடிப் பணிவான் போலவும்;
க௮ கோதை கோலா விறைஞ்சி நின்ற
வூதையஞ் சேர்ப்பனை யலைப்பேன் போலவும்
யாதென் பிழைப்பென நடுங்கி யாங்கே
பேதையை பெரிதெனத் தெளிப்பான் போலவும்;
ஆங்கு;

க. "நறைவன் றறந்தமை தாற்றுகோன் முன்கை, பிறையிறவா நின்ற வளை" தறஞ். கலிவ.

நான்காவது முல்லை உ. ஈ.ந.ந.

முன்னர்ப் பலரும் வருகவென்று சாற்றுதலிற் பல ஏறுகளும் விடப் பலருந் தழுவித் தோற்று *சென்றார்.

உ௫ அவருள்,(க)மலர்மலி †புகலெழ வலர்மலிர்மணிபுரைநிமிர்தோள்
‡பிணைஇ
§யெருத்தோ டியிலிடைத் தோன்றினன் றோன்றி
வருத்தினன் மன்ற||வல் வேறு

எ - து: அங்ஙனம் ஏறுதழுவ ÷ வந்தவர்களுட் பாத்தல் மிக்க விருப்பம் எழுதலாலே பூமலிந்த நீலமணியையொக்கும் நிறத்தையுடைய நெடிய தோள் களாலே ஏற்றின் கழுத்தை இறுகத் தழுவிக் கழுத்தோடேகூடக் கிடக்கின்ற (உ)குட்டேற்றிடத்தே தோன்றினான்; அங்ஙனந் தோன்றிப் பின்னர் அறுதி யாக அவ்வேற்றை வருத்தினனென்றார். எ - று.

௨அ =எறெவ்வங் காணு வெழுந்தா ரெவன்கொலோ
×வேறுடை நல்லார் பகை

எ-து: எற்றையுடைய நல்லவர்கள் தங்கள் எற்றினுடைய வருத்தத்தைக் கண்டு எழுந்திருந்தார்; அவன் தழுவினவாற்றிற்கு மகிழ்வதன்றிப் ÷ பகையாதல் என்னபயன் தருமென்றாள். எ - று.

கொல்லும் ஓவும், அசை.

௧0 மடவரே நல்லாயர் மக்க **கொருந
லடலேற் றெருத்திறுத்தார்க் ††கண்டுமேற் நின்று
முடலேறு கோட்சாற்று வார்

எ - து: முன்னொருநாளிலே கொல்லுதலையுடைய எற்றின் கழுத்திலே தங்கினவர்களைக் கண்டு வைத்தும்‡‡ இன்றும் உடலுகின்ற எற்றைத் தழுவச் சாற்றுவாராகிய நல்ல ஆயர் மக்கள் அறியாதவர்களேயென்றாள். எ - று.

௧௧ ||||ஆங்கு
தண்ணுமைப் பாணி தளரா ÷÷தெழூஉக
பண்ணமை யின்சீர்க் குரவையுட் டெண்கண்ணித்

---

௧. அறுசீரடி முதலி வந்ததற்கு "மலர்மலி புகலெழ வலர்மலிர் மணிபுரை நிமிர்தோள் பிணைஇ" என்பது மேற். தொல். செய். சூ. ௧௩. பேர்.

௨. குட்டேறு-எற்றின்முதுகில் புறக்கழுத்தையடுத்துத் திரண்டு உயர்ந்து தோன்றும் ஒருறுப்பு; இச்சொல் இவருரைநடையில் பயின்று வரும்.

(பிரதிபேதம்) *என்றுன், † புகமெழ அலர்மலி மணிபுரை நிரைதோள், ‡ பணைஇ, விலைஇ. § எருத்தோட்டியில், || இவ்வேறு, ÷ வந்தவர்கள் பார்த்தன்மிக்க, ∴தோன்றிய பின்னாறுநியாகவேற்றை, = எற்றெவ்வம், × எற்றுடை நல்லார்ப்பகை, ÷பகையாதலால்என்ன,**கெருநையடல்,கெருவையடல்,††கண்டுமேற்நின்று முடலேற்றுக்கோட்,‡‡ மீண்டுமுடது.|||| ஆங்கு தன். ÷÷எழுவுகப்ப

உரு. கனவினுற் கண்டேன் றோழி காண்டகக்
கனவின் வந்த கானலஞ் சேர்ப்ப
னனவின் வருதலு முண்டென
வனவரை நின்றதென் னரும்பெற லுயிரே.

இது வரைவிடையாற்றாய்ச் செல்கின்ற தலைவியது கவின்கண்டு வினயதோழிக்கு அவள் தான்கண்ட கனவுநிலையுரைத்தது.

இதன் பொருள்.

தோடுறந் தருளா தவர்போ னின்று
வாடை தூக்க வணங்கிய தாழை
யாடுகோட் டிருந்த வசைநடை நாரை
நளிமிருங் கங்கு னந்துய ரறியா
தளியின்று பிணியின்று விளியாது நாளுங்
கானலஞ் சேர்ப்பனைக் கண்டாய் போலப்
புதுவது கவினினை யென்றி யாயி
னனவின் வாரா நயனி லாளனைக்
கனவிற் கண்டியான் செய்தது கேளினி

எ - து: வாடைக்காற்று அசைக்கையினாலே வளைந்த தாழையின் அசைகின்ற கொம்பிலே இருந்த அசைந்தநடையினையுடைய நாரை நம் தோளைத் துறந்து நமக்கு அருளாதவரைப்போலே நின்று பெருமையையுடைய கங்குலிடத்து நந் துயரை அறியாமல் நம்மேலளித்தலின்றாய்த் (க)தனக்குக் காம நோயாலே வருத்தமின்றாய் மாறுமற் கூப்பிடும் கானலையுடைய அழகிய சேர்ப்பினையுடையவனைக் கண்டு (உ) கூடினாய்போலே புதிதாக ஓர் அழகினை

---

க. "தேற நேக்குழிக், களிப்பவுண் டினவனக் கன்னி நாரையைத், திளைத்தலின்" (சீவக. ௬௦.) என்பதற்கு, 'தேறல் மிக்குச் செறிந்த இடத்தே, காமவின்பம் அறிந்த அன்னம் அதனையுண்டு காமவின்ப நுகர்ந்தறியாத நாரையைப் 'புணர்தலின்' என இவ்வுரையாசிரியர் எழுதியிருப்பது இங்கே அறிதற்பாலது.

உ. (அ) "ஆரிடை யென்றாய்நீ யாவஞ்சாய் வந்தக்கா, னீரற்ற புலமே

போற் புல்லென்றன் வைகறை, கார்பெற்ற புலமேபோற் கவின் பெறும்" (கலி. ௩௮: ௧௦ - ௧௨) என்பதும் (ஆ) இந்நூற்பக்கம் ௨௧௨: ௧-ஆம் குறிப்பும் (இ) "நாடன், புணரிற் புணருமா றெழிலே பிரியின், மணியிடை பொன்னின் மாமை சாயவென், னணிநலஞ் சிதைக்குமார் பசலை" என்பதும் இங்கே அறிதற்பாலன.



புடையையானுயென்று கூறுகின்றாயாயின் வெளியாக வாராத உறவில்லாத வனைக் கனவிடத்தே கண்டு யான் செய்த காரியத்தை இப்பொழுது கேள். எ - று.

௧௦ அலந்தாங் (௧)கமையலெ (௨)னென்றானைப் பற்றி(௩)யென்
னலந்தாரா யோவெனத் தொடுப்பேன் போலவுங்
*கலந்தாங் கேயென் கவின்பெற முயங்கிப்
புலம்ப லோம்பென வளிப்பான் போலவும்

எ - து: நின்னைப் பிரிந்த இடத்து வருந்தி உயிர்வாழேனென்று கூறின வனைப் பிடித்துக்கொண்டு நீகொண்ட என் நலத்தை இனித் தாராயென்று வளைத்துக்கொள்வேன்போலேயும், அவ்விடத்தே என்னுடையகழிந்த அழகை யான் பெறும்படி புல்லிக் கூடி இனி வருந்தாதேகொள்ளென்று கூறி என்னையும் அளிப்பான்போலேயும். எ - று.

௧௪ (௪)முலையிடைத் துயிலு மறந்தீத் தோயென
நிலையழி நெஞ்சத்தே னழுவேன் போலவும்

---

௧. "நின்னின்றி யமையலேன் யானென்னு மவனாயின்" கலி ௪௭: ௧.
௨. (அ) "தந்தனை சென்மோ.......தண்கடற் சேர்ப்பநீ யுண்டவென் னலக்கே" (ஆ) "என்னலந் தந்து, கொண்டனை சென்மோ" (இ) "கன்னந் துறைவற் றொடுத்து நன்னலங், கொள்வா மென்றி தோழீ" குறுந். ௨௩௬; ௨௩௮; ௩௪௧. (ஈ) "நுண்ஞாண் வலையிற் பரதவர் போத்தந்த, பன்மீ னுணங்கல் கவருந் துறைவனைக், கண்ணினுற் காண வமையுங்கொ லென்றோழி, வண்ணந்தா வென்கந் தொடுத்து"

ஐந் - எழ. கக. எனவும் (உ) "இரவுகந்தருளு கனவினீர், பகலிழந்த கிறை பெறமுயன்றமொழி பதறுமாதர்" கலிங்க. உஎ. எனவும் வருவன காண்க.

ங. தொடுப்பான் பொருளாய்க் கொள்வான்கட் செல்லாதனவற்றை இரத் தற்கண் தாவென் கிளவி வருவதற்கு, "என்னலந்தாராய்" என்பது மேற்கோள்; தொல். எச்ச. ரு. மே. நச்.

ச. (அ) "நீயுந், தேம்பா யோதி திருநுத லிவிக், கோங்குமுகைத்தன்ன குவிமுலையாகத், தின்றுயி லமர்ந்தனை" அகம். உசல: க - கஉ. (ஆ) "அவர்கம், மேக்தமுலை யாகத்துச் சார்ந்துகண் படுப்பவும்" தொல். கற்; ரு. கு,கச. மேற்.(இ) "விரிந்த பைந்தலை வெள்ளிவெம் பாப்பணைத் துயின்ற, கருந்தழாய் முகில் கார்நிறக்கட்செவிச்சேக்கை, பொருந்தி யாக்கொரு புரிகுழல் புணர்முலைக் கோட்டி, னரந்த மூழ்கிய நறு மலர்ப் பிணையன்மேற்றுயிலும்" பாக. பதினாறுயிர் திருவிளை. ஙஉ.

(பிரதிபேதம்) * கவிழ்ந்தகே.

ஐந்தாவது நெய்தல் கக: எகரு

வலையுறு மயிலின் வருந்தினை பெரிதெனத்

(க)தலையுற முன்னடிப் * பணிவான் போலவும்

எ-து: என்னை மறந்ததேயன்றிப் பின்னர் அவசத்தான் முலையிடையிற் றுயிலுந் துயிலையும் மறந்தாயென் றுகூறிப் பழைய (உ)தன்மைகெட்ட நெஞ் சத்தையுடையேன் அழுவேன்போலேயும், அதுகண்டு (ங) வலையிலே அகப் பட்ட மயில்போலே காவலிலே அகப்பட்டுப் பெரிதும் வருந்தினையேயென்று கூறி அடிமுன்னே தன் தலையுறும்படி வணங்குவான் போலேயும். எ - று.

க. (அ) "முன்னடிப் பணிந்தெம்மை யுணர்த்திய வருதிமன்" கலி. எங: கரு. என்பதும் அதன் குறிப்பும் (ஆ) "பொய்ப்ப விடேஎ மெனி செருக்கிற் றப்பினே, னென்றடி சேர்தலு முண்டு" கலி. அக: கச - கரு. (இ) "சிற்றடிப் போது புல்லித் திருமகன் கிடப்ப" சீவக. உருலஅ. (ஈ) "தோடவிழ்தார் யானுந் தொடா வவனுமென், பாடகச் சீறடியின் மேற்பணிய - நாடகமா, வைகிய கங்கு றலைவரி, னுய்குவெ

னுலகத் தனியேன் யானே" பு - வே. கைக்கிளை. பெண்பாற். ௬௦. (உ) "செய்யுண் கரிகுழ லேரிழை யாய்சொன்ன வீளிரவின், மையுண் குவளை மலிபுன லூரன் மலர்க்கமலக், கையுந் தலையுமென் காலு மொன் றுன கனவுதன்னே, மெய்யென் றருவினை யேன்விழித் தேனென் விழியினமையே" (௩) "கதக்தணியத்; தொடர்ந்தகவாத துணையடித்தாமலை சூடவள்ளல்" (௪) "ஊர வணங்கியகின், முடிவைத்த செங்கையு மென்முலையாக முயங்கவுங்தென், னடிவைத்த செங்கையு மெங்கையர்காணி னறவுகன்றே" (௫) "எம்போன நெஞ்சமு நீருமென் பாத மிறைஞ்சுதனுங், கண்போலு மெங்கையர்காணினன்றே" (௬) "அனைகையன்னி, செல்லாக் குறையும் பொறும்பணிந் தேனும் மிணையடியே" (௭) "போற்றி யின்றென் பிழையை யெண்ணிச, சேறேலுஞ் சேரடி பற்றினன் யான்" (௮) "பிழையைக் கருதிடலுன், சரணஞ் சுமை மடியேற் கருளுன் றலையளியே" (௯) "நூபுரஞ்சேர், சீறடி மேல்விழுக் தேன்றவிர் வாயிக்தச் சீற்றத்தையே" (௰) "எங்கால் பிடிக்கின்ற தெங்கையர் காணி னியல்பலவே" (௧௧) "ஊரன் மலரடி வீழ்ந்து" (௧௨) "இளம்பிடி பஞ்சடி தொட்டவன்றே, கஞ்சமுத் தீன்றன" (௧௩) "சிறுத் தொண்டனென்னக், காலை முடித்தளை யெம்மையர் காணிற் கலக்குவம்" என்பவைகளும் ஈண்டு அறிதற் பாலன.

௨. நிலை - தன்மை; "நிலையொன்று பாதேம்யாம்" என்பது சிலப். ௨௪.

௩. (அ) "ஞ்சிறி முருங்கப் பீலிசாய, நன்மயில் வலைப்பட் டாங்கியா, முயங்கு தொறு முயங்கு மானில் யாயே" குறுந். ௨௪௪. (ஆ) "வலைப்படு மஞ்ஞையி னலஞ்செல" குறிஞ்சி. ௨௫௦. (இ) "வலையிடைப்பட்ட (பிரதிபேதம்) * பணிப்பான் போலவும்.

கஅ. (க)கோதை கோலா விறைஞ்சி நின்ற
ஊதையஞ் சேர்ப்பனை யலைப்பேன் போலவும்
யாதென் பிழைப்பென நடுங்கி யாங்கே
பேதையை பெரிதெனத் தெளிப்பான் போலவும்

எ-து: அன்னம் வணங்குகின்ற (உ)ஊதைக்காற்றையுடைய சேர்ப்பனை மாலையே கோலாகக்கொண்டு அடிப்பேன் போலேயும், அவ்விடத்தே யான் செய்த தப்பு யாதென்று கூறி நடுங்கி நீ பெரிதும் அறியாமையையுடையை யென்று தெளிவிப்பான் போலேயும், எ - று.

இத்தாழிசைகளுள் நெஞ்சினை உறுப்பும் உணர்வும் மறுத்தலுமுடைய தாகக் கூறி, எதிர்பெய்துகொண்ட தலைவ *னுருவும் அம்மூன்றுமுடைய தாய்ச் செய்யாமரபின செய்தனவாகக் கூறி, (ங)†உயர்திணையாகக் கூறிய வாறும் பிறவும் உணர்க.

"நனவு ‡ முரித்தா லவ்விடத் தான" (ச) என்பதனாற் கனவுகொள்க.

---

மானே போன்றுங், கஞ்சிகின் றழைக்கு யாத்துயர் கண்டு" மணி. கங: ஙஉ - ஙங. (ஈ) 'வலைப்படு மயிலென வருந்தினுரென்ன' சீவக. சஉச. உரை என்பன இங்கே ஒப்புநோக்கற்பாலன.

க. "நல்லார்தங் கோதையா, லலைத்த" (கலி.௬எ: ௬-எ) என்பதும் அதன் குறிப்பும் பார்க்க.

உ. ஊதைக்காற்று - ஊதையாகிய காற்று. ஊதை - பெருங்காற்று; குளிர் காற்றென்றலுமாம். இது செய்யுள் வழக்கில் "ஊதைகூட் டுண்ணு முகுபனி யாமத்து" என ஊதையென்றேவழங்குமாயினும் உலக வழக்கில் ஊதலென வழங்கும். இதனைக் கூதற்காற்றென்பாருமுளர்; இச்சொல் காற்றுக்குப் பொதுப்பெயராயும் வரும்.

ங. "உறுப்புடை யதுபோ லுணர்வுடை யதுபோன், மறுத்துரைப் பதுபோ னெஞ்சொடு புணர்த்துஞ், சொல்லா மரபி னவற்றொடு கெழீஇச், செய்யா மரபிற் றொழிற்படுத் தடக்கியும்" என்பது தொல். பொருளி. ௬. உ.

ச. தொல். பொருளி. ௬. ங. இச்சூத்திரவுரையிலும் இவர் "அலந்தாங்கு ...... ..பணிவான் போலவும்" என்ற பகுதிகளை மேற்கோள்காட்டி,

தன்னெஞ்சினை உறுப்பும் உணர்வும் மறுத்துரைத்தலுமுடையதாகக் கூறியவாறும், ஆங்கு எதிர்பெய்துகொண்ட தலைவனுருவும் உறுப்பும் உணர்வும் மறுத்துரைத்தலுமுடையதாகச் செய்யாமரபின செய்தவாகக் கூறியவாறும் அவை உயர்திணையாகக் கூறியவாறும் பிறவுமுணர்க' என்று தெளிவாக எழுதியிருக்கிறார்.

(பிரதிபேதம்) * உருவு மூவம மூன்று, † உயர்திணையாயவாறும். ‡ கூறித்தாதலவ்விடத்,

## ஐந்தாவது நெய்தல் கக. எச்சுள்

முன்னடிப்பணிவான்போலவும் அலைப்பேன்போலவும் என்றாள்; முன்னே தன்மனத்தின் அது நிகழ்தலுடைமையின். இதுவும், "மனைவி யுயர்வுங் கிழவோன் பணிவு, நினையுங் காலைப் புலவியு ளுரிய" (க)என்பதனாற் கொள்க.

ஆங்கு, அசை.

உரு. கனவினாற் கண்டேன் றோழி காண்டகக்
(உ)கனவின் வந்த கானலஞ் சேர்ப்ப
னனவின் வருதலு முண்டெனா
(ரு)*வனைவரை நின்றதென் னரும்பெற லுயிரே

எ - து: தோழீ! கனவிடத்தே கண்டேன்; அதனாலே என்னுடைய பெறுதற்கரிய உயிர் எனக்குத் † காட்சி தரும்படி கனவிலே வந்த கானலையுடைய அழகிய சேர்ப்பன் (ச)வெளியிலே வந்துகூடுதலும் உண்டென்றுகருதி அவன் அருளும் எல்லைக்கண்ணே அது சசையாக நின்றதுகாணெனக் கனவில் நிகழ்ந்தது கூறினள். எ - று.

---

க. தொல். பொருளி. சூ. ருரு. இச்சூத்திரவுரையிலும் இவர் "வலையுறு ..........அலைப்பேன் போலவும்" என்னும் பகுதிகளை மேற்கோள் காட்டி, 'இது முன்னே தலைவி மனத்து நிகழ்தலுண்மையிற் கனவிலும் கண்டாளென்றுணர்க' என்று குறிப்பும் எழுதியிருக்கிறார்.

உ. (அ) "கனவினு னல்கா தவரைக் கனவினாற், காண்டலி னுண்டென் னுயிர்" (ஆ) "கனவினு னுண்டாகுங் காம நனவினு, னல்காரை நாடித் தரற்கு" குறள். கஉகரு - கஉகச.

ரு. (அ) "அனைமது கையர் கொல்"(ஆ)"அனைத்தானு, மான்ற பெருமை

தரும்" துறவ். சுகக.

௬. (அ) "வார்கோட்டு வயத்தகர் வாராது மாறினுங், குரூஉமயிர்ப் புருவை யாசையி னல்கும்" (ஐங். உ௬அ.) என்பதற்கு, 'வார்கோட்டு வயத்தகர் வாராது மாறினும் பின்பு வரக்கூடுமென்னும் ஆசையாலே புருவை தங்குமென்றது, இவளும் இவ்வாறே நின்னைக் காணலாமென்னும் ஆசையாலே உயிரோடு வாழாநின்றாளென்பதாம்' என்றெழுதியிருக்கு முறையும் (ஆ) "பொறையிருக் தாற்றியென் னுயிரும் போற்றினே, னறையிருங் கழலவற்கா ணு மாசையால்" (இ) "புண்ணிய மூர்த்திதன் னைக், காணலா மின்னுமென்னுங் காதலாலிருந்தேன் கண்டாய்" (ஈ) "என்றன் பொருசிலை மேகந்தன்னைக், காணலாமென்று மாசைகவிக்க வென்னுயிகாத்தே, னேலா வுடலினிங்க வெளிதெனக் கெனவுஞ் சொன்னான்" கம்ப. உருக்காட்டு. கக. மாயாசனக. உஉ, சீதைகளம். ௩௬. என்பவைகளும் இங்கே ஒப்புநோக்கற்பாலன.

(பிரதிபேதம்) * தரும்படி. † அவன்வலை.

எ௯அ கலித்தொகை. கஉ௯.

இதனால், (க) கனவொடு மயங்கலென்னும் மெய்ப்பாடு தலைவிக்குத் தோன்றிற்று.

இஃது "இடைநிலைப்பாட்டு" (உ) என்றதனால், தாழம்பட்ட ஓசையின்றி வந்த இடைநிலைப்பாட்டுப் பெற்று வந்த ஒத்தாழிசைக்கலிப்பா. (கக)

(கஉ௯.) தொல்லூழி தடுமாறித் தொகல்வேண்டும் பருவத்தாற்
பல்வயி னுயிரெல்லாம் படைத்தான்கட் பெயர்ப்பான்போ
லெல்லுறு தெறுகதிர் மடங்கித்தன் கதிர்மாய
நல்லற நெறிநிறீஇ யுலகாண்ட வரசன்பி
னல்லது மலைந்திருந் தறநெறி நிறுக்கல்லா
மெல்லியான் பருவம்போன் மயங்கிரு டலைவர
வெல்லைக்கு வரம்பாய விடும்பைகூர் மருண்மாலை;
அ பாய்திரை பாடோவாப் பரப்புநீர்ப் பனிக்கட
றாவறத் துறந்தனன் றுறைவனென் றவன்றிற

நோய்தெற வுழப்பார்க ணிமிழ்தியோ வெம்போலக்
காதல்செய் தகன்றாரை யுடையையோ நீ;

கஉ. மன்றிரும் பெண்ணை மடல்சேர் அன்றி
லன்றறை கொன்றன ரவரெனக் கலங்கிய
வென்றுய ரறிந்தனை நாறியோ வெம்போல
வின்றுணைப் பிரிந்தாரை யுடையையோ நீ;

கக. பனியிருள் சூழ்தரப் பைதலஞ் சிறுகுழ
லினிவரி னுயருமற் பழியெனக் கலங்கிய
தனியவ ரிடும்பைகண் டினைதியோ வெம்போல
வினியசெய் தகன்றாரை யுடையையோ நீ;

எனவாங்கு;

உக அழிந்தய லறிந்த வெல்வ மேற்படப்
பெரும்பே தூறுதல் களைமதி பெரும.

---

க. இம்மெய்ப்பாட்டுக்கே "அலந்தாய்...........அளிப்பான் போலவும்" என்பது மேற்கோளாகக் காட்டப்பட்டிருக்கிறது; தொல். மெய்ப். சூ. உஉ. பேரா. இ - வி. சூ. ௫௮௦.

உ. தொல். செய். சூ. கக௨.

### ஐந்தாவது நெய்தல் கஉ. எகககூ

வருந்திய செல்ல றீர்த்த திறனறி யொருவன்
மருந்தறை கோடலிற் கொடிதே யாழநின்
னருந்தியோர் நெஞ்ச மழிந்துக விடினே.

இது "தன்னுட் கையாறெய்திடு கிளவி"(க)யால் தலைவி ஆற்றளாயின வாறு தோழி தலைவற்குக் கூறியது.

இதன் பொருள்.

(உ)தொல்லூழி தடுமாறித் தொகல்வேண்டும் பருவத்தாற்
பல்லுயி ருயிரெல்லாம் படைத்தான்கட் பெயர்ப்பான்போ
லெல்லுறு தெறுகதிர் மடங்கித்தன் கதிர்மாய
(ரு)நல்லற நெறிநிறீஇ யுலகாண்ட வரசன்பி
னல்லது மலைந்திருந் தறநெறி நிறுக்கல்லா

மெல்லியான் பருவம்போன் மயங்கிரு டலைவர
வெல்லைக்கு வரம்பாய விடும்பைகூர் மருண்மாலை

எ - து: பல உலகங்களில்உயிர்களெல்லாம் பழைதாகிய ஊழிக்காலத்தே பிறந்திறந்து தடுமாறித் திரியும்படி அயனாய்நின்று படைத்த முதல்வன் (௪)அரனாய் அவ்வுயிரெல்லாந் தன்னிடத்தேவந்துதொகுதலைத் தான்விரும்பும்

---

௧. இறை. சூ. ௩௦.

௨. "தொன்முறை யியற்கையின் மதியொ,........மரபிற் றாகப், பசும்பொ னுலகமு மண்ணும் பாழ்பட, விசும்பி னூழி யூழூழ் செல்லக், கருவளர் வானத் திசையிற் றோன்றி, யுருவறி வாரா வொன்ற னூழியு, முந்து வளி கிளர்ந்த வூழூ ழூழியுஞ், செந்தீச் சுடரிய வூழியும் பனியொடு தண்பெய றலைஇய வூழியு மவையிற், றுண்முறை வெள்ள மூழ்கி யார் தருபு, மீண்டும் பீடுயர் பீண்டி யவற்றிற்கு, முள்ளீ டாகிய விருநிலத் தூழியு, நெய்தலுங் குவளையு மாம்பலுஞ் சங்கமு, மையில் கமலமும் வெள்ளமு நுதலிய, செய்குறி யீட்டம்" பரி. ௨: ௧ - ௧௫.

௩. (அ) "அறிவுடை வேந்த னெறியறிந்து கொளினே, கோடியாத்துநாடு பெரிது நந்து, மெல்லியன் கிழவ னாகி...... .....பிண்ட நச்சின்,... .. தானு முண்ணா னுலகமுங் கெடுமே"(ஆ)"காவற் சாகா டுகைப்போன் மாணி, னூறின் றாகி யாறினிது படுமே, யுய்த்த றேற்றா னாயின் வைகலும், பகைக்கூ ழள்ளற் பட்டு, மிகப்பஃ றீநோய் தலைத்தலைத் தருமே" புறம். ௧௮௪: ௫ - ௧௧; ௧௮௫: ௨ - ௬.

௪. "பல்லுருவம் பெயர்த்துநீ" (கலி. ௧: ௫) என்பதும் அதன் உரையின் குறிப்பும் இங்கே அறிதற்பாலன.



ஊழி முடிந்த காலத்திலே தன்னிடத்தே மீட்டு ஒடுக்கிக்கொள்கின்றவனைப் போலே ஞாயிறு பகற்பொழுது வந்துசேர்தற்குக் காரணமான *தன்னுடைய தெறுகின்ற கிரணங்களைத் தன்னிடத்தே மீட்டுக்கொண்டு மறைகையினாலே

(க)நல்ல நீதிநூல் வழியாலே உலகை நெறியிலே நிறுத்தி அவ்வுலகை ஆண்ட அரசன் போயபின்னர் நீதியல்லதனை எடுத்துக் கொண்டிருந்து அறநெறியை உலகத்து நிறுத்தமாட்டாத குறுநில மன்னன்காலம்போலே மயங்கின இருள் உலகிடத்தேவரும்படி பகற்பொழுதிற்கு ஒரெல்லையாகிய, வருத்தமிகுதற்குக் காரணமான, மயக்கத்தையுடைய மாலைக்கண்ணே. எ - று.

மடக்கி, மடங்கியென விகாரம்.

மெல்லியான், படைமுதலியன இன்றி இளைத்தவன்.

எல்லை, (உ)மாணகாலமுமாம்.

அ (ங)பாய்திரை †பாடோவாப் பரப்புநீர்ப் பனிக்கட
(ச)றாவறத் ‡துறந்தனன் றுறைவனென் றவன்றிற
நோய்தெற ‖வுழப்பார்க ணிமிழ்தியோ வெம்போலக்
காதல்செய் தகன்றாரை யுடையையோ நீ

---

க. "அறமாவது: உயிர்களுக்கு இதமாவன செய்தலும் சத்தியஞ் சொல்லுதலும் தானதன்மங்கள் செய்தலுமாம்" என்று பதுமனார் கூறுதலால், 'நல்லற நெறிநிறீஇ' என்பதற்கு, நல்ல அறங்களைத் தன்னெறியால் உலகில் நிறுவியென்றலுமாம்; "நடையி னின்றுயர் நாயகன்" "என்னுயிரொழுக் கதற்கு வேண்டு முவமையொன் றுரைக்க வேண்டின்" "நெறியி னின்றதன் ஞயகன்" கம்ப. பாயிர. கக. நாடவிட்ட. சக. பாசப் சக. எனவருதலும் அறிக.

உ. "புல்லென் மருண்மாலைப் போழ்தின்று வந்தென்னைக், கொல்லாது போத லரிதா லதனெடியான், செல்லாது நிற்ற விலேன்" கலி. கசக: உக - ஙக.

ங. (அ)"இடையேவலை சோரவெழுந் துவிழுந், தடலேய்மத னன்சர மஞ்சினையோ, வுடலோய்வுற நாளு முறங்கலையால், கடலேயுரை நீயுமொர் கன்னிகொலாம்" கம்ப. கடிமணப். கக. என்றும் (ஆ) "போவாய் வருவாய் புரண்டு விழுந்திரங்கி, நாவாய் குழற நகைக்குறுவாய் - நீவ, யரவகற்று மென்போல வார்கலியே மாதை, யிரவகற்றி வந்தாய்கொ லின்று" நள. கலிநீங்கு. உக. என்று ஒருவாறு இதனையொத்தும் வருவன காண்க.

ச. (அ) "தாவறத் துறந்தாரை" கலி. ககஅ: க. (ஆ) "தாவறத் துறந்த

என்றென" மணி. உகு: கூ. என்பவைகளும் இந்நூற்பக்கம் எசஎ:
ரு - ஆம் குறிப்பில் இதற்கு பொருந்தபவையும் ஒப்புநோக்கற்பாலன.
(பிரதிபேதம்) * தனதுடைய, † பாட்டோயர். ‡ துறந்தவன்மேறைவன், || உயிழ்ப்பார்கள்.



எ - து: பரக்கின்ற திரை* ஒலித்தல் மாறாத பரந்தலை யுடைத்தாகிய நீரையுடைய பனிக்கடலே! துறைவன் எமக்கு வலியில்லையாம்படி துறந்தானென்று அவன் கூற்றாலே உண்டான காமநோய்கூட அதன்கண் அழுந்துவாரிடத்தே நின்று வருத்தவேண்டி முழங்குகின்றாயோ? அன்றியே முன்னர்க் காதல்செய்து பின்பு நீங்கினாரை எம்மைப்போலே நீயும் உடையையாய் வருந்துகின்றாயோ? எ - று.

கஉ (க)மன்றிரும் பெண்ணை மடல்சே ரன்றி
னன்றறை கொன்றன ரவரெனக் கலங்கிய
வென்றுய ரறிந்தனை நரறியோ (உ)வெம்போல
வின்றுணைப் பிரிந்தாரை யுடையையோ நீ

எ - து: மன்றிலே நின்ற கரியதாகிய பனையின்மடலைச் சேர்ந்திருக்கும் (ங)அன்றிலே! நந்தலைவர் தாஞ்செய்த நன்றுகளையான் இருந்துசொல்லுதலைக்

---

க. (அ)"மன்றப் பெண்ணை வாங்குமடற் குடம்பைத், துணைபுண ரன்றில்" நற். ஙஎ௩: ௭ - ௯. (ஆ) "மன்றலம் பெண்ணை மடல்சேர் வாழ்க்கை, யன்றிலும் பையென நரலும்" குறுந். கஎஎ.

உ. திணையும் பாலும் விளக்கமில்லாத சொற்களுள் நீஎன்பது குறிப்பான் அஃறிணையுணர நிற்றற்கு, (அ) "எம்போல........நீ" என்பது (தொல். பெயர். சூ. ௩எ. 'இன்னபெயரே' தெய். உரையிலும்) (ஆ) "இன்றுணை..........நீ" என்பது (தொல். பெயர். சூ. ௩௬. நச். உரையிலும்) மேற்கோள்.

ங. அன்றிலென்பது நெய்தனிலத்துக்கு உரித்தாகக் கூறப்படுவதொரு பறவை; கழிமீன் முதலியவற்றையுண்டு பனைமரத்திற் சிறுகோலாற் கூடுகட்டிக்கொண்டு வதிவது; செந்தலையையும் வளைந்ததும் செந்நிறத்ததுமாகிய வாயையும் கரிய காலையுமுடையதென்று கூறப்படு

கிறது; துணையின்மேல் மிக்க காதலையும் அதனைப் பிரியாத தன்மையையும் பிரியின் துயிலாது நடுங்கி வருந்திக் கதறுந் தன்மையையுமுடையது; நள்ளிரவின் அகவுவது; பிரிந்திருப்பவரைத் தன்குரலால் வருத்துவது; இவை, (அ) "தெண்ணீ ரிருங்கழி வேண்டு மிரைமாந்திப், பெண்ணைமேற் சேக்கும் வணர்வாய்ப் புணரன்றில்" (ஆ) "நெருப்பி னன்ன செந்தலை யன்றி, லிறவி னன்ன கொடுவாய்ப் பெடையொடு.........கட்சியிற் பிரிந்தோர் கையற நரலு நள்ளென் யாமத்து" (இ) "மனைசேர் பெண்ணை மடிவா யன்றி, றுணையொன்று பிரியினுந் துஞ்சாகா ணென" (ஈ) "பராரைப் பெண்ணைச் சேக்குங் கூர்வா, யொருதனி யன்றி லுயவுக்குரல் கடைஇய, வுள்ளே கனலு

(பிரதிபேதம்) * அன்றிலென்றறை.





கெடுத்துவிட்டாரென்று கலங்கிய (க) என் வருத்தத்தை அறிந்தனையாய் மிகவும் வருந்தவேண்டி ஆரவாரிக்கின்றாயோ? அன்றியே முன்பு இனிய துணையாய்ப் பின்புபிரிந்தாரை எம்மைப்போலே நீயும் உடையையாய் வருந்துகின்றாயோ? எ - று.

நன்றறைகொன்றனர் என்றதனால் தீங்கு செய்தமை கூறினான். இனி மிகவும் மறைந்துநின்ற களவை வெளிப்படுத்தினாரும் என்பாரும் உளர்.

கக பனியிருள் சூழ்தரப் பைதலஞ் (உ)சிறுகுழ
லினிவரி னுயருமற் பழியெனக் கலங்கிய
தனியவ ரிடும்பைகண் (ங)டினைதியோ வெம்போல
வினியசெய் தகன்றாரை யுடையையோ நீ

எ - து: வருத்தத்தினையுடைய அழகினையுடைய சிறியதாகிய குழலே! இக்காலத்தே வருவாராயின், தாஞ்செய்த பழி மிகவும்போமென்று கருதிப் பனியோடு கூடிய இருள்சூழ்ந்து வருகையினாலே கலங்கின தனித்தவருடைய

முன்ன மெல்லெனக், கனையெரி பிறப்ப வூது, கிளையா மாக்க டீங்குழல் கேட்டே" (உ) "செவ்வாய வன்றி றுணையிழப்ப" (ஊ) "முழவுமுத லரைய தடவுநிலைப் பெண்ணைக், கொழுமடல் விழைத்த சிறுகோற் குடம்பைக், கருங்கா லன்றிற் காமர் கடுஞ்சூல், வயவுப்பெடை யகவும் பானாள்" (எ) "கனைத்ததங் காதலிற் கனவிற் கண்டிறக், இனைந்த போன் றிடையிடை நோக்கி யின்குரல், புனைந்தகம் புணர்பெடை புல்லி மெல்லவே, யனர்தருண் முரன்றன வன்றிற் சேவலே" (ஏ) "புணர்பிரியா வன்றிலும்போ, னித்தலு நம்மைப் பிரியல மென் றுரைத்த, பொற்றொடியும்" (ஐ) "ஒன்றில் காலை யன்றில் போலப், புலம்புகொண் டுறையும் புன்கண் வாழ்க்கை" (ஒ) "துணைபிரிந் தயரு மன்றிற் சேவலிற் றுளங்குகின்றான்" (ஓ) "பெண்ணைமேற், பின்னுமவ் வன்றிற் பெடைவாய்ச் சிறுகுரலுக், குன்னி யுடலுருகி

னையாதார்" என்பவற்றால் அறியப்படும். பெரும்பாலும் இவ்வியல் பினதாக மகன்றிலென்று ஒருசீர்வாழ்பறவை கூறப்படுகிறது. இதுவும்

அதுவும் ஒன்றென்றும் கூறுவர். அன்றிலென்பது வடமொழியில், 'க்ரௌஞ்சம்' என வழங்குமென்ப.

க. "தன்றுணை யில்லாள் வருத்தினன் கொல்லென, வின்றுணை யன்றி விரவி னகவாவே" (கலி. க௱க: உஎ - உஅ) என்பதும் அதன் குறிப்பும் பார்க்க.

உ. (அ) "குழலினு மினைகுவள் பெரிதே" ஐங். ௩0௪. (ஆ) "கோவலர் தீங்குழ லினைய லிரோவென், பூவெழி லுண்கண் புலம்புகொண்

(பிரதிபேதம்) * வரிலுபரும்.

கூகச கலித்தொகை ஷஉ.

திண்டோட் டிறலொளி மாயப்போர் ‡ மாமேனி
(க)யந்துவ ராடைப் பொதுவனோ டாய்ந்த
†முறுவலாண் மென்றோள்பா ராட்டிச் சிறுகுடி
மன்றம் பரந்த துரை

எ - து: இப்பொழுது அவ்விடத்துச் சிறுகுடியன மன்றத்தில் ஆமென்ற பண்ணமைந்த இனிய தாளத்தையுடைய ‡ குரவைக்கூத்திலுள்ளே விளங்கிய கண்ணியையும் திண்ணிய தோளினையும் திறலினது விளக்கத்தினையும் மாயத்தையுடைய போர்த்தொழிலினையும் கரியமேனியினையும் அழகிய துவருட்டின ஆடையினையுமுடைய பொதுவன் தோளையும் ஆராய்ந்த முறுவலாளுடைய மென்றோளையுங் கொண்டாடி எறுதழுவின புகழ் பரந்தது; இனி மணஞ் செய்தற்குத் தண்ணுமையில் தாளந்தளராமல் எழுப்புவார்களாகவெனக் கண்டு சுற்றத்தார் ‖கூறினர். எ - று.

பொதுவன் தோளிற்கு அவள் தோள் நிகர் ஒக்குமென்று பாராட்டி. இனிப் பொதுவனோடே மென்றோளையுடைய முறுவலாளையும் பாராட்டி யென்றலும் ஒன்று. இதுவும் சிறப்பில்லா ஆசுரமாகிய கைக்கிளை. ÷"பாங்க ரிமித்தம் பன்னிரண் டென்ப"(உ)என்றதனுள் ஆசுரத்திற்கும் பாங்கி நிமித்த மாயினன்.

இதனால், இருவர்க்கும் ×கிளைதல் பிறந்தது.

+இஃது "ஆசிரிய மருங்கினும் வெண்பாமருங்கினு,மூவகை யடியு முன் னுதலிலவே" என்னும்(௩.)சூத்திரத்திற் கொண்ட நாற்சீரடி ** முடிகியலோடு தொடர்ந்த "தகைவகைமிசைமிசை","கொலைமலி††சிலைசெறி"என்னும்வெண்

---

௧. "ஆயர்களுக்குத் துவராடையுடை கூறப்படுதலை, (அ) "கருந்துவ ராடையை" கலி. ௧௦அ: ௧௦. (ஆ) "செந்துவ ராடையாயர்" சீவக. ௪அ௫. (இ) "அலங்கு செந்துவ ராடையர்" பாக. (௧௦) கஞ்சனைக் கொன்ற. ௬. என்பவற்றாலும் அறிக.

௨. தோல். களவு. ௯. ௧௧.

௩. தொல். செய். ௯. ௬எ. இச்சூத்திரவுரையிலும்தகைவகை மிசைமிசைப் ..........சென்றார் பலர் என்னும் பகுதியை நாற் சீரடி முடிகியலோ டொன்றாய் வந்த வெண்பாவுக்கும்,"மலர்மலி புகலெழ .. ............ வருத்தினன் மன்றவவ் வேறு" என்னும் பகுதியை அறுசீரடி முடிகிய லோடொன்றாய் வந்த வெண்பாவுக்கும்.மேற்கோள் காட்டினர் நச்.

(பிரதிபேதம்) * மாமணி, † முறுவலாய்மென்றோள், பாராட்டச், ‡குரவைக் கூத்தினுள்ளே பொதுவன்றோளையும்,‖கூறினார். விளங்கியகண்ணியையும்.........துடையினையு முடையபொதுவனென்க. பொதுவன் தோளிற்கு,÷பாங்கனிமித்தம், ×கிளைத்

வருத்தத்தைக்கண்டு நீயும் வருந்துகின்றாயோ? அன்றியே முன்பு இனியன வற்றைச் செய்து பின்பு நீங்கினாரை எம்மைப்போலே நீயும் உடையையாய் வருந்துகின்றாயோ? எ - று.

(க)உயர்தல், "கோன்புயர்தல்" போல நீக்கத்தின்கணின்றது.

(உ)கடலும் அன்றிலும் குழலும் உற்ற பிணியைத் தம்பிணிக்கு வருந்தின வாகச்சேர்த்தி உயர்திணையாக்கி உவமவாயிற்படுத்தவாறு காண்க. இஃது "அவரவ ருறுபிணி தமபோற் சேர்த்தியது" (ங.)

※எனவாங்கு

எ - து: என்றுசொல்லி. எ - று.
ஆங்கு, அசை.

உக அழிந்தய லறிந்த வெவ்வ மேற்படப்
பெரும்பே துறுதல் களைமதி பெரும
வருந்திய செல்ல †தீர்த்த திறனறி யொருவன்
(ச)மருந்தறை ‡கோடலிற் கொடிதே யாழநின்
‖னருந்தியோர் நெஞ்ச ÷மழிந்துக விடினே

×எ - து: நெஞ்சழிந்து, அயலிலுள்ளார் அறிந்தவருத்தம் மேலிட்டவருகையினாலே பெரியதாகிய பித்தேறுதலைப் பெரும! வரைந்துகொண்டு போக்குவாய்; அங்ஙனம் போக்குங்கால் நின்னை நுகர்ந்தோருடைய நெஞ்சம் அழிந்து கெட்டுப்போம்படியாக அவரைக் கைவிடுவாயாயின், அது வருந்தியவருத்தத்தைப் போக்கும் மருந்தின்திறத்தை அறிந்த ஒருவன் அம்மருந்தை அறியேன்

டினையும்" கலி, கங௦: கு-கங. (இ) "குழலினை வதுபோ லழுதனள் பெரிதே" புறம். கசக: கு.
க. "பூானுயர்ந்த தவத்தினன்" கம்ப. கும்ப. ககக.
உ. "அன்றிற் கமைக்காழிக்கு ..........அயர்ந்தான்"

ந. தொல். பொருளி. சூ. உ. (அ) இச்சூத்திரப்பகுதியினுரையிலும் இவர் இச்செய்திக்கு இத்தாழிசை மூன்றையும் மேற்கோளாகக் காட்டி, இக்குறிப்பையும் எழுதியிருக்கிறார். (ஆ) தலைமகள் அவாவருமுபிணி தமபோற் சேர்த்திக் கூறியதற்கு, "பாய்திரை..........காதல்செய் தகன்றுரை யுடைமையோ நீ" என்னும் பகுதிமட்டும் (தொல். பொருளி. சூ. உ; இளம். இ - வி. சூ. ௰௫௦.) மேற்கோள்.

௭. "இயைவது கரத்தலிற் கொடுமை யில்லை" முதுமொழி. ௬௰.

(பிரதிபேதம்) * ஆங்கவை அழிந்தயல், † தீர்த்தனெறி, ‡ கோறலிற், || அருந்தோர்நெஞ்ச, அருந்தொடுநெஞ்ச. ÷ அவிந்தக, இழந்தக. × எ-று: என்றுசொல்லி நெஞ்சழிந்து



என்று வஞ்சித்து அம்மருந்தின் காரியத்தைக் கெடுக்குமதிலும் கொடிதாகா ணென அவனாற்றாமையைத் தோழி கூறி வரைவுகடாயினள். எ - று.

இது "காமஞ்சிறப்பினும்" (க)என்பதனாற்கொள்க.

இதனால், தலைவற்குச் சூழ்ச்சி பிறந்தது.

(௨)இதுவும் காலம்மயங்கிற்று. செல்லநீரத் திறனறியொருவனென்பதும் பாடம்.

இது நீ நீ நீ என ஓரசைச்சீர் வந்து ஐஞ்சீரடிவந்த *மண்டிலவாசிரியத்தா னிற்று யாப்பின்வேறுபட்ட கொச்சகம். (௩௨)

(கங0.) நயனும் வாய்மையு நன்னர் நடுவு
மிவனிற் றோன்றிய விவையென விரங்கப்
புரைதவ நாடிப் பொய்தபுத் தினிதாண்ட
வரைசனோ டுடன்மாய்ந்த நல்லூழிச் செல்வம்போ
னிரைகதிர்க் கனலி பாயொடு பகல்செலக்
கல்லாது முதிர்ந்தவன் கண்ணில்லா நெஞ்சம்போற்
புல்லிருள் பரத்தரூஉம் புலம்புகொண் மருண்மாலை;
அ இம்மாலை;

ஐய ரவிரழ லெடுப்ப வரோவென்
கையறு நெஞ்சங் கனன்றுதீ மடுக்கும்;
கக இம்மாலை;
இருங்கழி மாமலர் கூம்ப வரோவென்
னரும்படர் நெஞ்ச மழிவொடு கூம்பும்;
கச இம்மாலை;
கோவலர் தீங்குழ லிணைய வரோவென்
பூவெழி லுண்கண் புலம்புகொண் டிணையும்;

---

க. தொல். கள. சூ. உ0.

உ. (அ) முதற்பொருள்களுள் காலம்மயங்கிவருமென்பதற்கு இச்செய்யுளை மேற்கோள்காட்டுவர் இளம்பூரணர்; தொல். அகத். சூ. கச. 'திணை மயக்கு' (ஆ) நச்சினார்க்கினியரும் அச்சூத்திரவுரையில் "தொல்லூழி ………. வினியசெய் தகன்றாரை யுடையையோ நீ" என்னுமடிகளை மேற்கோள்காட்டி 'செய்தற்கலியுட் கங்குலும் மாலையும் முன்பனியும்

(பிரதிபேதம்) *, மண்டலவாசிரியத்தான்



எனவாங்கு;
கஅ படுசுடர் மாலையொடு பைதலே யுழப்பாளைக்
குடிபுறங் காத்தோம்புஞ் செங்கோலான் வியன்றானை
விடுவழி விடுவழிச் சென்றாங்கவர்
தொடுவழித் தொடுவழி நீங்கின்றாற் பசப்பே.

இது பிரிவிடையாற்றாத தலைவியது ஆற்றாமை தலைவன் வந்துசார்தலின் நீங்கினமைகண்டு வாயில்கள் தம்முள்ளே கூறியது.

இதன் பொருள்.

நயனும் வாய்மையு நன்னர் நடுவு

மிவனிற் றோன்றிய விவையென விரங்கப்
புரைதவ நாடிப்(க)பொய்தபுத் தினிதாண்ட
*வரைசனொ டுடன்மாய்ந்த நல்லூழிச் செல்வம்போ
னிரைகதிர்க் கனலி பாடொடு பகல்செலக்
(உ)கல்லாது முதிர்ந்தவன்(ங)கண்ணில்லா நெஞ்சம்போற்
புல்லிருள் †பரத்தரூஉம் புலம்புகொண் மருண்மாலை

எ-து: (ச) இவனாலேவிளங்கின கலந்தூறவும் உண்மை கூறலும் நன்மை யையுடைய நடுவுநிலைமையுமாகிய இவை, இனி விளக்கமின்றிப் போயின வென்று தனக்குப்பின்பு உலகத்தார் இரங்கும்படியாக அவற்றிற்கு உயர்ச்சி

---

வந்தன' என்பர்; இ - வி. நூலாரும் அவ்வாறே கூறுவர்; இ - வி. கு. ககச.

க. "பொய்யறியா வாய்மொழியாற், புகழ்நிறைந்த நன்மாந்தரொடு, நல்லூழி யடிப்படர,...........வுலக மாண்ட வுயர்ந்தோர் மருக" மது. கக - உங.

உ. "கல்லா தவருளம் புல்லிய குழலும்"

ங. (அ) "கண்ணில்புன் மாக்கள்" நாலடி. சச. (ஆ) "கண்ணிழந்த மாயக் கவறுடி" நள. சுயம்வர. சo. (இ) "கண்ணுடைய ரென்பவர் கற்றோர்" குறள். கஉங. (ஈ) "கைப்பொருள் கொடுத்துங் கற்றல் கற்றபின் கண்ணு மாகும்" சீவக. கஙகூ. (உ) "கண்ணன்டே யாவர்க்குங் கற்றோர்க்கு மூன்றுவழி" நீதிவெண்பா.

ச. (அ) "கலையின தகலமுங் காட்சிக் கின்பமுஞ், சிலையின தகலமும் வீணைச்செல்வமு, மலையினி னகலிய மார்ப னல்லதில், வுலகினி லிலை யென வொருவ ளுயினன்" சீவக. சகக. (ஆ) "ஆற்றலு நிறையும்

(பிரதிபேதம்) * அரசனொடு, † பரத்தரும்.



மிகும்படி ஆராய்ந்து (க)பொய்யைக்கெடுத்து நன்றாக ஆண்ட அரசனோடே சேரக்கெட்ட நல்ல ஊழால் உண்டாகிய செல்வம்போலே நிரைத்த கதிரை

புடைய ஞாயிறு படுதலோடே பகற்காலமும்போகப் பின்பு வருத்தங் கோடற்குக் காரணமாகிய மாட்சிமையையுடைய மாலைக்காலம் ஒன்றையுங் கல்லாமல் மூத்தவனுடைய ஞானக்கண்ணில்லாத நெஞ்சுபோலே புற்கென்ற இருள் உலகிலே பரத்தலைத் தாராநிற்கும். எ - று.

ஊழ், ஊழி எனத் திரிந்தது.

"நயனு * நண்பு நாணுநன் குடைமையும், பயனும் பண்பும் பாடறிந் தொழுகலும்"(உ)என்றாராகலின், நயன் பண்பன்மைஉணர்க. இரங்கப் புரைதவாதியென்க. அச்செல்வம் அரசனோடு போனாற்போலப் பகற்காலமும் ஞாயிற்றோடே போயிற்றென் றுணர்க.

அ (ங)இம்மாலை
ஐய ரவிரழ லெடுப்ப வரோவென்
கையறு நெஞ்சங் கனன்றுதீ மடுக்கும்

---

கல்வி யமைதியு மறிவு மென்னும்,வேற்றுமை யிவனோ டில்லை" கம்ப. அனுமப்., கக. (இ) "மறமும் வாகு வலியும் வல்வின் முதலெப் படையின், திறமுந் தேசும் வாழ்வுஞ் சீருங் கேள்விச் செல்வு, நிறமு முண்மை யறிவு நெறியும் புகழுந் திகழ்பே, றறமும் பொன்று நின்னோ டையா வந்தோ வந்தோ" (ஈ)"வில்லாய் நீயெம் போர்முனை வெல்லும் விறலாய்நீ, சொல்லாய் நீதொல் வேதிய ருட்குந் தொழிலாய்நீ, வல்லார்வல்ல கலைகளனைத்தும் வல்லானே, யெல்லாமின்றே பொன்றின வுன்னோ டெந்தாயே" வில்லி. பத்தாம்போர். ௬0. பதினெந்தாம். ௩௩.

க. (அ) "பொய்சேணீங்கிய வாய்நட் பினையே" மது. கருக. (ஆ) "தேற் றாய் பெரும பொய்யே" புறம். 0௬: ௪. (இ) "புகழ்வாய்மை வழீஇய சொல்லும் ............இலன்'கொற்ற வேலான்" நாரதசரிதை. (ஈ) "மன்னனுக், கைய மின்றி யறங்கட வாதருண், மெய்யி னின்றபின் வேள்வியும் வேண்டுமோ" (உ) "பொய்ச்சொற் கேளா வாய்மொழி மன்னன்" கம்ப. மந்தரை. கஎ; கைகேயி. ௩க. (ஊ) "சத்தியம் பிறழ்வது தகுமோ" அரிச். மயான. கஉக.

உ. நற். கக0: க - உ.

௩. (அ) "அந்தி யந்தண ரெதிர்கொள வயர்ந்து, செந்தீச் செவ்வழ

ஞெடங்க வந்ததை........ மாலை யென்மனார்" கலி. ககக: கஉ - கங;
(ஆ) "அந்தி யந்தணர் செந்தீப் பேண" மணி. இ: கநக.
(பிரதிபேதம்) * 'கன்றும்.



எ-து: இம்மாலைக்கண்ணே? இருடிகள் விளங்குகின்ற அழலை (க)*ஆவுதி பண்ணியெழுப்ப, என்செயலறுநெஞ்சம் தானுங்கொதித்து எனக்குங்(உ)காமத் தீயைக் கொளுத்தும். எ - று.

கக (ரு) இம்மாலை
இருங்கழி மாமலர் கூம்ப வரோவென்
னரும்படர் நெஞ்ச மழிவொடு கூம்பும்

எ - து: இம்மாலைக்கண்ணே, † கரிய கழிகளிற் பெருமையையுடைய மலர்கள் குவிய, என்னெஞ்சம் அவனை ‡ உள்ளுதலால் அழிதலோடே தான் நினைவின்றிக் குவியும். எ - று.

கஉ (ச) இம்மாலை
கோவலர் தீங்(ரு)குழ ||லினைய வரோவென்
(சு)பூவெழி லுண்கண் புலம்புகொண் டினையும்

எ - து: இம்மாலைக்கண்ணே, கோவலருடைய இனியதாகிய குழலாலே நெஞ்சுவருந்த, ÷ எனது பூவினதழகையுடைய உண்கண் தனிமையைக்கொண்டு வருந்தும். எ - று.

இஃது, இன்பத்தைவெறுத்தல். அரோ, அசை.

---

க. வடமொழியின் முப்பத்துமூன்றும் மெய்யாகிய ஹகாரம் சேர்ந்த மொழிகளைத் தமிழில்வழங்கும்போது அம்மெய் மொழிமுதலில்வரின் அதனைக்கெடுத்தும் இடையேவரின் ககரமாகவாவது யகரமாக

லாவது திரித்தும் வழங்குவதன்றி வகரமாகவும் திரித்து வழங்குவ ரென்பதை, (அ) "ஆவுதி மண்ணி" மது. ௪௧௪. (ஆ) "ஆவுதி நறும் புகை" பட். ௫௫. சிலப். ௧0: ௧௪௪. (இ) "ஆவுதி யருத்தியும்" பட். ௨00. (ஈ) "பெரும்பெய ராவுதி" பதிற். ௨௧: ௭ (உ) "ஆவுதி பொங்க" புறம். ௧௬: ௧௧. என இச்சொல் பயின்று வருதலாலும் வைதேஹி யென்பது (ஊ) வைதேவியென வழங்கப்படுதலாலும் அறிக.

௨. "மாலை மலருமிந்நோய்" குறள். ௧௨௨௭.

௩. "இல்லவ ரொழுக்கம்போ லிருங்கழி மலர்கூம்பச், செல்லுமென் னுயிர்ப்புறத் திறுத்தந்த மருண்மாலை" கலி. ௧௧௮ ௧ - ௭.

௪. "ஆயர் மணிமாலை யூதுங் குழல்" (கலி. ௧0௧: ௩௪ - ௩௫) என்பதும் அதன் குறிப்பும் பார்க்க.

௫. இந்நூற்பக்கம் ௮0௨: ௨ - ஆம் குறிப்புப் பார்க்க.

௬. "பூவெழி விழந்தகண் புலம்புகொண் டமையாது, பாயலோய் மிகும்" கலி. ௨௮: ௧௮ - ௧௧

(பிரதிபேதம்) * ஆதுபி. † கரியதாகிய கழி. ‡ உன்னி அழிக, ‖ இனைப்ப, சென்றுடைய பு.



எனவாங்கு

* எ - து: எனச் சொல்லி. எ - று.

ஆங்கு அசை.

௧௮ (௧)படுசுடர் மாலையொடு பைதலே யுழப்பாளைக்
(௨)குடிபுறங் காத்தோம்புஞ் செங்கோலான் வியன்றானை
(௩)விடுவழி விடுவழிச் சென்றாங்கவர்
தொடுவழித் தொடுவழி † நீங்கின்றாற் பசப்பே

‡ எ-து: (௪)படுகின்ற சுடரையுடைய மாலையாலே வருத்தத்தையுடைய காமநோயிலே அழுந்துகின்றவளைக் குடிமக்களைப் பாதுகாத்துப் பின்னர்த் தன்னைப் பாதுகாக்கும் பாண்டியனுடைய அகற்சியையுடைய (௫) படை விட விடப் பகைவர் நீங்கினாற்போலப் பிரிந்தவர்வந்து தீண்டத்தீண்டப் பசப்பு நீங்கிற்று; ‖ இருந்தவாறு என்னென (௬)வாயில்கள் தம்முட்டம்முட் கூறினர். எ - று.

க. "படுசுடர்..........பசப்பே" என்பது, வழியீற்று வினையெச்சத்திற்கு மேற்கோள்; தொல். வினை. சூ. ௩௧. கல். இவ்வினையெச்சத்திற்கு, கடையிரண்டடிமேற்கோள்; தொல். வினை. சூ. ௩௨. ௩௪. இ - வி, சூ. ௨௪௬. நன். வினை. சூ. ௨௪. இரா. இது இறப்புப்பற்றிவந்ததென்பர்.

௨. (அ) "குடிபுறங் காத்தோம்பிக் குற்றங் கடிதல், வடுவன்று வேந்தன் றொழில்" (குறள். ௫௪௯) என்புழி, 'குடிபுறங் காத்தோம்பல்' என்பதற்கு, குடிகளைப் பிறர் நலியாமற் காத்துத் தானும் நலியாது பேணுதலென்று பொருள்கூறுவர். பரி. (ஆ) "குடிபுறங் காத்து" மணி. ௨௩: ௧௧. பெருங். (௫) அ: ௨௦. (இ) "ஊர்வேந்தன் றன்னுடை, வாட்டானன் றென்றல் வனப்பு" சிறுபஞ்ச. ௯.

௩. (அ) "தொவழித் தொவழி நீங்கி, விடுவழிவிடுவழிப் பரத்தலானே" குறுந். ௩௧௧; (ஆ) "கொழுநனைச் சேர்ந்தோர், பசலை யென்னவே யுடைந்தது பாதக னிரதம்" விநாயக. மகோற்கடர். ௫௮௩.

௪. படுகின்ற சுடர் - அத்தமிக்கும் சூரியன்; மாலைக்காலத்துக்கு விளக்கேற்றல் கூறப்படுதலால், 'உண்டாகின்ற விளக்கு' எனினுமாம்.

௫. படைவிடல் - சேனைகள்போய்த் தங்குதல்; படைக்கலங்களைச் செலுத்தவென்பாருமுளர்.

௬. வாயில்களென்பது சொல்லால் அஃறிணையாயினும் பொருளால் உயர்திணையாதலின், கூறினரென உயர்திணையால் முடித்தார்.

(பிரதிபேதம்) * என்றதில் ஆங்கவை. † நீங்கின்று பசப்பே, நீங்கிற்றும் பசப்பே. ‡ கூறுகளைச் சொல்லப்படுகின்ற.

## ஐந்தாவது நெய்தல் ௧௪. அ௦௧

"வாயிலுசாவே தம்முளுரிய" (க) என்பதுவிதி. உழப்பாளைத்தொவழி யென்க. விடுவழி தொவழி என்பன செயவெனெச்சக் குறிப்புச்சொல்லாகிய வழி என்னும் வினையெச்சம்.

இதனால், வாயில்கட்குப் பெருமிதமென்னும் மெய்ப்பாடு பிறந்தது.

(உ)இஃது இடையிடை சொற்சீரடி வந்த கொச்சகம். (௬௩)

(௧௩௧.) பெருங்கடற் றெய்வநீர் நோக்கித் தெளித்தென்
றிருந்திழை மென்றோண் மணந்தவன் செய்த
வருந்துயர் நீக்குவேன் போன்மற் பொருந்துபு
பூக்கவின் கொண்ட புகழ்சா லெழிலுண்க
ணோக்குங்கா ணேக்கி னணங்காக்குஞ் சாயலாய் தாக்கி
யினமீ னிகன்மாற வென்ற சினமீ
னெறிசுறு வான்மருப்புக் கோத்து நெறிசெய்த
நெய்த னெடுநார்ப் பிணித்தியாத்துக் கையுளர்வின்
யாழிசை கொண்ட வினவண் டிமிர்ந்தார்ப்பத்
தாழா துறைக்குந் தடமலர்த் தண்டாழை
வீழுசு றூங்கப் பெறின்;
௧௨ மாழை, மடமான் பிணையியல் வென்றாய் நின்னூசல்
கடைஇயா னிகுப்பநீ நீங்காய் தடமென்றோ
ணீத்தான் றிறங்கள் பகர்ந்து
௧௫ நாணினகொ றோழி நாணினகொ றோழி
யிரவெலா நற்றோழி நாணின வென்பவை
வாணிலா வேய்க்கும் வயங்கொளி யெக்கர்மே
லானாப் பரிய வலவ னளைபுகூஉங்
கானற் கமழ்ஞாழல் வீயேய்ப்பத் தோழியென்
மேனி சிதைத்தான் றுறை;

---

௧. தொல். செய். சூ. ௨௦௦.

௨. (அ) இச்செய்யுள் இடையிடையே சொற்சீரடி பல விரவி யாப்பின் வேறுபடவந்த கொச்சகமென்பதும் இவர் கருத்துப்போலும்; (ஆ) "பயனும் வாய்மையு நன்னர்சுவேமென, அடக்கியலின்றி அடிகிமிர்ந் தொழுகியதுபோலுங் கொச்சகம்வருங்கால் ஒத்தாழிசையும் மண்டிலயாப் பும்போலத் தனிச்சொற் பெற்றும் பெறாதும் வரும்" என்பது பேராசிரியருரையிற் காணப்படுவது; தொல். செய். சூ. ௧௪௯.

உக மாரிவீ ழிருங்கூந்தன் மதைஇயநோக் கெழிலுண்கட்
டாழ்பீர முத்தின் றகையெய்க்கு முறுவலாய்
தேயாநோய் செய்தான் றிறங்கிளந்து நாம்பாடுஞ்
சேய்புய ரூசற்சீர் நீயொன்று பாடித்தை;
உ௫ பார்த்துற் றனதோழி பார்த்துற் றனதோழி
யிரவெலா நற்றோழி பார்த்துற்றன வென்பவை
தன்றுணை யில்லாள் வருந்தினள் கொல்லென
வின்றுணை யன்றி யிரவி னகவாவே
யன்றுதா னீர்த்த கரும்பணி வாடவென்
மென்றோன் ஞெகிழ்த்தான் றுறை;
ங௧ கரைகவர் கொடுங்கழிக் கண்கவர் புள்ளினந்
திரையுறப் பொன்றிய புலவுமீ னல்லதை
யிரையுயிர் செகுத்துண்ணாத் துறைவனை யாம்பாடு
மசைவர லூசற்சீ ரழித்தொன்று பாடித்தை;
ங௫ அருளினகொ றோழி யருளினகொ றோழி
யிரவெலாந் தோழி யருளின வென்பவை
கணங்கொ ளிடுமணற் காவி வருந்தப்
பிணங்கிரு மோட்ட திரைவந் தளிக்கு
மணங்கம ழைம்பாலா ரூடலை யாங்கே
வணங்கி யுணர்ப்பான் றுறை;
எனநாம்;
௪உ பாட மறைநின்று கேட்டன னீடிய
வானீர்க் கிடக்கை வயங்குநீர்ச் சேர்ப்பனை
யானென வுணர்ந்து நீநனி மருளத்
தேனிமிர் புன்னை பொருந்தித்
தானூக் கினனவ் வூசலை வந்தே.

இது வரைவுநீட ஆற்றளாயதலைவியைத் தோழி அவன் முன் அருமை செய்து அயர்த்தகாலத்து*அவன்வரைவினையானறிந்து ஊசலாட நின்னைக் கொண்டுபோய் ஆடுகின்ற காலத்து யான் இயற்பழிக்க நீ இயற்பட

மொழிவது கேட்டேவந்து ஊசலை ஊக்கியவன் இக்காலத்து வருந்தவிடாது வருத்தமறிந்து வரைந்து கொள்வனென ஆற்றுவித்தது.

(பிரதிபேதம்) * அவன் வரவின.

## ஐந்தாவது நெய்தல் கச. அகசுக

இறன் பொருள்.

பெருங்கடற் றெய்வநீர் நோக்கித் தெளித்தென்
றிருந்திழை மென்றோண் மணந்தவன் செய்த
வருந்துயர் நீக்குவேன் போன்மற் *பொருந்துபு
(க)பூக்கவின் கொண்ட (உ)புகழ்சா லெழிலுண்க
ரு (௩)ணோக்குங்கா ணேக்கி வணங்†காக்குஞ் சாயலாய் தாக்கி
யினமீ னிகன்மாற வென்ற சினமீ
(ச)னெறிசுறு வான்மருப்புக் கோத்து நெறிசெய்த
(ரு)நெய்த னெடுநார்ப் ‡பிணித்தியாத்துக் கையுளர்வின்
(சு)யாழிசை கொண்ட வினைவன் டிமிர்ந்தார்ப்பத்
தாழா துறைக்குந் தடமலர்ந் தண்(எ)டாழை
விழூச றூங்கப் பெறின்;

க. "பூவுயிர்த் தன்ன புகழ்சா லெழிலுண்கண்" கலி. கசஉ: கக.
உ. "தெண்ணீர்க் குவளை பொருகயல் வேலென்று" புகழ்தல்.
௩. "நோக்கினு ணோக்கெதிர் நோக்குத லுக்கணங்கு, தானைக்கொண் டன்ன துடைத்து" குறள். ௧௦௮உ.
ச. (அ) "எறிசுறுக் குப்பை யினங்கலக்கத்தாக்கு, மெறிதிரை" ஐந்-எழு. சுரு. (ஆ) "எறிசுறு நீள்கட லோத முலாவு" திணைமொழி. சுரு.
(இ) இந்நூற்பக்கம் எஎஉ: ௩ - ஆம் குறிப்புப் பார்க்க.
ரு "குவளையைத், கண்ணொ வியாத்து விடல்" (பழ. ௩௩ரு.) எனவும்

"குமிழின், புறங்கோட்டுத் தொடுத்த மரற்புரி நரம்பின், வில்யா ழிசைக்கும் விரலெறிகுறிஞ்சிப், பல்காற் பறவை கிளைசெத்தோர்க்கும்" (பெரும்பாண். கஅ0-கஅ௨.) எனவும்வருவன இங்கேநோக்கற்பாலன.

௩. "யாழ்போல வண்டார்க்கும்" கலி. ௬௨: க என்பதும் அதன் குறிப்பும் பார்க்க.

௪. (அ) "தாழை வீழ்க் கயிற்றூச றூங்கி" அகம். ௨0: ௬. (ஆ) "கான லொருசிறை, மகிழ்பூ மாலையொடு மருதிணர் மிடைந்த, வயிழ்பூங் கோதையொ டவிரிழை பொலங், வெண்கோட்டுத் தாழை, நீர்த்துறைத் தாழ்ந்த, செய்வீ ழூசன் முடியிணர் யேறித், தொடுவோன் முற்றத்துத் தோழியோ டாடா" பெருங். (க) ௪0: ௬0௯ - ககச. எனப் பிற நூல்க ளுள்ளும் வருதல் காண்க. இது விழுதுடைமையால் (இ) 'வீழ்த் தாழை' என்றும் தாழையென்னும்பெயரைத் திரிசொல்லாகவுடைய தென்னை வீழின்மையால் (ஈ) 'வீழ் றாழை' என்றும் கூறப்படும்.

(பிரதிபேதம்) * பொருந்து பூக்களின். | அதுஞ் சாயல், ‡பிணித்தியார்த்து, பிணிப்பத்து.



ஏ - து: நோக்குங்காலத்து அப்பார்வையாலே பிறர்க்கு *வருத்தமுண் டாக்கும், தன்னில்இணையொத்தப் பூவினதழகைத் தன்னிடத்தேகொண்ட

இங்கே கூறப்படும் வீழ்த்தாழை (உ) புறக்காழுடையதாதலாற் புல் வகையுள் ஒன்றாக எண்ணத்தக்கது. இது கடலலை மோதுமிடத் துள்ள எக்கரிற் செழித்துவளர்வது. வளைந்தவடிவும் சருச்சரையான அரையு முடையது. தோல்திரைந்தாற்போன்ற திரையமைவுடைய தென்றும் கூறுவர். இதன் இலை மிக்க நீளமுடையதாயும் இரு விளிம்பிலும் புறத்திடையிலும் கூர்மையும் வளைவுமுள்ள சிறு முட் களையுடையதாயும் ஒவ்வொரு கிளையின் நுனியிலும் அடர்ந்திருக்கும். அதனால் இதற்குப் பேயை உவமையாகக் கூறுவர். இவ்விலையால், குடை செய்யப்படுகின்றது. இதன் முள்ளுக்குச் சுறுக்கோடும் வாளரமும் பாம்பின் எயிறு(பல்லு)ம் உவமையாக்கப்பட்டுள்ளன.

இம்மூன் எயிறுபோலுதலால் எயிறெனவும் படும். புறமடலிலும் இவ்வகை மூன்றுண்டு. இதில் ஆணென்றும் பெண்ணென்றும் உலக வழக்கில் இருபிரிவுள்ளது. ஆண்டாமரை காய்க்கும். அது அக்காயை யடுத்துள்ள காய்மடலெனப்படும் புறமடல் சிலவற்றையேயுடையது; வேறுபூஇல்லாதது. பெண்டாமரை காயாது. மேற்கூறியஇலையினடியே யிருந்து பலமடல்களையுடைய அரும்பையீன்று பூக்கும். இப்பூவில் வெண்ணிறமுடையது வெண்டாமரையென்றும் பொன்னிறமுடையது செந்தாமரையென்றும் வழங்கப்படும். இவற்றுள் செய்யுளிற் பெண் டாமரையும் வெண்டாமரையுமே பயின்றுவரும். ¹ஆண்டாமரையும் செந் தாமரையும் அருகிவழங்கும். வெண்டாமரைமுகிழுக்கு யானைத்தந்தமும் கிலும் அதன்பூவுக்கு அன்னம் குருகு கொக்குமுதலியபறவைகளும் சங்கமும் உவமையாக உரைக்கப்படுகின்றன. செந்தாமரைப்பூவுக்குப் பொன் உவமையாக ஓதப்படுகிறது. இஃது உலகவழக்கில் மோத்தை

யென்று மொழியப்படும். (௬) இதன்முகிழ் கருவிலிருக்கும்போதே வண்டுகள் அதனை அறிந்து அதிற் செல்லுமென்பார். குருகுகள் இத னைத் தம்பார்ப்பென்றும் பெடையென்றும் மயங்கிப் புல்லுமென்பது கவிமரபு. இப்பூ, பறவைபோலத் தோன்றுதலால் இதனிழலைக் கயல் கெண்டை இருமுதலிய மீன்கள் தம்மையுண்ணும் புட்களென்று அஞ்சி ஒளிக்குமென்றும் உரைப்பதுண்டு. இது காலையில் மலர்வ தாகக் கூறுவர். இது மின்னல் மின்னுங்காலத்தும் பெருங் காற்று வீசுங்காலத்தும் மிகப் பூப்பது. இப்பூ, ஓலைப்பூவென்றும் கூறப்படும்.

இப்பூவின்மடல்களுக்கிடையே பூந்தாதையுடைய சோறெனப்படும் இழுதுபோன்ற உறுப்பு ஒன்றுண்டு. (எ) இப்பூவில் இத்தாதே உண்டென்றும் தேன் இன்றென்றும் சிலர் கூறுவர். இப்பூ, புலவு

(பிரதிபேதம்) ¹ வருத்தமுண்டாக்கும் கண்ணியையுடைய சாயலாயென்க. சாயல் ஈண்டுத் தலைவிக்கு ஓர் பெயர்த்தன்மையாய் நின்றது. தன்னில்.

பரக்களும் "மலர்மலி புகலெழூஉ வலர்மலிர் மணிபுரை திமிர்தோள் பிணைஇ" என அறுசீரடி முடுகியலோடு தொடர்ந்த வெண்பாவும் இருசீர்ச்சின்னமும் பெற்றுக் கலிவெண்பாவுறுப்பில் வேறுபட்டு வந்த (க)கொச்சகக்கலி. (உ)

(௧0௩.) மெல்லிணர்க் கொன்றையு மென்மலர்க் காயாவும்
புல்லிலை வெட்சியும் பிடவுந் தளவுங்
குல்லையுங் குருந்துங் கோடலும் பாங்கருங்
கல்லவுங் கடத்தவுங் கமழ்கண்ணி மலைந்தனர்
பல்லான் பொதுவர் கதழ்விடை கோட்காண்மார்
முல்லை முகையு முருந்து நிரைத்தன்ன
பல்லர் பெருமழைக் கண்ணர் மடஞ்சேர்ந்த
சொல்லர் சுடருங் கனங்குழைக் காதினர்
நல்லவர் கொண்டார் மிடை;
அவர்மிடைகொள;
மணிவரை மருங்கி னருவி போல
வணிவரம் பறுத்த வெண்காற் காரியு
மீன்பூத் தவிர்வரு மந்திவான் விசும்புபோல்
வான்பொறி பரந்த புள்ளி வெள்ளையுங்
கொலைவன் சூடிய குழவித் திங்கள்போல்
வளையுபு மலிந்த கோடணி சேயும்
பொருமுரண் முன்பிற் புகலேறு பலபெய்
தரிமாவும் பரிமாவுங் களிறுங் கராமும்
பெருமலை விடரகத் தொருங்குடன் குழீஇப்

---

க. இச்செய்யுளை அம்போதரங்கவொருபோகென்று கூறி, "கண்ணகன்...... .........ளின்று" இது தரவு. "ஒஓஇவள்..............தகைத்து" இவை கொச்சகம். "தகைவகை ..........மேல்" இவை அராகம். "எழுந்தது

……… பலர்" இவை சிற்றெண். "அவருள்…………வேறு" இது மூவெயலடிவந்த கொச்சகம். "ஏறெவ்வம்…………சாற்றுவார்" இவையுங் கொச்சகம். "ஆங்கு" தனிச்சொல். "தன்னுமை ………………துரை" இது சரிதகம்." என்று பிரித்துக்காட்டி, தாவு, கொச்சகம், அராகம், சிற்றெண், சுரிதகமென்னும் ஐந்துறுப்பும் முறையானே வருதலின்றிச் சில மீள வந்தன என்பர். இளம்பூரணர்; தொல். செய். ரு. கலி. 'ஒருத்தே கொச்சகம்'.

(பிரதிபேதம்)* அலர்மலி மணிபுரை நிமிர்தோள் பிணைமேன அறுசிடி.

## ஐந்தாவதுநெய்தல்கசு. அகூ

புகழ்ச்சியமைந்த * அழகினையுடைய கண்ணினையுடையாய்! சாயலாய்! இனமான மீன்களது மாறுபாடுகெடத் தாக்கிவென்ற சினத்தையுடைய

நாற்றத்தை நீக்கி நன்மணம் வீசுமென்ப. இதன் மடலைப் பண்டைக் காலத்தும் மகளிர் தலையிலணிந்துவந்தனர். ஆடவரும் மாலையாக அணிதலுண்டென்ப. இதனைக் காமவேளின் வாட்படையென்பதும் மரபு. தாழைவேறு கண்டல்வேறு. தாழைக்கும் கண்டலென்று ஒரு பெயருண்டு. இவற்றுட் பலவும் (1) "வீழ்தாழ் தாழை பூழுறு கொழுமுகை, குருகுளரிடத்தின் விரிபுதோ டவிழுங், கானல்" (2) "அல்கலுக், தயங்குதிரைபொருந் தாழை வெண்பூக், குருகென மலரும் பெருந்துறை" (3) "மூழுங்குதிரை கொழீஇய மூரி யெக்கர்த், தடந்தாட் டாழை முள்ளுடை நெடுந்தோட், டகமடற் பொதுளிய முகைமுதிர் வான்பூங், கோடுவார்ந் தன்ன வெண்பூ" (4) "உரவுத் திரை பொருத பிணர்படு தடவுமுத, லரவுவாள் வாய முள் ளிலைத் தாழை" (5) "எக்கர்த் தாழை மடல்வயி ஞெறும்" (6) "முடவுடற் கைதை மடன்முறித் திட்டும்" (7) "திரைமுதி ரரைய தடந் தாட் டாழைச, சுறவுமருப் பன்ன முட்டோ டொசிய, விறவா ரினக்குரு கிறைகொள விருக்கும்" (8) "நீடிலைத் தாழை" (9) "முடம்படு முள்ளிலை முடங்கன் மூரிசால், கடம்படு கரிமருப் பீன் று" (10) "முடமுட்டாழை" (11) "கொடுமுள் மடற்றாழைக் கூன்புற

வான்பூ, விடையு விழுதொப்பத், தோன்றிப் - புடையெல்லாம், தெய்வங் கமழும்" (12) "பல்பூங்கானன் முள்ளிலைத் தாழை, சோறு சொரி குடவயிற் கூம்புமுகை யவிழ" (13) "அள்ளிலைத், தடவுநிலைத் தாழை" (14) "கழுதருவின கனலிலையன கழிமடலின கைதை" (15) "இறவுப்புறத்தன்ன பிணர்படுதடவுமுதற், சுறவுக்கோட்டன்ன முள்ளிலைத் தாழை, பெருங்களிற்று மருப்பி னன்ன வரும்புமுதிர்பு, நன்மானுழையின் வேறுபடத்தோன்றி" (16) "வாள்போல் வாய கொழுமடற் றாழை" (17) "அரவெயிற் றணிமுட் கைதை" (18) "மோட்டிமண லடைகரைப், பேஎய்த் தலைய பிணரரைத் தாழை, யெயிறுடை நெடுந்தோடுகாப்பப் பலவுடன், வயிறுடைப்போது வாலி தின் விரீஇப், புலவுப்பொரு தழித்த பூநாறு பரப்பின்" (19) "தாழை மூகிழ்வேழமிரு தந்தமென வுந்துதகு சண்பை"(20) "யானைக் கூர்நுதி

மருப்பிற் றோன்றி, வண்டொடு சுரும்பர் மூச மன்றலம் பொதிவாய் விண்டு, கண்ட ஞண்மடற்றேன் சிந்துங் கண்டகி" (21) "மோடுடை நெட்டிலை முடவெண் டாழையந் தோடுடை நறுமலர் தோன்றல் கொய்வது, பாடுடை நெடுமடற் பனைக்கை வேழவெண், கோடடி பிடுக்கிய கோலம் போன்மபோ" (22) "பீடுடைத் தவர்பிடர் புடைப்ப வானையின், கோடுடைத்துதிர்த்தன கொழுமுட்கேதகைத், தோடுடைத்

(பிரதிபேதம்) * அழகினையுடைய கண்ணெனக், சாயலினமாக மீன்களது,

அகசு கலித்தொகை கஙக.

மீனுயிய எறியுஞ்(க)சுறவினது மருப்பாற் செய்த பலகையைக் கோத்துப் புற வித்தொடித்த செய்தற் பூவை செடியகாரிலே தொடுத்து அழகுபெறக் கட்டிக் கையாலே வாசித்தலையுடைய யாழினது ஓசையைத் தம்மிடத்தேகொண்ட இனமான † வண்டுகள் ‡ ஆளா[ப்]பஞ்செய்து பாடத்தாழாமல் தேன்றுளிக்கும்

தொருவழித் தொகுத வொத்தவே" (23) "முட்டாழைக ளானை, வெள்ளைக் கொம்பிலும் விரிபொழில்" (24) "மாமன்றற் கைதையங்

கன்னிதன் மொக்குள் வனமுலைமேல்" (25) "அலைநீர்த் தாழை யன்னம் பூப்பவும்" (26) "தாழை குருகீனுந் தண்ணந் துறைவனே" (27) "தோடவிழ் தாழை துறைகமழக் கோடுடையும்" (28) "பழந்தூங்கு முடத்தாழை" (29) "சோறுவாய் திறந்த செம்பொற் றெருகுமடற் கைதை" (30) "முருகுவாய் முட்டாழை நீண்முகைபார்ப் பென்றே, குருகுவாய்ப் பெய்திரை கொள்ளா - தருகிமிக, வின்று வெயில்சிற கான்மறைக்குஞ் சேர்ப்ப" (31) "நெய்தற் குருகுதன் பிள்ளையென் றெண்ணி நெருங்கிச்சென்று, கைதை யடல்புல்கு தெண்கழிப் பாலை" (32) "எழை வெண்குரு கயலே யிளம்பெடை தனதெனக் கருதித், தாழை வெண்மடற் புல்குந் தண்மறைக் காடு" (33) "பிணர்முடத் தாழை விரிமலர் குருகென, நெடுங்கழிக் குறுங்கயல் நெய்தலுண் மறைதரும்" (34) "புனற்கயல் கொக்கென் றஞ்சக், கண்டலங்கா மலாரங் கேசர்க்கு" (35) "மடல்விண்ட முடத்தாழை மலர்நிழலைக் குருகென்று, தடமண்டு துறைக்கெண்டை, தாமரையின் பூமறைய" (36) "கருங்காற் குருகின்கோளுய்ந்து போகிய, முடங்குபுற விறவின் மோவா யேற்றை, வெறிதிரை தொகுத்த வெக்கர் நெடுங்கோட்டுத், துறுகடற் றலைய தோடுபொதி தாழை, வண்டுபடு வான்போது வெருஉந், துறை" (37) "வேலை மடற்றாழை யுட்பொதிந்த வெண் டோட்டு, மாலைத் துயின்ற மணிவண்டு - காலைக், களிநறவந் தாதூதத் தோன்றிற்றே" (38) "தடித்தெழுந்தொறுந் தாழை பூப்பன" (39) "மீராலுக்கு வானமோ லைப்பூவு மால்" (40) "காற் றடித்தது தாழை பூத்தது" (41) "கைதை, சுரும்புந் தும்பி களுமருந்த மாறு தென்றுஞ் சோறிமோல்" (42) "கண்ட லவிர்பூங் கதுப்பினாய்" (43) "இடைநிலத் தியாத்த, முதிர்பூந் தாழை முடங்கல்வெண் டோட்டு" (44) "சங்குடைத் தனைய தாழைத் தடமலர்த் தொடைய லானே" (45) "அடும்பி னயலது செம்பூந் தாழை, தாழை யயலது வீழ்குலைக் கண்டல்" (46) "கண்டலங் கைதையொடு விண்ட முண்டகம்" என்று வருவனவற்றால் அறியலாகும்.

க. சுறவினது மருப்பு, சுறவகையுள் ஒன்றாகிய வேளாவினது கொம் பென்பர். இம்மருப்பில் இரு விளிம்பிலும் வேல்போலக் கூரிய முனைகள் உண்டு.

விளைவையுடைத்தாகிய மலரையுடைய தாழையினது விழுதாற் றிரித்து இட்ட ஊசலை நீ போந்து ஆடப்பெறின், நீரையுடைய பெரிதாகிய (க) கடலாகிய தெய்வத்தை நோக்கி நின்னிற் பிரியேன் என்று தெளிவித்து, உன்னுடைய திருந்தின இழையையுடைய மென்றோளைக் கூடினவன் அருமைசெய் தயர்த்ததால் நினக்குண்டாகிய அரிய வருத்தத்தை யான் அவனை எதிர்ப்பட்டு மிகவும் தீர்க்குவேன்போலே இராநின்ற *தென்றாள். எ - று.

சாயல், ஈண்டுத் தலைவிக்கோர் பெயர்த்தன்மையாய் நின்றது. பெறின், தீர்க்குவேன்போலுமென்க.

போலும் என்னும் †முற்றுச்சொல் ஈற்றுமிசை உகரம் மெய்யொழித்துக் கெட்டுநின்றது. நோக்கி யாத்து என்னுஞ் செய்தெனெச்சம் இட்டவென்னும் பெயரெச்சத்தோடு முடிந்தது.

"தாயத்தினடையா" என்னும் (உ) பொருளியற் சூத்திரத்தால் என்றே‡னென்றாள். இது மேல் வருவனவற்றிற்குங் கொள்க.

கஉ (ங)மாழை, மடமான் பிணையியல் வென்றாய்நின் னூசல்
கடைஇயா ளிருப்பநீ நீங்காய் தடமென்றோ
ணீத்தான் றிறங்கள் || பகர்ந்து

எ - து: அதுகேட்டுஊசலிடத்தேசென்ற தலைவியைநோக்கி, இளமையை யுடைய மடமான் ÷பிணையினது நோக்கினியல்பை வென்றவளே! நின் தடமென்றோளைக் கைவிட்டவனுடைய கொடுமையினது கூறுகளைச் சொல்லிப் பாடி நீ எறின ஊசலை யான் உயரச்செலுத்தித் தாழ்த்தாட்ட வெடும்பொழுது ஆடாயென்றாள். எ - று.

---

க. (அ) "பிரிவில்லாய் போலநீ தெய்வத்திற் றெளித்தக்கால்" கலி. கஉசு: கஅ; (ஆ) "தோள்புதி துண்ட ஞான்றைச், சூளும் பொய்யோ கடலறி கரியே" அகம். கஉ0: கரு - கசு.

உ. தொல். பொருளி. ரு. உஎ.

௩. (அ) "மாழை மான்னோக்கியு மாற்றாள்" திணைமொழி. எ. (ஆ) "மாழை மானோக்கின் மடமொழி" கைந்நிலை. நெய்தல். கக. (இ) "மாழை மான் மடநோக்கியுன் றோழி" நாலா. பெரியதிரு. ௯: அ. க. என்பவை ஒப்புநோக்கற்பாலன. (ஈ) "மாழைமென்னோக்கி" நைடத. சுயம். கருக. (உ) "மாழை யுண்கண்" (ஊ) "மாழை யொண்கண்" என மாழை கண்ணுக்கும் அடைமொழியாய் வருகிறது. பெருங். (க) ௪௦: ௩௦௧; ருக: ககக.

(பிரதிபேதம்) * என்றாள். பெறிற்றீர்க்கு. † பெயரெச்ச மீற்றுயிர்மெய்யுகரம் மெய்யொடுங் கெட்டுநின்றது. ‡ என்றுன்மாழை. ‖ படர்ந்து, ÷ பிணியது.



(க) நீள், காலத்தின் நீட்சியை உணர்த்திநிற்கும்.

நாணினகொ றோழி நாணினகொ றோழி
யிரவெலா நற்றோழி நாணின வென்பவை
வா(உ)ணிலா வேய்க்கும் வயங்கொளி யெக்கர்மே
லானாப் பரிய(௩)லவ னளைபுகூஉங்
கானற் கமழ்(௪)ஞாழல் வீயேய்ப்பத் தோழியென்
மேனி சிதைத்தான் றுறை

எ - து: தலைவி அன்னம் பாடாமையிற் றோழி * தான், தோழீ! கான லிடத்துக் கமழ்கின்ற ஞாழற்பூவின் நிறத்தையொப்ப என்மேனி பசப்பித்தவ னுடைய துறையிடத்து ஒளியையுடைய நிலாவையொக்கும் விளங்குகின்ற ஒளியினையுடைய இடுமணலின்மேலே நடும் அமையாத செலவுகளையுடைய நெண்டுகளென்று சொல்லப்படுமவை, இப்பொழுது நம்மைக்கண்டு † தம்

க. நீடேங்காய் என்பதை, நீடு ஊங்காய் எனப் பிரித்தலுமாம்; நீடு, நெடுங் காலமென்னும் பொருளிலும் ஊங்குதல், ஆடுதலென்னும் பொருளி லும் வருதலை, "நீடு வாழிய" "ஊக்க லூங்காள்" என்பவையும் வலி யுறுத்தும்.

உ. (அ) "நிலவெக்கர்" பொருந. உகரு. (ஆ) "நிலாவி னிலங்கு மணன் மலிமறுகின்" அகம். உ00: க. (இ) "நிலவுமணல் வியன்கானல்" புறம். கஎ: கக. (ஈ) "நிலவோ ரன்ன வெண்மணற் பாக்கத்து" தமிழ்நெறி. மேற். (உ) "அறல்விளங்கு நிலாமணல்" மணி. அ: கக. (ஊ) "செழு நிலவின் றுகளனைய மணற்பரப்புத் திருப்பாப்பு" பெரிய. கலிய. ச.

ந. (அ) "அம்பிலமெக்க ரலவன் வழங்கும், கொடுங்கழிச்சேர்ப்ப னருளா னெனத்தெளிந்து, கன்ன மனத்தா னயனெறிச் செல்லுங்கொ, னல்லினை சோர நடந்து" ஐந் - எழு. கஉ. (ஆ) "அழிவா யாம் கலவ வோடி, யொளிக்கின்ற தென்னோ" நை. கவிர்கு. கக.

ச. ஞாழற்பூ இங்கே பசப்புக்கு உவமையாகக் கூறப்பட்டிருக்கிறது. (அ) "சிறுவீ ஞாழற் றேன்றோ யொள்ளிணர், சேரிழை மகளிர் வார் மண விழைத்த, வண்டற் பாவை வனமுலை முற்றத், தொண்பொறிச் சுணங்கி னேருபடத் தாஅம், கண்டல் வேலி" நற். ககக: க - இ. (ஆ) "எக்கர் ஞாழற் பூவி னன்ன, சுணங்குவளை ரிளமுலை மடந்தைக்கு" ஐங். கசக: என்புழி சுணங்குக்கும் உவமையாகக் கூறப்பட்டிருக் கிறது. (இ) இதனைப் பற்றிய மற்றச் செய்திகளை இந் நூற்பக்கம் எஅஎ: க - ஆம் குறிப்பால் அறிக.

(பிரதிபேதம்) * தானே. † தன்னை.

## ஐந்தாவது நெய்தல் கச. அகஎ

அலையிலேபுகாநின்றன; அங்ஙனம் புகுகையினாலே(க) அத்துறைவன்கண்பாற் செய்தகொடுமையை நினைத்துத் தோழீ! நம்முன் தாம்நிற்றற்கு நாணினவோ? தோழீ! நம்முன் தாம் நிற்றற்கு நாணினவோ? எங்ஙனம் நாணினவாயின், தோழீ!. இராக்காலமெல்லாம் நாணிக்கிடந்தனவாய் இருக்குமென இயற் பழித்தாள். எ - று.

துறையிடத்து அலவனென்பவை என்க. என்பவை, தொழிற்பெயர்.

௨௧ (௨)மாரிவீ ழிருங்கூந்தன் (௩)மதைஇயநோக் கெழி லுண்கட்
டாழ்நீர முத்தின் றகையெய்க்கு முறுவலாய்
தேயாநோய் (௪)செய்தான் றிறங்கிளந்து நாம்பாடுஞ்
சேயுய ரூசற்சீர் நீயொன்று (௫)பாடித்தை

எ - து: அது கேட்ட தலைவி பாடாமையிற் பின்னும் தோழி, மழை விரும்புகின்ற பெரிய கூந்தலையும் மதர்த்த நோக்கினது அழகையுடைய *கண்ணினையும் தாழ்ந்த கடலிற் பிறந்த முத்தினது அழகை ஒக்கும் முறுவலினையுமுடையாய்! மாயாத நோயைச் செய்தவனுடைய கோமைமயின் கூற்றினைச் சொல்லி நாம் பாடும் மிக உயர்ந்த ஊசற்பாட்டை நீ ஒன்றுபாடு வாயென்றாள். எ - று.

(௬)சீர் என்றது, தாள அறுதியையுடைய ஊசற்பாட்டை.

---

௧. "வாணிலாநகை மாதரான்செயல் கண்டுமைந்தர்மு னிற்நவு, நாணிலாளென வேகினுணனிர் கங்குலாகிய நங்கையே" கம்ப. கைகே. ௪௧.

௨. "மாரிவீ ழிருங்கூந்தல்" (கலி. ௧௪: ௪) என்பதும் அதன் குறிப்பும் பார்க்க.

௩. (அ) "பேரமர் மழைக்*கட் கொடிச்சி, (* கண் மடந்தை, என்றும் பிரதிபேதம்)மூரன்முறுவலொடு மதைஇய நோக்கே" குறுந். ௨௮௬.
(ஆ) "மாதர் வாண்முக மதைஇய நோக்கே" அகம். ௧௩௦: ௧௪.
(இ) "மாதர் வாண்முகத்து மதைஇய நோக்கமொடு" சிலப். ௮: ௭௬.

௪. "கோதையுங் குழைவின் பட்டின் கொய்சகத் தலையுந் தாழ, மாதர் வண் டொருங்கு போ மழைபிடை நுடங்கு மின்போற், போதலர் பொதும்பிற் றூழ்த்த பொன்னெழி லூச றன்மே, லோதநீர் வண்ணைத் பாடி யூழியா ழியங்கு வாரும்" நுண. சுயம்வா. ௮௬.

௫. "பாடித்தை" (கலி. ௪௦: ௬௦) என்பதும் அதன் குறிப்பும் பார்க்க.

௬. 'சீரென்பதற்கு, 'தாள முடிந்துவிலக்காலத்தினைத் தன்னிடத்தே கொண்ட சீர்' என (கலி. ௧: ௭) இவ்வுரையாசிரியர் விளக்கியிருப்பதும் இந்நூற்பக்கம் ௬௦: ௧ - ஆம் குறிப்பும் இங்கே அறிதற்பாலன.

(பிரதிபேதம்) * கண்ணினையுமுடைய தாழ்ந்த.

உ௫. பார்த்துற் றனதோழி பார்த்துற் றனதோழி
*இரவெலா நற்றோழி பார்த்துற்றன வென்பவை
தன்றுணை யில்லாள் வருந்தினள் கொல்லென
வின்றுணை யன்றி லிரவி னகவாவே
யன்றுதா (௧)னீர்த்த †கரும்பணி வாடவென்
(௨)மென்றோண் ஞெகிழ்த்தான் றுறை

எ - து: அது கேட்ட தலைவி பின்னும் பாடாமையின் தோழி, நம்மேல் அன்புற்றுப் புணர்ந்த அன்று தா(௩)னெழுதிய கரும்பினது அழகு கெடும்படி மென்றோளை மெலிவித்தவனுடைய துறையிடத்து (௪)இனிய துணையோடு கூடிய அன்றிலென்று சொல்லப்படுமவை, தன் துணையானவனை நீங்கினவள் வருந்தினளோ என்று கருதி இராக்காலத்தும் அழைத்தனவில்லை; ஆகையினாலே தோழீ! அவை நம்வருத்தத்தைப் பார்த்துத் தாமும்வருத்தமுற்றன போலே இருந்தன; ஆதலால் நற்றோழீ! இரவெல்லாம் நம்வருத்தத்தைப் பார்த்துத் தாம்வருத்தமுற்றன என்றாள். எ - று.

(௫)‡பாத்துற்றன பாடமாயின், பிரிவுற்றனவென்க.

௩௧ கரைகவர் கொடுங்கழிக் கண்கவர் புள்ளினந்
திரையுறப் பொன்றிய புலவுமீ னல்லதை
யிரையுயிர் செகுத்துண்ணாத் துறைவனை யாம்பாடு
மசைவா ளூசற்சீ ரழித்தொன்று பாடித்தை

எ - து: அது கேட்ட தலைவி, கரையையிடித்துத் தனக்காக்கிக்கொள்ளுகின்ற கொடுங்கழியிடத்து நோக்கினார்கண்ணை வாங்கிக்கொள்ளும் அழகையுடைய பறவைத்திரள் திரைமோதுகையினாலே இறந்த ‖ புலானாற்றத்தை

---

௧. "மென்றோட், பெய்கரும் பீர்க்கவும் வல்லன்" கலி. ௧௪௩ : ௩௧ - ௩௨.
௨. "மென்றோ ணெகிழ்த்தானை" கலி. ௧௪௩ : ௧௫.
௩. இந்நூற்பக்கம் ௩௮௨ : ௫ - ஆம் குறிப்புப் பார்க்க.
௪. "அன்றிலம் பெடைகளையணுகி யன்னகே, ளன்றென விளையின்மே னடந்த நாயக, நின்றவர் நிவெரிங் கெம்பொருட்டினு, லொன்றுநீ யிரங்கலென் றுரைக்கின் றூர்கிலர்" (கந்த. திருநாட்டு. ௧௪.) என்ப

தும் இந்நூற்பக்கம் ௪0௧: ௩-ஆம் குறிப்பும் இங்கே அறிதற்பாலன.

ரு. பாதிடென்பதற்கு, 'பகுத்துக்கொடுத்தல்' என்று பொருள் கூற மிடத்து, 'ஈத்தலும் ஈதலும்போலப் பாத்தலும் பாதலுமொன்றாத லிற் பாதீடாயிற்று' என்று (தொல். புறத். சூ. ௩) இவ்வுரையாசிரியர் எழுதியிருப்பதை நோக்குக.

(பிரதிபேதம்) * இரவெல்லாம், † கரும்பினணி, ‡ பாத்தன பாடமாயின், || புலாநாற்றத்தை.



புடைய மீனை இரையாகத் *தின்னுமதல்லது தாம் ஒன்றன் உயிரைப்போக்கி இரையாக அதனைஉண்ணாத அருட்டுறைவனை நாம்பாடும் அசைந்துவருதலை புடைய ஊசற்பாட்டை, நீ இயற்பழித்ததனை அழித்து இயற்பட ஒன்று பாடுவாய் என்றாள். எ - று.

௩.௫ அருளினகொ ரேழி யருளினகொ ரேழி
யிரவெலாந் தோழி யருளின வென்பவை
(க)கணங்கொ ளிடுமணற் (உ)கானி வருந்தப்
பிணங்கிரு மோட்ட திரைவந் †தளிக்கு
(௩)மணங்கம ழைம்பாலா ரூடலை யாங்கே
யணங்கி யுணர்ப்பான் ‡துறை

எ - து: அது கேட்ட தோழி அன்னம் பாடாமையின் தலைவி, மணம் நாறுகின்ற கூந்தலையுடையாரிடத்து உண்டாகிய ஊடலை அதுகண்ட பொழுதே விரைந்து தீர்க்குமவன் துறையிடத்து, திரட்சிகொண்ட (௪)இடு மணலாலே காவியென்று சொல்லப்படுமவை வருந்த, அவற்றைத் தம்மிற் பிணங்கி||வருகின்ற கருமை தங்கிய பெருமையையுடையனவாகிய திரைகள் வந்து அம்மணலைக் கரைத்து அருள்பண்ணுகிற்கும்; ஆகையினாலே அத் திரைகள் தோழீ! அருளினவோ? தோழீ! அருளினவோ? தோழீ! ×எவ் வனம் அருளினவாயின், தோழீ! இரவெல்லாம் அருளினவாயிருக்குமென இயற்படமொழிந்தாள். எ - று.

+களவுகாலத்துத் தலைவி "தன்வயி னுரிமையு மவன்வயிற் பரத்தையும்" (௫) கூறுதற்கு உரியளென்றலின், அவன்வயிற்**பரத்தைமை கூறிய காலத்து அதனை வணங்கித் தீர்த்தமை கருதி ஊடலை வணங்கி உணர்ப்பானென்றாள்.

காற்றுத் தூற்றிய மணலிடத்து அரல்††வருத்தினகாவியைத் திரைவந்து அளித்தாற்போல அவர் தூற்றுதலால் வருந்திய வருத்தத்தை நீக்கி நம்மை அளித்து ‡‡வரைவனென உள்ளுறையுவமங்கொள்க.

க. "கணங்கொள்......றுறை" என்பது, எமஞ்சான்ற உவமைக்கண் தலைவி தான் கூடியவாறும் மகிழ்ந்தவாறுங் காட்டி அவன்வயிற் பரத்தைமை கூறியதற்கு மேற்கோளாக உள்ளது. தொல். கள. சூ. உக. இளம்.

உ. உரவுக்கதிர் தெறுமென வோங்குதிரை விரைபுதன், கரையமலியும் பனித் தாஅங்கு" கலி. கஉஎ: உ0 - உக.

ந. "மணநாறு கதுப்பினுய்" கலி. சந: உந.

ச. இடுமணலெனடுங்கோட்டைப், பயிறிரை நடுகன்னுட் பாய்ந்துடியாடிக் துறைவ" கலி. கஙடு: ச - ரு.

ரு. தொல். கள. சூ. உ0.

(பாடபேதம்) * நின்றுமல்லது. † அழிக்கும். ‡ வரை. || வருதற்கரியனவாகிய பெருமை. × அங்கனம். + கனவுக்கால. ** பரத்தமை. †† வருத்தின ‡‡ வரைபவென்ன.



சக (க)எனதாம்
பாட (உ)மறைநின்று கேட்டன னீடிய
*வானீர்க் கிடக்கை (ந)வயங்கு†நீர்ச் சேர்ப்பனை
யானென வுணர்ந்து நீரனி மருளத்
தேனிமிர் புன்னை பொருந்தித்
தா னூக் கினனவ் வூசலை வந்தே

எ - து: ‡ என்று அங்கனம் இயற்பழித்தும் இயற்படமொழிந்தும் யானும் நீயும் பாட, சேர்ப்பன், பாட்டை மறையநின்று || கேட்டனனுய் நீடிய(ச)வெண்மையையுடைத்தாகிய நீர்க்கிடக்கை விளங்குகின்ற நீர்மையை யுடைய சேர்ப்பனை யான் ஊசல் ஊக்கென்றேனென்றும் உணர்ந்து, பின்பு யானென நம்மில் நீ மிகவும் மருளும்படி அவன் தேனினம் ஒலிக்கும் புன்னையைப்பொருந்திநின்று, பின்பு வந்து அவ்வூசலைத் தான் ஊக்கினன்; [அற வருத்தம் அறிந்து வியவாநின்று] (அன்று வருத்தமறிந்துநவியவன் இன்றும்) நம்வருத்தம் அறிந்து வரைந்து கொள்வனென × ஆற்றுவித்தாள்.

எ - று.

கிடக்கை, கடல்; நீர், கழி(யெனினுமாம்.)

இதனால், தலைவற்கு ஆராய்ச்சி பிறந்தது.

இனி"உணர்ப்புவயின்வாரா வூடற்கண்" தோழி களவுகாலத்து நிகழ்ந்தமை கூறித் தலைவியை யூடதீர்த்ததென்று கிளவி கூறி அதற்கேற்ப உரைப்பாருமுளர்.

இஃது ஐஞ்சீரடி வந்த நெடுவெண்பாட்டாகிய தரவும் ஐஞ்சீரடுக்கிய குறுவெண்பாட்டும் நெடுவெண்பாட்டும் கொச்சகமும் தனிச்சொல்லும் சுரிதகமும் வந்த கொச்சகம். (கச)

---

க. "என்றியாம் பாட மறைநின்று கேட்டனன்" கலி. சஉ: உஅ.

உ. (அ) "மறைநின்று கேட்டருளி" (ஆ) "மறைநின்று கேட்டனன்" கலி. சக: சக, சஉ: உஅ.

ங. "வயக்குநீர்த் தண்சேர்ப்ப" கலி. கஉச: ச, கஉஎ: ௫.

ச. வெண்மையை யுடைத்தாகிய சேர்ப்பென்க; சேர்ப்பு - கடற்கரை; "பிறங்குநீர்ச் சேர்ப்பினும் புள்ளொருங் கெழுமே" (புறம். சக: அ) என வருதல் காண்க.

(பிரதிபேதம்) * வாசிகிடக்கை, † நீர்சேர்ப்பின, ‡ அன்று அம்னைம். ‖ கேட்டனளுச் சேர்ப்பின. × ஆற்றாவித்தான், சீடிய............சேர்ப்பின கிடக்கை, ÷ குறுவெண்பாட்டின் கொச்சகமும்.

## ஐந்தாவது நெய்தல் கலி. அஉக

(கரு-உ.) உரவுநீர்த் திரைபொர வோவாதவிய வெக்கர்மேல்
விரவுப்பல் லுருவின வீழ்பெடை துணையாக
விரைதேர்ந்துண் டசாவிடூஉம் புள்ளின மிறைகொள
முரைசுமூன் றுள்பவர் முரணியோர் முரண்டப
நிரைகளி றிடைபட நெறியாத்த விருக்கைபோற்
சிதைவின்றிச் சென்றுழிச் சிறப்பெய்தி வினைவாய்த்துத்

துறையகலம் வாய்சூழுந் துணிகடற் றண்சேர்ப்ப;
அ புன்னைய நறும்பொழிற் புணர்ந்தனை யிருந்தக்கா
லென்னுதா லஞ்சலோம் பென்றதன் பயனன்றோ
பாயின பசலையாற் பகற்கொண்ட சுடர்போன்றாண்
மாவின தளிர்போலு மாணல மிழந்ததை;
கஉ பன்மலர் நறும்பொழிற் பழியின்றிப் புணர்ந்தக்காற்
சின்மொழி தெளியெனத் தேற்றியசிறப்பன்றோ
வாடுபூ வணப்போடி வயக்குறு மணிபோன்று
ணீடிறை நெடுமென்றோ ணிரைவளை நெகிழ்ந்ததை;
கசு அடும்பிவ ரணியெக்க ராடுநீ நணந்தக்காற்
கொடுங்குழாய் தெளியெனக் கொண்டதன் கொளையன்றோ
பொறையாற்றா நுசுப்பினாற் பூவிந்த கொடிபோன்றாண்
மறைபிற ரறியாமை மாணனோ யுழப்பதை;
எனவாங்கு;
உக வழிபட்ட தெய்வந்தான் வலியெனச் சார்ந்தார்கட்
கழியுந்நோய கைம்மிக வணங்காகி யதுபோலப்
பழிபரந் தலர்தூற்ற வென்றோழி
யழிபட ரலைப்ப வகறலோ கொடிதே.

இது வரைவு நீட்டித்துழிப் பகற்குறிவந்து நீங்குந் தலைவனை எதிர்ப்பட்டுத் தோழி, அவனை நாணு நெஞ்சலைப்ப வரைவுகடாயது.

இதன் பொருள்.

(க)உரவுநீர்த் திரைபொர வோங்கிய வெக்கர்மேல்
விரவுப்பல் லுருவின வீழ்பெடை துணையாக

க. உரவுநீர். இந்நூற்பக்கம் எகக: ச-ஆம் குறிப்புப்பார்க்க.

அஉஉ

கலித்தொகை கஙஉ.

விரைதேர்ந்துண் டசாவிடூஉம் புள்ளின மிறைகொள

*முரைசுமூன் றாள்பவர் முரணியோர் முரண்டப
நிரை(க)களி றிடைபட †நெறியாத்த விருக்கைபோற்
(உ)சிதைவின்றிச் சென்றுழிச் சிறப்பெய்தி வினைவாய்த்துத்
துறையகலம் வாய்சூழுந் (ங) துணிகடற் றன்சேர்ப்ப

‡ எ - து:(ச)முரைசு மூன்றை ஆள்கின்ற பாண்டியர் தம்மொடு மாறு பட்டோருடைய மாறுபாடு கெடும்படி நிரைத்த களிறுகள் வினைப்படைக்கு நடுவே நிற்கும்படி நெறியுண்டாகக் கம்பத்தோடே ‖ கட்டின இருக்கை

---

க. (அ) "களிறும் கந்தும் போல களிகடற், கூம்புங் கலனுந் தோன்றும்" யா - வி. ஒழி. ரு. உ. 'குன்றவெண்'மேற். (ஆ) "பண்ணார் களிறே போற் பாயோங் குயர்காவாய்" சீவக. உஎகங. எனவும் (இ) "அம்பி காழோர், சிறையருங் களிற்றிற் பரதவ ரொய்யும்" நற். எச: ங - ச. எனவும் (ஈ) "காவாய் போல...........உழிதருங் கடாஅ யானையும்" மது. ஙஎகூ - ஙஅங. (உ) "கொல்களிறு மிடைந்து...........வங்கந் திசைதிரிந் தாங்கு" பதிற். ருஉ: க - ச. (ஊ) "களிறே, முந்நீர்வழங்கு காவாய் போலவும்" (எ) "கலம்போலக், களிறுசென்று" புறம். கங: ஙு, உக: உ - ங. (ஏ) "மயங்குகா லெடுத்த வங்கம் போல...........கால வேகங் களிமயக் குற்றென" மணி, ச: ஙச - சச. (ஐ) "பொரு மால்களிறு போன்றோர். வங்கமொடு போகி...........ஒடுகளி றொப்ப விளிதோடியதை" (ஒ) "மொய்களி, றுடைதிரை மரக்கலம்" (ஓ) "மரக்கடற் பெருங்கலங் காவின் மாறுபட், டாக்கிய கயிறரிந் தோடி யெங்கணும், போக்கறப் பொருவன போன்ற நீப்படத், தாக்கின வரசுவாத் தம்மு ளென்பவே" சீவக. சகங - ஙுoக, உஉஉங, உஉஙக. எனவும் வருபவை இங்கே ஒப்புநோக்கற்பாலன.

உ. (அ) "அஃதென்ப, பட்டினம் பெற்ற கலம்" நாலடி. உ௲o. (ஆ) "ஊனமொறு மின்றியினி தோகெவி,தென்றான்" சீவக. ஙுoo.

ங. "துணிகடற் சேர்ப்பன்" திணைமொழி. சஎ.

ச. (அ) "இமிழ்குரன் முரசமூன் றுடனாளுந், தமிழ்கெழு கூடற் றண் கோல் வேந்தே" புறம். ஙுஅ: கஉ-கங. என்பதூஉம் (ஆ) "அடையல ரொடுக்க மோதும் படைமுரசதிரு மோதை, யிடையபெ வறுமை

யோட விடுகொடை முரசி னேதை, கடைபடு வடிமேவற் கண்ணுர்
கடிமண முரசி னேதை, முடியுடை யரசர் வீதி யெங்கணு முழங்கக்
கண்டார்" சீற. காம்பொருத்து. ௨௭. என்பதும் நோக்குக.

(பிரதிபேதம்) "முரசமூன்றுள்பயன், | கிரிஇயாத்த, | எ - து: முரைச மூன்றுமன.........
மூன்றென்றதுமாம். முரைசு மூன்றை.|| கட்டின பாசறைபோலே என்ற...
......கொடுத்து நின்றது. இருக்கைபோலே

கூ௬கூ கலித்தொகை ௧0௩

௨0 படிமழை யாடும் வரையகம் போலுங்
கொடிநறை சூழ்ந்த தொழூஉ ;

௨௨ தொழூஉவினுள், புரிபு புரிபு புக்க பொதுவரைத்
தெரிபு தெரிபு குத்தின வேறு ;

௨௪ ஏற்றின், அரிபரி பறுப்பன சுற்றி
யெரிதிகழ் கணிச்சியோன் சூடிய பிறைக்க
ணுருவ மாலை போலக்
குருதிக் கோட்டொடு குடர் வலந்தன ;

௨௮ கோட்டொடு சுற்றிக் குடர்வலந்த வேற்றின்முன்
னுடிநின் றக்குடர் வாங்குவான் பீடுகாண்
செந்நூற் கழியொருவன் கைப்பற்ற வந்நூலை
முந்நூலாக் கொள்வானும் போன்ம் ;

௩௨ இகுளை யிஃதொன்று கண்டை யிஃதொத்தன்
கோட்டினத் தாயர் மகனன்றே மீட்டொரான்
போர்புக லேற்றுப் பிணரெருத்திற் றத்துபு
தார்போற் றழீஇ யவன் ;

௩௪ இகுளை யிஃதொன்று கண்டை யிஃதொத்தன்
கோவினத் தாயர் மகனன்றே யோவான்
மறையேற்றின் மேலிருந் தாடித் துறையம்பி

யூர்வான்போற் றோன்று மவன் ;

௪0 தொழீஇஇ, காற்றுப்போல் வந்த கதழ்விடைக்காரியை
யூற்றுக் களத்தே யடங்கக்கொண் டட்டதன்
மேற்றோன்றி நின்ற பொதுவன் றகைகண்டை
யேற்றெருமை நெஞ்சம் வடிம்பி னிடந்திட்டுச்
சீற்றமோ டாருயிர் கொண்டஞான் றின்னன்கொல்
கூற்றென வுட்கிற்றென் னெஞ்சு ;

௪சு இருளை யிஃதொன்று கண்டை யிஃதொத்தன்
புல்லினத் தாயர் மகனன்றே புன்னி
வெறுத்த வயவெள்ளேற் றம்புடைத் திங்கண்
மறுப்போற் பொருந்தி யவன் ;

ஐந்தாவது நெய்தல் கலி. அ௯௩

போலே விரவுமலையுடைய பலவடிவினையுடையவாய் இரையைத் தேடித் தின்று இளைப்பாறும்புள்ளினங்கள், தாம் விரும்பினபெடைகள் தமக்குத் துணையாக வலியினையுடைய * கடலினது திரை வந்துபொரும்படி உயர்ந்த இமெணலின்மேலே தங்குதல்கொள்ள, தாம்சென்ற இடத்துத் தமக்கொரு கேடின்றித் தாம்போன காரியம் வாய்த்துவந்து தலைமைபெற்றுத் துறை பிடித்தனவாகிய மரக்கலங்கள் இடத்தைச் சூழ்ந்து நிற்கும் தெளிந்த கடலை யுடைய † சேர்ப்பனே ! எ - று.

முரசு மூன்றாவன :—வீரமுரசு தியாகமுரசு நியாயமுரசென்பன; தன்முரசும் சேரன்முரசும் சோழன்முரசுமென மூன்று என்றலுமாம்.

பாசறைபோலே என்ற உவமையுவமம் மேல் வருகின்ற கருப்பொருட்குச் சிறப்புக் கொடுத்து நின்றது. பறவைகள் எனைப்படைக்கும் மரக்கலங்கள் இடைநின்ற யானைக்கும் உவமை.

கரைக்குச் சிறந்தனவாகிய, இரைகவர்ந்து துணைபுணர்ந்த பறவைகளும் வினைவாய்த்து நின்றமரக்கலங்களும் ‡பகைவர்க்கு வருத்தஞ் செய்யும்பாசறை போலத் தோன்றும் என்றதனால், இல்லறம் நிகழ்த்தித் துணையொடு புணர்ந்தவர்களும் வினைவாய்த்துச் செல்வச் செருக்குடையவர்களும் தமக்கு

வருத்தத்தைத் தருகின்றரென உள்ளுறைதக்கவாறு காண்க; அவரைப்போல யாமும் துணைபுணர்ந்து இல்லறநிகழ்ச்சிச் செல்வம் உண்டாயிருக்கப் பெற்றிலேமென்னும் வருத்தத்தை அவர்கொடுத்தலின்.

அ புன்னைய நறும்பொழிற் புணர்ந்தனை யிருந்தக்கா
னன்னுதா (க)லஞ்சலோம் பென்றதன் பயனன்றே
பாயின பசலையாற் (உ)பகற்கொண்ட சுடர்போன்றாண்
மாவின தளிர்போலு மாணலம் பிழந்ததை

எ - து: பரந்த பசலைநிறத்தாலே பகற்பொழுது எடுத்த விளக்குப் போல்*ஒளிகெட்டவள் மாவின் கண்ணவாகிய தளிரை ஒக்கும் மாட்சிமையையுடைய நலத்தைஇழந்தது, புன்னையையுடையவாகியநறியதாகியபொழிலிலே இவளைப் புணர்ந்திருக்க, நன்னுதால்! நீ யான் பிரிவேனென்று அஞ்சுதலைப் ||பாதுகாத்துக்கொள் என்று தெளிவித்ததனால் உள்ள பயனல்லவோ? எ - று.

கஉ பன்மலர் நறும்பொழிற் பழியின்றிப் புணர்ந்தக்காற்
(௩)சின்மொழி தெளியெனத் தேற்றிய சிறப்பன்றே

---

க. இந்நூற்பக்கம் கூ௦: உ, உசச: ௫ - ஆம் குறிப்புக்கள் பார்க்க.
உ. (அ) "பகலெரி சுடரின் மேனி சாயவும்" நற். கூஅ: க. (ஆ) "வெயிலிடைத் தந்த விளக்கென வொளியிலா மெய்யாள்" கம்ப.காட்சி. ச.
௩. "சின்மொழி" (கலி. உக: க௦) என்பதும் அதன் குறிப்பும் பார்க்க.
(பிரதிபேதம்) *கடவிற்றிலை. †சேர்ப்பனேபறவைகளேனே.‡பகைவர்புக்கு.|| நீபாதுகாத்து.

அஉச கலித்தொகை கந௨.

(க)வாடுபு வனப்போடி வயக்குறா மணிபோன்று
ஊடிறை நெடுமென்றோ ளிறைவளை நெகிழ்ந்ததை

எ - து: அழகு வாடிக்கெட்டு நெடுங்காலம் விளக்கமுறுத்தாத மணியை ஒத்தவளுடைய(உ)இரண்டாடியமென்றோளின்நிறைத்த வளைகழன்றது, பலமலர்களையுடைய நறும்பொழிலிலே குற்றமின்றாக அவளைப் புணர்ந்திருக்க, சிலவான மொழியினையுடையாய்! நின்னை யான்பிரியேன் இதனைத்தெளி

வாயாக என்று தெளிவித்ததனுல் உள்ள சிறப்பன்றோ? எ - று.

கசு அடும்பிவ ரணிபெக்க ராடிநீ மணந்தக்காற்
கொடுங்குழாய் தெளிபெனக் கொண்டதன் (ங)கோளையன்றோ
பொறையாற்று நுசுப்பினாற் (ச)பூ (ரு)வீந்த கொடிபோன்றாண்
(சு)மறைபிற றறியாமை (எ)மாணுநோ *யுழந்ததை

எ - து: தன் மென்மையால் அணிகளைப் பொறுத்தலாற்றாத இடையாலே அணிகலங்கள் அணியாமற் பூமாறின கொடியையொத்தவள் பிறர் இக்களவொழுக்கத்தையறியாமல் மறைந்து மருந்தால் மாட்சிமைப்படாத காமநோயிலே அழுந்தியது, †அடும்பங்கொடிபரந்த இம்மணலிலே கூடவிளையாடி நீபுணர, கொடுங்குழாய்! நின்னையான்பிரியேன் இதனைத்தெளிவாயாக என்று கூற அதனை மெய்யென்று உட்கொண்டதனுடைய கோட்பாடன்றோ? எ - று.

எனவாங்கு; அசை.

உக வழிபட்ட தெய்வந்தான் வலியெனச் சார்ந்தார்கட்
கழியுநோய் கைம்மிக வணங்காகி யதுபோலப்
பழிபாந் தலர்தூற்ற வென்றோழி
யழிபட ரலைப்ப வகறலோ கொடிதே

---

க. "வாடு வனப்போடி" கலி. கக: உ என்பதும் அதன்குறிப்பும் பார்க்க.
உ. இறையென்பதற்கு, இப்பொருள் வேறெங்கும் காணப்படவில்லை.
ங. "கொளை" கலி. கு: ச.
ச. "பூவீ கொடியிற் புல்லெனப் போகி" அகம். கக: கசு.
ரு. "வீர்வீய" (கலி. ஙக: ச) என்பதற்கு எழுதியிருக்கும் உரைபார்க்க.
சு. மறையென்பது களவொழுக்கமென்னும் பொருளில்வருதலை, (அ) "மறையிற்றான் மருவுற" (ஆ) "மறையினின் மணந்தாங்கே" (கலி. சகூ: உஉ, ருங: அ) என்பவற்றாலும் அறிக.
எ. "மாணுநோய்" கலி. கஉங: எ.
(பிரதிபேதம்) * உழப்பதை. †அடம்பங்.

எ - து: தனக்கு வலியைத்தரும் என்று கருதித் தான் *வழிபட்ட தெய்வம் தன்னைச் சேர்ந்தவர்கட்கு நெஞ்சழியும் நோய் மிகும்படி வருத்தமாகிய தன்மைபோல நின்னைத்தனக்கு வலியென்று †வழிபட்டவன்றோழியை நீ செய்த பழி எங்கும்பரந்து அலர் தூற்றுகையினாலே உண்டான மிக்க நினைவு வருத்த, நீங்குதல் கொடிதுகாணெனத் தோழி வரைவுகடாயினள். எ - று.

இதனால், தலைவிக்கு அசைவுபிறந்தது.

இஃது ஒத்தாழிசைக்கலி. (௧௨)

(௧௩௩.) மாமலர் முண்டகந் தில்லையோ டொருங்குடன்
கான லணிந்த வுயர்மண லெக்கர்மேற்
சீர்மிகு சிறப்பினோன் மாமுதற் கைசேர்த்த
நீர்மலி கரகம்போற் பழந்தூங்கு முடத்தாழைப்
பூமலர்ந் தவைபோலப் புள்ளல்குந் துறைவகேள்;
ஆற்றுத லென்பதொன் றலந்தவர்க் குதவுதல்
போற்றுத லென்பது புணர்ந்தாரைப் பிரியாமை
பண்பெனப் படுவது பாடறிந் தொழுகுத
லன்பெனப் படுவது தன்கிளை செறாஅமை
யறிவெனப் படுவது பேதையார் சொன்னோன்றல்
செறிவெனப் படுவது கூறியது மறாஅமை
நிறையெனப் படுவது மறைபிற ரறியாமை
முறையெனப் படுவது கண்ணோடா துயிர்வௌவல்
பொறையெனப் படுவது போற்றாரைப் பொறுத்தல்;
ஆங்கதை யறிந்தனி ராயினென் றோழி
நன்னுத னலனுண்டு துறத்தல் கொண்க
தீம்பா லுண்பவர் கொள்கலம் வரைத
னின்றலை வருந்தியா டுயரஞ்
சென்றனை களைமோ பூண்கநின் றேரே.

இது "வரை‡வுடம் பட்டோர்க் கடாவல்வேண்டினும்" (க) என்பதனால் தலைவன் தெருளாதவனைத் தெருட்டி வரைவுகடாயது.

௧. தொல். கள. சூ. ௨௩. இச்சூத்திரத்தின் இவருரையிலும் இச்செய்யுள் முற்காலத்து வரைவுகடாவுமாறுபோ லன்றி வரைவு கடாயதற்கு மேற்கோள்.

(பிரதிபேதம்) * †வழிப்பட்ட, ‡ உடன்பட்டோர்க் கடாவவேண்.



இதன் பொருள்.

மாமலர் முண்டகந் (௧)தில்லையோ டொருங்குடன்
கான லணிந்த வுயர்மண லெக்கர்மேற்
சீர்மிகு *சிறப்பினோன் மா†முதற் கைசேர்த்த
நீர்மலி கரகம்போற் பழந்தூங்கு முடத்தாழைப்
‡பூமலர்ந் தவைபோலப்(௨)புள்ளல்குந் துறைவகேள்

எ-து: (௩) ||கருமையையுடைத்தாகிய மலரையுடைய கழிமுள்ளி தில்லையோடேசேரச்சூழ்ந்தகானலிடத்துத்திரையிட்டமணன்மேலே காற்றுயர்த்த

---

௧. தில்லை, நெய்தனிலத்துக்கு உரித்தாகக் கூறப்படும் மரவகை. இது (அ) "நீர்காய் கொழுமீன் மாந்தித், தில்லையம் பொதும்பிற் பள்ளி கொள்ளும், மெல்லம் புலம்ப" (நற். ௧௩௧: ௨ - ௪.) (ஆ) "தில்லை வேலி யிவ்வூர்" (ஐங்குறு.௧௩௧) என்பவற்றாலும் அறியப்படும். இதன் றளிர் புற்கென்ற நிறமுடையதென்பதும் பன்முறை அருவி நீராடும் தாபதர்சடையினிறத்திற்குஉவமை கூறப்படுவதென்பதும் (இ)"கறங்கு வெள் ளருவி யேற்றலி னிறம்பெயர்ந்து, தில்லையன்ன புல்லென் சடையோ, டள்ளிலைத் தாளி கொய்யு மோனே" (புறம். ௨௫௨: ௧-௩) என்பதனால் அறியப்படுகின்றன. (ஈ) "தில்லை பாலை" (குறிஞ்சி. ௭௭) என்பதன் உரையில் தில்லை-தில்லைப்பூ என்று எழுதியிருத்தலால் இது பூவுடையதென்றும் தெரிகிறது. (உ) இதன்பால் மிக்க கொடுந்தன்மை யுடையதென்பர். (ஊ) சிதம்பரம், இம்மரம் அடர்ந்த காடாயிருந்தது பற்றி, 'தில்லை' என்று பெயர்பெற்றதென்பர்.

௨. "புள்ளிறை கொண்ட முள்ளுடை நெடுந்தோட்டுத், தாழை" அகம். ௧௮0: ௧௧ - ௧௨.

௩. (அ) "முள்ளிக், கொடுங்கான் மாமலர்" பெரும்பாண். உகரு - உகக. (ஆ) "கூர்முள் முண்டகக் கூர்ம்பனி மாமலர்" குறுந். ருக. (இ) "கூர்முள் முள்ளிக் குவிகுலைக் கழன்ற, மீன்முள் அன்ன வெண்கால் மாமலர்" அகம். உகா: க - உ. எனவும், (ஈ) "முண்டகம் கதிர்மணி கழா அலவும்" சிறுபாண். கசஅ. (உ) "மணிப்பூ முண்டகத்து" மது. கக. (ஊ) "மணிமருள் மலர முள்ளி" அகம். உசுக: க. எனவும் வருவன வற்றால், கழிமுள்ளிப்பூக் கருநிறமுடையதென்பதும் மற்றும் சிலவும் விளங்கும். இப்பூவை நெய்தனிலமகளிர் அணிவதுண்டென்ப; அது (எ) "அணிமலர் முண்டகத் தாய்பூங் கோதை, மணிமரு ளைம்பால் வண்டொடுக் கைஇ" நற். உசரு: உ - ௩. (ஏ) "முண்டகக் கோதை நனையத், தெண்டிரைப் பௌவம் பாய்ந்துநின் றோளே" ஐங். கஉக.

(பிரதிபேதம்) * நிறப்பினும், † முதலசைத்த, முதற்றகைத்த, முதற்றகைசேர்த்த, ‡ பூமலர்த் தலை, || கருமையுடைத்தாகிய.

## ஐந்தாவது நெய்தல் கஞ். ௮௨ள்

மணலிலே *உடனின்ற, புகழ்மிகுகின்ற தலைமையினையுடைய (க) தக்கணா மூர்த்திதேவர் தாமிருந்த (உ)ஆலமரத்தே தாமிருப்பதற்குமுன்னே தூக்கி வைத்த நீர்நிறைந்த (௩)குண்டிகை போலப் பழந்தூங்கும் முடத்தையுடைய (ச) †தாழைப்பூ அலர்ந்தவைபோலக் குருகினம் அத்தாழைமேலே தங்குந் துறைவனே! யான் கூறுகின்றதனைக்கேள். எ - று.

முள்ளுடைய முண்டகமும் கொடிய தில்லையுமே சூழ்ந்த கானலைக் கொடிதாக அலர்கூறுகின்ற மகளிர் சூழ்ந்திருக்கின்றதாகவும் உயிர்க்கொலை குழுவ்குருகுகள் நன்றாகியதாழைமலர்போற் றோன்றுகின்றதனை யம்மூரிர்க்கு வருத்தஞ்செய்கின்ற தலைவன் நன்மகனைப்போற் பிறர்க்குத் தோன்றுகின்ற தன்மையாகவும் உள்ளுறையுவமங்கொள்க.

ச. ஆற்றுத லென்பதொன் ‡றலந்தவர்க் குதவுதல்
போற்றுத லென்பது புணர்ந்தாரைப் பிரியாமை
(ரு)பண்பெனப் படுவது பாடறிந் தொழுகுதல்

லன்பெனப் படுவது தன்கிளை செறாஅமை

(ஐ) "முண்டகக் கோதை யொண்டொடி மகளிர்" புறம். உச: கக. என்பவற்றால் அறியப்படுகிறது. இப்பூவின் காம்பினடியிற் சிறிது தேனுண்டு. இதன் முதலாகிய செடி கத்தரிவகையுள் ஒன்றாகிய முள்ளியின் வேறென்றறிதற்பொருட்டுப் பெரும்பாலும் கழிமுள்ளி யென்றே வழங்கப்படும்; (ஏ) கடன்முள்ளியென்றும் அருகிவழங்கும். இது மற்றை நீர் நிலைகளிலுமிருக்கும்.

க. தக்ஷிணாமூர்த்தியென்பது தக்கணாமூர்த்தியெனச் சிதைந்து நின்றது.

உ. இந்நூற் பக்கம் சகச: உ - ஆம் குறிப்பும் "ஆலமர் செல்வன் பெயர் கொண்டு வளர்ந்தோன்" என, தக்கணாமூர்த்தியென்போன் (சிலப். உரு: கக) கூறப்படுதலும் இங்கே அறிதற்பாலன.

ங. தாழம்பழம் பலாப்பழத்தைப்போல முட்புறத்தையுடையது; கலயத்தி னளவான பருமனையும் சுடுமட் கலம்போன்ற செந்நிறத்தையுமுடைய தாதலால் இதற்கு, கமண்டலம் மெய்யானும் உருவானும் உவமம். இப்பழம், பயன்படாதவையென்று இகழப்படுபவற்றுள் ஒன்று.

ச. இந்நூற் பக்கம் அகக: எ - ஆம் குறிப்புப் பார்க்க.

ரு. (அ) "பண்புடைமை:—அஃதாவது பெருமைசான்றாண்மைகளிற் றாம் வழுவாது நின்றே எல்லாரியல்புகளுமறிந்து ஒத்தொழுகுதல்; 'பண் பெனப் படுவது பாடறிந் தொழுகல்" என்றார் பிறரும்' என

(பிரதிபேதம்) * உடனின்ற முடத்தாழைப்பூ.........கூறுகின்றதனைக் கேள். புகழ மிகு னென்ற. † தாழை எங்க, முள்ளுடைமுண்டக. ‡ அலர்ந்தவர்க்கு.



கலித்தொகை கஙௗ.

யறிவெனப் படுவது பேதையார் சொன்னோன்றல்

செறிவெனப் படுவது கூறியது*மறாஅமை
(௩)நிறையெனப் படுவது மறைபிற ரறியாமை
(௨)முறையெனப் படுவது கண்ணோடா துயிர்வௌவல்
(௬)பொறையெனப் படுவது போற்றாரைப் † பொறுத்தல்

---

இவ்வடியை மேற்கோள்காட்டுவர் பரி; குறள். ௯00 - ஆம் அதி. அவ.
(ஆ) "பாடறிந் தொழுகும் பண்பி னோரே" (புறம்.௧௬௨: ௧௪.) என்பது இதனோடு ஒப்புநோக்கற்பாலது.

௧. "நிறையழிதல்:--அஃதாவது தலைமகள், மனத்தடக்கற்பாலனவற்றை வேட்கை மிகுதியான் அடக்கமாட்டாது வாய்விடுதல்" என்று கூறி, அதற்கு (குறள்.௱௨௰௬-ம் அதி. அவ) பரிமேலழகரும் "நிறையாம்வாம்பு" என்புழி நிறை என்பதன்பொருளை விளக்குதற்கு, (தஞ்சை.௧௪.உரை) சொக்கப்ப நாவலரும் இவ்வடியை மேற்கோள்காட்டி யிருத்தலும், "நிறையிலன்"(குறள். ௮௬௪) என்பதன் விசேடவுரையில்,'நிறை-மறை பிறரறியாமை' என்று பரிமேலழகரும் 'நிறையென்பது மறைபிறரறியாமை நெஞ்சினை நிறுத்தல்' என்று (தொல். மெய்ப். சூ. ௨௫. உரை) பேராசிரியரும் எழுதியிருத்தலும் இங்கே அறிதற்பாலன. இந்நூற் பக்கம் ௭௯௯: ௬ - ஆம் குறிப்பும் பார்க்க.

௨. (அ) "தீமெய் கண்ட தீமை காணின், ஒப்ப நாடி யத்தக வொறுத்தி" புறம். ௯0: ௩ - ௪.(ஆ) "எங்கண் ணிளைய ரெனக்கருதி னேதமாற், றங்கண்ண ராலுந் தகவில கண்டக்கால், வன்கண்ண னாகி யொறுக்க வொறுக்கல்லா, மென்கண்ண னாளா னரசு" பழ. ௩௨௨.(இ)"ஓர்ந்து கண் ணோடா திறைபுரிந் தியார்மாட்டுந், தேர்ந்துசெய் வஃதே முறை" (ஈ) "கொலையிற் கொடியாரை வேந்தொறுத்தல் பைங்கூழ், களைகட் டதனொடு நேர்" குறள். ௫௪௧, ௫௫௦. (உ) "எய்திய குற்றத்தோர்கள் யாவரா யினுங்கண்ணோடா, தைதென நாடி நீதி யறந்தலை பிழையாத்

தண்டஞ், செய்தலே செங்கோலாகும்" விநாயக. அரசியற்கை. அசு. என்பவைகளும் (ண) "கருமஞ் சிதையாமற் கண்ணோட வல்லார்க்கு" (குறள்-௫எ௮) என்பதன் விசேடவுரையில், "தம்மொடு பயின்றார் பிறரை இடுக்கண்செய்துழி அவரைக் கண்ணோடியொறுதார்க்கு முறை சிதைதல், மேல் 'ஓர்ந்துகண் ணோடாது' என்ற முறையிலக்கணத் தானும் பெறும். முறை சிதையவரும்வழிக் கண்ணோடாமையும் வாராவழிக் கண்ணோடலும் ஒருவற்கியல்பாதலருமையிற் கண்ணோட வல்லார்க் கென்றும்..............கூறினார்" என்று எழுதியிருப்பதும் இங்கே அறிதற்பாலன.

௩. (அ) "மண்டிணிந்த நிலனும்..............போற்றார்ப் பொறுத்தலும்" புறம். ௨: க-எ. (ஆ) "வையா மாலையர் வசையுநர்க் கறுத்த, பகைவர்

(பிரதிபேதம்) * மற்மை,முறையெனப்.† பொறுத்தல். நிறையெனப்.பொறுத்தல் ஆக்கை.

## ஐந்தாவது நெய்தல் கஃ.

அ௯

எ-து: (க) இல்வாழ்க்கைநடந்துதல்என்று சொல்லுவது (உ) மிடித்தவர்க்கு யாதானும்ஒன்றை உதவுதலே; ஒன்றைப்(௩)பாதுகாத்தல் என்று சொல்லுவது கூடினாரைப் பிரியாதிருத்தலே; மக்கட்பண்பு என்று சொல்லப்படுவது உலக வொழுக்கம் அறிந்தொழுகுதலே; (௪) அன்பு என்று சொல்லப்படுவது தன் சுற்றத்தைக் (௫) கெடாதிருத்தலே; (௬) அறிவு என்று சொல்லப்படுவது

தேஎத் தாயினுஞ், சினவா யாகுத லிறும்பூதாற் பெரிதே" பதிற். ௩௨: க௫-கஎ. (இ) "அகழ்வாரைத்தாங்கு நிலம்போலத் தம்மை, யிகழ்வார்ப் பொறுத்த றலை" (ஈ) "ஒறுத்தாற்றும் பண்பினார் கண்ணுங்கண் ணோடிப், பொறுத்தாற்றும் பண்பே தலை" குறள். க௫௧, ௫௭௯. (உ) "கறுத்தாற்றித் தம்மைக் கடியசெய்தாரைப், பொறுத்தாற்றிச் சேறல் புகழால்" பழ. கக.

௧. "தானந்தவம்" என்னுங் குறளின் விசேடவுரையில் 'பெரும்பான்மை பற்றித் தானம் இல்லறத்தின்மேலும் தவம் துறவறத்தின்மேலும் நின்றன' என்ற (குறள்.கக) பரிமேலழகர் எழுதியிருப்பதும் "வறியார்க்

கொண் டிவதே யீகைமற்றெல்லாங், குறியெதிர்ப்பைநீர துடைத்து" (குறள். உஉக.) என்பதும் ஈண்டறிதற்பாலன.

உ. அலத்தல் மிடியுறுதலென்னும்பொருளில்வருதலை, "அலத்தற் காலை" மணி. கஉ: ௬௦, உஅ: ககக. என வருதலாலும் அறிக.

௩. "பொருள் போற்றி வழக்குநெறி" குறள். சஎஎ. என்புழி, போற்றி வழங்குதலென்பதற்கு, பேணிக்கொண்டொழுகுதலென்று உரையும், பேணிக்கொண் டொழுகுதலென்பதற்கு, (ஒருவரோடும் நட்பில்லாத அவரைத் தம்மோடு) நட்புண்டாக்கிக்கொண் டொழுகுதலென்று விசேடவுரையும் எழுதியிருப்பது இங்கே அறிதற்பாலது.

௪. (அ) "தமர்தற் றப்பி னது நோன் றல்லும்" புறம். கடுஎ: க. (ஆ) "நண்பொன்றித் தம்மாலே காட்டப்பட் டார்களைக், கண்கண்ட குற்ற முளவெனினுங் காய்கியார், பண்கொண்ட டின்சொற் பணைத் தோளா யாருளரே, தங்கன்று சாக்கறப் பார்" பழ. கக.

௫. "அறத்திற்கே யன்புசார் பென்ப வறியார், மறத்திற்கு மஃதே துணை" (குறள். எக.) என்பது இங்கே நோக்கற்பாலது.

௬. (அ) "தெரியா தவர்தந் திறனில்சொற் கேட்டாற், பரியாதார்போல விருக்க" (ஆ) "ஆய்ந்த வறிவின ரல்லாதார் புல்லுரைக்குக், காய்ந் தெதிர் சொல்லுபவோ கற்றறிந்தார்" பழ. கஉ௯, உகஅ. (இ) "வன் மையுள், வன்மை மடவார்ப் பொறை" குறள். க௫௩. (ஈ) "எள்ளிப் பிறருரைக்கு மின்னாச்சொ றன்னெஞ்சிற், கொள்ளிவைத் தாற் போலக் கொடிதெனினு - மெள்ள, வறிவென்னு நீரா லவித்தொழுக லாற்றிற், பிறிதென்னும் வேண்டா தவம்" அறநெறி. கஒக.

### அ௩௦ கலித்தொகை க௩௩.

அறியாதார் தன்னைப் *பார்த்துச்சொல்லுஞ் சொல்லைப் பொறுத்தலே; (க)ஒருவரோடு ஒருவர்க்கு உறவுஎன்று கூறப்படுவது கூறியதொன்றைத் தாம் † மறாதிருத்தலே; நிறைஎன்று சொல்லப்படுவது மறைந்தது ஒரு காரியம் பிறர் அறியாமல் ஒழுகுதலே; முறை என்று சொல்லப்படுவது (உ)நமமென்று கண் ணோட்டஞ்செய்யாது அவர்செய்தகுறைக்கேற்ப அவர் உயிரைக்கொள்ளுதலே; (௩) பொறை என்று சொல்லப்படுவது பகைவரைக் காலம் வருமளவும் ‡ பொறுத்திருத்தலே. எ - று.

கரு ‖ஆங்கதை யறிந்தனி ராயினென் றோழி
நன்னுத னலனுண்டு துறத்தல் கொண்க
தீம்பா ÷ லுண்பவர் கொள்கலம் × வரைத
லின்றலை வருந்திய பெயரஞ்
சென்றனை களைமோ (பூ)பூண்மார்பின் + றேறே

எ - து: அப்படியே அக்குணத்தை நீரே அறிந்தொழுகினீராயின் அவ்வொழுக்கத்திற்கு ஏற்பது ஒன்று கூறுவேன்; கொண்க! என்றோழியது நன்னுதலின் நலத்தை நுகர்ந்து அவளைத் துறத்தல், இனியதாகிய பாலை

க. (அ) "தேறிய பாங்கியர் வெள்ளமுண் டாயினுந் தேமொழிநான், இறிய கீற்றினை யுங்கட வாள்வண்டு கிண்டிமது, வூறிய கொன்றைய ராரூர்த் தியாக ருயர்சிலம்பிற், கூறிய வாறு மறுண்முடிப் பேனுன் குறைவினையே" திருவாரூர்க்கோவை. கஙக. (ஆ) "பெம்மான் புகலிவிற் சம்பந்தர் பால்வைத்த பேரருள்போ, லெம்மான் விழியெம் முதல்வியென் பானல் வருள்பெரிய, னம்மானைச் சம்பந்தர் சொற்படி யாவு நடத்தினன்மற், றிம்மானென் சொற்படி யெல்லா நடத்து மியல்பினளே" சீகாழிக்கோவை. கநுக.

உ. "நமனெனக் கோல்கோடாது" புறம். ருரு: கக.

ங. (அ) "காலங் கருதி யிருப்பர் கலங்காது, ஞாலங் கருது பவர்" (ஆ) "பொள்ளென வாங்கே புறம்வேரார் காலம்பார்த், துள்வேர்ப்ப ரொள்ளி யவர்" (இ) "செறுநரைக் காணிற் சுமக்க விறுவரை, காணிற் கிழக்காந் தலை" (ஈ) "எய்தற் கரிய தியைந்தக்கா லந்நிலையே, செய்தற் கரிய செயல்" (உ) "கொக்கொக்க கூம்பும் பருவத்து மற்றதன், குத்தொக்க சீர்த்த விடத்து" குறள். சஅரு, சஅஎ, சஅஅ, சஅகூ, சகூ0. (ஊ) "ஆண்டுநே ரெல்லையாக வன்றிறத் தழற்சியின்மை, வேண்டுவ லென்று சொன்னான் வில்வலா னதனை நேர்ந்தான்" சீவக. ஙகங.

ச. கலி. கஉ: உ0 - உஉ - ஆம் அடிகளும் அவற்றின் குறிப்பும் பார்க்க.

(பிரதிபேதம்) * பாராத. † மாருதிருத்தல். ‡ பொறுத்திறுத்தல் அப்படியே, ‖ ஆங்கறிந் தொழுகுனை யாயினுமென், ÷ உண்பவர், உண்டோர். × வரைதலின்றலை வருந்தினையோம். ✝ தேரே என்பது இல்லாமற்கை.

புண்ணுமவர்கள் பாலையுண்டு அதனைக்கொண்டிருக்கும் கலத்தைக் கவிழ்த்து விடுதல் போல்வதொன்று; ஆகையினாலே, நின்னிடத்து வருத்தினவன் துயரத்தை வரைந்து சென்றனையாய்க் களைவாய்; அங்ஙனம் களைதற்கு நின் தேர் புரவியைப் பூண்பதாகவெனத் தெருட்டி வரைவுகடாயினான். எ - று.

இதனால், தலைவற்கு அசைவு பிறந்தது.

(க) இது தனிச்சொலின்றி ஆசிரியச் சுரிதகம் பெற்ற தாவிணைக் கொச்சகம். (கஅ)

(கஙச.) மல்லரை மறஞ்சாய்த்த மலர்தண்டா ரகலத்தோ
னொல்லாரு டன்றோட வுருத்தட னெறிதலிற்
கொல்யானை யணிநுத லழுத்திய வாழிபோற்
கல்சேர்பு ஞாயிறு கதிர்வாங்கி மறைதலி
(ரு) னிருங்கட லொளித்தாங்கே யிரவுக்காண் பதுபோலப்
பெருங்கட லோதநீர் வீங்குபு கரைசேரப்
போழ்துய வண்டிறைற் புல்லென்ற துறையவாய்ப்
பாயல்கொள் பவைபோலக் கயமலர் வாய்கூம்ப
வொருநிலையே நடுக்குற்றிவ் வுலகெலா மச்சுற
விருவினர் பெயர்ப்பன்ன வெவ்வங்கூர் மருண்மாலை;

கக தவலில்நோய் செய்தவர்க் காணாமை நினைத்தலி
னிகலிபின் பனிதின வெவ்வத்து ளாழ்ந்தாங்கே
கவலைகொ ணெஞ்சினேன் கலுழ்காக் கடனோக்கி
யவலமெய்க் கொண்டது போலுமஃ தெவன்கொலோ
கரு நடுங்குநோய் செய்தவர் நல்காமை நினைத்தலிற்
கடும்பனி கைமிகக் கையாற்று ளாழ்ந்தாங்கே
நடுங்குநோ யுழந்தவென் னலனழிய மணநோக்கி
யிடும்பைநோய்க் கிகுவன போலுமஃ தெவன்கொலோ;

௧. (அ) இச்செய்யுள் இச்செய்திக்கே தொல். செய். சூ. ககடு. பேர். நச். உரைகளில் மேற்கோள். (ஆ) இளம்பூரணர்; 'தாவின்றுகி' என்னும் தொல். செய். ௧௪௨ - ஆம் சூத்திரத்திஉரையில் இதனைக் கொச்சக வொருபோகு எண்ணிடையிட்டுச் சின்னங்குன்றி வருவதற்கு மேற் கோள் காட்டி முதற்பகுதியைத் தரவென்றும், இடைப்பகுதியை என் ணென்றும், கடைப்பகுதியைச் சுரிதகமென்றும் விளக்கினர்.

## அ௨௨ கலித்தொகை ௧௨௪.

௧௯ வையினர் நலனுண்டார் வாராமை நினைத்தலிற்
கையறு நெஞ்சினேன் கலக்கத்து ளாழ்ந்தாங்கே
மையல்கொ ணெஞ்சொடு மயக்கத்தான் மரனேக்கி
யெவ்வத்தா லியன்றபோ லிலைகூம்ப லெவன்கொலோ;
எனவாங்கு;
௨௪ கரைகாணப் பௌவத்துக் கலஞ்சிதைந் தாழ்பவன்
றிரைதரப் புணைபெற்றுத் தித்தின்றி யுய்ந்தாங்கு
விரைவனர் காதலர் புகுதர
நிரைதொடி துயர நீங்கின்றால் விரைந்தே.

இது பிரிவிடை மாலைப்பொழுது கண்டு ஆற்றாத தலைவி இவ்வகைப் பட்டனவும் நமதிடுக்கண்கண்டு எவ்வங்கொண்டன போன்ற; அவரும் நமக்கருளுவார்கொல்லோ, எனச்சொல்லிய நோத்துக்கண் தலைவன் புக, *அவ்வளவில் அவள் அவலம் நீங்கினமை கண்டு வாயில்கள் தம்முள்ளே கூறியது.

இதன் பொருள்.

மல்லரை மறஞ்சாய்த்த மலர்த்தண்டா ரகலத்தோ

னெல்லாதா ருடன்றோட வுருத்துட னெறிதலிற்
கொல்(க)யானை யணிநுத லழுத்திய வாழிபோற்
(உ)கல்சேர்பு ஞாயிறு கதிர்வாங்கி மறைதலி
னிருங்கட லொலித்தாங்கே யிரவுக்காண் பதுபோலப்
பெருங்கட லோதநீர் வீங்குபு கரைசேரப்

---

க. (அ) "கன்னவில் கடகத் தோளான் கண்டுகை தொழுது கொண்டு, மின்னவிர் விளங்கு நேமி விடுத்தனன் விடுத்த லோடு, மன்னனை மார்புகீண்டு மணிமுடி யெறிந்து மற்றைப், பொன்னவி ரோடை யானைப் புகர்நுதற் புக்க தன்றே" (சூளா. அரசியல். ௩௩௧.) எனவும் (ஆ) "செல்வப்போர்க் கதக்கண்ணன் செயிர்த்தெறிந்த சினவாழி, முல்லைத்தார் மறமன்னர் முடித்தலையை முருக்கிப்போ, யெல்லைநீர் வியன்கொண்மூ விடைநுழையு மதியம்போன், மல்லலோங் கெழில்யானை மருமம்பாய்ந் தொளித்ததே" (யா-கா. உறுப்பியல். ௧௧. மேற்கோள்.) எனவும் யானை நுதலில் ஆழிபுகுதல் கூறப்படுதல் காண்க.

உ. (அ) "படுசுடர் கல்சேர" (ஆ) "கனைசுடர் கல்சேர" (இ) "ஒண்சுடர் கல்சேர" (ஈ) "கதிர்பகா ஞாயிறே கல்சேர்தி யாயின்" கலி. ௧௧௯: ௨, ௧௨௦: ௩, ௧௨௪: ௧, ௧௪௨: ௩௭.

(பிரதிபேதம்) * அவ்வளவில் கேசவனை கண்டு.



ஓவா வேகமோ டுருத்துத்தன் மேற்சென்ற
சேவச் செவிமுதற் கொண்டு பெயர்த்தொற்றுங்
காயாம் பூங்கண்ணிப் பொதுவன் றகைகண்டை
மேவார் விடுத்தந்த கூந்தற் குதிரையை
வாய்பகுத் திட்டுப் புடைத்தஞான் றின்னன்கொன்
மாயோனென் றுட்கிற்றென் னெஞ்சு ;
ஆங்கு, இரும்புலித் தொழுதியும் பெருங்களிற் றினமு
மாறுமா றுழக்கியாங் குழக்கிப் பொதுவரு
மேறுகொண் டொருங்குதொழூஉ விட்டனர் விட்டாங்கே

மயிலெருத் துறமுணி மணிநிலத்துப் பிறழப்
பயிலிதழ் மலருண்கண்
மாதர் மகளிரு மைந்தரு மைந்துற்றுத்
தாதெரு மன்றத் தயர்வர் தழூஉ;
கூங. கொல்லேற்றுக் கோடஞ்சு வானை மறுமையும்
புல்லாளே யாய மகள்;
கூ௫ அஞ்சார் கொலேயேறு கொள்பவ ரல்லதை
நெஞ்சிலார் தோய்தற் கரிய வுயிர்துறந்து
நைவாரா வாயமக ளோள்;
கூஅ வளியா வறியா வுயிர்காவல் கொண்டு
நளிவாய் மருப்பஞ்சு நெஞ்சினார் தோய்தற்
கெளியவோ வாயமக ளோள்;
எக விலேவேண்டா ரெய்மினத் தாயர் மகளிர்
கொலேயேற்றுக் கோட்டிடைத் தாம்வீழ்வார் மார்பின்
முலேயிடைப் போலப் புகின்;
எச ஆங்கு;
குரவை தழீஇயா மரபுளி பாடித்
தேயா விழுப்புகழ்த் தெய்வம் பரவுது
மாசில்வான் முந்நீர்ப் பரந்த தொன்னில
மாளுங் கிழமையொடு புணர்ந்த
வெங்கோ வாழியரிம் மலர்தலை யுலகே.

## ஐந்தாவது நெய்தல் கஎ. அகங

போதுய வண்டிறைப் புல்லென்ற துறைபவாய்ப்
(க)பாயல்கொள் பவைபோலக் கயமலர் வாய்கூம்ப
வொருநிலையே நடுக்குற்றிவ் வுலகெலா மச்சுற
விருநிலம் (உ)பெயர்ப்பன்ன வெவ்வங்கூர் மருண்மாலை

எ-து: (௩)பகையாய் வந்த(௪)மல்லரைமறத்தைக்கெடுத்த *அலர்ந்ததண்ணிய தாரை அணிந்த திருமார்பையுடைய மாயவன், தன் பகைவரெல்லாருஞ் சேரவந்து உருத்துத் தன்னை எறிகையினாலே, †அவரை உடன்று அவர் ஓடும்படியாக அவர் எறின(௫) கொல்யானையினது அழகினையுடைய மத்தகத்திலே

---

௧. (அ) "கண்பாயல் பெற்றபோற் கணைக்கால மலர்கூம்ப" (ஆ) "இம்மாலை, இருங்கழி மாமலர் கூம்ப" (கலி. ௧௧௯:௫; ௧௩௦:௧௧-௧௨) என்பவைவும் அவற்றின் குறிப்பும் நோக்குக.

௨. (அ) "பல்லுருவம் பெயர்த்து" (ஆ) "பல்வயி னுயிரெல்லாம் படைத்தான்கட் பெயர்ப்பான்போல்" (கலி. ௧:௫; ௧௨௯: ௨.) என்பவற்றில், பெயர்த்தலென்பதற்கு எழுதியிருக்கும் உரையும் பார்க்க.

௩. பகையாய் வந்த மல்லரென்றது, கஞ்சனேவலால் தன்னைக் கொல்ல வந்த சாணூரன் சலன் கவுசலன் முதலியவரை.

௪. மல்லரை மறத்தைக் கெடுத்தலென்னு முடிபை, தொல். வேற்-மயங். ௫ - ஆம் சூத்திரத்தின் இவருரை நோக்கித் தெளிக.

௫. கொல்யானை என்னு மொழியிலுள்ள முதனிலை செய்வினைக்கும் செயப்பாட்டு வினைக்கும் பொதுவாய் நிற்கும். இந்நூலுள் முன்பு "கொல்யானை நீர்க்குவிட் டாங்கு" (கலி. ௫௧. ௩௨) எனச் செய்வினையிலும் "கொல்யானைக் கோட்டால் வெதிர்நெற் குறுவாம்" (கலி. ௪௨: ௪) எனச் செயப்பாட்டு வினையிலும் வந்திருக்கிறது. "புலிகொல் யானை" என்பதற்கு, 'புலியைக் கொன்ற யானை, புலியாற் கொல்லப்பட்ட யானை, புலியினிற் கொல்லப்பட்ட யானை' என்று

மயிலைநாதரும், 'புலியைக் கொன்ற யானை, புலியானது கொன்ற யானை, புலியாற் கொல்லப்பட்ட யானை'என் றுமற்றைய உரைகாரரும், (நன். பொது. சூ. ௨௨. உரை) புலி கருத்தாவாகியும் கருமமாகியும் யானை கருத்தாவாகியும் கருமமாகியும் நிற்குமென்று சுப்பிரமணிய தீக்ஷிதரும் (பிரயோக. ௪௫. உரை) எழுதியிருப்பவையும், "கொல் யானை என்பது அக்காலத்து அஃது உதிரக்கோட்டோடு வந்த தேல் இறப்பும், அதன்றொழிலைக் கண்டுநின்றுழி நிகழ்வும், அது கொல்ல ஒவுவதனைக் கண்டுழி எதிர்வும் விரியும். இனிக் கொல்யானை என்பதன்கண் இரண்டு ஈறும் ஒருங்கு தொக்குநின்றதென்றற்கு

(பிரதிபேதம்) * அலர்ந்த தாமரை, † அவன் அவரை.





அழுத்தின சக்கரம்போலே, ஞாயிறு தான் பரப்பிய கதிர்களைத் தன்னிடத்தே குவித்துக்கொண்டு அத்தகிரியைச் சேர்ந்து மறைகையினாலே பெரிதாகிய கடலில் ஓதம் ஏறுகின்ற நீர் மிக்குக் கரையைச் சேராநிற்க, கழியிடத்துப் பூக்களினின்றும் போன வண்டுகளாலே பொலிவழிந்த துறையிடத்தனவாய்த் துயில்கொள்வனபோலே, அக்கயத்தின் மலர்களெல்லாம் வாய்குவியாநிற்க, அக்காலத்தே இருங்கடல் ஒலித்து இவ்வுலகெல்லாம் ஒருபடிப்பட நடுக்கமுற்று அச்சமுறும்படி (௧) தான் தோற்றுவித்த இருநிலத்தைத் தான் மீண்டு தன்னிடத்தே ஒடுக்கிக்கொள்ளுந் தன்மையையொத்த இராக்காலத்தைத் தான்(௨)படைப்பதுபோல, அதற்கு முன்னே தோன்றுகின்ற, பிரிந்தோர்க்கு * வருத்தம் மிகுதற்குக் காரணமான, மருண்மாலைக் கண்ணே. எ - று.

இருங்கடல் ஒலித்தெழுந்து உலகைக் கோப்பதுபோன்ற இராக்காலத்தைத் தான்படைப்பதுபோற் றோன்றுகின்ற மாலை என்க. மறைதலின் ஆங்கே தோன்றுகின்ற மாலையென்க.

௧௧ தவலினோய் செய்தவர்க் காணாமை நினைத்தலி
†னிகலிடும் பனிதின வெவ்வத்து ளாழ்ந்தாங்கே

---

விதி, 'செய்யுஞ் செய்த வென்னுங் கிளவியின், மெய்யொருங் கியலுந் தொழிற்றொகு மொழியும்' என்றதாம். என்றதன்பொருள் செய்யுஞ்

செய்த என்னும் பெயரெச்சச் சொற்களினுடைய காலங்காட்டும் உம்மும் அகரமும் ஒருசொற்கண்ணே சேர நடக்கும் புடை பெயர்ச்சி தொக்குநிற்குஞ் சொற்களென்றவாறு. இங்ஙனம் இரண்டு பெயரெச்ச வாசகமுஞ் சேரத் தொக்குநிற்றலான் ஆசிரியர் ஒரு சொல்லாக்கிப் புணர்க்கலாகாதென்று 'புணரியனிலையுடையுணரத்தோன்று' என்றார்" என்று நச்சினார்க்கினியர் (தொல். எச்ச. சூ. ௧௧. உரை) எழுதி யிருப்பதும் அறிதற்பாலன.

௧. (அ) "மாநிலமியலா முதன்முறை யமையத்து, நாம வெள்ளத்து நவைவட் டோன்றிய, வாய்மொழி மகனொடு" என்னும் (பரி. ௩: ௧௭ - ௧௯.) பகுதியும் அதனுரையும், (ஆ) "மாநில மியற்றுவான், விரிதிரை நீக்கு வான் வியன்குறிப் பொத்தனர்" (கலி. ௧0௧: ௧௪ - ௧௧.) என்பதும் அதன் குறிப்பில் இவ்விடத்துக்குப் பொருந்துவனவும் பார்க்க.

௨. காண்பது - செய்வதாதலின் படைப்பதென்று பொருள் கூறினர்; காணென்பது செய்யென்னும் பொருளில் வருதலை, "கம்மியர் காணு மரபின" (சிலப். ௫: ௩0௨) என்புழி, 'காணு' என்பதற்கு, 'பண்ணப் படாதன' என்று அடியார்க்கு நல்லார் பொருளெழுதி யிருத்தலாலும் அறிக. இக்காலத்தும் உலகவழக்கில் காணுதலின் பொருட்டாகிய பார்த்தலென்பது செய்தலென்னும் பொருளில் வழங்குகின்றது.

(பிரதிபேதம்) * வருத்தத்திற்குக் காரணமான. † இகலிரும்பனி, இகலிம்பனி.

## ஐந்தாவது நெய்தல் ௧எ. அ௩௫

கலங்கொ ணெஞ்சினேன் கலுழ்தரக் (௧)கடனோக்கி

யவலமெய்க் கொண்டது போலுமஃ தெவன்கொலோ

எ - து: எனக்குக் கேடில்லாத காமநோயைச் செய்தவரைக் கண்ணுற் காணுமல் என்னெஞ்சு நினைக்கையினாலே, அது தனக்கிடமாகக் *கொண்டு மாறுபாடுகளைக்†கொடுக்கும்பனிக்காலம் அறிவைத்தின்றுவிட,‡அப்பொழுதே வருத்தத்திலே அழுந்திப் (௨) பல நினைவுகொண்ட நெஞ்சினையுடைய யான் கலக்கத்தைத் தர, கடல் அதனை நோக்கி என்னுடைய இந்த அவலத்தைத் தன்னுடைய மெய்யிலே கொண்டதுபோலே கூப்பிடாநின்றதற்குக் காரண மென்னோதான். எ - று

கரு (௩)நடுங்குநோய் செய்தவர் நல்காமை ‖ நினைத்தலிற்
கடும்பனி × கைம்மிகக் கையாற்று வாழ்ந்தாங்கே
நடுங்குநோ யுழந்தவென் னலனழிய மணனோக்கி
யிடும்பைநோய்க் (௪)கிகுவன போலுமஃ தெவன்கொலோ

எ - து: எனக்கு நடுங்குகின்ற காமநோயைச் செய்தவர் என்னை அருளாதபடியாலே என் நெஞ்சு அவரை நினைக்கையினாலே, அதுகண்டு கடிய பனிக்காலம் கைம்மிகுவர, + அதுகண்டு அப்பொழுதே செயலறவிலே யான் அழுந்த, (௫) மணற்குன்று அதனை நோக்கி நடுங்குகின்ற நோயிலே உழந்து என்னலத்தை இருந்திழந்தேனது (?) இம்மையைத் தரும் நோய்க்குத் தான் கரைந்து + தாழ்வனபோல இராநின்றதற்குக் காரணமென்னோதான். எ-று.

இரையால், மணற்குன்று கரைந்து வீழ்கின்றதனைக் கண்டு கூறினாள். ஆழ்ந்து, அழுவென்க.

க. "பாய்திரை பாடோவாப் பரப்புநீர்ப் பனிக்கடல், தூவறத் துறந்தனன் றுறைவனென் றவன்றிற நோய்தெற வுழப்பார்க ணிமிழ்தியோ" (கலி. ௧௨௧: அ - ௧0) என்பதும்இந் நூற்பக்கம் அ00: ௩-ஆம் குறிப்பும் இங்கே அறிதற்பாலன.

உ. "பலநினைந் தினையும் பைதனெஞ்சி, னலமா ணுயு ளுழக்குமென் றோழி" கலி. ௧௨௧: ௧௧ - ௨௦.

௩. "நடுங்கு நோய்" கலி ௧௨௭: ௭.

௪. இகுதல் - தாழ்தல்; இற்றொழுகுதல், விழுதலென்னும் பொருளிலும் வரும்.

௫. "குன்றுபோல் வாலெக்கர்" கலி. ௧௨௭: ௪.

(பிரதிபேதம்) * கொண்டுதன் மாது, † கெடுக்கும் பனிக்காலம் தம்அறிவைத், ‡ அப்பொழுதே அவ்வருத்தத்திலே, ‖ விடுத்தலிற், × கைமிகக்கையாற்றுதாழ்ந்து,

+ நடுங்குகின்றநோயிலேஉழந்து செயலறவிலே யான்அழுந்த மணற்குன்று அதனைநோக்கித் தன்னலத்தை இழந்திருந்தேனது + தாழ்வதுபோலே.

கக வையினர் நலனுண்டார் வாராமை நினைத்தலிற்
    கையறு நெஞ்சினேன் கலக்கத்து ளாழ்ந்தாங்கே
    மையல்கொ ணெஞ்சொடு மயக்கத்தான் மரநோக்கி
    யெவ்வத்தா லியன்றபோ (க)லிலைகூம்ப லெவன்கொலோ

என்-து: இறந்துபட்டு வருத்தந் தீராமல் என்னை (உ)வைத்து, என்னலத்தை உண்டவர் ஈண்டு வாராதபடியாலே என்னெஞ்சு அவரை நினைக்கையினாலே, அதுகண்டு பனிக்காலம் வருத்த, அது * கண்டு அப்பொழுதே மயக்கத்தாலே செயலற்ற நெஞ்சினேனாய்க் †கலக்கத்திலே அழுந்த, மரம் அதனை நோக்கி வருத்தத்தாற் செய்தவைபோலே மயக்கங்கொண்ட (ங)நெஞ்சோடே இலைகள் குவிதற்குக் காரணம் என்னோதான். எ - று.

† எனவாங்கு

எ - து. என இவள் சொல்லாநிற்க. எ - று.
ஆங்கு, அசை.

உச (ச)கரைகாணப் பௌவத்துக் கலஞ்சிதைந் தாழ்பவன்
    றிரைதரப் புணைபெற்றுத் தீதின்றி யுய்ந்தாங்கு
    விரைவனர் காதலர் புகுதர
    நிரைதொடி துயர நீங்கின்றால் விரைந்தே

---

க. "மாமெல்லா மிலைகூம்ப" கலி. கஉ0: க.

உ. "வையினர்" என்பதற்கு, 'வைத்து' என்றுஇங்கே பொருள்கொள்ளும் இவ்வுரைகாரர் இச்சொல்லுக்கு'வஞ்சித்து'என்றும்(தொல். பொருளி. கு. ௫0.) பொருள்கொண்டு (அ) வஞ்சித்தமை கூறுதலாகிய வைஇய மொழிக்கு,"வையினர்..... நினைத்தலின்"என்பதை மேற்கோள்காட்டியிருக்கிறார். இச்சொற்கு அப்பொருளுமுண்மை,(ஆ)"வையாது"என்பதற்கு 'வஞ்சியாதே' என்று (பு - வெ. வெட்சி. கஅ. கொளுவுரை.) பொருளெழுதியிருத்தலாலும் அறியப்படும்.

ங. (அ) "கரிபொய்த்தான் கீழிருந்த மரம்போலக் கவின்வாடி" (கலி. கூச:கo) என்பதன் விசேடவுரையில், "'புல்லு மாறு மோரறி வினவே, பிறவு முளவே யக்கிளைப் பிறப்பே' இதனுட் பிற அறிவும் உள வென்று கூறினர்; அதனாற் பாவத்திற்கு அஞ்சி மரம் கவின்வாடிற்

றென்றார்" என இவ்வுரையாசிரியர் எழுதியிருப்பது இங்கே அறிதற்பாலது. (ஆ) "கல்லோ மாறு மிரங்க" என்பது, சீவக. உகக௪.

௪. மணிமேகலையிலுள்ள சாதுவன் வரலாறும் சீவகசிந்தாமணியிலுள்ள வணிகனாகிய சீதத்தன் வரலாறும் ஈண்டு அறிதற்பாலன.

(பிரதிபேதம்) * கண்டபொழுதே, † எனவாங்கு ஆங்கு அசை.

## ஐந்தாவது நெய்தல் கஅ. அருள்

*எ - து: கரைகாணாத நடுக்கடலிலே மரக்கலங் கெட்டு அழுந்துகின்றவன் திரை கொண்டுவந்த ஒரு தெப்பத்தைப் பெற்றுப் பின்பு தீதில்லையாய்ப் பிழைத்தாற்போல இவள்காதலர் விரைந்து புகுத இடும்பையாவதும் விரைந்துபோயிற்று; அதனைக்காணீரென வாயில்கள் தம்முள்ளே கூறினர். எ - று.

எனப்புகுதரவென்க. ஆல், அசை.
இதனால், தலைவிக்குப் புணர்ச்சியுவகை பிறந்தது.
இஃது ஒத்தாழிசைக்கலி. (கஎ)

(கஙரு.) துணைபுணர்ந் தெழுதருந் தூநிற வலம்புரி
யிணைதிரண் மருப்பாக வெறிவளி பாகனா
வயிரிணி நெடுங்கத வமைத்தடைத் தணிகொண்ட
வெயிலிடு களிறேபோ லிடுமண னெடுங்கோட்டைப்
பயிறிரை நடுநன்னாட் பாய்ந்துராஉந் துறைவகேள்;
௬ கடிமலர்ப் புன்னைக்கீழ்க் காரிகை தோற்றாளைத்
தொடிநெகிழ்ந்த தோளளாத் துறப்பாயான் மற்றுநின்
குடிமைக்கட் பெரியதோர் குற்றமாய்க் கிடவாதோ;
௯ ஆய்மலர்ப் புன்னைக்கீ ழணிநலந் தோற்றாளை
நோய்மலி நிலையளாத் துறப்பாயான் மற்றுநின்
வாய்மைக்கட் பெரியதோர் வஞ்சமாய்க் கிடவாதோ;
கஉ திகழ்மலர்ப் புன்னைக்கீழ்த் திருநலந் தோற்றாளை
யிகழ்மலர்க் கண்ணளாத் துறப்பாயான் மற்றுநின்

புகழ்மைக்கட் பெரியோர் புகராகிக் கிடவாதோ;

எனவாங்கு;

௧௯ சொல்லக் கேட்டனை யாயின் வல்லே
யணிகிளர் நெடுவரை யலைக்குநின் னகலத்து
மணிகிள ராரந் தாரொடு துயல்வர
வுயங்கின ளுயிர்க்குமென் றோழிக்
கியங்கொலி நெடுந்திண்டேர் கடவுமதி விரைந்தே.

இது வரையாது வந்தொழுகுந் தலைவனைத் தோழி நெருங்கி வரைவு கடாயது.

---

(பிரதிபேதம்) * எ - டு: எனவிவள் சொல்லாமிற்கக்கரை.

அ௯அ கலித்தொகை ௬௫.

## இதன் பொருள்.

*துணைபுணர்ந் தெழுதருந் *தூநிற (க)வலம்புரி*
*யிணைதிரண் மருப்பாக வெறிவளி பாகனு*

---

க. சங்கு இடம்புரி வலம்புரி சலஞ்சலம் பாஞ்சசன்னியமென நால்வகைப் படுமென்றும் அவை முறையே ஆயிரம் இப்பி ஆயிரமிடம்புரி ஆயிரம் வலம்புரி ஆயிரஞ் சலஞ்சலம் இவற்றாற் சூழப்படுஞ் சிறப்பினவென் றும் நிகண்டுகள் கூறும். அவற்றுள் வலம்புரி (அ) "இலங்குநீர்ப் பரப் பின் வளைமீக் கூறும், வலம்புரி யன்ன வசைநீங்கு சிறப்பின்" என்றும் (பெரும்பாண். ௩௪-௩௫) (ஆ) "வரிவளை சூழும் வலம்புரி" என்றும் (சீவக. ௨௪௦௩) சிறப்பித்துக்கூறப்படுகின்றது. (இ) இது பரதவர் களால் மூழ்கி எடுக்கப்படுவதென்பது "வலம்புரி மூழ்கிய வான்றிமிற் பரதவர்" என்பதனாலும் (அகம். ௩௫௦: ௧௧.) துறையிடத்தே வந்து மேய்ந்து மணலில் உழுதலும் உண்டென்பது. (ஈ) "துறைமேய் வலம்புரி தோய்ந்து மணலுழுத தோற்றம்" என்பதனாலும் (சிலப். எ: அ.) விளங்கும். இது பதினாறு மங்கலப்பொருள்களுள் ஒன்றாக (உ) "வலம்புரி வட்டமு மிலங்கொளிச் சங்கும்" என்று (பெருங். (உ) ௩: ௨௮) கூறப்படுகின்றது. (ஊ)இது கடவுளை அபிடேகித்தற்குச் சிறந்த கருவியாகக் கொள்ளப்படுகிறது. இதன் வடிவான ரேகை ஆடவர்கையிலிருப்பது உத்தமவிலக்கணமெனப்படும். அது(எ)"வலம் புரி பொறித்த மாதாங்கு தடக்கை, நீர்செல நிமிர்ந்த மாஅல்" எனவும் (முல்லை. ௨-௩) (ஏ)"வலம்புரி பொறித்த வண்கை மதவலி"(ஐ) "வலம் புரித் தடக்கையானே" எனவும் (சீவக. ௨௦௪, ௮௨௧.) (ஒ) "சங்க லேகையுஞ் சக்கர லேகையு, மங்கை யுள்ளன வையற் காதலாற், சங்க பாணியான் சக்க ராயுத, மங்கை யேந்துமென் றறையல் வேண்டுமே" (சூளா. குமார. ௭௫) (ஓ) "சங்க கல்வி ரேகையைத் தடக்கை காட்டு மாற், பங்கயவி ரேகையைப் பாதங் காட்டுமா, லிங்கிவ னேமுல கோம்பும்" எனவும் (பாக. (௧) புரு. ௧௭.) வருவனவற்றால் உணரத் தக்கது. பரதநூலுள் வலம்புரிக்கையென இதன் வடிவமாகக் காட்டும் கையொன்று கூறப்படும்; அதனை (ஔ)"வலம்புரிக் கையே வாய்ந்த கனிட்ட, னலந்திகழ் பெருவிர னயமுற நிமிர்ந்து, சுட்டுவிரன்

முடக்கிச் சிறவிர னடிவியல், விட்டுயிர்க் கிறைஞ்சும் விதியிற் றென் று, கூறவர் தொன்னூற் குறிப்புணர்ந்தோரே" என்னும் சிலப். மேற்கோளால் அறிக. பண்டைக்காலத்து இதன்வடிவமாக மகளிர் தலையணியொன்று இருந்ததென்பது (ஃ) "தெய்வ வுத்தியொடு வலம்புரி வயின் வைத்து" (முருகு. உ௩.) (அது) "தெய்வவுத்தியொடு செழுநீர் வலம்புரி... ...........மையீரோதிக்கு மாண்புற வணிந்து" (சிலப்.௬:௧0௬-௧0அ)என்பவற்றாலும், செப்புஒன்று இருந்ததென்பது

(பிரதிபேதம்) * ஞாயிற.

ஐந்தாவது நெய்தல் ௧அ. அ௩௧

வயிறிணி கெடுங்கத வ்வைத்தடைத் தணிகொண்ட

(க)†வெயிலிடு களிறேபோ (உ)லிடுமண னெடுங்கோட்டைப்

பயிறிரை நடுகன்னுட் பாய்ந்துரூஉந் துறைவகேள்

எ - து: வேல் தைத்துச் செறிந்த நெடிய கதவாகச் சமைத்து ‡அதனுல் அடைத்து அழகு கொண்ட எயிலைக்(௩)குத்துங் களிறுபோலே (௪)இடுமணலின துநெடிய||சிகரத்தைப்பயின்றதிரை,அலைக்கின்ற காற்றுப்பாகனுகத், துணையைக் கூடி எழுகின்ற(௫)தாயநிறத்தையுடைய வலம்புரிகள் இணைந்த திரண்ட கொம்புகளாக, நடுகாட்கண்ணே குத்தி அவ்வியானைபோலே முழங்குந் துறைவனே! யான் கூறுகின்றதனைக் கேள். எ - று.

"அயிர்த்தவம்பாய்ந் தழக்கி"(௬)என்றார்பிறரும். ÷தன்னுற்பாதுகாக்கப் படுகின்ற மன்றத்தைத் தானேகளைத்தாற்போல நின்னுற்பாதுகாக்கப்படுங்

(ஆஅ) "வலம்புரித் துலங்கு செப்பும்" (சீவக.உ௪௯) என்பதனாலும் அறியப்படுகின்றன.

௧. (அ) "எயிறுபடை யாக வெயிற்கதவ மிடாஅக், கயிறுபிணிக் கொண்ட கவிழ்மணி மருங்கிற், பெருங்கை யானை" (புறம். ௩:௯-௧௧.) என்பதும் (ஆ) "கடியரணம் பாய்ந்தின் கைபுனை வேழம்" (கலி. ௮௩: ௭) எனப் பொய்ம்மையானையைக் கூறியிருத்தலும் (இ) அதன் குறிப்பில் இவ்விடத்துக்கு ஒத்தனவும் ஈண்டு ஒப்புநோக்கற்பாலன.

௨. "இவறுதிரை திளைக்கு மிடுமண னெடுங்கோடு" ஐங். ௧௭௭.

௩. "இடுமருப் பியானை" (கலி. ௨௪: ௧௦) என்பதும் அதன் குறிப்பும் இங்கே அறிதற்பாலன.

௪. இடுமணல் - (அலை கொண்டுவந்து) இட்டமணல்; எக்கரென வழங்கும்; இஃது "இடுமண லெக்க ரகன்கானற் சேர்ப்பன்" (ஐந் - எழு. ௫௧.) என எக்கருக்கு அடைமொழியாயும் வரும்.

௫. தூய நிறம் - வெண்ணிறம்; தூய வலம்புரி என்றலுமாம்; தூய்மை - சுத்தம்; அது தூயதென்பது "வலம்புரி முத்தே" என்பதற்கு, 'மரபின் றூய்மை கூறுவான் வலம்புரி முத்தென்றான்' என்றும் (சிலப். ௨: ௭௩. அடியார்க்கு.) "வலம்புரி முத்திற் குலம்புரி பிறப்பும்" என்றும் (ஆத்திரையன்.) "சங்குடைந் தனைய வெண்டா மரைமலர்த் தடங்கள் போலு, நங்குடி" (சீவக. ௫௪௭) என்பதற்கு, 'தடங்களிலே உடைந்த தன்மையவாகியமலரும் சங்குப்போலு நங்குடி; இது தூய்மைக்கு உவமை' என்றும் தூயதற்கு உவமை கூறப்படுதலாலும் துணியப்படும்.

௬. "அயிற்கதவம் பாய்ந்துழக்கி யாற்றல்சான் மன்ன, ரெயிற்கதவங் கோத்தெடுத்த கோட்டாற் - பனிக்கடலுட், பாய்தோய்ந்த நாவாய் போற் றோன்றுமே யெங்கோமான், காய்சினவேற் கிள்ளி களிறு" முத்.

(பிரதிபேதம்) * அடைத்தமைத்து. † எயிலடு, ‡ அடைத்ததனுல் அழகு, || சாகரத்தை, ÷ தான்பாது.



தலைவியை நீதானே வருத்தாநின்றாய் என உள்ளுறையுவமங்கொள்க. களிறே போல் என்ற வினையுவமம் கருப்பொருட்குச் சிறப்புக்கொடுத்து நின்றது.

கடிமலர்ப் புன்னைக்கீழ்க் காரிகை தோற்றாளைத்
தொடிநெகிழ்த்த *தோளளாத் துறப்பாயால் மற்றுநின்

† குடிமைக்கட் பெரியதோர் குற்றமாய்க் கிடவாதோ

எ-து: மணத்தையுடைத்தாகிய மலரினையுடைய புன்னைக்கீழ் நின்னைப் புணர்ந்ததனால் தன்னழகு தோற்றவளைத்(க)தொடியுட்படநெகிழ்கின்றதோள ளாம்படி கைவிடுவாயாயிராநின்றாய்; அங்ஙனம் கைவிடுகின்றது பின்னை நின் குடிமையிடத்துப் பெரியதொரு குற்றமாய்த் தங்காதோ. எ - று.

(உ)குடிமை - ஒழுக்கம்.

க (ரு)ஆய்மலர்ப் புன்னைக்கீ ழணிநலந் தோற்றாளை
நோய்மலி ‡ நிலைபளாத் துறப்பாயான் மற்றுநின்
வாய்மைக்கட் பெரியதோர் வஞ்சமாய்க் கிடவாதோ

---

க. (அ) "தொடிபழி மறைத்தலிற் றோளுய்ந் தனவே" (ஆ) "தோட்பழி மறைக்கு முதவிப், போக்கில் பொலக்தொடி" (நற். உஙு: க, கஙு: அ-க) என்பவைகளும், (இ) "தோகேக்க விப்பாற், பார்செலச் செல்லச் சிந்திப் பைந்தொடி சொரிந்த" (சீவக. சகக) என்பதன் விசேட வுரையில், 'முன் வினைகழல நின்றார்க்கு வருத்தமிகுதியால் தொடியுங் கழன்றன' என்று எழுதியிருத்தலும் இங்கே அறிதற்பாலன.

உ. (அ)"பிறப்பே குடிமை" என்பதன் விசேடவுரையில் 'குடிமையொடு பிறப்பிடை வேற்றுமை என்னையெனின், பிறப்பென்பது குடிப்பிறத்தல்; அதற்குத்தக்க ஒழுக்கம் குடிமை எனப்படும்; குடிப்பிறந்தாரது தன்மையைக் குடிமையென்றாரென்பது; அதனை வாரண்மையென வுஞ் சொல்லுப. ஆண்மை புருடர்க்காம். அஃது ஆள்வினையெனப் படும். இது தலைமகட் கொப்பதன்றாலெனின், குடியாண்மை யென் புழி ஆண்மையென்பது இருபாற்கும்ஒக்குமாதலின் அமையுமென்பது' என்று (தொல் மெய்ப். சூ. உ௫) பேராசிரியரும் (ஆ) 'குடிமை:—

அஃதாவது உயர்ந்த குடியின்கட் பிறந்தாரது தன்மை' என்று (குறள். கஉ-ஆம் அதி. அவ) பரிமேலழகரும் (இ) "குடிமையாவது குடிப்பிறப்பிற்கேற்ற ஒழுக்கம். அஃது 'ஒழுக்கமுடைமை குடிமை' என்றதனுன் உணர்க. 'மடிமை குடிமைக்கட்டங்கின்' என உயர்திணை யிருபாலையும் உணர்த்திற்று" என்று (தொல். விளி. சூ. இஉ) இவ் வுரையாசிரியரும் எழுதியிருப்பவை இங்கே அறிதற்பாலன.

௩. "ஆய்மலர்ப் புன்னை யணிநிழற் கீழால்" மணி. உ௫: ௧௩௧.

(பிரதிபேதம்) * தோளாளாய்த், † குடிமைக்கட்பெரிய, ‡ நிலையாய்த்.

ஐந்தாவது நெய்தல் கஅ. அசுக

எ - து: நன்றென்று ஆய்ந்த மலரையுடைய புன்னைக்கீழ் நின்னைப் புணர்ந்தவனுல் தன் அழகையுடையநலந்தோற்றவளைக் காமநோய் மிகுகின்ற நிலைமையளாகக் * கைவிடுவாயாயிராநின்றாய்; அங்ஙனங் கைவிடுகின்றது பின்னை நின் மெய்கூறுதற்கட் பெரியதோர் பொய்யாய்த்தங்காதோ. எ-று.

மெய், (௧) நின்னிற்பிரியேனெனத் தெளிவித்தது.

கஉ. திகழ்மலர்ப் (உ) புன்னைக்கீழ்த் திருநலந் தோற்றாளை
† யிகழ்மலர்க் கண்ணளாத் துறப்பாயான் மற்றுநின்
புகழ்மைக்கட் பெரியதோர் புகாரகிக் கிடவாதோ

எ - து: விளங்குகின்ற மலரையுடைய புன்னைக்கீழ் நின்னைப் புணர்ந்த தனுல் திருவினலம்போன்ற நலத்தைத்தோற்றவளை (௩) முன்புதோற்றமலர்கள் தாம் இகழ்கின்ற கண்ணையுடையளாம்படி கைவிடுவாயாயிராநின்றாய்; அங்ஙனங் கைவிடுகின்றது ‡ பின்னை நின்னைப் புகழ்ந்து கூறுந் தன்மை யிடத்துப் பெரியதோர் குற்றமாய்த் தங்காதோ. எ - று.

எனவாங்கு, ஆங்கு அசை.

கக. சொல்லக் கேட்டனை யாயின் வல்லே
யணிகிளர் நெடுவரை யலக்குநின் னகலத்து
(௪) மணிகிளர் ராரக் தாரொடு துயல்வர
(௫) வுயங்கின ளுயிர்க்குமென் (௬) றோழிக்
கியங்கொலி நெடுந்திண்டேர் கடவுமதி விரைந்தே

௧. "நின்னிற் பிரியலே னஞ்சலோம் பென்னு, நன்னர் மொழியு நீமொ

ழிச் சுனையே" கலி. உக: எ - அ.

உ. புன்னையைப்பற்றிய செய்திகள் அடுத்த செய்யுளில் கஉ-ஆம் அடிக் குறிப்பாகக் குறிக்கப்படும்.

ங. "நறுமலர் நாணின கண்" என்பதற்கு, 'நின் கண்கள் ஒளியிழந்து முன் தமக்கு நாணிய நறுமலர்கட்கு இன்று தாம் நாணிவிட்டன' என்று எழுதியிருக்கும் உரை ஈண்டறிதற்பாலது; குறள். கஉஙக. பரி.

ச. "தெண்மணி யாரா மார்பன் திருநுதன் மகளிர் நெஞ்சத், துண்ணிறை பருகும் வண்டா ருருவமை திருவின் மிக்கான்" (சீவக. ககரு) என்பதன் உரைபார்க்க.

டு. "உயங்க மாலை புதவினன் வஞ்சிக்கே" தில்லைக் கலம்பகம் கச.

சு. கலி. ங0: கஅ - கக, கஉச: கக - உக, கஉக: உ0 - உஉ, கஙங: கஅ-கக, கஙக: உக - ஆம் அடிகளும் அவற்றிலுள்ள குறிப்புக்களும் இங்கே அறிதற்பாலன.

(பிரதிபேதம்) * கைவிடலையாய். † அகழ்மலர்க், ‡ பின்னைப்புகழ்க்கு.





எ-று: என்று யான் வல்லே சொல்லக்*கேட்டாயாயின், அழகு விளங்குகின்ற செடிய மலையை வருத்தும் நின்மார்பிடத்தே மாணிக்கம் †விளங்குகின்ற முத்துவடம் பூமாலையோடே அசைதலுண்டாக அணிந்து வருந்தினளாய் நெட்டுயிர்ப்புக்கொள்ளும் என்றோழிபொருட்டு ஓடுகின்ற ஒலியினையுடைய நெடிதாகிய தேரை விரைந்து செலுத்துவாயென வரைவுகடாயினாள். எ - று.

"களனும் பொழுதும் வரைநிலை விலக்கிக், காதன்மிகுதி யுளப்படப் பிறவு, நாடு மூரு மில்லுங் குடியும், பிறப்புஞ் சிறப்பு மிறப்ப நோக்கி, யவன் வயிற் றோன்றிய கிளவியொடு தொகைஇ, யனைநிலை வகையான் வரைதல் வேண்டினும்" (க) என்பதனிற் சிறப்பு என்பதனால் ஒழுக்கமும் வாய்மையும் புகழும் [பிறப்புங்] கூறி வரைவுகடாயினாள்.

இதனால், தலைவற்கு அசைவு தோன்றிற்று.

இஃது ஒத்தாழிசைக்கலி. (கஅ)

(௧௩௬.) இவர்திமி லெறிதிரை யீண்டிவந் தலைத்தக்கா
லுவறுநீ ருயரெக்க ரலவனோ டளைவரித்
தவலிறன் கழகத்துத் தவிராது வட்டிப்பக்
கவறுற்ற வடுவேய்க்குங் காமர்பூங் கடற்சேர்ப்ப;
௫ முத்துறழ் மணலெக்க ரளித்தக்கான் முன்னாயம்
பத்துருவம் பெற்றவன் மனம்போல நந்தியா
ளத்திறத்து நீங்க வணிவாடி பல்வாயம்
வித்தத்தாற் றோற்றான்போல் வெய்துய ருழப்பவோ;
௬ முடத்தாழை முடுக்கரு ளளித்தக்கால் வித்தாய
மிடைத்தங்கக் கண்டவன் மனம்போல நந்தியாள்
கொடைத்தக்காய் நீயாயி னெறியல்லாக் கதியோடி
யுடைப்பொதி யிழந்தான்போ லுறுதுய ருழப்பவோ;

---

௧. தொல். கள. சூ. உ௩. இச்சூத்திரப்பகுதியி னுரையில், “கடிமலர்ப் .........புகாஅக் கிடவாதோ” என்னும்பகுதிகளை மேற்கோள்காட்டி, ஒழுக்கமும் வாய்மையும் புகழும் இறப்பக்கூறியனவென்று நச்சினார்க்கினியரும் குடிமையும்வாய்மையும் புகழுமாகிய சிறப்புப்பற்றி வந்தனவென்று இளம்பூரணரும் நாற்கவி. சூ. ௧௧௪. உரையில் இவற்றை மேற்கோள்காட்டி, மரபும் புகழும் வாய்மையுங் கூறியன வென்று நாற்கவிராசநம்பியும் எழுதியிருக்கிறார்கள்.

(பிரதிபேதம்) *கேட்டாயாயி னணி அழகு, † விளங்கும் முத்துவடம்.

*இஃது ஆயர் ஏறுதழுவிநின்றமையைத் †தோழி தலைவிக்குத் தனித் தனியே காட்டிப் பின்னர் அவர் ஏறுதழுவிவிட்டுக் குரவையாடுகின்றமை யுங் கூறி ஆண்டு யாமுஞ்சென்று நின்னை ஏறுதழுவிக் ‡கோடற்கு நிற்கின்ற தலைவன் கேட்டு ஏறுதழுவிக்கொள்ளுமாறு நமக்குச் சுற்றத்தார் கூறிக் கிடக்கின்ற முறைமையைப் பாட்டிலே தோன்றப் பாடிக் குரவையாடி வழிநிலாழ்கவென்று தெய்வம்பரவுதும்; நீயும் அங்ஙனம் பாடுதற்குப் போதுவாயாகவெனக் கூறியது.

இதன் பொருள்.

(க)மெல்லிணர்க் (உ)கொன்றையு மென்மலர்க் காயாவும்
புல்லிலை வெட்சியும்(ங)பிடவுந் தளவும்
குல்லையுங் ‖குருந்துங் (ச)கோடலும் (ரு)பாங்கரும்
கல்லவுங் கடத்தவுங் கமழ்கண்ணி மலைந்தனர்
(சா) பல்லான் +பொதுவர் கதழ்விடை கோட்காண்பார்
(சு)முல்லை முகையு முருந்து நிரைத்தன்ன
பல்லர் பெருமழைக் கண்ணர் மடஞ்சேர்ந்த

க. தரவு ஈற்றடி குறைந்து வருதலையு முடைத்தென்பதற்கு "மெல் லிணர்க்.........மிடை" என்பது மேற். தொல். செய். சூ. கககஅ. நச்.
ங. "அவிழ்தளவி னகன்றோன்றி, நகுமுல்லை யுகுதேறுவீப், பொற் கொன்றை மணிக்காயா, நற்புறவி னடைமுனையின்" பொருந. கககஅ-உ0உ. என்பதனாலும் முல்லைநிலத்துவாழ்வார் பலமலர் சூடு மியல்பினர் என்பது அறியவாகும்.
ங. "பிடவுந் தளவும்" தொல். உயிர்மயக்கு. சூ. உஎ.
ச. இந்நூற் பக்கம் சுககூ: ங-ஆம் குறிப்புப் பார்க்க.
ரு. (அ) "பாங்கரு, முல்லையுந் தாய பாட்டங்கால்" (கலி· கக்க: ங - ச.) என்பதனால் பாங்கர், ஒரு பூங்கொடியென்று தோற்றுகிறது. (ஆ) "வண்டு பாடு பாங்கரோடு" சூளா· சீயவதைப். உகக. (இ) "குருந்து பொற் கூவிளம் குல்லை பாங்கரும்" காஞ்சிப்· கழுவாய்ப்· கருங. (ஈ)"வகுள ஞெமையரை டாங்கர்" திருவானைக்காப். சம்புமுனி. க. (உ) "சூத காகம்வழை பாங்கர் குருந்து" விநாயக. கௌசனனர்

திருவை. கெ. என இது பயின் றுவருதலுங்காண்க. பாக்கரென்பவைத் துமையென்பாருமுளர். அஃது ஒரு மாமென்று தெரிகிறது.

க. (அ) "முல்லை முகையு முருக்கு நிரைத்தன்ன, பல்லும்" கலி. கoஅ: கஒ-கக. (ஆ) "முருங்கொடு முல்லைசாய்த்த முகிழ்நகை யாயுர்மாதர்" பாக. (கo) வேய்க்குழல். கக. (இ) "முல்லையு முருக்கு நிரைத்தன

பிரதிபேதம்) * இகழுவர், † தோழியொரு தலைவிக்கு, ‡ கொண்டற்கு, ‖ குருக்குகோடலும், ┼ பொறுவாததழ விடைக்கோட் காண்குவார்.

ஐந்தாவது நெய்தல் கசு. அசுக

கஙு நறுவீ தாழ் புன்னைக்கீழ் நயந்துநீ யளித்தக்கான்
மறுவித்த மிட்டவன் மனம்போல நந்தியா
ளறிவித்து நீநீங்கக் கருதியாய்க் கப்பொருள்
சிறுவித்த மிட்டான்போற் செறிதுய ருழப்பவோ;

ஆங்கு;

கஅ தொண்டுபலர் தூற்றுங் கௌவை யஞ்சாய்
தீண்டற் கருளித் திறனறிந் தெழீஇப்
பாண்டியஞ் செய்வான் பொருளினு
மீண்டுக விவளைல மேறுக தேரே.

இது வரைவிடை வைத்துப் பிரியக்கருதிய தலைவனைத் தோழி தலைவி யாற்றமை கூறிச் செலவுவிலக்கி வரைவுகடாயது.

இதன் பொருள்.

(க) இவர்திமி லெறிதிரை யீண்டிவந் தலைத்தக்கா
(உ) லூவறுநீ ருயரெக்க ரலவனொ டளைவரித்
தவறிறன் கழகத்துத் தவிராது வட்டிப்பக்
கவறுற்ற வடுவேய்க்குங் காமர்பூங் கடற்சேர்ப்ப

எ-து: பரக்கின்ற, மீன்பிடிக்குந் திமிலையுடைய, எறியுந்திரைகள் திரண்டு வந்து அலைக்க, ஊறுகின்ற நீரையுடைய உயர்ந்த இடுமணலிடத்து அளையி னின்றும் போந்து விளையாடித் திரியும் புள்ளிகளையுடைய அலவன் (ங) மன

௧. இவர்தலென்பது இவறுதலெனவும் அருகிவழங்கும்; "இவறுதிரை" என்பது ஐங். கஎஎ; ஒளிர்தல், ஒலிறுதலென வழங்குவதும் நோக்குக.

௨. உவறுதல் - ஊறுதலென்னும் பொருட்டாய், (அ) "உவறுமீ ருழக்கி" என்று (சீவக. ககக.) செயப்படுபொருள் குன்றிய வினையாய் வருத லன்றியும், (ஆ) ஊறச் செய்தலென்னும் பொருட்டாய், "ஒண்செங் குருதி யுவறியுண்டு" என்று(அகம், ௩: அ.) செயப்படுபொருள் குன்றா வினையாயும்வந்துள்ளது; உவறுதலென்பதே ஊறுதலென மருவிற்றுப் போலும்.

௩. (அ) "இழுத்தொறூஉங் காதலிக்குஞ் சூதேபோல்" குறள். ௯௪௦. (ஆ) "காமரு சூதால்" (இ) "அண்டரும் விரும்பும் வன்சூ தாடுதும்" (ஈ) "பார்கொடுத்து மாசுடர்ப தங்கொடுத்து முரியதம், மூர்கொடுத்து மதனினுள்ள மொழிவுறும லோடவே" வில்லி. சூதுபோர்ச். உ௯, உஅ, கஎஅ.

அ௩௩ கலித்தொகை க௩௬.

வேட்கை கெடுத்தலில்லாத, (க) தண்ணிதென்று நீக்கின சூதுபொருகின்ற இடத்தே விடுவுற்ற(உ)கவற்றினை வேட்கை தவிராதே(௩)உருட்ட அக்கவற்றை ஒக்கும் விருப்பமருவின பொலிவினையுடைய கடற்சேர்ப்பனே! எ - று.

அவி - முறை; *வரி - புள்ளி. "புள்ளிக்களவன்" (ச)என்றார் பிறரும்.

---

௧. (அ)"அறத்தைவேர் கல்லு மருகாகிற் சேர்க்குந், திறத்தையே கொண் டருளைத் தேய்க்கு - மறத்தையே, பூண்டுவிரோ தஞ்செய்யும் பொய்ச் சூதை மிக்கோர்க, டீண்டுவரோ வென்றார் தெரிந்து" (ஆ) "உரு வழிக்கு முண்மை யுயர்வழிக்கும் வண்மைத், திருவழிக்கு மானஞ் சிதைக்கு - மருவு, மொருவரோ டன்பழிக்கு மொன்றல்ல சூது, பொருவரோ தக்கோர் புரிந்து" நள. கலிதொடர். ௩அ, ௩௯. (இ) "அடிபு மாண்மையும் வலிமையுஞ் சேனையு மழகும்வென் றியுந்தந் தம், குடிபு மானமுஞ் செல்வமும் பெருமையுங் குலமுமின் பமுந் தேசும், படிபு மாமறை யொழுக்கமும் புகழுமுன் பயின்றகல் வியுஞ்

சேர, மடிபு மான்மதி புணர்ந்தவர் சூதின்மேல் வைப்பரோ மனம் வையார்" (ரு) "மேதகத்தெரி ஞானநூற்புலவரும் வேத்துநா லறிந் தோரும், பாதகத்திலொன் றென்னவே முன்னமே பலபடப் பழித் திட்டார், நீதகப்படு புன்றொழிலினைறிற் சிந்தனை சிறிதின்றித், தோ தகத்துட னென்னையோ சகுனிதன் சூதினுக் கெதிரொன்றான்" (உ) "கொடியவெஞ், சூதெடுத்து விழைதலுற்ற சூள்பிழைத்த வின் னவே, திதெடுத்த நூலின் முன்பு தீயவென்று செப்பினர்" வில்லி. சூது. கஅ, கஎ, ககஉ.

உ. கவறென்பது, சூதாட்டத்திற் குலுக்கிப் போகடப்படுங் கருவி; பண் டைக்காலத்து விபீதகக் கொட்டையையே இக்கருவியாகக்கொண்டு மூன்றைம்பது கொட்டைகளைக் குலுக்கிப்போகட்டு நிலத்திற் குழி குழித்து அக்குழிகளில் காயென்னும் வல்லுக்களை யிட்டு ஆடின ரென்றும் நளன் தருமன் முதலியவர் ஆடியகாலத்து, சோகி அல்லது சோழியென்றும் பறையலகு அல்லது பலகறையென்றும் கூறப்படும் கடல்விளைபொருளையேகவறாகக்கொண்டு ஆறாகவுருட்டிஆடிவந்தன ரென்றும், பிற்காலத்து அவற்றாலறியக்கூடிய எண்களை இரண்டு பாச் சிகைகளால்அறியும்படி அமைத்துக்கொண்டுஅப்பாச்சிகைகளால் ஆடி வந்தனரென்றும் கூறுவர். இச்செய்யுளினுரையில் ஈரைந்து ஈரிரண்டு இருமூன்று என்றவழக்கேகாணப்படுகிறது. இந்நாட்டில் சொக்கட்டா னென்றும் தாயக்கட்டமென்றும் பத்துக்கட்டமென்றும் வழங்கும் பலவகை யாட்டமும் இதன் வழி வந்தனவென்பர்.

௩. சீவக. கஉஎ. விசேடவுரையில் 'உழக்கு - பிடித்துப்போகடாமற் கவ றிட்டு உருட்டு முழக்கு' என்று எழுதியிருத்தலால், கவறாடலில் கை யாற்பிடித்துப் போகடுதலும் உழக்கிலிட்டு உருட்டலுமென இருவகை முன்பிருந்தமை அறியப்படும்.

௪. கலி. அச: ௬௦.

(பிரதிபேதம்) * வரி புள்ளிக்காவனென்றார்.

ஐந்தாவது நெய்தல் கக.

(க)தண்கழகம் ஈண்டுக் குளிர்ச்சியை உணர்த்தாது "தண்பொன்" என்றாற்போல இழிவை உணர்த்துகின்றது.

அத்துறைக்கு உரியவாய் இயல்பாகச் சிறப்பு நிகழும்படி ஆடித் திரியும் புள்ளியையுடைய அலவன்(உ)கண்களையுடைய(ங)உருண்ட கவற்றை உருட்ட அக்கவற்றை ஒக்கும் என்றதனால் உலகியல்வழக்காகிப் பின்பு இல்லறம் நிகழுங் களவொழுக்கம் இவ்வூரிலுள்ளார்க்கு இழிந்த தொழிலுமாய்த் தோன்றுகின்றதென உள்ளுறையுவமங்கொள்க. "பலகை செம்பொ னாகப் பளிங்கு காயாப் பரப்பி, *யலவ னாடி மனைபோ லரும்பொற் கவறாங் குருளக், †குலவும் பவழ வுழக்கிற் கோதை புரளப் பாடி, யிலவம் போதேர் செவ்வா யினையோர் பொருவார்க் காண்மின்" என்னுஞ் (ச)சிந்தாமணியாலும் இதுவே பொருளாதல் உணர்க.

ரு முத்துறழ் மணலெக்க ரளித்தக்கான் முன்(ரு)னாயம்
பத்துருவம் பெற்றவன் மனம்போல நந்தியா
ளத்திறந்து நீங்க வணிவாடி யவ்வாயம்
வித்தத்தாற் றோற்றான்போல் (கூ)வெய்துய ருழப்பவோ

---

க. இக்கழகம் நூல்களும் படைக்கலமும் பயிலிடம்போலச் சிறந்ததன்றாதலின், 'தண்கழகம்' என்றார்; தண்ணென்பது இழிவை யுணர்த்தி வருமென்பது (அ) "கூழுடைக் கொழுமஞ்சிகைத், தாழுடைத் தண் பணியத்து" என்புழி, "தண்பணியத்து" என்பதற்கு, 'நெல்லுப் போல ஏனைப்பண்டங்கள் சிறந்தன அன்மையின், தண்ணிய பண்டமென்றார்' என்று (பட். ககங - ககச) எழுதியிருக்கும் விளக்கத்தாலும் (ஆ) "மாயிரும் பீலி மணிநிற மஞ்ஞைநின், சாயற் கிடைந்து தண்கா னடையவும்" என்புழி, "தண்கான்" என்பதற்கு, 'இழிந்த காடு' என்று (சிலப். உ: ருங - ருச. அடியார்க்கு) எழுதியிருக்கும் குறிப்பாலும் (இ) இழிந்த சமயத்தவன், "தண்ணிய சமயி" என்று கூறப்படுதலாலும் உணரப்படும்.

உ. கண்களால் இஃது அக்ஷமென்று பெயர்பெற்றதென்பர்.

ங. (அ) "உருளாயம்" குறள். கூஙங; சீவக. உஅஎங. (ஆ) "உருளாயச் சூதாடி" பெரிய. மூர்க்க. அ. (இ) "தப்பிலாத கவறுருண்ட தாயம்" வில்லி. சூது. ககச.

௬. கீவக. கஉ௭.

௯. (அ) "ஆயக்கொளின்" குறள். கநக. (ஆ) "ஆயம் பிடித்தாரும்" நள. கலிதொடர். ௬௦.

௧. வெய்துயர், வெய்துயரென மருவிற்று; (அ) "தழங்குரன் முரசு", (ஆ) "குவேயலங் காக்தன்" என்பனவைபோல. வெர்துய ரெனற்பாலது (பிரதிபேதம்) * அலயைரும்பனைபோல் என்பது அந்நாளிறுன்ன பாடம், † குவையுமுழ,



எ-து: (க) முத்தையொக்கும் எக்காரகிய மணலிலே நீகூட (உ)முற்பட இடுகின்ற தாயம் முன்னே மனைகட்டலாம்படி கவற்றுலே (௩) ஈரைக்தைப் பெற்றவனுடைய மனம்போல ஆக்கம் பெருகினவள், அங்ஙனம் அளிக்குங் கூற்றினின்று நீ நீங்குகையினாலே அப்பெருந் தாயமின்றி ஈரிரண்டு இரு மூன்று என்னுஞ் சிறுதாயம் இடுதலால் தோற்றவனைப் போலே அழகுகெட்டு வெய்தாகிய வருத்தத்திலே அழுந்தவோ? எ - று.

உருவம் என்றது கவற்றை.

௬ முடத்தாழை முடுக்கரு ளளித்தக்கால் வித்தாய
மிடைத்தங்கக் கண்டவன் மனம்போல நந்தியாள்
கொடைத்தக்காய் நீயாயி னெறியல்லாக் கதியோடி
யுடைப்பொதி ரவிழந்தான்போ லுறுதுய ருழப்பவோ

எ-து: முடத்தையுடைய(௪)தாழை முடுக்குக்குள்ளே நீ கூடப் போரிடையிலே சிறுதாயம்(௫) இடவேண்டின அளவிலே சிறுதாயம் தங்கக்கண்டவனுடைய மனம்போலே ஆக்கம்பெருகினவள், சுற்றத்தார்க்குப் பொருளைக் கொடுத்து

வெய்துயரென அருகி வந்ததெனினுமாம்; (இ) "செய்த செய்தவன்" (ஈ) "செய்த செய்தவம்" (உ) "செய்த செய்தவச் செல்வன்" என்ற கம்பர் ஆட்சிகள் இதுபோல்வன.

௧. (அ) "முத்தவார்மணல்" பெரும்பாண். கக௯; புறம். ௯௩: ௧. (ஆ) "முத்து மணல் வீதி" (இ) "முத்துமணற் பரக்த நற்பெருங் கோயின், முற்றத் தோறும்" பெருங். (உ) எ: கசஉ, (ரு) க: சக - சஉ.

உ. சூதுபோரில் முற்பட ஒன்று விழுவதற்குத் தாயமென்ற பெயரென்

றும் அது விழுந்தபின்பே காய் பெயர்த்து மனைகட்ட உரிமையுண் டென்றும் கூறுவர். இது, பின்பு இவ்வாட்டத்தில் வேண்டும் எண் களைக் குறிப்பதாகவும் வழங்குகிறதுபோலும்.

௩. வடநாட்டில் ஹாரே (தோற்பேன்) என்றும் ஜீதே (வெல்வேன்) என்றும் கூறி அவ்வாறே செய்பவர் எதிர்பொருவோர் வைத்த பந்தயப் பொருளைப்பெறுவரென்ப. இஃது அவ்வழக்கானல் இங்கே கூறியது, 'வெல்வேன்' 'வெல்வேன்' என்று முரணிய இருவர் செய்தியாம். ஒற்றை விழுதல் தோல்வியென்றும் இரட்டை விழுதல் வெற்றி யென்றும் கூறுவர்.

௪. தாழையின் இயல்பை இந்நூற்பக்கம் அ௯௯: எ - ஆம் குறிப்பிற்காண்க.

௫. "மாய முற்ற கவறு மாந்த ரீமமன் வல்ல பத்திலே, தாய முற்றி டஞ் சொ டாது தரும னைச்ச நித்ததே" "இன்ன தாயம் வேண்டு மென் றெறிக்க போது மற்றவன், சொன்ன தாயமேபரண்டு சோர்விலாமல் வருதலின்" வில்லி. சூதுபோர். ௯௮ - ௯௯.

(பிரதிபேதம்) * அவிழ்ந்தான்போல்.

## ஐந்தாவது நெய்தல் ௧௧. அ௬எ

வரைந்துகோடற்குத் தக்கவனே! நீ முன்பே பொருளைத் தேடாதே இப் பொழுது பொருள்வயிற் பிரிவை ஆராய்ந்து பார்ப்பாயாயிற் சிறுதாயஞ் சிறுக இடவேண்டுமளவில் இடாமற் பெருக இட்டு வெல்லும் நெறியல்லாத நெறியிலே சூதுபொருகையினாலே அதற்கென்று கட்டிவைத்த தன்னுடைய (௧) பொருளை இழந்தவனைப் போலே மிக்க துயரிலே அழுந்தவோ. எ - று.

௧௩. *நறுவீ தாழ் (௨)புன்னைக்கீழ் நயந்தாரீ யளித்தக்கான்
மறுவித்த மிட்டவன் மனம்போல நந்தியா

---

௧. கவறாடிப் பொருளையிழந்தவன் துயருற்று அதனைப் பழித்த செய்தி இருக்கு வேதமுதலியவற்றிலும் கூறப்பட்டுள்ளதென்பர்.

உ. புன்னை, நெய்தனிலத்துக்கு உரித்தாகவும் கடற்கரையாகிய மணலில் கடற்றிவலையால் தழைத்து வளர்வதாகவும் கூறப்படுவதொரு மரம். இது பருத்ததும் விளைத்ததும் நீண்டதும் கரியதுமான அடியையும் கரியனவும் நெடியனவும் குறியனவுமான கொம்புகளையும் உடையதாகக் கூறப்படுகிறது. இதன் கொம்பு பசுநிறமுடையதென்றும் சொல்லப்படும். அக்கொம்பிற்கு இரும்பு உவமையாகச் சொல்லப் படுகிறது. இம்மரத்தில் பரதவர் அம்பி முதலியவற்றைக் கட்டி வைத்தலும் இம்மரத்தின்மேல் ஏறி நெடுந்தூரத்தே வரும் மரக் கலங்களைப் பார்ப்பதும் மீன் உண்ணவந்த பறவைகள் இதன்மேல் தங்கி இருப்பதும் இயல்பு. இது மகளிர் நறவு கொப்புளித்தலாற் பூப்பதென்றும் ஆடுதலாற் பூப்பதென்றும் சொல்லப்படுகிறது. இம் மரத்தொகுதி பொழிலென்று கூறப்படும். இதன் இலை நீலநிறமும் அகலமும்உடையது. இது கொத்துக்கொத்தாகப்பூக்கும் இயல்பினது. இதன் அரும்பு நீண்ட காம்பும் உருண்ட தலையும் மங்கலான வெண்ணிறமு முள்ளது. இந்நிறத்தாலும் உருட்சியாலும் இதற்கு மண்ணுறு முத்தும் பல்லி முட்டையும் சங்குமணியும் விண்மீனும் உவமையாகக் கூறப்படுகின்றன. இவ்வரும்பு வெண்ணிறத்தையும் தன்னுட் பொன் னிறமும் செந்நிறமுமுள்ள உறுப்புக்களையும் உடையதாயிருத்தலால் இது பொன்னையும் பவழத்தையும் உள்ளடக்கிய முத்தென்று புனைந் துரைக்கப்படுகிறது. இதன்பூவும் இவ்வாறேசொல்லப்படும். இப்பூவை மக்கள் அணிவதுண்டு. இப்பூ நறுமணமுடைமையால் இதில் வண்டு மூன்று தாதுண்டுகொண் டிருக்கும். இதன் போதவிழ் நிலைக்கு ஊர்க்குருவியின் உடைந்த முட்டை உவமையாக்கப்பட்டுள்ளது. இதன் தாது பொன்னிறமுடையது; முப்பத்திருவகை ஓமாலிகைப் பொருள் களுள் ஒன்றாகவுள்ளது. இதனிழல் புகர்நிழலென்று பலவிடத்தும் கொழுநிழலென்று சிலவிடத்தும் கூறப்படுகிறது. கொழுநிழலுள்ள இம்மரத்தினடியில் மன்றம் அமைப்பர் போலும். இவையும் இம் மரத்தைப்பற்றிய வேறு சிலவும் அடியிலுள்ளவற்றால் அறியலாகும்;

னறிவித்து நீங்கக் கருதியாய்க் கப்பொருள்
சிறுவித்த பிட்டான்போற் செறிதுய ருழப்பவோ

(1) "வெண்டிரை பொருத வேலை வாலுகத்துக், குண்டுநீ ரடைகரைக் குவையிரும் புன்னை" (2) "முதுநீர்ப், புணரிதிளைக்கும் புள்ளிமிழ்கானல், விரைவிழ் புன்னை யெக்கர் நீழல்" (3) "உரவுத்திரை பொருத தணிமண லடைகரை, நனைத்த புன்னை மாச்சினை" (4) "ஒங்கல் வெண் மணற் றாழ்ந்த புன்னைத், தாதுசேர் நிகர்மலர்" (5) "வான்கடற் பரப்பிற் றூவற் கெதிரிய, மீன்கண் டன்ன மெல்லரும் பூத்த, முடவு முதிர் புன்னைத் தடவுநிலை மாச்சினைப், புள்ளிறை கூரு மெல்லம் புலம்ப" (6) "பாரரைப் புன்னைச் சேரி" (7) "நுரைபிதிர்ப் படுதிரைப், பாரரைப் புன்னை வாங்குசினை" (8) "முடக்காற் புன்னையும்" (9) "கோடுங்காற் புன்னை" (10) "கொடுங்காற் புன்னை கித்திலம் வைப்பவும்" (11) "எல்லி யன்ன விருணிறப் புன்னை, நல்லரை முழுமுதலவ்வாயிற் றொடுத்த, தூங்க லம்பி" (12) "கருங்கோட்டுப் புன்னைப் பூம்பொழில்" (13) "கொடுஞ்சினைப் புன்னை" (14) "குறுஞ்சினைப் புன்னை நறுந்தாது" (15) "பைங்கோட்டு மலர்ப் புன்னை" (16) "இரும்பினன்ன கருங்கோட்டுப்புன்னை, பொன்னினன்ன நுண்டாதுறைக்குஞ் சிறுகுடி" (17) "பெருங்காற் புன்னைக் கருங்கோட் டணைத்த, நாவாய்" (18) "கடலே, காறத்த கலனெண் ணுவோர், கானற் புன்னைச் சினை நிலைக் குந்து" (19) "குவவுமண லடைகரை, நின்ற புன்னை நிலந்தோய் படுசினை, வம்பநாரை சேக்குந், தண்கடற் சேர்ப்ப" (20) "புன்னை, யலங்குசினை யிருந்த வஞ்சிறை நாரை" (21) "கன்னியம் புன்னைமே லன்னங்காள்" (22) "பெருங்கடற் 'கரையது சிறுவெண் காக்கை, கருங்கோட்டுப் புன்னைத் தங்குந் துறைவற்கு" (23) "வதிதரு குறுங்கு மின்னிலைப் புன்னை" (24) "இறுநுசுப்பி னக்கலா ரேந்துவள்ளத்

தேர்திய, நறவங்கொப்புளித்தலி ளுகு புன்னை பூத்தன, சிறகர் வண்டு செவ்வழி பாடமாடத் தூடலா, மிறைகொள்வானின் மீனென" (25) "அலம்புமணி மேகலையு மரிக்குரற்கிண் கிணியுமணிச் சிலம்பு மார்ப்பக், கலம்படுபொற் குயமடவா ராடுதறு மாட்டமைதி கவினக் கண்டு, கலம்படுபொற் பரிசிலெதிர் வீசுவபோ லிளம்புன்னை நறிய வீயின், குலம்புதிது பூத்துகுப்ப விம்மிதராய்ச் சிலரிவர்ந்து குற்று நின்றார்" (26) "பொன்னென நன்மலர் நறவீ தாஅம் புன்னை நறும் பொழில்" (27) "பொங்கிரும் புன்னைப் பூம்பொழில்" (28) "எழிற்பூம் புன்னைப் பொழில்" (29) "இரும்பி னன்ன கருங்கோட்டுப் புன்னை, நீலத்தன்ன பாசிலையகத்தொறும், வெள்ளியன்னவிளங்கிணர்நாப்பட், பொன்னி னன்ன நறுந்தா துதிர" (30) "அகலிலைப் புன்னைப் புகரி னீழல்" (31) "புன்னை, வாலிணர்ப் படுசினைக் குருகிறை கொள்ளு, மல்குறு கானல்" (32) "மண்ணுறு முத்த மரும்பிய புன்னை" (33) "மண்ணுறப்



எ-து: நறியதாகிய பூத்தலினை புன்னைக்கிழே நீ விரும்பிக்கட்ட இருகாற் (க) சிறுதாயம் இடவேண்டின அளவிலே ஒருகாலன்றியே இருகாலாவதும்

---

பசுமுத்தேய்ப்பக் குவியிணர்ப், புன்னை யரும்பிய புலவுநீர்ச் சேர்ப்ப" (34) "பொரிப்புறப் பல்லிச் சினையீன்ற புன்னை" (35) "பல்லி, செரித்த சினைபோலு நீனிரும் புன்னைப், பொரிப்பூ விதழுறைக்கும் பொங்கு நீர்ச் சேர்ப்ப" (36) "புன்னைய மலர்ப்பொழில்க ளக்கிஞெளி காட்ட" (37) "வெண்முத்தரும்பிப் பசும்பொன் மலர்ந்து, கடைந்தசெம் பவளத் தொத்துடன் காட்டு, மிரும்புகவைத் தன்ன கருங்கோட்டுப் புன்னை" (38) "பவழமும் பொன்னுங் குவைஇய முத்திற், றிகழரும் பீன்றது புன்னை" (39) "முத்தரும்பிப் பைம்பொன் மலர்ந்து முருகுயிர்த்துத், தொத்தலருங் கானற் றுறையேய்" (40) "படுமுத்தம் புன்னை யரும்பும் புகாஅர்" (41) "புன்னைகண் முத்தென வரும்ப" (42) "புன்னையின் முகைகிதி பொதியவிழ் பொழிலணி புறவமே" (43) "புன்னைவெண் கிழியிற் பவளம் புரை பூந்தாரய்" (44) "ஒள்ளொளிப் பவளத் தள்

ளொளி யடக்கி, வெள்ளிப் பூந்தா ரெள்ளுந் தோற்றத்துப், போது பொறை யாற்றாப் புன்னையம் பொதும்பர்" (45) "புன்னை, பொன் னிறம் விரியும் பூக்கெழு துறைவனை" (46) "தாமலர்ப் புன்னை" (47) "அவர் கலித்ததேம்பாய் புன்னை, மெல்லிணர்க் கண்ணி மிலைந்த மைந்தர்" (48) "கருங்கோட்டுப் புன்னை மலரிற் றாதருந்தி, யிருங்களிப் பிரச மூத" (49) "கருங்கோட்டு நறும்புன்னை மலர்சினை மிசை தொறூஉம், சுரும்பார்க்குங் குரலினொ டிருந்தும்பி யியையூத" (50) "உள்ளூர்க்குரீஇக் கருவுடைத் தன்ன, பெரும்போதவிழ்ந்த கருந்தாட் புன்னை" (51) "புன்னை நுண்டா துறைத்தரு நெய்தல், பொன்படு மணி யிற் பொற்பத் தோன்று, மெல்லம் புலம்பன்" (52) "பொன்னேர் நுண்டாது புன்னை தாஉம்" (53) "பொன்னேர் தாதிற் புன்னையொடு" (54) "புன்னை பொன்று தாதிர்மல்கு மந்தண் புகலிங் ககர்" (55) "புன்னைநன்மாமலர் பொன்னுதிர்க்கும்புனவாயிலே" (56) "பொன்னி னன்ன புன்னை நுண்டாது" (57) "புன்னை நறுமலரின் பூந்தா திடை யொதுங்கும், கன்னி யிளமேதிக் காற்குளம்பு - பொன்னுரைத்த, கல் லேய்க்கு நாடன்" (58) "புன்னை நறுந் தாது ..........கதிர்நகையா யோமாலி கை" (59) "இன்னிணர்ப் புன்னையம் புகர் நிழல்" (60) "கடன்மீன் றந்து கானற் குவைஇ, யோங்கிரும் புன்னை வரிநிழ லிருந்து, தேங்கமழ் தேறல் கிளையொடு மாந்திப், பெரிய மகிழுந் துறைவன்" (61) "நீனிறப் புன்னைக் கொழுநிழ லசைஇ" (62) "மன்றப் புன்னை மாச்சினை நறவீ" (63) "மன்றத்துப் புன்னை போல"

க. வித்தம் - சிறுதாயமென்னும் பொருளில் இச்செய்யுளில் மூன்றும் வந்துள்ளது; இது கவறாடலின் வழி வந்த ஆட்டங்களில் 'விருத்தம்'





சிறுதாயம் இட்டவன் மனம்போலே ஆக்கம்பெருகினவன், நீ பிரிந்து வந்து வரைவேனென்று எமக்கறிவித்துப் பிரியக் கருதின நின்பொருட்டு அக்கவறு இருகாற் சிறுதாயம் இட வேண்டின அளவிலே ஒருகாற் சிறுதாயம் இடப் பட்டவனைப்போலே செறித்த துயரிலே அழுந்தவோ? எ - று.

இது †தகவாகாது காளெனக் கூறிப் பின்னும்.
ஆங்கு, அசை.

கஅ (க)கொண்டு ‡பலர்தூற்றுங் கௌவை யஞ்சாய்
தீண்டற் கருளித் திறனறிந் தெழீஇப்
பாண்டியஞ் செய்வான் பொருளினு
மீண்டுக விவணல மேறுக தேரே

எ-து: நீ பலரும் மேற்கொண்டு தூற்றும் அலருக்கு அஞ்சாய்; இதனைக் கைவிட்டு இவளை வரைந்துகொண்டு கூடுதற்கு அருள்பண்ணி, அதற்காக் திறத்தை அறிந்து எழுந்திருந்து தேரை ஏறுவாயாக; அங்ஙனம் வரைந்தால் ||இவள்நலம் உழவாடியாகி யிருப்பானி[ருவரி]டத்துப் பெரும்பொருளினும் ஈண்டுவதாக என வரைவுகடாயினன். எ - று.

இதனுல், தலைவற்கு அசைவு பிறந்தது.

இஃது ஒத்தாழிசைக்கலி. (கக)

(கடஎ.) அரிதே தோழிநா ணிறுப்பாமென் றுணர்தல்
பெரிதே காமமென் னுயிர்தவச் சிறிதே
பலவே யாமம் பையுளு முடைய
சிலவே நம்மோ டுசாவு மன்றி
லழலவிர் வயங்கிழை பொலிப்ப வுலமர்
தெழிலெஞ்ச மயிலி னடுங்கிச் சேக்கையி
னழலா கின்றவர் நக்கதன் பயனே;
அ மெல்லிய நெஞ்சு பையுள் கூரத்தஞ்
சொல்லினு னெய்தமை யல்ல தவர்நம்மை
வல்லவன் றைஇய வாக்கமை கடுவிசை

'விருத்தம்' என வழங்கும் சொல்லின் சிதைவுபோலும்; அன்றி வித்தென்பது அம்சாரியை பெற்றுவந்ததெனினும் இயையும்; வித்தாயமென இச்செய்யுளுள் வருதலும் நோக்குக.

க. எதுகை நோக்கி 'கோண்டு' எனக்கொள்ளின், நீட்டல் விகாரமாம்.

(பிரதிபேதம்) * பெருமையைவணியிரிந்த, †தாவகதாது, தாவகாது, ‡ பழிதூற்றும், || இவ ளல்லும் வாடியாகி யிருப்பானிருவரிடத்தும்பெறும்பொருளிறுமீண்வேதாக.

வில்லினு னெய்தலோ விலர்ம ஞயிழை
வில்லினுங் கடிதவர் சொல்லினுட் பிறந்தநோய்;
௧௭ நகைமுத லாக நட்பினு ளொழுந்த
தகைமையி னலித லல்ல தவர்நம்மை
வகைமையி னெழுந்த தொன்முரண் முதலாகப்
பகைமையி னலிதலோ விலர்ம ஞயிழை
பகைமையிற் கடிதவர் தகைமையி னலியுநோய்;
௧௮ நீயலே னென்றென்னை யன்பினாற் பிணித்துத்தஞ்
சாயலிற் சுடுத லல்ல தவர்நம்மைப்
பாயிரு ளறநீக்கு நோய்தபு நெடுஞ்சுடர்த்
தீயினாற் சுடுதலோ விலர்ம ஞயிழை
தீயினுங் கடிதவர் சாயலிற் கனலுநோய்;
ஆங்கு;
௨௪ அன்னர் காதல ராக வவர்நமக்
கின்னுயிர் போத்தரு மருத்துவ ராயின்
யாங்கா வதுகொ றோழி யெவ்வாயதூஉந்
தாங்குதல் வலித்தன் றாயி
னீங்கரி துற்றன்றவ ருறீஇய நோயே.

இது வரைவுநீட ஆற்றளாயின இடத்துத் தலைவி யாற்றமையை அவடன்ஞனே தலைவற்கு அறிவிக்கலுற்ற தோழி, தலைவன் சிறைப்புறத் தானாகத் தலைவியை வற்புறுக்க, அவள் வன்புறை எதிரழிந்து கூறியது.

இதன் பொருள்.

அரிதே தோழிநா ணிறுப்பாமென் றுணர்தல்
(௧)பெரிதே காமமென் னுயிர்தவச் சிறிதே
(௨)பலவே யாமம் பையுளு முடைய
சிலவே †நம்மோ டுசாவு (௩)மன்றி

௧. "இவளுயிர் தவச்சிறிது காமமோ பெரிதே" குறுந். ௧௮.
௨. "ஊழி பலவோ சிரவாயிற் றேவென்றும்" நள. சுயம். ௪௦௮.
௩. அன்றிலின் இயல்பு இந்நூற்பக்கம் ௮௦௫: ௩-ஆம் குறிப்பால் அறிய லாகும்.

(பிரதிபேதம்) * வன்பொறை. † சும்மோடு.



லழலவிர் வயங்கிழை யொலிப்ப ‡ வுலமந்
தெழிலெஞ்சு மயிலி னடுங்கிச் † சேக்கையி
னழலா கின் ‡ றவர் நக்கதன் பயனே

எ-து: தோழீ! நம்முடைய(௧)காமே நம்மிடத்தே நிறுத்துதலைச் செய்வா மென்று உணர்ந்திருத்தல் அரிது; அதற்குக் காரணமென்னெனில் வேட்கை பெரிதாயிராநின்றது; அதனாற் றேய்ந்த உயிர் மிகச் சிறிதாயிராநின்றது; நமக்கு வருத்தத்தைத் தருதலையுடைய யாமங்களும் பலவாயிராநின்றன; அவ்வியாமங்களிற் றுயிலாதபடி துணையைப் பிரிந்து வருந்தி நம்மோடு உசாவும் அன்றில்களும் சில உளவாயிராநின்றன; ஆதலான் அவ்வுயிர் தாங்குதல் அரிது; முடிவில் அவர் நம்மோடு கூடியதனாற் பெற்றபயன் (௨)பீலி உதிர்ந்த மயில்போலே பொலிவழிந்த காரணத்தால் நாம் நடுங்கச் சேக்கையிலேகிடந்து ‖ உடம்பு நெருப்பிலே ஓடவைத்த பொன்னாற்செய்த சிலம்புமுதலியன ஒலிக்கும்படி உலமர நமக்குக் காமத்தீ உண்டாகாநின்றதொன்றுமே. எ-று.

உலமர, நடுங்க எனத் ÷ திரிக்க.

அ மெல்லிய நெஞ்சு பையுள் கூரத்தந்
சொல்லினு னெய்தமை -|- யல்ல தவர்நம்மை
(௩)வல்லவன் றைஇய வாக்கமை கடுவிசை
வில்லினு னெய்தலோ விலர்ம ணுயிழை
வில்லினுங் × கடிதவர் சொல்லினுட் பிறந்தநோய்

எ-து: அவர் நெஞ்சுபோல் வலியுடைத்தன்றி நம்முடைய வலியில்லாத நெஞ்சு வருத்தம் மிகும்படி தாம் நின்னிற்பிரியே னென்று தெளிவித்த

சொல்லால் வருத்தினமையல்லாது அவர் நம்மைப் பண்ணவல்லவனாலே பண்ணப்பட்ட(ச)வடிவமைந்த கடிய விசையையுடைய (ரு)வில்லினால் எய்தற்றொழிலைச் செய்தலோ உடையரல்லர்; ஆயினும் ஆயிழாய்! அவர் தெளிவித்த சொல்லாற் பிறந்தநோய் மிகவும் வில்லினுங் கடிதாயிராநின்றது. எ-று.

---

க. "எழுந்த நாளு மிச்சையுந் தினம்போ ராடி, யகழ்தா னாணந் தோற்ற தாசையே வென்றதம்மா" திருக்குற்றலத். புராணவியல்பும். கரு.

உ. "காமர் பீலி யாய் மயில்" அகம். நடுஅ: உ.

ங. "வல்லவன் றைஇய பாவைகொல்" கலி. ௫௬: எ.

ச. வடிவு-வார்த்தல்; "வேல்வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே" புறம். நகஉ: ங.

ரு. வில், ஆகுபெயராய் அம்பை உணர்த்திற்றெனினும் ஆம்; "வில்லின் மாரியின் வீரன் விலக்கினன்" கம்ப. தாடகைவதை. கஎ.

(பிரதிபேதம்) * உலம் வந்து, † சேக்கையுள், ‡ அவனக்கதன், || உடம்பு மெலம்பு முதலியன, ÷ திரிக்க, அழலவிர் வயங்கிழை - நெருப்பிலே யோடவைத்த பொன்னாற்செய்தவிழைமெல்லிய, ✢ அல்லாதவர் கம்மை, × கொடிதவர்.

## நான்காவது முல்லை ரு. கஉக

சொல்லர் சுடருங் (க)கன்னுக்குழைக் காதினர்
நல்லவர் கொண்டார் மிடை

எ-து: பலபசுவையுடைய பொதுவர் கல்லிடத்தனவுங் காட்டிடத்தனவுமாகிய மெல்லியகொத்தினையுடைய (உ)கொன்றைப்பூவாலும் மெல்லியமலரையுடைய காயாம்பூவாலும் புல்லியஇலையையுடைய வெட்சிப்பூவாலும் பிடவம்பூவாலும் முல்லைப்பூவாலும் (ங) கஞ்சங்குல்லைப் பூவாலும் குருந்தம்பூவாலும் கோடற்பூவாலும் *பாங்கர்ப்பூவாலுஞ்செய்த கமழுங்கண்ணியைச் சூடினராய் விரைந்தஏற்றைத்தழுவுதலைக்காணவேண்டி முல்லைமுகையும்(ச)பீலிமுருந்தும் நின்றதாலொத்த பல்லினையுடையாய்ப் பெரிய குளிர்ச்சியையுடைத்தாகிய கண்ணினையுடையாராய் மடப்பம் பொருந்தின சொல்லினையுடையாராய் விளங்கும் பொன்னாற்செய்த மகரக்குழையையணிந்த காதினராய் ஆயர்மகளிர் வந்து பரணைக் கைக்கொண்டார். எ-று.

மிடை - பரண்.

அவர்மிடைகொள,
(௬)மணிவரை மருங்கி னருவி போல
வணிவரம் பறுத்த வெண்காற் காரியு
மீன்பூத் தவிர்வரு மந்திவான் விசும்புபோல்
வான்பொறி பரந்த புள்ளி வெள்ளையுங்

---

போன்று..................நகைக்குமென் னகையாள்" சிறு. நபுவத்தநக் நகைச்கட்டிலை. ௨௩.

௪. இந்நூற்பக்கம் ௪௦௨: க-ஆம் குறிப்புப் பார்க்க.

௫. (அ) "மன்றலங் கொன்றை மலர்மலைந்து ..., என்று திரியு மிடை மகனே" எனவும், (ஆ) "மணிநிரை யோம்பி நேரும் வல்விடை தழுவித் தேர்ந்த, வணிநிரை மகளிர் கூந்த லலங்கலங் கொன்ற சூட்டிப், பிணிதபு மாயர்செய்கை" எனவும், (இ) "வென்றி மழவிடை யூர்ந்தாற் குரியளிக், கொன்றையம் பூங்குழ லாள்" எனவும் வருஞ் செய்யுட்களை நோக்குக.

௩. கஞ்சக் குல்லை - கஞ்சா; இச்சொல், கஞ்சம், குல்லையென இரண் டாகவும் கொள்ளப்படும்.

௭. பீலிமுருந்து - மயிலிறகின் அடி.

௬. (அ) "மணிவரை யிழிதரு மணியின ரருவி" தொல். செய். சூ. ௭௮. பேர். மேற்கோள். (ஆ) மணிவரை யென்பதற்கு, இங்கே எழுதியிருக் கும் பொருளோடு "மணிநிகழ் விறன்மலை" (கலி. ௨௦: ௬.) என்பதும் இந்நூற் பக்கம் ௨௪௬: ௭ - ஆம் குறிப்பில் பொருந்துவனவும் ஒப்பு நோக்கற்பாலன.

(பிரதிபேதம்) * பாங்கற்பூவாளும்.

## ஐந்தாவது நெய்தல் ௨௦. அடி ௩

நகைமுத லாக நட்பினு ளெழுந்த
தகைமையி னலித லல்ல தவர்நம்மை

†வகைமையி னெழுந்த தொன்முரண் ‡முதலாகப்
பகைமையி னலிதலோ விலர்ம னுயிழை
பகைமையிற் கடிதவர் ||தகைமையி னலியுநோய்

எ-து:(க)ஈருயமறைத்தலென்னும் மெய்ப்பாடுகாரணமாக நாங்கொண்ட நட்பிலே ÷தோன்றிய தமது தகுதிப்பாடுகளாலே வருத்துதலொழிய அவர் நம்மைப் பொருள்களின் கூறுபாட்டாலே தோன்றிய பழைதாகிய மாறுபாடு காரணமாக வந்த பகையாலே வருத்துதலோ உடையரல்லர்; ஆயினும் ஆயிழாய்! அவர் +தமது தகுதிப்பாடுகளாலே வருத்துதலொழிய அவர் நம்மை வருத்துநோய் பகைமையினுங் கடிதாயிராநின்றது. எ-று.

(உ)முதல் - காரணம். பொருள்கள், ஈண்டு மனப்பொருள் முதலியன.

கஅ ×நீயலே னென்றென்னை **யன்பினாற் பிணித்துத்தஞ்
சாயலிற் சுடுத லல்ல தவர்நம்மைப்
††பாயிரு ளறநீக்கு நோய்தபு நெடுஞ்சுடர்த்
தீயினற் ‡‡சுடுதலோ விலர்ம னுயிழை
தீயினுங் கடிதவர் சாயலிற் கனலுநோய்

எ-து: நின்னிற் பிரியேனென்றுசொல்லி, என்னைத் தனக்குண்டாகிய அன்பினாலே வயக்கப்படுத்தித் தமது மென்மையாலே சுடுதலொழிய அவர் நம்மைப்பரந்த(ங)இருளை அவ்விடத்தினின்றும்போம்படி நீக்கும் கெடியதாகிய கொழுந்தினையுடைய நெருப்பாற் சுடுதற்றொழிலோ உடையரல்லர்; ஆயினும்

---

க. தொல். மெய்ப். சூ. கங.

உ. "இருமுதலின்" (தொல். பாயிரம்) என்பதற்கு 'இரண்டு காரணத்தான்' என்று இளம்பூரணரும், 'பெரிய காரணத்தான்' என்று சிவஞான முனிவரும் "நோய் முதல்" (குறள். கஎஅ) என்பதற்கு, 'நோய் வருதற் 'காரணம்' என்று பரிமேலழகரும் எழுதியிருக்கும் உரை இங்கே அறிதற்பாலன.

ங. "பகையிருட் பிழம்பு சீக்கும் பல்சுடருமிழும் வாளான்" நைடதம். சுயம். ககச.

(பிரதிபேதம்) * கலியதல்லது, † வகைமையுன, ‡ முதலாப். || தகையினவியு, ÷ தோன்றித் தமது, ╪ தமது தகுதிப்பாடுகளாலே நம்மை வருத்துநோய், × நீயலே மென் றெம்மை, நீயலனென்றெண்ணே, ** அன்பினிற் பிணித்தற்கு, †† பாயிரு ளிக்கு. ‡‡ உயேதோ.

## அந்திசை கலித்தொகைகள்.

ஆயிழாய்! அவர் ஆண்டுச் * செய்த காமநோய் கெடுதற்குக் காரணமான † மென்மையால்நின்று எரிபுங்காமநோய் தீயினுங்கடிதாயிராதின்றது.எ-று.

நோய்தபு சாயலென்க.

||ஆங்கு, அசை.

உச அன்னர் காதல ராக வவர்நமக்
இன்னுயிர் போத்தரு மருத்துவ ராயின்
யாங்கா வதுகொ றோழி யெண்ணிய தூஉக்
தாங்குதல் வலித்தன் றாயி
னீங்கரி துற்றன்றவ ருறீஇய கோயே

எ-று: தோழீ! நெஞ்சு அத்தன்மையவர் நம்மிடத்துக் காதலையுடையவ ராகக் கருதி முன்பு நம்மை நீங்குதலருமையுற்ற அவ்வியற்கைப் புணர்ச்சியி னன்று அவர் நம்மையுறுத்தின நோயைத் தான் பொறுத்தலைத் துணிந்த துணிவை ஆராய்ந்துபார்க்கில் அத்துணிவு எப்படியும் நம் இனிய உயிரைப் போக்கும்; அவர் நமக்கு (க) உயிரைப் போகாமல்மீட்கும் மருத்துவராய் இருப்பாராயின், அந்நிலை ÷எக்காலத்து அவர்க்கு உண்டாவது சொல்லென ╪வன்புறை எதிரழிந்து கூறினள். எ - று.

(உ) வலித்தன்று என்பது வலித்ததன்றென்னும் மறைப்பொருள் தாராமை உணர்க.

இதனால், தலைவற்கு அசைவு பிறந்தது.

இஃது "இடைநிலைப்பாட்டு" (க)என்றதனாற் × தாழம்பட்ட தசையின்றி ஐந்தடியான் இடைநிலைப்பாட்டுவேர்த ஒத்தாழிசைக்கலி. (உ௦)

---

க. இந்நூற்பக்கம் சக: உ - ஆம் குறிப்புப் பார்க்க.

உ. வலித்தன்று=வலித்தது - துணிந்தது; இஃது இதனே வினையாலணை

யும் பெயராய் நின்றது. "காண்டல் வலித்தன்று" என்பது பு - வெ. கைக்கிளை. பெண்பாற். கொளு. ௩. இவ்வகை ஆட்சியே அந்தக் கொளுவில் மலிந்து கிடக்கின்றது. இதனை வினைத்திரிசொல்லென்று முற்காலத்தவரும், அகரச்சாரியை பெறாது அன்சாரியை பெற்று வந்த சொல்லென்று பகுபத முடிபு கூறும் இக்காலத்தவரும் வழங்குவர்.

௫. தொல். செய். சூ. ௧௫௪. இச்சூத்திரத்தின் உரையில் "தகைமுதலாக...............தகைமையி னவிழுகோய்" என்னும் பகுதியைப் பேராசிரியரும், (தொல். செய். சூ. ௧௫௭) இச்செய்யுள் முழுவதையும் நச்சினார்க்கினியரும் இடைநிலைப்பாட்டு ஐந்தடியான் வந்ததற்கு மேற்கோள் காட்டியிருக்கிறார்.

(பிரதிபேதம்) * செய்தமென்மையால், †மென்மையாய். ‡ நின்றது கோய்தபுசாயல் - காமநோய் கெடுத்தற்குக் காரணமான சாயலென்க ஆம். ‖ அங்கஅனை. + சக்கிலத்தே, ╋ வன்போரை, × தாழப்பட்ட.

## ஐந்தாவது நெய்தல் உக. அடுகு

(கநஅ.) எழின்மருப் பெழில்வேழ மிகுதரு கடாத்தாற்
றொழின்மாறித் தலைவைத்த தோட்டியை நிமிர்த்தாங்
கறிவுநம் மறிவாய்ந்த வடக்கமு நாணொடு
வறிதாகப் பிறரென்னை நகுபவு நகுபுடன்
மின்னவிர் நுடக்கமுங் கனவும்போன் மெய்காட்டி
யென்னெஞ்ச மென்னொடு நில்லாமை நனிவௌவித்
தன்னலங் கரந்தானைத் தலைப்படுமா றெவன்கொலோ
மணிப்பீலி சூட்டிய நூலொடு மற்றை
யணிப்பூளை யாவிரை யெருக்கொடு பிணித்தியாத்து
மல்லலூர் மறுகின்க ணிவட்பாடு மிஃதொத்த
னெல்லிருங் கேட்டீமி னென்று;
௧௨ படரும் பனைபீன்ற மாவுஞ் சுடரிழை

நல்கியா னல்கி யவை;
கசு பொறையென் வரைத்தன்றிப் பூநுதி லீத்த
நிறையழி காமநோய் நீந்தி யறையுற்ற
வுப்பியல் பாவை யுறையுற் றதுபோல
வுக்கு விடுமென் னுயிர்;
கஅ பூளை பொலமல ராவிரை வேய்வென்ற
தோளா ளெமக்கீத்த பூ;
உ0 உரிதென் வரைத்தன்றி யொள்ளிழை தந்த
பரிசழி பைதனோய் மூழ்கி யெரிபரந்த
நெய்யுண் மெழுகி னிலையாது பையபைத்
தேயு மளித்தென் னுயிர்;
உச இளையாரு மேதி லவரு முளையயா
னுற்ற துசாவுந் துணை;
உரு என்றியான் பாடக் கேட்டு
அன்புறு கிளவியா ளருளிவந் தளித்தலிற்
றுன்பத்திற் றுணையாய மடலினி யிவட்பெற
வின்பத்து ளிடம்படலென் றிரங்கின ளன்புற்
றடங்கருந் தோற்றத் தருந்தவ முயன்றோர்தம்
முடம்பொழித் துயருல கினிதுபெற் றாங்கே.

அநிஉ கலித்தொகை கக அ.

இது (க)மடலூர்ந்து தலைவியையெய்திய தலைவன் றான் மடலூர்ந்த வாறும் அவளை எய்தியவாறும் தனக்குப் பாங்காயினோர்க்குக் கூறியது.

இதன் பொருள்.

(உ)எழின்மருப் பெழில்வேழ மிகுதரு கடாத்தாற்
றொழின்மாறித் தலைவைத்த தோட்டியை யிமிர்ந்தாங்
கறிவுநம் மறிவாய்ந்த வடக்கமு நாணொடு
வறிதாகப் பிறரென்னை நகுபவு நகுபுடன்
(ங)மின்னவிர் நுடக்கமுங் கனவும்போன் மெய்காட்டி
யென்னெஞ்ச மென்னொடு நில்லாமை நனிவௌவித்
தன்னலங் கரந்தாளைத் தலைப்படுமா *றெவன்கொலோ
(ச)மணிப்பீலி சூட்டிய நூலொடு மற்றை
யணிப்பூளை (ரு)யாவிரை யெருக்கொடு பிணித்தியாத்து

---

க. புணர்ந்தபின் நிகழ்வதாகிய பெருந்திணைக் குறிப்புள் தலைமகற்கே யுரித்தாகிய ஏறிய மடற்றிறத்துக்கு இச்செய்யுள்மேற்கோள்; தொல். அகத். சூ. ருச. இளம். சூ. கங. நச்.

உ. "நெய்தற்றிணையோடு பெருந்திணையும் மயங்கி வந்ததற்கு "எழின் மருப் பெழில்வேழம்..........கேட்டீமினென்று" என்னும் பகுதி மேற்கோள்; இ - வி. சூ. ஙகூ.

ங. "துளியிடை மின்னுப்போற் றோன்றி யொருத்தி, யொளியோ டுரு வென்னைக் காட்டி யளியளென், னெஞ்சாறு கொண்டா ளதற்கொண் டுந் துஞ்சே, னணியலங் காவிரைப் பூவோ டெருக்கின், பிணையலங் கண்ணி மிலைந்து மணியார்ப்ப, வோங்கிரும் பெண்ணை மடலூர்ந் தென் னெவ்வநோய், தாங்குத றேற்றா விடும்பைக் குயிர்ப்பாக, வீங் கிழை மாதர் திறத்தொன்று நீங்காது, பாடுவேன் பாய்மா நிறுத்து" கலி. கரு.க: ரு - கங.

ச. (அ) "மணிநிற வுருவின தோகையும்" (ஆ) "மரகதக் கதிர்தழைத்த கலாப மஞ்ஞை"

ரு. (அ)"குனிகா யெருக்கின் குவிமுகிழ்விண்டவொடு. பனிவா ராவிரைப் பன்மலர் சேர்த்தித், தாருங் கண்ணியுந் தைஇத் தன்னிட, மீரு மட லோன் வரவென் சொல்லென, 'நீர்த்துறைப் பெண்டிர் நெஞ்சழிந் திரங்கு............நணிமடற் கலிமா மன்றத் தேறித்தன், னணிநலம் பாடினு மறியன்" துணைநாற்பது.(ஆ)"மறவல் வாழிதோழி துறைவர், கடல்புரா பெருங்கிளை நாப்பண், மடல்புனைக் தேறிசித் பாடும்

பொழுதே" தொல். களவு. சூ.உக. மேற்.

(பிரதிபேதம்) * எவன்கொல்லோ.

ஐந்தாவது நெய்தல் உக. அழிசி

௪0 மல்லலூர் மறுகின்க ணிவட்பாடு (க)மிஃதொத்த

னெல்லீரும் கேட்டீமி *னென்று

எ-து: மின் விளக்குகின்ற நுடக்கமும் கனவினது தோற்றமும்போலே தன்வடிவைக் காட்டி என்னுடனே முற்படக் கூடிப் பின்னர்ப் பிறர் என்னை (உ)இகழ்ந்து சிரிப்பனவற்றையும் எனக்குக் காட்டி எனக்குரிய நெஞ்சம் என்னோடு கூடி இல்லாமல் அழகினையுடைய மருப்பினையும் அழகினையுமுடைய (ங)வேழம் சொரிதலைச்செய்யுமதத்தாலே பாகனுக்குச் செய்புந்தொழில்களைத் தவிர்ந்து தான் வேண்டியவாறொழுகாதபடி தன்னை விலக்குந் தோட்டியையுங் கைகடந்தாற்போலத் தன்மேற் சென்ற வேட்கையினாலே என்னைவலைச் செய்தலைத் தவிர்ந்து தான் வேண்டியவாறொழுகாதபடி (ச) தனக்குக் காவலாகிய அறிவுமாம்(ரு)அறிவாலேஆராய்ந்த அடக்கமும் இயல்பாகத்தோன்றிய (சு)நாணுடனே வறிதாக அவற்றைக் கைகடக்கும்படி †மிகவும் என்னெஞ்சைக் கைக்கொண்டு தன்னலத்தை யான் காணாமல் மறைத்தவனைக் கூடும்வழி எவ்வழிதானென்றுஆராய்ந்துஇனி(எ)மடலேறுதலே கூடும்வழியென்று கருதி

---

க. இந்நூற்பக்கம் க.அசு: ங-ஆம் குறிப்புப் பார்க்க.

உ. "பல்லார்நக் தெள்ளப் படுமடன் மாவேறி" கலி. கக. உஉ.

ங. "பிறையெனு நுதலவள் பெண்மை யென்பதோ, உறைகம ழுலங்கலா னயன கோசர, மறைதலு மனமெனு மத்த யானையை, நிறையெனு மங்குச மிமிர்ந்து போயதே" கம்ப. மிதிலைக்காட்சி. ௪0.

ச. "சென்ற விடத்தாற் செலவிடா தீதொரீஇ, நன்றின்பா லுய்ப்ப தறிவு" குறள். ௪உஉ.

ரு. (அ) "கற்றறிந்தார் கண்ட அடக்கம்" பழ. உ௪க. (ஆ) "கற்றறிவு குலமேன்மை கருணைபெரும் புகழ்செல்வங் கைம்மா றெண்ணு, நற்றுதவுங் கொடைசீர்மை யொழுக்கமருந் தவமிய முறவின்

மேன்மை, மற்றெறிரி லாத்திண்மை வாய்மைமிகு மாய்மைகுணம் வனப்பி யாவும், பெற்றிடினு மடக்கமில்லாப் பெருமிதத்தி னத் தனைக்கும் பிழையுண் டாமால்" பிரபோத. விவேகன்சேனை. ௫௫.

௬. "நோனு வுடம்பு முயிரு மடலேறு, நாணினை நீக்கி நிறுத்து" குறள். ௧௧௩௨.

௭. "மடலேறலாவது:—தலைவன் ஒவ்வாக் காமத்தால் பனங்கருக்காற் குதிரையும் பனந்தருவி லுள்ளனவற்றால் வண்டில் முதலானவுஞ் செய்து அக்குதிரையின்மேலேறுவது; மடலேறுவான் நிசம்பானும்

உடலெக்கும் நீறுபூசிக் (1) இழி வியர்க்கைப்படாது தானே நீட்டிக் கெழியின் தலைப்புறத்தில் அவள பெயரை வரைந்து கைப்பிடித்து

(பிரதிபேதம்) * இன்று, † மிகவுமன்னெஞ்சை.

108



(க) மடன்மாவிலே சூட்டவேண்டி நூலாலே நீலமணிபோலும் நிறத்தையுடைய (உ) பீலியையும் மற்றை அழகையுடைய பூளைப்பூவையும் ஆவிரம்பூவையும் எருக்கம்பூவோடே தொடுத்து அம்மடன்மாவின்மேலே கட்டி வளப்பத்தையுடைய ஊரின் மறுகின்கண்ணே இவளொருத்தன் (௩) இவளைப் பாடும்; பாட்டை எல்லீரும் கேட்பீராக என்று சொல்லிப் பாடத் *தொடங்கி. எ - று.

---

ஊர்ப்புறத்தே காற்சந்தியில் ஆகார நித்திரையின்றி அக்கிழிமேற் பார்வையுஞ் சிந்தையு மிருத்தி வேட்கைவயத்தனாய் வேறுணர்வின்றி (2) ஆலூரினும் அழன்மேற்படினும் அறிதலின்றி மழை வெயில் காற்றால் மயக்காதிருப்புழி, அவ்வூரிலுள்ளார் பலருங் கூடிவந்து, (3) 'நீ மடலேறுதியோ, அவளைத்தருதும் சோதனை தருதியோ' என்றவழி, இசையுந் தானாயின் அரசனுக்கு அறிவித்து அவனேவலால் அவன் இனோர்து கையத்தந்து 'மடலேறு' என்றவழி, ஏறு முறைமை:—பூளை எலும்பு எருக்கு இவைகளாற் கட்டிய மாலையணிந்துகொண்டு அம்மாவில்

எற அவ்வாடத்தை வீதியில் ஈர்த்தலும் அவ்வுருளை உருண்டோடும் பொழுது, பனங்கருக்கு அறுத்தவிடமெல்லாம் இரத்தந் தோன்றுது வீரியந்தோன்றின் அப்போது அவளை அலங்கரித்துக் கொடுப்பது. இரத்தங்கண்டுழி அவனைக் கொலைசெய்து விடுவது. இவை புலவ ரால் காட்டிய வழக்கென்றுணர்க" என்பது தந்நை. ௧௦௧. உரையில் உள்ளது. இது தலோத்துங்க. ௧௨௮. குறிப்பில் (1) தான் காமித்த தலைவியினுருவை ஒரு படத்தில் தன் கையாலெழுதி யென் றும் (2) ஆவுரிஞ்சினுமென்றும் (3) நீ மடலேறிச் சோதனைதத்தால் நீ

இச்சித்த பெண்ணைக் கொடுக்கச் செய்வோமென்று கூற அதற்கு அவ னிசைந்தானாயி னென்றும் விளக்கத்தோடும் சிறிது சொல் வேறுபாட் டோடும் உளது. ஆவிரம்பூவும் அணிவதுண்டு.

௧. சிலப். ௭௦ - ௭௧-ஆம் அடிகளும் அவற்றினுரையும் பார்க்க.

௨. "பூவல்ல பூளை யுழிஞையொ டியாத்த, புனவரை யிட்ட வயங்குதார்ப் பீலி, பிடியமை நூலொடு பெய்ம்மணி கட்டி" கலி. ௧௩௦: ௭ - ௯.

௩. (அ) "கழிகின்ற வென்னையு நின்றநின் கார்மயி றன்னையும்யான், கிழியொன்ற நாடி யெழுதிக்கைக் கொண்டு" (கோவையார். ௭௯.) என்பதன்விசேடவுரையில், 'தனக்கு அவளயலென்னுங்கருத்தினனாய், நின் கார்மயிலென்றான். என்னையும் நின் கார்மயிறன்னையும் மட விடத்தெழுதவேனென்றதென்னை? கார்மயிலை யெழுதுவதன்றித் தன் னையு மெழுதுமோவெனின், மடலெழுதிக் கையிற்கொண்டால் உரை யாடுகையின்றி இவனும் ஓவியமாகலின்,' மடவின்றலையிலே தன் னுருவுந் தன்பேரையும் அவளுருவு மவள்பேரையும் எழுதுகையால் என்னையு மென்றான்' என்றுள்ள குறிப்பால் மடலூர்பவற்கு உரை யாடாமை உண்டென்றறியப்படுமாயினும் (ஆ) " என்றியான் பாடக் கேட்டு" (இ) "பாடுவேன் பாய்மா நிறுத்து" (ஈ) "பாடெனிற் பாடவும் பிரதிபேதம்) * தொடங்கியெங்க வையனவற்றையும்.

குவனவற்றையுங்காட்டி என்றான், மடலேறுதல்(க)வரைபாய்தலாகிய இரண்டினையுந் தான் பின்புகருதுதலின். இவனொருத்தன் எனத் தன்னைப் பிறர்போற் கூறினான். அஃது உலகத்தார் பாடும் பாட்டன்மையுந் தோற்று வித்துகின்றது.

இவனென்று கூட்டிற்று, கையில் (௨)எழுதிப்பிடித்த கிழியிலவனை.

௪௨ (ரூ)படரும் பனையீன்ற மாவுஞ் சுடரிழை
(௩)நல்கியா ணல்கி யவை

எ-து: விளங்குகின்ற இழையினையுடைய, என்னாலே காமிக்கப்பட்டவள் எனக்குக் காதலித்துத் தந்தவை, வருத்தமும் வருத்தத்தாலுண்டான பனை யீன்ற மடலாற் செய்த குதிரையும். எ - று.

. . . . . . . . . . . . . . . . . . . .

வல்லேன் சிறிதாங்கே, யாமெனி லாடலு மாற்றுகேன் பாடுகோ" (௨) "அணிநிலைப் பெண்ணை மடலூர்ந் தொருத்தி, யணிநலம் பாடி வரற்கு" (௩) "வருந்தமா வூர்ந்து மறுகின்கட் பாட" (கலி. ௧௩௮: ௨௩, ௧௩௯: ௧௩, ௧௪0: ௧௩ - ௧௪, ௧௪௧: ௫ - ௬, ௨௩.) என இந் நூலுட் பலவிடத்தும் வருதலால், அவளைக் குறித்துப் பாடுதலாகிய உரையாடலுண்டென்பது தெளிவாம். இந்நூற்பக்கம் ௮௫௪: ௫-ஆம் குறிப்பும் பார்க்க.

க. (அ) "விளையூர் குழலியர் தத்தமின் தாகுல வெள்ளநிறைக், கரையூர் பொழுதிளங் காளையர் தாங்கிழி கைப்பிடித்துத், தலையூர் தொறும் பெண்ணை மாமட லூர்வார் தவிர்த்துபின்னும், வரையூர்வர் தஞ்சையர் கோன் வாணன் மாறையில் வாணுதலே" தஞ்சை. ௪0௨. (ஆ) "முன்னேன் திருக்கொடி யேற்றத்தி னன்மூயங் காதொழிக்தாற், பின்னேன் மழைக்குடை வீழ்தொழி வார்..........வசுதேவன் பெற்ற விருவரிலே" (இ) "பாசன் சொரூப மெய்ப்பது வோமலே பார்ப்பதுகடன், முபசன் சொரூப மெய்ப்பதுவோ..............அன்பர் பேரெண்ணமே" மாறன். ௧௨௬, ௧௫௪. (ஈ) "மடலார் காம வெள்ளத் தின் மோதலுற்றார், கிழியொன்று கைப்பிடித் தேமட லேறுவர் கேண்மையற்றார், பழியொன்று மெண்ணில ராய்ப் பறம் பேறியும் பாய்வார்களே" திருவாவடுதுறைக். ௧௧௬.

உ. இந்நூற்பக்கம் அகூஅ: ரு - ஆம் குறிப்பில், முதலிலுள்ள செய்யுளாலும் "இடம்பெற்ற காசினி யோர்யாறு மங்கையுரு சித்திரஞ்சேர், படம் பெற் றிருக்கிலன் றேதிரு மாமலனப்பாவிப்பமே" (மயூரகிரி. சகூ.) என்பதனாலும் தலைவனுருவும் எழுதுவதுண்டென்று தெரிகிறது.

ந. "தொடலைக் குறுந்தொடி ..க்தாண் மடலொடு, மாலை யுழக்குந் துயர்" குறள். ககஙரு.

ச. (அ) "நல்கிளு நல்கா ஞயினும்" புறம். அ௦: இ; (ஆ) "நல்கினை தேளாய்" மணி. கஉ: ருக.(இ) "நுமக்குநீர் நல்குநி ராயின்"

(பிரதிபேதம்) * பிறன்போற்.

அகo கலித்தொகை கங அ.

கச (க)பொறையென் வரைத்தன்றிப் பூநுத லீத்த
(உ)நிறைமழி காமநோய் நீந்தி யறையுற்ற
(ந)வுப்பியல்*பாவை யுறையுற் றதுபோல
வுக்கு விசிமென் னுயிர்

இ-ள்: என்னுடைய உயிர்தான் †பொறுத்தல் என் எல்லைத்தன்றாகப் பொலிவுபெற்ற நுதலினையுடையாள் தந்த, நிறைஎன்னுங் குணம் அழிதற்குக் காரணமான காமநோயை நீந்தி உப்புப் பாத்தியிலே கிடந்த உப்பால் இயன்ற பாவை மழைத்துளியை உற்ற தன்மைபோலக் கரைந்துவிடா நின்றது. எ - று.

கஅ பூளை (ச)‡பொலமல ராவிரை (ரு)வேய்வென்ற
தோளா ளெ[ம](ண)க்||ஈத்த பூ

எ - து: வேயை வென்ற தோளையுடையாள் எனக்குத் தந்த பூக்கள் பூளைப்பூவும் பொன்போன்ற பூவையுடைய ஆவிரம்பூவும். எ - று.

எனவே, தான் + கொடுத்தன நல்லபூ என்றான். ÷பொலமல ரென்னும் முடிவு "தொடரியலான" (சு)என்னும் இலேசான் முடித்தாம்.

---

க. "இந்நோய், பொறுக்கலாம் வரைத்தன்றிப் பெரிதாயின்" (கலி. ௬அ: ௨௦-௨௧) என்பதும் அதன் குறிப்பும் "பொறுக்கல்லா நோய்செய்தாய்" (கலி. கச: கக) என்பதும் ஒப்புநோக்கற்பாலன.

உ. (அ) "நிறையு முண்டோ காமங் காழ்கொளின்" மணி. ரு: உ௦. (ஆ) "நிறையென்ப தில்லைக் காம நோய்நின்று நிறக்கு மாயின்" சூளாமணி. கல்யாண. ௧௫௫.

௩. (அ) "நெடுவெள் ளூப்பி னிரம்பாக் குப்பை, பெரும்பெயற் குருகி யாஅங்கு" (ஆ) "மிகுபெய, லுப்புச்சிறை நில்லா வெள்ளம் போல, நாணுவரை நில்லாக் காம நண்ணி, நல்கினள்" அகம். உ௦௬: ௧௪-௧௫. உ௦அ: ௧அ - உ௧. (இ) "உப்பின் பெருங்குப்பை நீர்படி யில்லாகும்" நீரி. அ௧. (ஈ) "தமிழ்புன னெருங்க வுடைந்துநில்லா தாற்று, வுப்புச் சிறைபோ லுண்ணெகிழ்ந் துருகி" பெருங். (௩) உ௦: ௧௨௦ - ௧உ௧.

௪. "பொன்னே ரவிரைப் புதுமலர்" குறுந். ௧௯௬.

௫. வென்றவென்பது மாபுபற்றி உவமச்சொல்லாய் வருதற்கு, "வேய் வென்ற தோள்" என்பது மேற்கோள்; தொல். உவம. ரு. ௧எ. இளம்.

௬. தொல். புள்ளிமய. ரு.௧௧.இச்சூத்திரத்தின் இளம். நச். உரைகளிலும் ஒன்றின முடித்தலால் மென்கணம் வந்தவிடத்தும் பொன் என்பது

(பிரதிபேதம்) *பாறை, † பொறுத்ததென் னெல்லே, ‡ பொனமலை ஈவிரம், || அளித்தது, ¶ தொடுத்தன கல்ல, + பொனமலரென் றுமுடிபு 'தொடரியல்' 'சூகிரம்' என்று பிறைரன்முடித்தாம்.

## ஐந்தாவது நெய்தல் உக.

அகூக்

உ௦ (௧)உரிதென் வரைத்தன்றி யொள்ளிழை தந்த
*பரிசழி (உ)பைதனோய் மூழ்கி (௩)யெரிபரந்த
நெய்யுண் மெழுகி னில்லாது பையயத்
(௪)தேயு மளித்தென் னுயிர்

எ - து: ஒள்ளிய இழையினையுடையாள் என்றற் பொறுக்குமெல்லைத் தன்றாக எனக்குரித்தாகத் தந்த, என்னியல்புகள் அழிதற்குக் காரணமான, வருத்தத்தையுடைய காமநோயிலே என்னுயிர் அழுந்தி, நெருப்புப் பரந்த நெய்யுள்ளே கிடந்த மெழுகு மெத்தென உருகித் தேயுமாறுபோல †நிலையில்லாமே மெத்தென மெத்தெனத் தேயாநின்றது; இஃது எல்லாராலும் அளிக்

குர்தன்மையுடைத்து. எ - று.

உச இளையாரு மேதி லவரு ‡முனையயா
ஞற்ற துசாவுந் துணை

எ - து: யானுற்ற காமநோய்க்கு யான் உளையும்படி உசாவுந் துணை இளையபிள்ளைகளும் இக் காமநோய்க்கு அயலானு நமே; பிறரில்லை. எ - று.

உசு என்றியான் பாடக் கேட்டு
அன்புறு கிளவியா ளருளிவந் தளித்தலிற்
றுன்பத்திற் றுணையாய ||மடலினி யிவட்பெற
வின்பத்து ளிடம்படலென் றிரங்கின ளன்புற்

---

பொலமெனத் திரிந்து வருதலுண்டென்பதற்கு, "பொலமலராவிரை" என்பது மேற்கோள்.

க. உரிது. அகம். க0: எ; தளா. மந்திர. கூஅ, அட்சியல். கூடுல; கலி. எக: கஎ; அதன் குறிப்பும் பார்க்க.

உ. "பைதனெய்" கலி. கூஉ:கச, கஙo: கஅ.

ஙு. (அ) "அருநா ணளிய வழல்சேர் மெழுகொத் தழிகின்றதே" கோவையார். சச. (ஆ) "காதல ராயினுங் காதல் கையிகர், தேதில ராயின மடிகட் கின்றென; ஆதலே மெழுகினின் றுருகினர்" தளா. முத்திச. கூச. (இ) "உண்ணுறை யழிய வுலேயிடு மெழுகொத் தொருமொழி தோழியர்க் குரைத்தாள்" பிரமோத். பிரதோட. கூஎ. (ஈ) "அழல்படு மெழுகே யென்னக், கொம்மென வுருக வுள்ளங் குழைகலித்து" (உ) "தீசேர் மெழுகென வுள்ளம் விள்ள" கந்த. திருநகர். கஉஉமேரு. ச. (ஊ) "உலேயின் மீது மெழுகொத் துருகினள்" அரிச். மயான. சச. (எ) "மெழுகா ரழலுற் றெனவிளகி" (ஏ) "மெழு கொள்ளெரிக்கதவி யாங்குளநெகிழ்ந் தருகினள்" விநாயக. முக்கலர். இ; கிருச்சமதரு.உ.

ச. "துடியிடையீ, ரருளா தொழியி னொழியா தழியுமென் னுருயிரே" கோவையார். எகூ.

பிரதிபேதம்) * பரிவழி, † கில்லிலாதே, ‡ உளையயாலுற்றதாறும், ||மடலிலைவட்பெற,

றடங்கருந் தோற்றத் தருங்(க)தவ *முயன்றோர்தம்
முடம்பொழித் துயருல கினிதுபெற் றாங்கே

எ - து: இப்படி இப்படி யான்பாட அன்புறுகிளவியாள் அதனைக்கேட்டு அருள்பண்ணி அதன் மேலே அன்புற்று வந்து என்னை அளிக்கையினாலே, மனவேட்கை அடங்கின அரிய விளக்கத்தையுடைய செய்தற்கரிய தவத்தை முயன்றோர் தம்முடம்பை இவ்வுலகிலேபோகட்டுச் சுவர்க்கத்தை †இனிதாகப் பெற்றாற்போல, துன்பத்திற்குத் துணையாய் நின்ற மடல் இனி ‡இவளைப் பெறும்படியாக இன்பத்துக்கு இடம்படக்கடவா (?) தென்று இரங்கினா ‖னென்றான் எ - று.

இது பூவையாவிரை எனத் தலைவிரவின, பாட்டிடைமிடைந்த, ஐஞ்சீரடுக்கியும் ஆறுமெய்பெற்றும் வாராது தரவும்போக்கும் வந்த, கலிவெண்பாட்டு. (உ௧)

(௧௩௯.) சான்றவிர் வாழியோ சான்றவி ரென்றும்
பிறர்நோயுந் தந்நோய்போற் போற்றி யறனறிதல்
சான்றவர்க் கெல்லாங் கடனானா லிவ்விருந்த
சான்றீ ருமக்கொன் றறிவுறுப்பேன் மான்ற
௫ துளியிடை மின்னுப்போற் றோன்றி யொருத்தி
யொளியோ டுருவென்னைக் காட்டி யளியளென்
னெஞ்சாறு கொண்டா ளதற்கொண்டுந் துஞ்சே
னணியலங் காவிரைப் பூவோ டெருக்கின்
பிணையலங் கண்ணி மிலைந்து மணியார்ப்ப

---

௧. (அ) "உடம்பொழிய வேண்டி னுயர்தவ மாற்று" (ஆ) "தவத்தாற் சுவர்க்கமாய்" சிறுபஞ். ௬௩. (இ) "சுவர்க்கந் தவத்தால்" ஏலாதி. ௭௭. (ஈ) "ஒழுக்கிய வருந்தவத் துடம்பு நீங்கினோ, ரழிப்பரும் பொன்னுடம் படைந்த தொப்பவே" சீவக. ௩௨௫. (உ) "புண்ணியம் புரிந்தோர் புகுவது துறக்க மென்னுஞ் சுருமறைப் பொருளே" கம்ப. நகரப். ௫. என்பவையும் (ஊ) "தவஞ்செய் மாக்க டம்முடம் பிடாஅது, ததன்பய மெய்திய வளவை மான" பொருந. ௯௧ - ௯௨. (எ) "உடம்பொடு துறக்கஞ் சுற்றவரை யொத்தார்" (ஏ) "உறையும் விண்ணக

முடலொடு மெய்தின ரொத்தார்” (ஐ) “துறந்த செல்வ னிளையத் துறக்கர்தான், பறந்து வந்து படிந்தது பல்சனர், பிறந்து வேறொருவருபெற் றூரென, மறந்து வைகினர் முன்னைத்தம் வாழ்வெலாம்” (ஒ) “மெய்ப்பி ரேடருந் துறக்கமுற் றூரென” கம்ப. கடிமணப். க. மந்திர. எஅ. கிளைகண்டு நீங்கு. எ. மீட்சி. கஙச.என்பவையும் இங்கே அறிதற்பாலன.

(பிரதிபேதம்) * மூயன்றேருடம், † இன்தாற்பெற்றூற், ‡ இவன் பெறும்படியாக, || என்றுன்.



(க)கோலவன் சூடிய (உ)குழவித் திங்கள்போல்
*வளையுபு மலிந்த கோடணி சேயும்
பொருமுரண் முன்பிற் (ங) புகலேறு பலபெய்
தரிமாவும் பரிமாவுங் களிறுங் காரமும்
(ச)பெருமலை விடரகத் தொருங்குடன் குழீஇப்
(ரு)படு(சு)மழை யாடும் வரையகம் போலுங்
கொடிநறை சூழ்ந்த தொழூஉ

எ-து: அவர் தத்தம்மிடையைக் கைக்கொள்ள ஆயர்(எ)மணிகளையுடைய (அ)மலையிடத்தினின்றும் வீழ்கின்ற அருவிகள்போல அழகினது எல்லையைப்

க. “எற்றுவலை ஞயரிய வெரிமரு ளவிர்சடை, மாற்றருங் கணிச்சி மணி மிடற்றோனும்...... ...நால்வ ருள்ளுங், கூற்றொத் தீயே மாற்றருஞ் சீற்றம்” புறம். குசு: க- கக. என்புழி ‘மணிமிடற்றோனைக் கூற்றமென்றது அழித்தற்றொழிலுடைமையான்’ என்னும்விசேடவுரைப் பொருளாட்சியும், “கோலவன் யார்கொலோ கோலவன்மற்றிவன்” புறம். கடுஉ: அ. “கோலவனல்லயோ கொற்றவ ஞயினை” மணி. உகு. கஎச. என்னும் சொல்லாட்சியும் ஈண்டு அறிதற் பாலன.

உ. குழவி யென்பது சூத்திரத்துட் கூறப்படாத பிறிதின்மேலும் வருமென்பதற்கு, “குழவித் திங்கள்” என்பது மேற்கோள்; தொல். மர. சூ. உச.பேர்; மயிலைநாதர் குழவியென்பது மதிக்கும் உரித்தாய்வரு

மாபிற்றென்று எழுதியிருத்தலும் இங்கே அறிதற்பாலது; நன். பொது. ௫. ௧௭.

௩. "போர்புக லேற்றுப் பிணரெருத்தில்" கலி. ௧0௩: ௩௪.

௪. (அ) "பெருமலை விடாகத்து" (ஆ) "பெருமலை விடாகத் தருமிசை" புறம். ௧௭: ௪; ௧௧: ௮.

௫. படுதல் என்பது பெய்தல் என்னும் பொருளில் வருதல், (அ) "படுமழை யடுக்கத்த" (ஆ) "பாடுபெயல்" கலி. ௪௮: ௪; ௧0: ௯. என்பவற்றாலும் 'பாட்டம்' என இருவகைவழக்கினும்வழங்கும் சொல்லாலும் அறியலாகும்.

௬. "ஊர்பெழு கிளர்புளர் புயர்மங்குல் வறைபொங்க" கலி. ௧0௫: ௨௫.

௭. மணிவரை என்பதற்கு நீலமணி போன்றமலை யெனப் பொருள் கொள்ளினும் பொருந்தும்.

௮. (அ) "அயமிழி யருவிய வணிமலை" (ஆ) "இலங்குதா ழருவியோ டணிகொண்ட நின்மலை" (இ) "ஆமிழி யணிமலை" (ஈ) "அயனந்தி யணிபெற வருவியார்த் திழிதரும், பயமழை தலைஇய பாசொல் விறல் (பிரதிபேதம்) * வண்புமனிர.

## ஐந்தாவது நெய்தல் ௨௨. ௮௯௩

௧0 வோங்கிரும் பெண்ணைமடலூர்ந்தென் னெவ்வநோய்
தாங்குத றேற்றா விடும்பைக் குயிர்ப்பாக
வீங்கிழை மாதர் திறத்தொன்று நீங்காது
பாடுவேன் பாய்மா நிறுத்து;
௧௪ யாமத்து மெல்லையு மெவ்வத் திரையலைப்ப
மாமேலே னென்று மடல்புணையா நீந்துவேன்
றேமொழி மாத ருறாஅ துறீஇய
காமக் கடலகப் பட்டு;
௧௮ உய்யா வருநோய்க் குயவாகு மையப
லுறீஇயா ளீத்தவிம் மா;
௨0 காணுந ரெள்ளக் கலங்கித் தலைவந்தென

றிணைழின் முற்றி யுடைத்துள் ளழித்தரு
மாணிழை மாதரா ளேளரெனக் காமனு
தாணையால் வந்த படை;

௨௮ காமக் கடும்பகையிற் றோன்றினேற் கேம
மெழிலுக வீக்கவிம் மா;

௨௯ அகைமெரி யானுகென் னுருயி ரெஞ்சம்
வகையினு லுள்ளாஞ் சுடுதரு மன்னோ
முகையே ரிலங்கெயிற் றின்னகை மாதர்
தகையாற் றலைக்கொண்ட நெஞ்சு;

௩௦ அழன்மன்ற காம வருநோய் நிழன்மன்ற
நேரிழை யீக்கவிம் மா;

ஆங்கதை;

௩௧ அறிந்தனி ராயிற் சான்றவிர் தான்றவ
மொரீஇத் துறக்கத்தின் வழீஇ யான்றோ
ருள்ளிடப் பட்ட வரசனைப் பெயர்த்தவ
ருயர்நிலை யுலக முறீஇ யாங்கென்
றுயர்நிலை தீர்த்த னுந்தலைக் கடனே.

**இது மடலேறுகின்ற தலைவன் சான்றேர்க்குக் கூறியது.**

**இதன் பொருள்.**

(௧)சான்றவிர் வாழியோ சான்றவிரென்றும்
(௨)பிறர்நோயுந் தந்நோய்போற் போற்றி (௩)யறனறிதல்
சான்றவர்க் கெல்லாங் கடனா (௪)லிவ்விருந்த
சான்றீர் நுமக்கொன் றறிவுறுப்பென் மான்ற
துளியிடை (௫)மின்னுப்போற் றோன்றி யொருத்தி
யொளியோ டுருவென்னைக் காட்டி யளியளென்
னெஞ்சாறு கொண்டா ளதற்கொண்டுந் துஞ்சே
னணியலங் காவிரைப் பூவோ டெருக்கின்
பிணையலங் கண்ணி மிலைந்து (௬)மணியார்ப்ப
வோங்கிரும் பெண்ணை மடலூர்ந்தென் னெவ்வநோய்
தாங்குத றேற்றா விடும்பைக் குயிர்ப்பாக
வீங்கிழை மாதர் திறத்தொன்று நீங்காது
(௭)பாடுவேன் பாய்மா நிறுத்து

எ - து: நற்குணங்கள் எல்லாம் அமைந்தீர்! நற்குணங்களெல்லாம் அமைந்தீர்! நீர் வாழ்வீராக! பிறருடைய நோயும் தம்முடைய நோய்போலே எந்நாளும் பேணி அதனாற் பெறும் அறனை அறிந்து போதுதல் உலகத்துள்ள சான்றவர்க்கெல்லாம் * முறைமையாதலால், நுமக்கும் அது முறைமையென்று கருதி நுமக்கொரு காரியத்தினைக் கூறுவேன்; அஃதியாதெனின், ஒருத்தி

---

௧. "சான்றவிர் வாழியோ சான்றவிரென்னும்" என்பது கண்டோர் கேட்பாராகத் தலைமகன் கூற்று நிகழ்ந்ததற்கு மேற்கோள்; தொல். செய். சூ. ௧௩௪. பேர்; நச்.

௨. "அறிவினா னாகுவ துண்டோ பிறிதினோய், தந்நோய்போற் போற்றாக் கடை" குறள். ௩௧௫.

௩. "தோன்றிமாய்ந் துலக மூன்றிற் றுயரெய்து முயிர்க டம்மை, யீன்ற தாய் போல வோம்பி யின்பத்து ளிருத்தி நாதன், மூன்றுலகிற்கு மாக்கி முடிவிலாத் தன்மை நல்கு, மான்றநல் லறத்தைப்போலு மரிய தொன் றில்லை கண்டாய்"

௪. "அவ்வெதிர்" (கலி. ௧௦: ௧௩) என்பதும் அதன் குறிப்பும் ஈண்டு அறிதற்பாலன.

௫. கலி. ௬௯-அ: ௫ - ௧௧ - ஆம் அடிகள் ஒப்புநோக்குக.
௬. "பனைபடு கலிமாப், பூண்மணி கறங்க வேறி" குறுந். ௧௭௩.
௭. இந்நூற்பக்கம் அடிகு: உ-ஆம் குறிப்பில் (இ) முதலியவை பார்க்க.
(பிரதிபேதம்) * முறைமையானும்.

## ஐந்தாவது நெய்தல் ௨௨. அசுடு

மயங்கினமழைக்கு நடுவில் மின்போலே வந்துதோன்றித் தன்னொளியோடே தன்னுருவையும் என்னைக் காணப்பண்ணி என்னை அளிக்குந்தன்மையளாய் அளித்துப் *பின்னர் என்னெஞ்சைத் தான் வரும்வழியாகக்கொண்டுவிட்டாள்; அதனை முதலாகக்கொண்டு துயில்கொள்ளேனாய் அசைகின்ற அழகினை யுடைய (௧)ஆவிரையினது பூவோடே எருக்கினது கட்டுதலையுடைய அழகினை யுடைய கண்ணியையுஞ் சூடி ஒளருங் கரிய பனைமடலாற் செய்த குதிரையை மணிகள் ஆரவாரிப்ப ஏறி அப்பாய்மாவை (௨)மனத்தே நிறுத்தி யான் நீங்காம னின்று வருத்தத்தைத் தருகின்ற என் காமநோயைத் தாங்கமாட்டாமையால் உண்டான †மனவருத்தத்திற்கு இளைப்பாறுதலாக இறுகின பூணினையுடைய மாதர் என்னை வருத்தின கூற்றிலே ஒருகூற்றினைப் (௩) பாடுவேன்; அதனை இவ்விடத்திருந்த சான்றீர் ! கேளுமென்றான். எ - று.

பலராதலிற் சான்றீர் சான்றீரென்றான். ஈர் என்று விளியேலாது (௪) குறுகிநின்றது. ஓ, அசை. பின்பு சான்றீர் என்றது தான் பின்பு கூறுகின்ற தற்கு எதிர்முகமாக. ‡கொண்டும் என்னும் உம்மை இசைநிறை. ‖ "ஒருத்தி யொளியோடொரு ..........துஞ்சேன்" என்றது (௫)தன்கட்டோன்றிய அசைவு பற்றி அவலம் பிறந்தது.

௧௭ (௬)யாமத்து மெல்லையு மெவ்வத் திரையலைப்ப
(௭) ÷மாமேலே னென்று மடல்புணையா நீந்துவேன்

---

௧. இந்நூற்பக்கம் அடிகு: ௭-ஆம் குறிப்புப் பார்க்க.
௨. (அ) "மன்றத்து மடலேறி, நிறக்குவென் போல்வல்யா னீடு பழியே" கலி. ௫௮: ௨௨ - ௨௩. (ஆ) "மடற் கலிமா மன்றத் தேறித்தன், னணி நலம் பாடிது மரியாள்" தண். என்பவற்றை நோக்க, 'மனத்தே' என்பது 'மன்றத்தே'என்று இருக்கவேண்டியதென்று தோற்றுகிறது.

௩. இந்நூற்பக்கம் அதிஅ: ௩ - ஆம் குறிப்பில் (ஆ) முதலியவை பார்க்க.
௪. 'அர்' ஈராய் விளியேற்கும்; தொல். விளி. சூ. ௨௧.
௫. இச்செய்யுட்கே "துனிபிடை மின்னுப்போற் றோன்றி யொருத்தி... ......துஞ்சேன்" என்னும் அடிகள் மேற்கோள்; தொல். மெய்ப். சூ. ௫; நச்; இ - வி. சூ. ௫௭௮.
௬. "யாமத்து மெல்லையும்" என்னும் பகுதி (தொல். அகத். சூ. ௫௪. நச்) சுட்டி ஒருவர்பெயர்கொள்ளாப் பெருந்திணைக்கும் "காம மேதகர் வார் தம காதலரல், யாம மும்பக லும்மறி யாமையால்" (சீவக. ௩௯௫.) என்புழி யாமம் இரவென்னும் பொருளில் வருமென்பதற்கும் மேற்.
௭. "மாமேலேனென்று.........பட்டு" என வருதலின் இச்செய்யுள் எதியமடற்றிறமான பெருந்திணையென்பர் நச்சினார்க்கினியர்; தொல்.
(பிரதிபேதம்) * பின்னர் கெஞ்சு, † மனம் வருந்த, ‡ கொண்டும்: உம்மை, || ஒத்தி, + மாமேவி நின்று.

**109**



தேமொழி மாத ருறாஅது றீஇய
(௧)காமக் கடலகப் பட்டு

எ - து: தேன்போலும் மொழியினையுடைய மாதர் *தான் காமுறுதே என்னைக்காமுறுத்தின காமமாகிய கடலிலே அகப்பட்டு (௨)உசாத்துணை இல்லாத நவியாமத்தும் உசாத்துணையுள்ள பகலிடத்தும் † மனவருந்த மாகிய திரைகள் வந்து அலைக்கையினாலே மாவின்மேல் இருக்கின்றேனிருக்கின்றே னென்று மனத்தாற்கருதியிருந்து அம்(௩)மடன்மாவொருதெப்பமாக அக்கடலை நீந்துவேன்; அஃது என்னிலே; என்றான். எ - று.

௧அ (௪)உய்யா வருநோய்க் ‡துபலாகு மைய
லுறீஇயா ளீத்தவிம் மா

எ - து: என்னை மயக்கமுறுத்தினவள் அதற்கு மருந்தாகத் தந்த இம் மடன்மா யான் பிழையாமைக்குக் காரணமான அரிய காமநோய்க்குப் பிழைக்

கும்படிக்குச் செய்வதொன்றாய் இராநின்றதென்றான். எ - று.

(ரு)காஹூந ரெள்ளக் ||கலங்கித் தலைவந்தெ
ருமொழின் முற்றி யுடைத்துள் ளழித்தரு

---

அகத். ரு. கூ, ரு. ௯௪. இ - வி நூலாரும் இச்செய்யுளை அதற்கே மேற்கோள் காட்டினர்; இ - வி. ரு. ௯௪௪.

க. (அ) "காமக் கடல்" (ஆ) "காமக் கடும்புனல்" குறள். ௧௧௬௪. ௧௧௬௭.

உ. (அ) "மன்னுயி ரெல்லாந் துயிற்றி யளித்திரா, வென்னல்ல தில்லை துணை" குறள். ௧௧௬௮. என்பதும் (ஆ) "மடலூர்தல் யாமத்து முள்ளுவேன் மன்ற" குறள். ௧௧௩௬. என்பதற்கு, 'எல்லாருந் துயிலும் இடையாமத்தும் யானிருந்து மடலூர்தலையே கருதா நிற்பேன்' என்று பரிமேலழகர் எழுதியிருக்கும்உரையும் ஈண்டு அறிதற்பாலன.

௩. (அ) "துறைசையன்னார், கணையயர் விழிதந்த காமக் கடலைக் கடக்க நெஞ்சே, புணையாகக் கோடன் மடலன்றி வேறு பொருளில்லையே" திருவாவடுதுறைக். ௧௧அ. (ஆ) "அடலான வேல்விழி யார்தை கொடாவிடி லாசைநெடுங், கடலானசோகச் சுழிபடகப்பட்ட காமுகர்தா, மடலான தோணிகொண் டேநீந்திச் சேர்வர் மணக்கரைக்கே" மாறன். ௬௨௫.

௪. (அ) "என்னு ளிடும்பை தணிக்கு மருந்தாக, நன்னுத லீத்த விம்மா" கலி. ௬௪௦: ௯ - ௧௦. (ஆ) "உயலாற்று, வுய்விளேய்" குறள். ௧௧௭௪.

௫. (அ) "பிற ரென்னத் தோன்றி, யொருநாண் மருங்கிற், பெருநாணிக்கித், தெருவி னியலவுந் தருவது கொல்லோ" குறுந். ௧௮௨. (ஆ) "பல்லார்கக் கெள்ளப் படுமடன் மாவேறி" கலி. ௧௪: ௨௨.

(பிரதிபேதம்) * தாங் காமுறுதே, † மனம் வருந்த ‡ உயவாகும், || கலக்கத்.

ஐந்தாவது நெய்தல் ௨௨. அகூஎ

மாணிழை மாதரா ளேஎரெனக் காமனை

*தாணையால் வந்த படை

எ - து: மாட்சிமைப்பட்ட இழையினையுடைய மாதரான் ஏரால் வந்த வருத்தமென்று யான் கூறும்படியாகக்(க)காமனுடைய ஏவலாலே வந்த காம

நோயாகிய படை என்னைக் கண்டார் இகழும்படி யான்கலங்க என்னிடத்தே வந்து என்னுடைய(உ)ஆண்டன்மையின் அழகாகிய மதிலைச் சூழவிட்டிருந்து புறத்தையெல்லாமுடைத்துப் பின்னர் உள்வாயை அழியா †நிற்குமென்றான். எ - று.

கலங்கி, கலங்க என்க.

உச (ங.)காமக் கடும்பகையிற் ‡றோன்றினேற் கேம
மெழினுத வீந்ததிம் மா

எ - து: காமமாகிய கடியபகை ஆண்மையை உள்ளும்புறமும் அழித்த வாலே இங்ஙனம் வடிவுகொண்டு தோன்றினஎனக்கு அழகையுடைத்தாகிய நுதலினையுடையாள் தந்த இம்மடன்மா, பரிகாரமாயிற்றென்றான். எ - று.

உரு அகையெரி யானுதென் னு(ச)ருயி ரெஞ்சும்
||வகையினு னுள்ளஞ் சுடுதரு மன்னோ
முகையே யிலங்கெயிற் றின்னகை மாதர்
தகையாற் றலைக்கொண்ட ÷நெஞ்சு

எ - து: முல்லைமுகையை ஒக்கும் இலங்குகின்ற எயிற்றையும் இனிய தாகிய மகிழ்ச்சியையுமுடைய மாதருடைய அழகாலே அவளிடத்தைப்பற்றிக்

---

க. (அ) "பீழைமை பலவுஞ் செய்து பிணிப்படை பரப்பி வந்து, வாழுயிர்ப் பொழித்து வவ்வி வலித்துயிர் வாங்கி புண்ணும், கூழைமை பயின்ற கூற்ற வரசனை" (சூளா. துறவு. கஅ) என்பதும் (ஆ) "காலனைச் சூழ்ந்த நோய்போ னபுலமா விபுலர் சூழ" (சீவக. ககசச) என்ப தற்கு, 'காலன் வினைவிடத்தே சேறற்கு அவனைச் சூழ்ந்த நோய் போல மாவின்மேலே நபுல விபுலர் சூழ்ந்துவர' என்றெழுதியிருக்கும் உரையும் இதன் நிழலாக இருக்கின்றன.

உ. (அ)"நாணொடுநல்லாண்மைபண்டுடையே னின் றுடையேன், காமுற்று ரேறு மடல்" (ஆ) "காமக் கடும்புன லுய்க்குமே நாணொடு, நல்லாண் மை யென்னும் புணை" குறள். ககங௩. ககௌ.

ங. "காம முழந்து வருந்தினார்க் கேம, மடலல்ல தில்லை வலி" குறள். ககங௧.

ச. "உயிரெஞ்சு துயர்செய்தல்" கலி. கo: ௧.

(பிரதிபேதம்) * துணையான். † நிற்குமேயென்றான். ‡ தோன்றினோர்க்கு. || வகையினன். + நோய்.



கொண்ட என்னுடைய நெஞ்சிடத்து உள்ளீதைச் சுடப்பட்டு எரிகின்ற காமத்தீ என் அரிய உயிர்போங் கூற்றாலே அமையாதே நின்று (௧)சுடுதலைச் செய்யும்; ஐயோ! யான் எவ்வனம் ஆற்றவேனென்றான். எ - று.

(௨)உறப்புடையதுபோலே நெஞ்சுக்கு உள்ளமுண்டென்றான்.

௩௦ அழன்மன்ற காம வருநோய் நிழன்மன்ற

நேரிழை யீத்தவிம் மா

எ - து: காமமாகிய பொறுத்தற்கரியநோய் அறுதியாக நெருப்பு; ஒத்த இழையினையுடையாள் அதற்குப் பரிகாரமாகத்தந்த இம்மடன்மா அறுதியாக அதற்கொரு நிழலாய்இருந்ததென்றான். எ - று.

ஆங்கதை

௩௧ அறிந்தனி ராயிற் சான்றவிர் (௩)*தான்றவ

மொரீஇத் துறக்கத்தின் வழீஇ யான்றோ

ருள்ளிடப் பட்ட வரசனைப் பெயர்த்தவ

௧. "ஊர்தலைக்கொண்டு............காமத்தீ, நீருட் புகினுஞ் சுடும்" (கலி. ௧௪௪: ௫௧ - ௬௨) என்பதும் அதன் குறிப்புள் இவ்விடத்துக்குப் பொருத்துவனவும் ஒப்புநோக்கற்பாலன.

௨. தோல். பொருளி. சூ. ௨.

௩. இந்திரன், விண்ணுலகில் தன்பால் வந்த யயாதியரசனை நோக்கிப் பலவும்வினவுங்கால், 'தவத்தில் நீ யாருக்கு ஒப்பாயினை' என்றதற்கு அவன், 'தவத்தில் எனக்கு ஒப்பானொருவனையும் நான் காணவில்லை' என, இந்திரன், 'பிறரை அவர் பெருமையை அறியாமலே அவமதித்த இத்தவற்றால் நீ மேலுலக வாழ்வொழியக் கீழே விழுவாய்' என, 'அவ்வாறாயின் நல்லோரிடையே விழவேண்டுகிறேன்' என்று அவ்

விச்திரன்பால் அவ்வரம்பெற்று விழுமாசன் சிலர் வேள்விசெய்யு மிடத்துச்கு நேரே இறக்குகையில் அங்கிருந்த அஷ்டகன் மிகப் பல செய்திவினவ, அவற்றுக்குவிடைகள்கூறிக் கீழேவீழ விரைந்தபோது, அவனும் பிரதர்த்தனனும் வஸுமனஸும் சிபியும் தமக்கு மேலுலக முண்டென்று கேட்டறிந்து அவ்வுலகங்களை யயாதிக்குக் கொடுப்ப, அவன் கொள்ளேனெனமறுத்துப் பின்பு அங்குவந்த தவமகளை அவன் கூற்றால் தன்மகள் மாதவியென்றும் அவர்களை அவள்பெற்ற பிள்ளைக ளென்றும் தெளிந்து அவள் கூறிய நியாயத்தால் அவளும் அக்காலவர் களும்அளித்த தவப்பயனைமாற்றவொண்ணாதெனற்று, மேலுலகினின்று அங்குவந்த ஐந்து பொற்றேர்களில் தனித்தனியே அக்காலவர்க ளுடன்ஏறி மேலுலகடைந்தனனென்று ஸ்ரீமஹாபாரதம். ஆதிபர்வம். பிரதிபேதம்) * தான்றய மொழிஇ.

## ஐந்தாவது நெய்தல் உ௯. அ௩௯

(க)ருயர்நிலை யுலக முதீஇ யாங்கென்

றுயர்நிலை *தீர்த்த னுந்தலைக் கடனே

எ - து: என்று கூறி என்னிடத்துச் செல்கின்ற வருத்தத்தை நீர் அறிந் தீராயிற் சான்றீராயுள்ளீர்! அமைந்த சான்றோர் இவன் தவஞ்செய்தற்கு உரியனென்று தவத்துள்ளே †கூட்டிக்கொள்ளப்பட்ட அரசனை, அவன் தான் தவஞ்செய்தலினீங்கித் துறக்கத்திற் சேறலை வழுவுகையினாலே, அவ்வழுவு தலை அவர் மீட்டுத், தவஞ் செய்வித்து, உயர்ந்த நிலைமையையுடைய சுவர்க் கத்தேபோகவிட்டுத் துயர் ‡தீர்ந்தாற்போல, (உ)என் துயரினதுதன்மையைப் போக்குதலும் நும்மிடத்து முறைமை; எனச் சான்றோரைநோக்கிக்கூறினன், எ - று.

இது தன்கட் டோன்றிய அசைவுபற்றி அவலம் பிறந்தது.

இது(௩)தரவும் போக்கும் ||பாட்டிடைமிடைந்த கலிவெண்பாட்டு. (உஉ)

(க௪௦.) கண்டவி ரெல்லாங் கதுமென வந்தாங்கே

பண்டறியா தீர்போல நோக்குவீர் கொண்டது

மாவென் றுணர்மின் மடலன்று மற்றிவை
பூவல்ல பூளை யுழிஞையோ டியாத்த
டு புனவரை யிட்ட வயங்குதார்ப் பீலி
பிடியமை நூலொடு பெய்ம்மணி கட்டி
யடர்பொன் னவிரேய்க்கு மாவிரங் கண்ணி
நெடியோன் மகனயந்து தந்தாங் கனைய
வடிய வடிந்த வனப்பினென் னெஞ்ச
கo மிடிய விடைக்கொள்ளுஞ் சாய லொருத்திக்
கடியுறை காட்டிய செல்வேன் மடியன்மி
னன்னே ரொருவனேன் யான்;

அo - அஎ-ஆம் அத்தியாயத்துள்ள செய்தி இம்மூலத்துக்கு ஒருவாறு பொருந்துமென்று தோற்றுகிறது.

க. (அ) "உயர்நிலை யுலகம்" மது. ககஎ. (ஆ) "உயர்நிலை யுலகத்து" புறம். ௫o: கடு.

உ. "சான்றோ ரிருந்த வவையத் துற்றோ, னாசாகென்னும் பூசல்போல, வல்லே களைமதி யத்தை" புறம். உகக: அ - கo.

ரு. தரவும் போக்கும் பாட்டிடைமிடைந்த கலிவெண்பாட்டு ஆசிரியச் சுரிதகத்தான் வந்ததற்கு இச்செய்யுள் மேற்கோள்; தொல். செய். சூ. கருச. பேர்; நச்.

(பிரதிபேதம்) *நீர்த்தலுந்தவே, †கடிக்கொள், ‡நீர்த்தாப்போல. ||பாட்டிமிடைமிடைந்த.

அஎo கலித்தொகை கசo.

கஉ என்னுளும், பாடெனிற் பாடவும் வல்லேன் சிறிதாங்கே
யாடெனி லாடலு மாற்றுகேன் பாடுகோ
வென்னு ளிடும்பை தணிக்கு மருந்தாக
நன்னுத லீத்தவிம் மா;
கஎ திங்க ளரவுறிற் றீர்க்கலா ராயினுந்
தங்காதல் காட்டுவர் சான்றவ ரின்சாய

லொண்டொடி நோய்நோக்கிற் பட்டவென் னெஞ்சநோய்
கண்டுங்கண் ணோடாதிவ் வூர்;
உக தாங்காச் சினத்தொடு காட்டி யுயிர்செகுக்கும்
பாம்பு மவைப்படி னுய்யுமாம் பூங்கண்
வணர்ந்தொலி யைம்பாலாள் செய்தவிக் காம
முணர்ந்து முணராதிவ் வூர்;
உ0 வெஞ்சுழிப் பட்ட மகற்குக் கரைநின்று
ரஞ்சலென் றாலு முயிர்ப்புண்டா மஞ்சீர்ச்
செறிந்தேர் முறுவலாள் செய்தவிக் காம
மறிந்து மறியாதிவ் வூர்;
ஆங்க;
ரு0 என்க ணிடும்பை யறீஇயினெ னுங்கட்
டெருளுற நோக்கித் தெரியுங்கா லின்ன
மருளுறு நோயொடு மம்ம ரகல
விருளுறு கூந்தலா ளென்னை
யருளுறச் செயினுமக் கறனுமா ரதுவே.
(க)இது மடலேறுவேனென்ற தலைவன் கண்டார்க்குக் கூறியது.
இதன் பொருள்.
(உ)*கண்டவி ரெல்லாங் †கதுமென வந்தாங்கே
பண்டறியா தீர்போல ‡நோக்குவீர் கொண்டது

---

க. இச்செய்யுளையும் ஏறிய மடற்றிறமான பெருந்திணையென்று (தொல். அகத். சூ. கக. உரையில்) இவர் கூறியிருக்கிறார்.

உ. "கண்டவிரெல்லாம்............நோக்குவீர்" என்பது எல்லாமென்னுஞ் சொல் சிறுபான்மை முன்னிலைப் பன்மைக்கண் வருமென்பதற்கு மேற்கோள்; தொல். பெயரி. சூ. கக. இ - வி. சூ. ககக.

(பிரதிபேதம்) * கண்டனிர், † கதுமெனவாங்கே, ‡ நோக்குநிர்

(௧)மாவென் றுணர்மின், மடலன்று மற்றிவை
பூவல்ல (௨)பூளை யுழிஞையோ டியாத்த
புனவரை யிட்ட வயங்குதார்ப் பீலி
பிடியமை நூலொடு பெய்ம்மணி கட்டி
யடர்பொன் னவிரேய்க்கு மாவிரங் கண்ணி
(௩)நெடியோன் மக*னயந்து தந்தாங் கனைய
வடிய வடிந்த வனப்பினென் னெஞ்ச
மிடிய †விடைக்கொள்ளுஞ் சாய லொருத்திக்
(௪)கடியுறை காட்டிய செல்வேன் மடியன்மி
னன்னே னொருவனேன் யான்

எ - து: என்னைக்கண்ட நீங்களெல்லாம் (ரு) கதுமெனவந்து அவ்வூரிடத்து என்னைப் பண்டு அறியாதீர்போலப் பாராநின்றீர்; காப்பெய்தமணியைக்கழுத்திலே கட்டிக் கையாற் பிடித்தலமைந்த வாய்க்கயிற்றோடே யான் கையிற் கொண்டது மடன்மாவன்று, ஏறுவார் ஏறப்படுங் குதிரையென்றும் பின்னைத் தலையினும் மார்பினுங் கிடக்கின்ற இவை தகடாகிய பொன்னினது விளக்கத்தையொக்கும் ஆவிரம்பூவாற்செய்த கண்ணியும்(சு) உழிஞைப் பூவோடே

---

௧. (அ) "மாவென மடலு மூர்ப" குறுந். ௧௭. (ஆ) "மாவென் றுரைத்து மடலேறுப மன்று தோறும்" வளையாபதி.

௨. இந்நூற்பக்கம் ௮௫: ௭-ஆம் குறிப்புப் பார்க்க.

௩. (அ) "மதனற்குமெழுத வொண்ணாச், சிதையைத் தருதலாலே" (ஆ) "இந்தத் தோன்றலை,யெழுதலாங்கொலிம் மன்மதனுமென்றான்" கம்ப. மிதிலைக்காட்சி. ௫. உலாவியல். ௨௫. என்பவற்றால் காமன், துவியத்துறை கைபோயவனெனப்படுதலும் இங்கே நோக்கற்பாலது.

௪. "அடியுறை" கலி. ௫௪: ௪. அதன் குறிப்பும் பார்க்க.

௫. (அ) "கதுமெனக் கண்டவர்க்கு" (ஆ) "கதுமென நோக்கன்மின்" கலி. ௧௦: ௫, ௧௪௭: ௧௭. (இ) "கதுமெனத் தானோக்கி" குறள். ௧௧௭௩. (ஈ) இந்நூற்பக்கம் ௪௨௨: ௭-ஆம் குறிப்பும்பார்க்க.

௪. (அ) 'உழிஞை - சொற்றூன்; அது குடநாட்டார் வழக்கு' என்பது புறம். ௫௦. விசேடவுரை. (ஆ) இது கொடியை யுடையதென்று "நெடுங்கொடி யுழிஞைப் பவரொடு" (புறம். ௭௪: ௫, ௭௭: ௩) என்ப தனுல் தெரிகிறது. (இ) இதன் பூ மதில்வளைப்பவருக் குரித்தென்று சிலரும் (ஈ) அவருக்கும் மதில் காப்பவருக்கு முரித்தென்று சிலரும் கூறுவர்; (உ) இது பூளையின்வகையு ளொன்றென்றும் கூறப்படும்.

(பிரதிபேதம்) * வயங் குகைந்தாக்கு, † இடைகொள்ளும்.



பூளைப்பூவும் புனத்தையுடைய மலையிலே மயிலுதிர்த்த பீலியும் விளங்குகின்ற [தனமல்ல,] (தாமல்ல) என் மனத்தாலே நன்றென்று கருதி யான் கட்டின பூந்தாரென்றும் உணர்வீராக; திருமால் மகனாகிய காமன் என் தலைமையை அழித்தலை விரும்பிக்கொடுக்கப்பட்டுத் தன்மெய்யிடத்தே அத்தன்மையவாகிய நன்மைகளெல்லாந் தோன்றிய வனப்பாலும் சாயலாலும் வடுவகிரின்றன் மையையுடைய கண்களாலும் என்னெஞ்சாகிய அரண் இடித்துபோம்படி நடுவேவந்து என்னைக் கைக்கொள்ளும் ஒப்பில்லாதவளுக்கு யான் வழிபட்டு உறைதலை உலகத்தார்க்குக் காட்டவேண்டிச் செல்லா நின்றேன்; இதனைக் கண்டு நீர் மனத்தே வெறுத்துக் குவிந்திராதேகொள்ளும்; யான் அத்தன்மை யையுடையேன் ஒருவனென்றான். எ - று.

அன்னேனென்றது தான் இவ்வாறுதற்கு முன்செய்த தீவினையை. னல் ஆகுபெயர். தந்தென்பது "செலவினும் வரவினும்" என்னும் (க)சூத்திரப் பொதுவிதியான் ஈண்டுக் கொடுத்தலை உணர்த்திற்று. அனைய என்றது நெஞ்சறி சுட்டாய் நின்றது. வடிய என்றது வடுவகிரின் தன்மையையுடைய கண்களை உணர்த்திற்று. அடியிலே யுறைதல் வழிபாடென்னும் பொருடந்து நிற்றலின், அதனோடே ஒருத்திக்கு என்னும் நான்கனுருபு முடிந்தது.

௧௩. என்னுளும், (௨)பாடெனிற் பாடவும் வல்லேன் சிறுதாங்கே
பாடெனி லாடலு மாற்றுகேன் பாடுகோ
(௩)வென்னு ளிடும்பை தணிக்கு மருந்தாக
நன்னுத லீத்தவிம் மா

எ-து: நீ ஒன்றுபாடென்று கூறுவீராயில் எப்படியால் எப்படி†யாயினுஞ் சிறிது பாடவும் வல்லேன்; அம்மடன்மா மேலே இருந்து அஃது (௪)இடவாய் வலவாய் பெயரும்படி நின்மெய்யை(௫) அசைப்பாயென்பீராயின் அத்தொழிலை யான் ஆளுதலையும் வல்லேன்; இப்பொழுது என்னெஞ்சிடத்துக்காமநோயை யான் ஆற்றும் மருந்தாக நன்னுதல் தந்த இக்குதிரையினைப் பாடுவேனோ என்றான். எ - று.

அவர் பாடென்றமையின், மேல் தன்னை வருத்தினமையைக் கூறுகின்றான்.

---

௧. தொல். இளவி. ௯. ௨௮.
௨. இத்தூர்பக்கம் ௮௫௮: ௩-ஆம் குறிப்புப் பார்க்க.
௩. “உய்யா வருநோய்க் குயலாகு மைய, லுறீஇயா ளீத் . விம்மா” கலி. ௧௩௮: ௧௮ - ௧௯.
௪. ‘இடவாய் வலவாயாகிய இடத்தை’ புறம். ௪: ௭. உரை.
௫. “சங்கா ளுவ ரெருக்கண்ணித் தாடித் தனித்து நின்றே” என்று மடலேறுவார்க்கு ஆடுதலும் கூறப்படுதல் காண்க.

(பிரதிபேதம்) *பாடலும் வல்லேன், † ஆயினும்.

## நான்காவது முல்லை ௩.



*போக்கின வெள்ளிய கால்களையுடைய காரியாகிய ஏற்றினையும் மீன் பொலிவு பெற்று விளங்குதல்வரும் அந்திக்காலத்து மேகத்தையுடைய சிவந்த ஆகாயம்போலே அழகிய ஒளிபரந்த புள்ளிகள் வெள்ளையாயிருக்கின்ற சிவந்த ஏற்றையும் கொலைத்தொழிலையுடைய இறைவன் சூடிய இளையதாகிய திங்களைப்போல வளைந்து நிறைந்த கொம்பை அணிந்த சிவந்த ஏற்றையும் பொருகின்ற†மாறுபாட்டினையும் வலியினையுமுடைய கொண்டாகின்ற பிற ஏறுகள் பலவற்றையும் தொழுவினுள்ளே விடுகையினாலே ஒழுங்குபட்ட புகைசூழ்ந்த அத்தொழு, சிங்கமாகிய மாவும் குதிரையாகிய மாவும் களிறுகளும் (௧)முதலையிலொருசாதியாகிய கராமும் பெரிய மலையின் முழையிடத்திலே சேரத் திரளப்பட்டுப் பெய்கின்ற மழை ஒருங்குதிரியும் மலையிடத்தை யொக்கும். எ - று.

௨௨ தொழுவினுள், (௨)புரிபு புரிபு புக்க பொதுவரைத்
(௩)தெரிபு தெரிபு குத்தின வேறு

எ - து: அத்தொழுவினுள்ளே அவ்வேறுகளைத் தழுவுதற்கு விரும்பி விரும்பிக் குதித்த பொதுவரைத் தெரிந்து தெரிந்து அவ்வேறுகள் குத்தின. எ - று.

௨௪ எற்றின், (௪)அரிபரி பறுப்பன சுற்றி
யெரிதிகழ் கணிச்சிபோன் சூடிய பிறைக்க

---

வெற்ப" (கலி. ௪௩: ௩. ௨௫; ௪௮: ௧; ௫௩: ௧ - ௭.) என்பவற்றால் மலையை அருவி அழகுறுத்துவதாகக் கூறுதல் அறியப்படும்.

௧. (அ) "ஒலிகிளர் குட்டக் கருஞ்சுழி வழங்கும், கொலைத்தாண் முதலை யு மிடங்கருங் கராமும்" (குறிஞ்சி. ௨௫௪ - ௨௫௭.) என்பதனால், கராம் முதலைச்சாதி விசேடமென்பது அறியலாகும்.

௨. "எழுசீ ரடியே முடுகிய னடக்கும்" என்பதன் பின்னுள்ள 'முடுகியல் வரையார் முதலீ ரடிக்கும்' என்னும் (தொல். செய். ௧௧) சூத்திரத்தி னுரையில் முதலீரடிக்குமென்ற வும்மை எச்சவும்மை யாதலால், காற் சீரடியும் இத்துணைப் பயிலாது முடுகுமென்று கூறி, "புரிபு புரிபு புக்க பொதுவரைத், தெரிபு தெரிபு குத்தின வேறு" என்பதை மேற்கோள் காட்டுவர். பேர்.

௩. 'செய்பு' என்னும் வாய்பாட்டு வினையெச்சம் தன் வினைமுதல் வினை கொண்டு முடித்ததற்கு, "தெரிபுதெரிபு குத்தினவேறு" என்பது மேற் கோள்; நன்.வினை. சூ. ௨௫. மயிலை. விருத்தி: இரா. இ-வி. சூ. ௨௪௧.

௪. கலிப்பாவுறுப்பில் முதலடி முடுகியலாயும் முதலடியும் மூன்றுமடியும் முச்சீராயும் வந்ததற்கு, "அரிபரிபு..........குடர்வலந்தன" என்பது மேற்கோள்; தொல். செய். சூ. ௭௦. ௩௪.

(பிரதிபேதம்) * போக்கினவொள்ளிய. † மாறுபாட்டினையுமுடைய.





௧௭ (௧)திங்க ளரவுறிற் றீர்க்கலா ராயினுந்

தங்காதல் காட்டுவர் சான்றவ ரின்சாய
லொண்டொடி ௧நோய்நோக்கிற் பட்டவென் னெஞ்சநோய்
கண்டுங்கண் ணோடாதிவ் வூர்

எ - து: சான்றோர் திங்களைப் பாம்புசென்று மறைக்குங்கால் அதனை வருத்தத்தைத் தீர்க்கமாட்டாராயினும் அதன்மேல் தமக்குள்ள காதலைக் காட்டித் துன்புறுவர்; அதுபோல இனிய மென்மையினையுடைய ஒண்டொடியது (௨)நோய்செய்யும் நோக்கிலே அகப்பட்ட என்னுடைய நெஞ்சிடத்துக் காமநோயைக் கண்ணுற் கண்டுவைத்தும் இவ்வூரிலுள்ளார் அதனைத் தீர்க்க மாட்டாராயினும் (௩)கண்ணோட்டமாயினுஞ் செய்தலிலர். எ - று.

௨௯ தாங்காச் சினத்தொடு காட்டி (௪)யுயிர்செகுக்கும்
(௫)பாம்பு மவைப்படி னுய்யுமாம் பூங்கண்
(௬)வணர்ந்தொலி யைம்பாலாள் செய்தவிக் காம
முணர்ந்து முணராதிவ் வூர்

---

௧. (அ) "அங்கண்மதிய மரவின்வாய்ப் பட்டெனப், பூசல்வாயாப் புலம்பு மனைக் கலங்கி, யேதின்மாக்களு நோவர் தோழி, யொன்று நோவாரில்லைத், தெண்கடற் சேர்ப்ப னுண்டவென் னலக்கே" (தொல். அகத். சூ. ௩. நச். மேற்கோள்.) என்பதும் (ஆ)"அழலுடைக் கடவுளை யரவு சேர்ந்தென, விழவுடை முதூகர் விலாவிக் கின்றதே" (சீவக. ௧0௯௨.) என்பதும் ஒப்புநோக்கற்பாலன.

௨. "ஒருநோக்கு நோய்நோக்கு" குறள். ௧0௯௧.

௩. (அ) குறள். ௫௭௯ - ௫௭௭ - ஆம் செய்யுட்களும் (ஆ) "கண்ணுக் கணி கலங் கண்ணோட்டம்" திரிகடுகம். ௫௨. (இ) "தெற்றப் பகைவ ரிடர்ப்பாடு கண்டக்கால், மற்றுங்கண் ணோடுவர் மேன்மக்கள்" பழ. ௩௧௩. (ஈ) "கண்வனப்புக் கண்ணோட்டம்" சிறுபஞ்ச. ௩. (உ) "ஒன்று நாம்பெண்கோ வொன்றுத வென்பெண்கோ, வின்றசை தா னென்கோ யாதென்கோ - மென்றோடையாழ்ப், பண்ணோட்டு மின்

சொற் பணைத்தோளாய் சேர்கலர்பாற், கண்ணோட்டமில்லாத கண்"
(ஊ)"யாவர் வரினு மெதிரேற்குந் தெய்வமடப், பாவை யகத்திருத்தும் பாடின்றே-மேவினர்பாற்........கண்ணோட்டமில்லாதகண்" பாரதம்.
(எ) "கண்ணுக்குப் புனைமணிப்பூண் கண்ணோட்ட மென்பதெலாங் கருணையன்றோ" வில்லி. அருச்சுனன்றவ. சங. என்பவைகளும் இங்கே அறிதற்பாலன.

ச. "பரீஇ யுயிர்செகுக்கும் பாம்பொடும்" நாலடி. உஉ0.

இ. "சான்றோ, ரவைப்படிற் சாவாதாம் பாம்பு" பழ.௯௧.

(பிரதிபேதம்) * ஓர்கோச்சின்.



எ - து: பிறாற் றுங்கவொண்ணாத சினத்தோடே தன்வடிவைக்காட்டி அவருயிரைப்போக்கும் பாம்பும் பலரிடைப் பட்டாற் சாவாதென்றும்(க)உலக வழக்கிற்கேற்பச் சான்றோர் அவைப்படிற் பிழைக்கவுங்கூடும்; அத்தன்மையே னல்லாத எனக்குப் பூப்போலும் கண்ணையும் (உ)கடைகுழன்று தழைக்கின்ற ஐம்பாலினையுமுடையாள் செய்த இக்காமநோயின் வருத்தத்தை அறிந்து வைத்தும் இவ்வூரிலுள்ளார் தீர்ப்பதோர் உபாயம் அறிகின்றிலர். எ - று.

உ௦ வெஞ்சுழிப் பட்ட மகற்குக் கரைநின்று
ரஞ்சலென் றுனு முயிர்ப்புண்டா *மஞ்சீர்ச்
செறிந்தேர் முறுவலாள் செய்தவிக் காம
மறிந்து மறியாதிவ் வூர்

எ - து: கடிய (௩)நீர்ச்சுழியிலே அகப்பட்டானொருமகனுக்குக் கரையில் நின்றோர் † சென்றெடாமல் அஞ்சாதேகொள்ளென்று கரையிலே நின்று கூறினும் அவனுக்கு(ச)வருத்தந் தீருதலுளதாம்; அதுபோல, அழகிய சீரையுடைய செறிந்த அழகினையுடைத்தாகிய முறுவலையுடையாள் செய்த இக் காமநோயை அறிந்துவைத்தும் இவ்வூரிலுள்ளார் அதனைத் தீர்த்தலாற்றாராயினும் ஒரு தண்ணளி செய்தலையும் அறிகின்றிலர். எ - று.

ஆங்க; அசை.

௩0 என்க (௫)ணிமேம்பை ‡பதிஇயினெ னுங்கட்

பெருஞற நோக்கித் தெரியுங்கா ‖வின்ன
மருளுறு நோயொடு மம்ம ரகல

---

க. "பலரிடை விழுந்த பொல்லாப் பாம்புமா ருயிர்மா யாதென், நூலகவு ருவைக்கும் வார்த்தை யுண்மையே போலும்"

உ. (அ) "வணரொலி யைம்பாலார்" இன்ன. கடு; (ஆ) "வணரைம்பால்" (கலி. ருஅ: க) என்பதும் அதன் குறிப்பும் பார்க்க.

ங. "கயஞ்சரன் மறுகழி யழுந்தினவரக, முயங்கின னெடுத்த வண்ணலே" தமிழ்நெறி. மேற்கோள்.

ச. (அ) "உயிர்ப்பிடம் பெறூஅது" (பொருந.கககு) என்பதற்கு, 'இளைப்பாற இடம் பெறுதே' என்றும் (ஆ) "உயிர்ப்பாக" (கலி. கங.கு: கக) என்பதற்கு, 'இளைப்பாறுதலாக' என்றும் எழுதியிருக்குமுரைகள் நோக்கற்பாலன.

ரு. "ஆருயிர் யாதொன் றிடருறு மாங்கதற், கோருயிர் போல வுருகியுயக் கொன்ன, நேரி னதுமுடி யாதெனி னெஞ்சகத், தீரமுடைமை யருளி னியல்பே" துவா. துறவு. எல்.

(பிரதிபேதம்) * மென்சீர், இன்சீர். † சென்றடாமல். ‡ உரிஇயினேன், உரைஇயினேன், இன்றும்.

அரு

## ஐந்தாவது நெய்தல் உச.

(க) * விருளுறு கூந்தலா னென்னை
யருளுறச் செயினுமக் (உ) கறனுமா ரதுவே

எ-து: என்னிடத்து நிகழ்கின்றவருத்தத்தை யான் அறிவித்தேன்; இனி இதனை நும்மிடத்தே தெளிதலுறப் பார்த்து ஆராயுங்காலத்து இத்தன்மைத்தாகிய மயக்கமுறுங் காமநோயாலுண்டாகிய என்மயக்கம்நீங்கும்படி இருட்சியுறுகின்ற கூந்தலையுடையாள் என்னை அருளுதலுறும்படி பண்ணுவீராயின், அது நமக்கு அறனும் புகழுமாமென்றான். எ - று.

இது தன்கட் டோன்றிய அசைவுபற்றி அவலம் பிறந்தது.

(ங) இது பாடெனில் ஆடெனில் என எதுகையியைந்த அடி என்னும் என வேறு†நின்ற சீரோடே கூடி ஐஞ்சீரடிக்கிவந்த கலிவெண்பாட்டு. (உங)

க்குமிடை, + தனிர்க்குமெயன். × இனமுயிமேல்.



(க)சிலைவல்லான் போலுஞ் செறிவினு னல்ல
பலவல்லன் றோளாள் பவன்
கூக நினையு(உ)மென் னுள்ளம்போ னெடுங்கழி மலர்கூம்ப
வினையுமென்(ங)னெஞ்சம்போ லினங்காப்பார் குழறொன்றச்
சாயலென் (ச)கிளவிபோற் செவ்வழியா ழிசைநிறப்
போயவென் னொளிபோ லொருநிலையே பகன்மாயக்
(ரு)காலன்போல் வந்த கலக்கத்தோ டென்றலை
மாலையும் வந்தன் றினி
சஉ இருளொடு யானீங் குழப்ப வென்னின்றிப் பட்டா
யருளிலை வாழி சுடர்

---

க. (அ)"அரிவையை யரம்பை காண வணிந்தன னனங்க னன்றான்" (சீவக. கஎச) என்புழி, 'அனங்க னன்றான்' என்பதற்கு, 'இவளைத் தீண்டவும் வேட்கை கெழாமையின் அனங்க னன்றான் என்றார்' என்று விசேடவுரை கூறி, "சிலைவல்லான் போலுஞ் செறிவினான்" என்பதனைமேற்கோள்காட்டினர் இவ்வுரையாசிரியர். (ஆ)"வில்லாண் மையினால் வெண்கருப்பு வில்லோன்றனக்கே நிகரென்ன" வில்லி. நிரௌபதிமாலையிட்ட. சக. (இ) "வேயெனத் தகைய தோளி யிராகவன் மேனி நோக்கித், தீயெனக் கொடிய வீரச் சேவகச் செய்கை கண்டா; ளோயெனத் தகுதயன்றே காமனு நாமு மெல்லாம்" கம்ப. கும்ப. ௬0. (ஈ) "இருமலி கருப்புவென்றிச் சிலையினா லுலகமெல்லாம், பொருதுசெங் கோன டாக்கிப் புகழ்விளை யேக வீரன்" எனவும் (உ)"காமனும் விழையுங் காமர் காரிகைக், கலைபுணர் மகளிர்" பெருங். (க) சூ0: கஅங - கஅச. (ஊ) "காமனும்.........காமுறு மொப்பில் வனப்பினான்" திருவிளை. மாபாதகந். ங. எனவும் வருவன நோக்குக.
உ. "இம்மாலை, இருங்கழி மாமலர் கூம்ப வலோவென், னரும்படர்நெஞ்ச

மழிவொடு கூம்பும்" கலி. கஙo: கக - கங.

ங. "இம்மாலே, கோவலர் தீங்குழ லினைய வரோவென், பூவெழி லுண்கண் புலம்புகொண் டினையும்" கலி. கஙo: கச - கரு.

ச (அ) "செவ்வழியாழ் நரம்பன்ன கிளவியார்" கலி. ககஅ: கரு; (ஆ) "செவ்வழி நல்யா, ழிசையோர்த் தன்ன வின்றீங் கிளவி, யணங்குசா லரிவையை" அகம். உகஉ: க - அ.

ரு. "பிறைநுதி வெயிலுக, நாற்றிசையு நடுக்குறூஉ மடங்கற் காலைக், கூற்றூக் கதுபோலு முட்டுவரு கமாலை" (கலி. கஉ0: எ - க) என்பதும் அதன் குறிப்பும் பார்க்க.

கூoஉ கலித்தொகை கசங.

சச (க)தண்ணீர் ஞாலத்து ளெங்கேள்வ ரில்லாயின்
மாண்ட மனம்பெற்றார் மாசி றுறக்கத்து
வேண்டிய வேண்டியாங் கெய்துதல் வாயெனின்
யாண்டு முடையே னிசை

சஅ ஊரலர் தூற்றுமிவ் வுய்யா விழுமத்துப்
(உ)பீரலர் போலப் பெரிய பசந்தன
(ங)நீரலர் (ச)நீல மெனவவர்க் கன்றுநான்று
போரூர் செய்தவென் கண்

ருஉ (ரு)தன்னுயிர் போலத் தழீஇ *யுலகத்து
மன்னுயிர் காக்குமிம் மன்னறு †மென்கோலா
லின்னுயி ரன்னானைக் காட்டி யெனைத்தொன்று
மென்னுயிர் காவா தது
எனவாங்கு

---

க. "தண்ணீர் மிசை" கலி. ௧00: க.

உ. இந்நூற்பக்கம் உஎக: ரு, கூஉஉ: ங - ஆம் குறிப்புக்கள் இங்கே அறிதற்பாலன.

ங. "நீர்கால் யாத்த நிரையிதழ்க் குவளை, கோடை யெற்றினும் வாடா தாகும்" குறுந். ஙஅஅ.

௪. (அ) "நீலத் தலர்வென்ற வமருண்கண், .........வேலிற், பேஎத் தீ யினையயா லொத்தநோ சின்மொழி ..........கணைபிணு நோய் செய்தல் கடப்பன்றோ கனங்குழாய்" கலி. ௫௭: ௧-௧௫. (ஆ) "பூவொத் தலமருந் தகைய வேவொத் தெல்லாரு மறிய நோயசெய் தனவே" குறுந். ௭௨.

௫. (அ) "அறனிழ வெனக்கொண்டா யாய்குடையக் குடைப், புறநிழற்கீழ்ப் பட்டாளோ விவளிவட் காண்டிகா, பிறைநுதல் பசப்பூரப் பெருவிதுப் புற்றனை" கலி. ௯௯: அ - ௧0. என்பதும் (ஆ) அதன் குறிப்பும் (இ) "நின்று பல்லுயிர் காத்ததற்கு நேர்த்தடா, னென்றுணைக்குலமங்கையொ ரேர்திழை, தன்றுயர்க்குந் தகவிலெனுயினே, னென்று கன்றுறன் வலியென நாணுமால்" கம்ப. அயோமுகி. ௧௯. (ஈ) "தன்னுயிர்போல மன்னுயிர்க் கிரக்குந் தயவிலேனென்" மச்ச. பிரயாகையிற் பலசொரூப கதன. ௧௨.

(பிரதிபேதம்) * புலத்த, † என்சோலெம்முன் றுயிரென்.



போலே தோன்றுகின்றவன் பசுத்திரளையுடைய ஆயர்மகனல்லவோ? ஆதலால், இவன் இங்ஙனம் செலுத்துந் தொழிலை ஒழியான்; இளையோளே! இஃதொரு வலியைப் பாராய்; இவனொருத்தன் காவெனன்று காட்டினன்.

எ - து: காண்டற் றொழிலை யுடையவளே. எ-று.
இஃது "அளபெடை மிகூஉ மிகாவிறுபெயர்". (௧)
(௨)காற்றுப்போல் வந்த †கதழ்விடைக் காரியை
நூற்றுக் களத்தே யடங்கக்கொண் டட்டதன்
மேற்றோன்றி நின்ற பொதுவன் றகைகண்டை
(௩)யேற்றெருமை நெஞ்சம் வடிம்பி னிடாந்திட்டுச்

க. தொல். விளி. சூ. அ. இச்சூத்திர வுரையில் 'இவ்வளபெடைப் பெயர் விளியேற்கும்போது தன்னியல்பு மாத்திரையின் மிக்கு நான்கும் ஐந்தும் மாத்திரைபெற்று நிற்கும்; என்றது ழகர வீகாரத்தின் பின் இரண்டு இகரவுயிரும் மூன்று இகரவுயிரு மெழுதப்படவேண்டுமென் பதை' என்றகூறுவர், சே. கல். நச். இசசொல்லுக்குத் தொழில் செய் கின்றவனேயெனப் பொருளும் எழுதுவர் நச்சினர்க்கினியரும் இ-வி. உரையாசிரியரும். இ - வி சூ. உ0எ. இச்சூத்திரத்தினுரையும் மேற் கோளும் எழுதுவோராலும் அவற்றை ஊன்றிப்பாராது அச்சிடுவோரா லும் எளிதின் உண்மையறிய இயலாதவாறிருக்கின்றன. இச்சூத்திர வுரையில் "தொழீஇஎன்பது பெயர்; விளிப்பு மஃதே யெனக்கொள்க. இஃதியல்பு. இயற்கைய வென்று பண்மை கூறிய வதனன், இவ்வள பெடை மூன்று மாத்திரையின் நிமிர்ந்து நிற்கு மென்பது கொள்ளப் படும். செயற்கையவென்றதனன் இவ்வளபெடைப்பெயர் எழுதும்வழி ஐந்தெழுத்திட்டும் எழுதுப" என்பர் கல்லாடர். ஏனைய உரைகள் அச்சிடப் பட்டுள்ளன. "தொழீஇஇ" கலி. கO௪: ௩அ. "தொழீஇ புடனுண்ணூர்"சிறுபஞ்ச. ௩அ. என இச்சொல் பிறவிடத்து வருதலும் காண்க.

உ. "ஏற்று மருப்பு மிலங்கிழையாகத் திபமருப்பும், கூற்று மருப்பெழுங் கோலத்தக் காட்கொரு கோடிசுரும், பாற்று மருப்பொலி தாரண்ண லார்முன் னணிந்து விட்டார், காற்று நெருப்புங் கலந்த தென் னுவ ருஞ் சாரிகைத்தே" அம்பிகா. உ௫எ.

௩. (அ)எருமைச்சாதியின் ஆண் ஏறெனப்படுமென்பதற்கு "ஏற்றெருமை நெஞ்சம் வடிம்பி னிடக்திட்டு" என்பதுமேற்கோள்; தொல். மரபு. சூ. ௩க. பேர். சூ. ௩அ. நச். (ஆ) இந்நூர்பக்கம் கஉ௩: ௪-ஆங் குறிப்புப் பார்க்க.

(பிரதிபேதம்) * தொழீஇஇ, (என்பது முன்பதிப்பு), † கழுவிடை.

உ. இந்நூற்பக்கம் சகக: க-ஆம் குறிப்புப் பார்க்க.

ங. "காவிபோற் கண்ணிக்குங் கண்ணியக்தோட் காளைக்கு, மாவிபோ லாடையுமொன் றுனதே" நள கலிதொடர். அச.

(பிரதிபேதம்) * தென்னவர்த தெளித்த. † கூறியவர் கொண்டு. ‡ உலத்தின்கண்ணே. || பிறர்மகளிரை, ÷ என்று கூறினன். ✝ முயங்குவேமென்று. × செல்லை யன்றியவாகள; செல்லையென்றவர்கள், ∴ கண்டு ♯ சிறுமிடத்து.



*அஃது என்னெனில் ♯ அக்காலத்து அவனை †மிகச்சிறில் யான் இறக்கும்படி நேரும் ‡ என்றுங் கூறினன்; அங்ஙனம் கூறின அளவிலே ஞாயிறு படுகின்ற மையைக் கண்டு பிரிந்தார்க்கு வருத்தந்தரும்படியாக மாந்தளிர்போலும் நிறத் தைக்கொண்ட மாலைக்குமுன்னாகிய இக்காலத்தே இவ்வூரின் மகளிர் தாம் (க)தளிர்விரவின மாலைகளைச் சூடி ஆடவர்மேல் தாம் வைத்த நலத்தைப் பாடி இன்புறவர்கள்; அவர்களைப்போல ஆச்சாமரத்தளிர்க்குங் காட்டிடைச்சென்ற வர் || மீண்டுவரின் யாம் மனமகிழுவோம்; அதனாற்பெற்றதென் ? அவர்வரக் கண்டிலேம் என்றுங் கூறினன் ; கூறி, யாம் தளிர்க்குமாறு எங்ஙனே என்பீ ராயின், என்றோளைத் தொழில் கொள்கின்ற அவன் செய்தற் பூவைப் புறவித ழொடித்து மாலை கட்டிச் சூடவும் வல்லன்; |மெடிதாகிய மென்றோளிலே காமன்சிலையாகிய எழுதகரும்பைஎழுதவும்வல்லன்; இளமுலைமேல் தொய்யிற் குழம்பாற் கொடி எழுதவும்வல்லன்; இவையொழிந்து நீங்கியிருந்து மனம் வேட்கையடக்கியிருக்குமிடத்துத் தன்மையில் வில்லைத் தொழில்கொள்ள வல்ல காமனை ஒக்கும்; அதுவன்றி, வேட்கை நிகழ்ந்து கூடுங்காலத்து ஆண்டு நிகழ்த்தும் நல்ல தொழில்கள் பலவற்றையும் வல்லன்; இவ்வாற்றான் என் மனம் தளிர்க்குமென்றுகூறினன் ; அங்ஙனங் கூறின அளவிலே மாலைக் காலம் வருகின்றதனைக் கண்டு அவனை நினையும் என்னுள்ளங் குவியுமாறு போல நெடிய கழியின் மலர்கள் குவிய, இரங்கும் என்னெஞ்சுபோலே கோவலர் குழலோசைதோன்ற, அலைவுபெற்றஎன்மொழிகள்போல(உ)வண்டு களின்(ங)செவ்வழிப்பாட்டு அடங்க, கெட்டுப்போன என் அழகுபோலப் பகற்

---

க. (அ) "தாமரைக் கொழுமுறித் தாதுபடு செழு மலர்க், காமரு குவளைக் கழுநீர்மாமலர்ப், பைந்தளிர்ப்படலை" சிலப் சா:ங.க-சக.(ஆ)

"முறி மிடை படலை மாலை" சீவக. ௬அ௬, ௧அ௮௧. (இ) "பைந் தளிர்ப்படலை" பெருங்.(௧) ௨௭: ௧௬. (ஈ) "கொய்தளிர்த் தண்படலை" (உ) இது படலை மாலை எனவும் இலை மாலை எனவும் வழங்கும்.

௫. (அ) "செவ்வழிப் பண்ணிற் சிறைவண் டரற்றுந், தடந்தாழ் வயலொடு" சிலப். ௧௧: ௮௮-௮௯. (ஆ) "பறவைபாட் டடங்கினவே பகல்செய்வான் மறைந்தனனே,............துறந்தார்நாட் டென்றாங்கொன், மறவையா யென்னுயிர்மேல் வந்தவிம் மருண்மாலை" சிலப். ௭: ௪௨.

௬. (அ) "இருள்வரச், சீறியாழ் செவ்வழி பண்ணி" (ஆ) "மாலை மருதம் பண்ணிக் காலைக், கைவழி மருங்கிற் செவ்வழி பண்ணி, வரவெமர் மறந்தனர்" (புறம். ௧௪௯:௧-௨., ௧௪௧: ௨-௪) என்பவற்றால், செவ்வழிப் பண் மாலைக்குரித்தென்று கூறப்படுதலால் செவ்வழியா யிசைசிறப்ப வென்பதற்கு, யாழிற் செவ்வழிப்பண்ணை வாசிப்பவென்றலுமாம். இஃது இரங்கற்பண்ணாதலின், சாயவிளிக்கு உவமையாகக் கூறப்பட்டது;

(பிரதிபேதம்) * அதுவென்னெனில், † மிகச் சிறுமல் யானிறக்கும்படி ‡ என்று கூறினன், || மீண்டெயாரின் மணமகிழுவோம், அதனால்.

## ஐந்தாவது நெய்தல் ௨௧. ௧௦௩

காலத்தின் ஒளி மழுங்க, கலக்கத்தோடேவந்த காலனைப்போலே என்மேலே மாலைக் காலமும் வந்தது; இனி எங்ஙனம் ஆற்றுவேனென்று கூறினன்; கூறி, அம்மாலையை வரவிட்ட ஞாயிற்றை நோக்கி, சுடரே! யானென்பதொரு தன்மையின்றி யான் இவ்விடத்தே இராக் காலத்தாலே வருந்தும்படி நீ போனாய்; அருளுடையையல்லையாயிருந்தாய்; * இத்தன்மையால் நீவாழ்வாயாக என்று கூறினன்; கூறி, இவ்விரவால் இறந்துபட்டேனாயினும் நின்னின் றுயிருக்கதென்று கருதி, மிகுகின்ற நீரையுடைய உலகத்தின் உறைகின்ற கேள்வருளரல்லாராயின், (க) தங்கணவர்மேலுள்ள வேட்கையோடே இறந்து படும் மாட்சிமைப்பட்ட மனத்தைப்பெற்றவர்கள் குற்றமில்லாத சுவர்க்கத்தே சென்று அவர்கள் நுகர விரும்பியவற்றைத் தாம் விரும்பியபடியே பெறுதல் மெய்யென்று நூல்கள் கூறியவென்னின் யானும் அங்ஙனம் அவன்மேல்

விருப்பந்தோடே உயிர்போய் அவனைப் பெற்று எவ்விடத்தும் புகழுடையே ஞவேன்; இனி † வருத்தமின்று; என் றங்கூறினாள்; கூறி (உ) "முற்பகற் செய்தான் பிறன்கேடு தன்கேடு, பிற்பகற் கண்டு விடும்" என்றகூறிய பழமொழி உளதாகலின், அவ்வாறே நீரில் அலர்க்த நிலமென்று அவர் புகழ அவர்க்கு அக்காளிற் பெரியவருத்தத்தைச்செய்த 'என்கண்கள் இப்பொழுது பீலர் போலப் பெரியவாகப் பசந்தன; ‡ அதனையும் என் வருத்தத்தையுங் கண்டும் அருளின்மையின் அவனை எனக்குக் காட்டாமல் இவ்வூர் நின்று அலர் தூற்றா நிற்கும்; இனி இவ்(௩)வுய்யா விம்மையிடத்து உயிர்களைக் காத்தற்கு யான்

இஃது இரங்கற்பண்ணென்பது (இ) "வைபு னல்லியாழ் செவ்வழி பிறப்ப" அகம். ௩௧௪: ௧௨ என்பதனாலும் (ஈ) இக்குறிப்பில் முதலாவ தற்கு,'மாலைக்காலம் வந்தவளவிலே சிறிய யாழை இரங்கற்பண்ணாகிய செவ்வழியென்னும் பண்ணிலே வாசிக்கும் பரிசபண்ணி' என்று எழுதியிருக்கும் உரையாலும் அறியலாகும்.

௧. 'அறவன்றிப் புகழ்வேண்டியும் கணவனொடு செத்தார் சுவர்க்கம் புகுவரென்னும் உரைகேட்டு அதுவேட்கையானும் சாம்; அப்பரி சன்றி அன்பினானும் சாம்' என்பது இறை. சூ. ௧. உரை.

௨. (அ) "பிறர்க்கின்னா முற்பகற் செய்யிற் றமக்கின்னா, பிற்பகற் றாமே வரும்" குறள். ௩௧௯. (ஆ) "முற்பகற் செய்தான் பிறன்கேடு தன் கேடு, பிற்பகற் காண்குறூஉம் பெற்றியகாண்" சிலப். ௨௧: ௩-௪. (இ) "முற்பகற்செய்யிற் பிற்பகல் விளையும்"கொன்றைவேந்தன். (ஈ) "முற்பகற் செய்வினை பிற்பக லுறுநரின்" பெருங். (௧) ௫௧: ௨௫௧. (உ) "முற்பக லோராபழி முடிக்கின் மற்றது, பிற்பக றமக்குறும் பெற்றி யென்னவே" கந்த. இரண்டாநாட்சூர. ௩௧௫.

௩. உய்யா இம்மை - பிழையாமைக்குக் காரணமான துன்பம்; கலி. ௧௩௩:௧௮. கடக்க முடியாத துன்பம்; குறள். ௩௧௩. பரி. ஒழியாததுன் பம்; பு.வெ. உழிஞை. ௨௫. போக்க முடியாத துன்பம்; சிலப். ௭: அ.

(பிரதிபேதம்) * இத்தன்மையான நீ, † வருத்தமென்றென்றுங், ‡ இதனையும் வருத்தத்தையும்.

*அஃது என்னெனில் * அக்காலத்து அவனே †மிகச்சிறிதில் யான் இறக்கும்படி நேரும் ‡ என்றுங் கூறினள்; அங்ஙனங் கூறின அளவிலே ஞாயிறு படுகின்ற மையைக் கண்டு பிரிந்தார்க்கு வருத்தந்தரும்படியாக மாந்தளிர்போலும் நிறத்தைக்கொண்ட மாலைக்குமுன்னாகிய இக்காலத்தே இவ்வூரின் மகளிர் தாம் (க)தளிர்விரவின மாலைகளைச் சூடி ஆடவர்மேல் தாம் வைத்த நலத்தைப் பாடி இன்புறுவர்கள்; அவர்களைப்போல ஆச்சாமரத்தளிர்க்குங் காட்டிடைச்சென்றவர் ‖ மீண்டுவரின் யாம் மனமகிழுவோம்; அதனாற்பெற்றதென்? அவரைக் கண்டிலேம் என்றுங் கூறினள்; கூறி, யாம் தளிர்க்குமாறு எங்ஙனே என்பீராயின், என்றோளைத் தொழில் கொள்கின்ற அவன் செய்தற் பூவைப் புறவிதழொடித்து மாலை கட்டிச் சூடவும் வல்லன்; கொடிதாகிய மென்றோளிலே காமன்சிலையாகிய எழுதுகரும்பைஎழுதவும்வல்லன்; இளமுலைமேல் தொய்யிற் குழம்பாற் கொடி எழுதவும்வல்லன்; இவையொழிந்து நீங்கியிருந்து மனம் வேட்கையடக்கியிருக்குமிடத்துத் தன்கையில் வில்லைத் தொழில்கொள்ள வல்ல காமனை ஒக்கும்; அதுவன்றி, வேட்கை நிகழ்ந்து கூடுங்காலத்து ஆண்டு நிகழ்த்தும் நல்ல தொழில்கள் பலவற்றையும் வல்லன்; இவ்வாற்றான் என் மனந் தளிர்க்குமென்றுகூறினள்; அங்ஙனங் கூறின அளவிலே மாலைக் காலம் வருகின்றதனைக் கண்டு அவனை நினையும் என்னுள்ளங் குவியுமாறு போல நெடிய கழியின் மலர்கள் குவிய, இரங்கும் என்னெஞ்சுபோலே*

கோவலர் குழலோசைதோன்ற, அலைவுபெற்றஎன்மொழிகள்போல(உ)வண்டுகளின்(௩)செவ்வழிப்பாட்டு அடங்க, கெட்டுப்போன என் அழகுபோலப் பகற்

---

௧. (அ) "தாமரைக் கொழுமுறித் தாதுபடு செழுமலர்க், காமரு குவளைக் கழுநீர்மாமலர்ப், பைந்தளிர்ப்படலை" சிலப். ௪:௩௧-௩௪. (ஆ) "முறி யிடை படலை மாலை" சீவக. ௪௮௩, ௧௮௮௧. (இ) "பைந்தளிர்ப்படலை" பெருங்.(௩) உ௪: ௧௪. (ஈ) "கொய்தளிர்த் தண்படலை" (உ) இது படலை மாலை எனவும் இலை மாலை எனவும் வழங்கும்.

உ. (அ) "செவ்வழிப் பண்ணிற் சிறைவண்டரற்றுந், தடந்தாழ் வயலொடு" சிலப். ௧௧:௮௮-௮௯. (ஆ) "பறவைபாட் டடங்கினவே பகல்செய்வான்

மறைந்தனனே,............துறந்தார்நாட் டுளதாங்கொல், மறவையா யென்னுயிர்மேல் வந்தவிம் மருண்மாலை" சிலப். எ: சஉ.

க. (அ) "இருள்வரச், சீறியாழ் செவ்வழி பண்ணி" (ஆ) "மாலை மருதம் பண்ணிக் காலைக், கைவழி மருங்கிற் செவ்வழி பண்ணி, வரவெமர் மறந்தனர்" (புறம். கசஎ:க-உ., கசக: உ-ச) என்பவற்றால், செவ்வழிப் பண் மாலைக்குரித்தென்ற கூறப்படுதலால் செவ்வழியா ழிசைசிறப்ப வென்பதற்கு, யாழிற் செவ்வழிப்பண்ணை வாசிப்பவென்றலுமாம். இஃது இரங்கற்பண்ணாகலின், சாயலிவிக்கு உவமையாகக் கூறப்பட்டது;

(பிரதிபேதம்) * அதுவென்னெனில், † மிகச் சிறுமல் யானிறக்கும்படி, ‡ என்று கூறினுன், ‖ மீண்டேனின் மனமழிவோம், அதனல்.



காலத்தின் ஒளி மழுங்க, கலக்கத்தோடேவந்த காலைனப்போலே என்பெலே மாலைக் காலமும் வந்தது; இனி எங்ஙனம் ஆற்றுவேனென்ற கூறினுள்; கூறி, அம்மாலையை வரவிட்ட ஞாயிற்றை நோக்கி, சுடரே! யானென்ப தொரு தன்மையின்றி யான் இவ்விடத்தே இராக் காலத்தாலே வருந்தும்படி நீ போனாய்; அருளுடையையல்லையாயிருந்தாய்; * இத்தன்மையால் நீவாழ்வா யாக என்ற கூறினுள்; கூறி, இவ்விரவால் இறந்துபட்டேனாயினும் நின்னெ னுயிருந்ததென்ற கருதி, மிகுகின்ற நீரையுடைய உலகத்துள் உறைகின்ற கேள்வருளரல்லாராயின், (க)தங்கணவர்மேலுள்ள வேட்கையோடே இறந்து படும் மாட்சிமைப்பட்ட மனத்தைப்பெற்றவர்கள் குற்றமில்லாத சுவர்க்கத்தே சென்று அவர்கள் நுகர விரும்பியவற்றைத் தாம் விரும்பியபடியே பெறுதல் மெய்யென்று நூல்கள் கூறியவென்னின் யானும் அங்ஙனம் அவன்மேல் விருப்பத்தோடே உயிர்போய் அவனைப் பெற்று எவ்விடத்தும் புகழுடையே னாவேன்; இனி † வருத்தமின்று; என்றுகூறினுள்; கூறி (உ) "முற்பகற் செய் தான் பிறன்கேடு தன்கேடு, பிற்பகற் கண்டு விடும்" என்றகூறிய பழமொழி உளதாகலின், அவ்வாறே நீரில் அலர்ந்த நீலமென்ற அவர் புகழ அவர்க்கு

அங்காளிற் பெரியவருத்தத்தைச்செய்த 'என்கண்கள் இப்பொழுது பீரலர் போலப் பெரியவாகப் பசந்தன; ‡ அதனையும் என் வருத்தத்தையுங் கண்டும் அருளின்மையின் அவனை எனக்குக் காட்டாமல் இவ்வூர் நின்று அலர் தூற்று கிற்கும்; இனி இவ்(௩)வுய்யா விம்மையிடத்து உயிர்களைக் காத்தற்கு யான்

இஃது இரங்கற்பண்ணென்பது (இ) "பையு ணல்லியாழ் செவ்வழி பிறப்ப" அகம். ௩௧௪: ௧௨ என்பதனாலும் (ஈ) இக்குறிப்பில் முதலாவ தற்கு,'மாலைக்காலம் வந்தவாவிலே சிறிய யாழை இரங்கற்பண்ணுகிய செவ்வழியென்னும் பண்ணிலே வாசிக்கும் பரிசபண்ணி' என்று எழுதியிருக்கும் உரையாலும் அறியலாகும்.

௧. 'அதுவன்றிப் புகழ்வேண்டியும் கணவனொடு செத்தார் சுவர்க்கம் புகுவரென்னும் உரைகேட்டு அதுவேட்கையாலும் சாம்; அப்பரி சன்றி அன்பினாலும் சாம்' என்பது இறை. சூ. ௧. உரை.

௨. (அ) "பிறர்க்கின்னா முற்பகற் செய்யிற் றமக்கின்னா, பிற்பகற் றாமே வரும்" குறள். ௩௧௯. (ஆ) "முற்பகற் செய்தான் பிறன்கேடு தன் கேடு, பிற்பகற் காண்குறூஉம் பெற்றியகாண்" சிலப். ௨௧: ௩-௪. (இ) "முற்பகற்செய்யிற் பிற்பகல் விளையும்"கொன்றைவேந்தன். (ஈ) "முற்பகற் செய்வினை பிற்பக லுறுதலின்" பெருங். (௪) ௩௧: ௨௫௧. (உ) "முற்பக லோர்பழி முடிக்கின் மற்றது, பிற்பக றமக்குறும் பெற்றி யென்னவே" கந்த. இரண்டாநாட்சூர. ௩௧௫.

௩. உய்யா இம்மை - பிழையாமைக்குக் காரணமான துன்பம்; கலி. ௧௩௪:௧அ. கடக்க முடியாத துன்பம்; குறள். ௩௧௩. பரி. ஒழியாதுன் பம்; பு-வெ. உழிஞை. ௨௫. போக்க முடியாத துன்பம்; சிலப். ௭: அ.

(பிரதிபேதம்) * இத்தன்மையான நீ, † வருத்தமென்னென்றும். ‡ இதனையும் வருத்தத்தையும்.





அரசனே என்று கருதித் தன்னுயிரைப் பாதுகாக்குமாறு போல உலகத்துப் (௧)பெரிய உயிர்களெல்லாம் தழீஇப்பாதுகாக்கும் இம்மன்னனும் எனக்கினிய உயிரை ஒப்பானைக் காட்டி என்னுயிரைச் சிறிதொன்றுங் காவாதிருக்கின்ற தன்மை என்னபயனைக் கருதியோ'வென்றுங் கூறினளென்று கூறும்படியாக நிலைபெற்றகாமநோயாலே† அங்ஙனம் மயக்கங்கொண்ட மனத்தையுடையவள் பலமலைகளைக் ' கடந்துபோனவன் வரைவொடுவந்து பணித்து தன்னடியைச்

சேர்க்கையினாலே பாண்டியனை உறவாக அவன் மனத்தைத் தெளிவித்த தேயத்திலுள்ளவர் இன்பமுற்று வாழுமாறுபோல அவனால் இழந்த நலத்தை ‡இனிய அகமகிழ்ச்சியோடு எய்தினள்; இஃதென்னவியப்போவெனக் கண்டார் கொண்டு கூறிற்றாக உரைக்க. எ - று.

'சென்றசேட்பட்ட தென்னெஞ்சு' என்னுந் துணையும் கூறத்தகாதன கூறலின் மடனிறந்தவாறும் 'தெடுமென்றோள்' 'நிரலர் நீலம்' 'இளமுலை' என்பனவற்றான் மிகுதியிறந்தவாறும் 'வழிபட் டிரக்குவேன் வந்தேன்' என் (பதனால்)வருத்தமிறந்தவாறும் 'யாண்டுமுடையே னிசை' என்பதனால் வியவாமையின் மருட்கையிறந்தவாறும் உணர்க.

இது கண்டார்க்கு ||அவனாக்கங்கண்டு மருட்கை பிறந்தது.

செய்ததெறித்தல் முதலியன (உ)திருவினாற் காமக்குறிப்புப்பிறந்த ஒப்பு; இவை குடிப்பிறப்பினை அறிவித்துக் காமக் குறிப்பினை நிகழ்த்தலின்.

இஃது ஐஞ்சீரடுக்கிவந்த கலிவெண்பாட்டு. (உக)

(கசச.) "என்னுதால் காண்டை நினையா நெடிதுயிரா
வென்னுற்றாள் கொல்லோ விஃதொத்தி புன்மா
ணருகருந் தன்னுணுக் கைவிட் டிருதரும்
கண்ணீர் துடையாக் கவிழ்ந்து நிலனோக்கி
டு. யன்ன விடும்பை பலசெய்து தன்னை
யின்வுவார்க் கேதில சொல்லிக் கனவுபோற்
றெருளு மருளு மயங்கி வருபவள்
கூறுப கேளாமோ சென்று;

---

க. "பெரியத ளவி பெரிது" பழமொழி. க.

உ. "செய்ததெறிக்கவும்.............றேனான் பவ னென்பது திருவினாற் காமக்குறிப்புப் பிறந்தவாறு; என்னை? இனையன வல்லனுதல் செல்வக்குடிப்பிறந்தாரை அறிவிக்குமாகலின்; அது காமக்குறிப்பினை நிகழ்த்துமென்பது. இது தலைமகட்கும் ஒக்கும்" என்பது தொல். மெய்ப். சூ. உ௫. பேராசிரிய ருரையிலும் காணப் படுகின்றது.

(பிரதிபேதம்) * என்று கூற்றுன். † இக்கனம். ‡ இனியமகிட்சி. || அயராக்கம் பிறந்த மருட்கை.

௯ எல்லாநீ, என்னணங் குற்றனை யார்நின் னிதுசெய்தார்
நின்னுற்ற வல்ல லுரையென வென்னை
வினவுவீர் தேற்றெனக் கேண்மி னொருவன்
குரற்கூந்தா லென்னுற்ற வெவ்வ நினக்கியா
னுரைப்பனைத் தங்கிற்றெ னின்னுயி ரென்று
மருவூட்டி மாறி யதற்கொண் டெனக்கு
மருவுழிப் பட்டதென் னெஞ்சு;
௧௬ எங்குந் தெரிந்தது கொள்வே னவனுள் வழி;
௧௭ பொங்கிரு முந்நீ ரகமெல்லா நோக்கினை
திங்களுட் டோன்றி யிருந்த குறுமுயா
லெங்கே ளிதனகத் துள்வழிக் காட்டீமோ
காட்டீயா யாயிற் கதநாய் கொளுவுவேன்
வேட்டுவ ருள்வழிச் செப்புவே னாட்டி
மதியொடு பாம்பு மடிப்பேன் மதிதிரிந்த
வென்னல்ல றீரா யெனின்;
௨௪ என்றாங்கே, உண்ணின்ற வெவ்வ முரைப்ப மதியொடு
வெண்மழை போடிப் புகுதி சிறிதென்னைக்
கண்ணோடி யைப்போறி நீ;
௨௭ நீடிலைத் தாழைத் துவர்மணற் கானலு
ளோடுவே னோடி யொளிப்பேன் பொழிறொறு
நாடுவேன் கள்வன் கரந்திருக்கற் பாலன்கொ
லாய்பூ வடும்பி னலர்கொண் டுதக்காணெங்
கோதை புனைந்த வழி;
௩௨ உதுக்காண், சாஅய் மலர்காட்டிச் சால்பிலான் யாமாடும்
பாவைகொண் டோடி யுழி;

௩௪ உதுக்கா[ணர்](ண்) தொய்யில் பொறித்த வழி;
௩௫ உதுக்காண், தையா றேறெனத் தேற்றி யறனில்லான்
பைய முயங்கி யுழி;
௩௭ அளியவென் னுள்ளத் துயவுத்தே ளூர்ந்து
விளியாநோய் செய்திறந்த வன்பி லவனைத்
௩௮ து கலித்தொகை ௧௪௪.
தெளிய விசும்பினு ஞாலத் தகத்தும்
வளியே யெதிர்போம் பலகதிர் ஞாயிற்
றொளியுள் வழியெல்லாஞ் சென்று முனிபெம்மை
யுண்மை நலனுண் டொளித்தானைக் காட்டிமோ
காட்டாயேன், மண்ணக மெல்லா மொருங்கு சுடுவேனென்
கண்ணி ரழலாற் றெளித்து;
௪௫ பேணான், துறந்தானை நாடு மிடம்விடா யாயிற்
பிறங்கிரு முந்நீர் வெறுமண லாகப்
புறங்காலிற் போக விறைப்பேன் முயலி
னறம்புணை யாகலு முண்டு;
௪௬ துறந்தானை, நாடித் தருகிற்பா யாயி னிளக்கொன்று
பாடுவே னென்னோ யுரைத்து;
௫௧ புல்லிய கேளிர் புணரும் பொழுதுணரே
னெல்லியா கெல்லையென் றுங்கே பகன்முனிவ
னெல்லிய காலை யிராமுனிவன் யானுற்ற
வல்லல் களைவா ரிலேன்;
௫௫ ஓஒகடலே, தெற்றெனக்கண் ணுள்ளேதோன் றவிமையெடுத்துப்
பற்றுவே னென்றியான் விழிக்குங்கான் மற்றுமென்
னெஞ்சத்து ளோடி யொளித்தாங்கே துஞ்சாநோய்
செய்யு மறனில் லவன்;
௫௬ ஓஒகடலே, ஊர்தலைக் கொண்டு கன லுங் கடுந்தீயு

ணீர்பெய்தக் காலே சினந்தணியு மற்றிஃதோ
வீரமில் கேள்வ னுறீஇய காமத்தீ
நீருட் புகினுஞ் சுடும்;

கூசு. ஒலகடலே, எற்றமி லாட்டியென் னேமுற்று ளென்றிக்கோ
யுற்றறியா தாரோ நகுக நயந்தாங்கே
யிற்று வறியின் முயங்கலேன் மற்றென்னை
யற்றத்திட் டாற்றறுத்தான் மார்பு;

ஙுஎ;

ஐந்தாவது நெய்தல் உஎ. கூ0கூ

கூஅ கடலொடு புலம்புவோள் கலங்களுர் நீரக்
கெடலருங் காதலர் துணைதரப் பிணிநீங்கி
யறனறிந் தொழுகு மங்க ளுளனைத்
திறனிலா ரெடுத்த தீமொழி யெல்லா
நல்லவை யுட்படக் கெட்டாங்
கில்லா கின்றவ னாய்நுதற் பசப்பே.

(க)இதுவுமது. இதற்கும் (உ)அவ்வுரை கூறிக்கொள்க.

இதன் பொருள்.

நன்னுதால் காண்டை நினையா நெடிதுயிரா
வென்னுற்றா ளென்கொல்லோ (ங.)விஃதொத்தி (ச)பன்மா
ணருகுதருந் தன்னுறுக் கைவிட் டிருதருங்
கண்ணீர் துடையாக் கவிழ்ந்து நிலனோக்கி
ரு யன்ன விடும்பை பலசெய்து தன்னை
வினவுவார்க் கேதில சொல்லிக் கனவுபோற்
றெருளுந் மருளு மயங்கி வருபவள்
கூறுப கேளாமோ சென்று

எ - து: நன்றாகிய நுதலினையுடையாய்! இவளொருத்தி (ரு)தனக்குரிய

நாணினைக் கைவிட்டுத் * தன் மனத்தே ஒன்றை நினைத்து நெட்டுயிர்ப்புக் கொண்டு வீழ்கின்ற கண்ணீரைத் துடைத்துப் பிறரை நோக்காது நிலத்தைக் கவிழ்ந்து நோக்கித் தன்னை நீ உற்றது என்னென்பார்க்குக் கனவின்கண் வாய்வெருவிக் கூறுவாரைப்போலே உத்தரமல்லாதன சில சொல்லிப் பலகாலும் நகுதலைச் செய்யும்; இங்ஙனந் தெளிவும் மயக்கமுமாய் மயங்கி வேறாம் அத்தன்மையவாகிய இம்மைகள் பலவற்றையுந் தன்னிடத்தே உண்டாகக் கொண்டு வருகின்றவள் என்ன துன்பமுற்றாளோதான்? இவளைக் காண்பா

---

௧. இச்செய்யுளும் தேறுதலொழிந்த காமத்து மிகுதிறமாகிய பெருந்திணைக்கு மேற்கோள்; தொல். அகத். சூ. ௫௪. நச்.
௨. இந்நூற் பக்கம் ௮௮௯-௮௮௧. பார்க்க.
௩. "இஃதொத்தி" கலி. ௧௪௩: ௮; "இஃதொத்தன்" (கலி. ௧௪: ௮) என்பதும் அதன் குறிப்பும் பார்க்க.
௪. இந்நூற்பக்கம் ௨௮௮: ௩-ஆம் குறிப்புப் பார்க்க.
௫. "சிறந்தவன் ஞானும்" (கலி. ௧௪௫: ௧0.) என்பதும் அதன் குறிப்பும் பார்க்க.

(பிரதிபேதம்) * தான் மனத்தே.



யாக; யாஞ் சென்று இவள்கூறும் வார்த்தைகளைக் கேட்டலைச் *செய்யாமோ என்றொருவன் கூறினான். எ - று.

எல்லாநீ, என்னணங் குற்றனை யார்நின் னிதுசெய்தார்
நின்னுற்ற வல்ல லுரையென வென்னை
வினவுவிர் தெற்றெனக் கேண்மி னொருவன்
(௧)†குரற்கூந்தா லென்னுற்ற வெவ்வ நினக்கியா
னுரைப்பனைத் தங்கிற்றெ னின்னுயி ரென்று
மருளூட்டி மாறி யதற்கொண் டெனக்கு
மருவழிப் பட்டதென் ‡னெஞ்சு
எவ்வந் தெரிந்தது கொள்வே னவனுள் வழி

எ - து. அங்ஙனம் ||கூறியவள், கேட்கக் கடவேமென்று நம்மிலே கூறி வந்து, எடீ! நீ என்ன வருத்தமுற்றாய்? யார்தான் நினக்கு இவ்வருத்

தஞ் செய்தார்? நினக்கு உற்ற வருத்தத்தை எங்கட்கு உரையென்று சொல்லி என்னைக் கேட்கின்றவர்களே! அது வந்தவாற்றை என்பக்கலிலே தெளியக் கேண்மின்; ஒருவன் கோத்தான கூந்தலையுடையாய்! எனக்கு உற்ற வருத்தத்தை யான் நினக்கு வந்துஉரைக்குமளவும் என் இன்னுயிர் போகாமற் றங்கிற்றுக்காண் என்று இங்ஙனம் தன்னோடு யான் மருவுதலை உறுத்தி அம்மருவுதலைஅவன்மாறிப் போன அக்காலந்தொடங்கி என்னெஞ்சு ÷எனக்கு அவன் மருவின இடத்தே அகப்பட்டு நின்றுவிட்டது; இனி அவனுள்ள இடமெங்குந் தேடித் தெரிந்து என்னெஞ்சினைக் கூட்டிக்கொள்வேன் என்று கூறினாள். எ - று.

உரைப்பினை, திசைச்சொல்.

௬௭ (உ)பொங்கிரு முந்நீ ரகமெல்லா × நோக்கினை

---

௧. "குரற் கூந்தல்" கலி. ௭௨: ௨௦, ௯௩: ௨௨; என இந்நூலுள் வருதல் காண்க; குரலென்பது கூந்தற்கு அடையாய் வருதலன்றியும் மயிர் (கூந்தல்) என்னும் பொருட்டாயும், "குரனுற்றத் திற்ற, முடியுதிர் பூத்தாது" (கலி. ௮௮: ௧ - ௨.) என்புழி வருதல் காண்க.

௨. (அ)கலக்கம்-மனங்கலங்குதல்; மேலே கலங்கி மொழிதலென்பது ஒரு காற் சொல்லின்கண் வந்து பெயர்வது; இது மனங்கலங்கி நிற்கு நிலையென்றுகூறி, "பொங்கிரு முந்நீர் ..... ..நீரயெனின்" என்னும் பகுதியைப் பெருந்திணைக்குரிய கலக்கமென்னு மெய்ப்பாட்டுக்கு (தொல். மெய்ப்.௨௨. ௨௨. 'இன்பத்தை') மேற்கோள்காட்டினர் இளம் பூரணர்(ஆ) நச்சினார்க்கினியர் "பொங்கிரு முந்நீர்.........காட்டிமோ"

(பிரதிபேதம்) * செய்யாமோவென்று கூறினை, † குரற் கூந்தல், ‡ நெஞ்சு தெரிந்தவா || கூறியவர், ÷ எனக்குத்தான் மருவின × நோக்குபு.

நான்காவது முல்லை ௯. ௯௪

சிற்றமோ டாருயிர் கொண்டஞான் றின்னன்றோல்
கூற்றென வுட்கிற்றென் னெஞ்சு

எ - து: ஏறுகிய எருமையையேறுகின்ற கூற்றுவனுடைய நெஞ்சை (௧) வடிம்பாலே பிளந்துபோகட்டுச் சினத்தோடே அரிய உயிரை வாங்கின

அஞ்ஞான்றை, இறைவன் இத்தன்மையையுடையவன்கொலென்று கூறும் படியாகக் காற்றின் விசைபோல நுடிவந்த விரைந்த எருதிய காரியதனைப் பலரும்வந்து சேர்தலையுடைய களத்தே வலியடங்கத் தழுவி வருத்தி அதன்மேலே தோன்றிநின்ற பொதுவனது அழகைப் பாராய்; அதனைக் கண்டு என் நெஞ்சு உட்கிற்றுக்காணென்றாள் எ - று.

சுசு இஃதொன் *யிஃதொன்று கண்டை யிஃதொத்தன்
(உ)புல்லினத் தாயர் மகனன்றே புள்ளி
வெறுத்த வயவெள்ளேற் றம்புடைத் திங்கண்
மறுப்போற் பொருந்தி யவன்

எ - து: மற்றைப் புள்ளிகள் செறிந்த†வலியையுடைய வெள்ளேற்றினது அழகையுடைய பக்கத்தே திங்களிற் கிடக்கின்ற மறுப்போலே பொருந்திக் கிடந்தவன் ஆட்டினத்தையுடைய ஆயர்மகனல்லவோ? ஆதலால் இவ னொருத்தன்காண்.; இளையோளே! ‡ இஃதொரு வலியைப் பாராயெனக் காட்டினள். எ - று.

ருo ஓவா வேகமோ டுருத்துத்தன் மேற்சென்ற
||சேஎச் செவிமுதற் கொண்டு பெயர்த்தொற்றுங்
(ங)காயாம்பூங் கண்ணிப் பொதுவன் றகைகண்டை
மேவார் விடுத்தந்த(ச)கூந்தற் குதிரையை

க. வடிம்பு - கால் விளிம்பு; (அ) "மா வுடற்றிய வடிம்பு," (ஆ) கடமா கடைஇய விடுபரி வடிம்பின்" (இ) "ஆழி வடிம்பலம்ப நின்றானும்" (ஈ) "வேலவடிம்பலம்ப நின்றான்" (உ) "கடல்வடிம்பலம்ப நின்ற கைதவன்" என வருவனநோக்குக.

உ. (அ) "புல்லினத் தார்க்கும்" (ஆ) "புல்லினத் தாயர் மகளிரோடு" (இ) "புல்லினத் தாயர் மகனேன்" (ஈ) "புல்லினத் தாயனை" கலி. கoஎ: உ; கக்க: ரு; ககஙு: எ, அ.

ங. "காயாம்பூங் கண்ணிக் கருந்துவ ராடையை" கலி. கoஅ: கo.

ச. "கூந்த லென்னும் பெயரொடு கூந்த; லெரிசினங் கொன்றோய்" (பரி. ங: ககஉஉ.) என்பதும் 'கூந்தன்மா என்றகண்டார்சொல்லும் வடிவொடு வந்த கேசியது கனல்கின்ற சினத்தை யழித்தோய்;

(பிரதிபேதம்) *இதுதொன்று, †வலியையுடையவேற்றினதழகை,‡இஃதுதொரு.||சேஎசெவி.

(௧)திங்களுட் *டோன்றி யிருந்த குறுமுயா
லெங்கே ளிதனகத் †துள்வழிக் காட்டீமோ
காட்டீயா யாயிற் கதநாய் கொளுவுவேன்
வேட்டுவ ருள்வழிச் செப்புவே னாட்டி
மதியொடு பாம்பு மடுப்பேன் மதிதிரிந்த
வென்னல்ல றீரா யெனின்
௨௪ என்றாங்கே, உண்ணின்ற வெவ்வ முரைப்ப மதியொடு
வெண்மழை போடிப் புகுதி சிறிதென்னைக்
கண்ணோடி னாய்போறி நீ

எ - து: அவ்வனங் கூறி, அந்திக்காலத்தே கையறவெய்தி உரைத்தவள் இனி ‡இக்காலத்துத் தன்னூர்ப்பெறுதல் அரிதென்று கருதி, திங்களைக் கண்டு இதனோடு செறிந்த முயால் தேடிக் கருமெனக் கருதி, மிக்கு எழுகின்ற கரிதாகிய கடல்சூழ்ந்த உலகமெல்லாம் பார்த்துத் திங்களினுள்ளே விளங்கி இருக்கக் குறிய முயலே! அறிவு வேறுபட்ட என்னுடைய நெஞ்சை யான் தேடிக் கூட்டிக்கொள்ளக் கருதின வருத்தத்தை நீ அதனைக் கூட்டித் தீராயாயின் யான் வாங்கிக் கொள்ளும்படி இவ்வுலகத்தில் எங்கேள்வன் இருக்கின்ற இடத்தைக் காட்டுவாய்; அவனிருக்கின்ற இடத்தைக் காட்டாயாயின், நினக்குப் பகையாகிய கோபத்தையுடைய நாயை நின்னிடத்தே கொளுத்துவேன்; அதுவன்றி வேட்டுவருள்ள இடத்தேசென்று ஒருமுயல் உண்டென்று கூறுவேன்; அதுவேயன்றி நீ அரணாக உறைகின்ற திங்களோடே நின்னை அலைத்து விழுங்கும்படி மதிக்குப் பகையாகிய பாம்பைச்செலுத்துவேனென்று அவ்வந்திக்காலஞ் செல்கின்ற காலத்தே தன்னெஞ்சினின்ற வருத்தத்தைச்

---

என்றும் அடிகளோ ஞாயிறுமுதல் நெஞ்சீறாக் கூறியவையேயன்றி, பிறவும் கூறுவனபோலவுங் கேட்பனபோலவும் கூறுமா றமையுமென் பதற்கு மேற்கோள் காட்டினார்; தொல். செய். சூ. ௨௦௦.

க. (அ) முயல் என்பது முயால் என விளியேற்றதற்கு, "திங்களுட் டோன்றி யிருந்த குறமுயால்" என்பது மேற்கோள்; தொல். விளி மரபு. கூ, நகூ. நச். இ-வி. கூ. உகச. (ஆ) இந்திரன் புத்தன்மேலுள்ள அன்பினாற் சந்திரமண்டிலத்து முயல்பொறித்தானென்பதுபவுத்தநூற் றுணிபு. (இ) "குடைப்புறந் துஞ்சு மிகல - னிடைப்பொ லிந்த, திங்களிற் றோன்றும் குறமுயல்போற் செம்பியன், செங்கண் சிவந்த களத்து" கள. (ஈ) "குறமுய லொளிக்கு மரணினை, யிரவிரு ளகற்று நிலவினை" சிலப். க: நஎ. உரை மேற்கோள். (உ) "நிலவு பொழியு முயற்கூடு" உத்தரகோச. பாயிரம். உரு.

(பிரதிபேதம்) * தோன்றவிருந்த, † உள்வழி காட்டீமோ, காட்டிலையாயின், இக் காலத்தென்றாற்.



சொல்ல, அது வெண்மேகத்தே மறைந்ததனைக்கண்டு, நீ மதியோடே வெண் மேகத்தே ஓடிச் சென்று புகாநின்றாய்; ஆதைபினுலே நிறிதென்னைக் கண் ணோட்டஞ் செய்து நீ என்னைத் தேடிப்போகின்றாய்போலே இராநின்ற யென்று கூறினாள். எ - று.

உஎ நீடிலைத் தாழைத் (க)துவர்மணற் கானலு
ளோடுமே வேறுடி யொளிப்பேன் பொழிலுறு
நாடுமேன் கள்வன் கரந்திருக்கற் பாலன்கொ
லாய்பூ (உ)*வழுதிமுயல் லலர்கொண் டுதுக்காமெனங்
கோதை புனைந்த வழி

க. "துவர்மணல்" என்ற தொடர் (கலி. நஉ. உ) வந்துள்ளது.
உ. அடும்பென்பது அடம்பென்றும் சிலவிடத்து வழங்கப்படுகிறது; இது நெய்தனிலத்துக்கு உரியதொரு வார்கொடி; இக்கொடியிற் செந்நிற முடையதும் கருநிறமுடையது முள; இதன் இலை கவிடைமையால் அதற்கு மானடி உவமையாகக் கூறப்படுகிறது. இதன் பூ வெண்ணிற

முடையதென்று செய்யுளால் அறியப்படுகிறது. அப்பூவுக்குத் தார் மணியும் கொட்டகமும் உவமையாக்கப்பட்டுள்ளன. இதனை மகளிர் கொழுதி விளையாடுவதும் வேறு மலரோடு விரவக்கட்டிச் சூடுவது முண்டு. இதன்கொடியைத்தலைவன் தேருருளை துணிப்பதாகக்கூறுவது பெருவழக்கு; இவையும் பிறவும் (அ) "கருங்கொடி யடம்பு" கலி. கக: கச. (ஆ) "ஓங்குதிரை விரைபுதன், கரையம லடும்பளித் தாஅங்கு" (இ) "அடும்பவி ரணியெக்கர்" கலி. கஉஎ, உ0-உக, கஙஉ; கக. (ஈ) "அடும்பாரணி கானற் சேர்ப்ப" (உ) "எக்க, ரடம்பலருஞ் சேர்ப்ப"பழ. ககச, உ௨௨.(ஊ)"முதுநீ ரடைகரை, யொண்பன் மலர கவட்டிலை யடும்பின்,செங்கேழ் மென்கொடி யாழியறுப்ப, வினமணிப் புரவி நெடுந்தேர் கடைஇ" அகம். அ0: ௯-௧0. (எ) "எர்கொடிப் பாசடும்பு" ஐங். க0க. (ஏ) "அய்கொடிப் பாசடும்பு" அகம். ஙக0: கச. (ஐ) "கான லடம்பின் கவட்டிலைகண் - மாணின், குளம்பேய்க்கு கன் ஞடன்" நள. கலிதொடர். அஅ. (ஒ) "மாண்டியன்ன கவட்டிலையடும் பின், ருர்மணி யன்ன வெண்பூக் கொழுதி, யொண்டொடி மகளிர் வண்ட லயரும்" குறுந். உசங. (ஓ) "கொட்டக மலர்ந்த தொழுங் கொடி யடும்பி, னற்றுறை யணிநீர்ச் சேர்ப்ப" தொல். அகத். சூ. உச. இளம். மேற். (ஔ) "இருங்கழி பொருதவீர வெண்மணன், மாக் கொடி யடும்பின் மாயித ழலரி, கூர்தன் மகளிர் கோதைக் கூட்டும், காமர் கொண்கன்" நற். சஉ: க-ச. (ஃ) "அடும்பி ஞய்மலர் விரைஇ

(பிரதிபேதம்) * அடம்பின்.

## ஐந்தாவது நெய்தல் உ௪.  கஃஙீ

கஉ உதுக்காண், சாஅய் மலர்காட்டிச் சால்பிலான் யாமர்டும் (க)பாவைகொண் டோடி யுழி
கச உதுக்கா[ணங்](ண்),தொய்யில் பொறித்த வழி
கடு உதுக்காண், தையா நேரறெனத் தேற்றி யறனில்லான் பைய முயங்கி யுழி
கஎ அளியவென் னுள்ளத் துயவுத்தே ரூர்க்து

விளியாநோய் செய்திறந்த வன்பி லவனைத்
தெளிய விசும்பினு ஞாலத் தகத்தும்
வளியே யெதிர்போம் பலகதிர் ஞாயிற்
றொளியுள் வழியெல்லாஞ் சென்று முனிபெம்மை
யுண்மை நலனுண் டொளித்தானைக் காட்டுமோ
காட்டாயேல், மண்ணக மெல்லா மொருங்கு சுடுவேனென்
கண்ணீ ரழலாற் றெளித்து
௪௫ பேணான், துறந்தானை நாடு மிடம்விடா யாயிற்
(௨)பிறங்கிரு முந்நீர் வெறுமண லாகப்

---

செய்த, னெடுந்தொடை வேய்ந்த நீர்வார் கூந்த, லோரை மகளிர்" குறுந். ௪௦௧. (அஅ) "அடும்புகொடி சிதைய வாழி போழ்ந்தவர், நெடுந் தேரின்னொலி யிரவுந் தோன்றும்" நற். ௩௩௮: ௨ - ௩. (ஆஆ) "படிவ மகளிர் கொடிகொய் தழிக்க, பொம்ம லடும்பின்" நற். ௨௭௨: ௨ - ௩. என்பவற்றால் அறியலாகும். குர்தாணியென்று வழங்கும் கொடிக்கு இங்கே கூறிய இயல்புகளெல்லாம் இருத்தலால் இஃது அக்கொடி போலும்; அதிற் செம்பூவும் காணப்படுகிறது. (இஇ) "சுள்ளி சுனை நீலஞ் சோபா லிகைசெயலை, யள்ளி யளகத்தின் மேலாய்ந்து" (திணைமாலை. ௨) என்புழி, சோபாலிகை யென்பதற்கு, அடுப்பலர் என்று கையெழுத்துப் பிரதிகளிற் பொருள் காணப்படுதலால், சோபாலிகையென்பதும் இதன் பெயரேயாம். இதற்கு அடுப்பென்று காணப்படும் பொருள் தவறென்று தோற்றுகிறது.

௧. (அ) "வரிப்பந்து கொண்டொளித்தாய்" பு - வெ. பாடாண். ௫௦. (ஆ) "முற்றிலைப் பந்தைக் கழங்கைக்கொண் டோடினை" திருவேங் கடத்தந்தாதி. ௧௭. என வருபவை இதுபோல்வன.

௨. கலக்கமென்பது சொல்லத்தகாதன சொல்லுதலென்று கூறி அதற்கு, "பிறங்கிரு முந்நீர்.........யாகலுமுண்டு" என்பதனை (தொல். மெய்ப். சூ. ௨௨) மேற்கோள்காட்டினர் பேராசிரியரும்; (இ - வி. சூ. ௬௪௦)

புறங்காலிற் போக விறைப்பேன் *முயலி
(௧)னறம்புணை யாகலு முண்டு
௪௧ துறந்தானை, நாடித் தருகிற்பா யாயி னினக்கொன்று
பாடுவே †னென்னோ யுரைத்து
௫௧ (௨)புல்லிய கேளிர் புணரும் பொழுதனரோ
‡னெல்லியா னெல்லையென் றாங்கே பகன்||முனிவ
னெல்லிய காலை யிரா÷முனிவன் யானுற்ற
வல்லல் களைவா ரிலேன் [துப்
௫௫ ஓஓகடலே, தெற்றெனக்(௩)கண்ணுள்ளேதோன் றவிமையெடுத்
பற்றுவே னென்றியான் விழிக்குங்கா னற்றுமென்
னெஞ்சத்து ளோடி யொளித்தாங்கே துஞ்சாநோய்
செய்யு (௪)மறனில் லவன்
௫௯ ஓஓகடலே, (௫)ஊர்தலைக் கொண்டு கனலுங் கொடுந்தீயு
ணீர்பெய்தக் காலே சினந்தணியு மற்றிஃதோ

---

இ - வி. நூலாரும் அவ்வாறே கூறினர். தலைவியின் கலக்கங் கூறு தற்கு, "பிறக்கிரு முந்நீர் ..........விறைப்பேன்" என்பதனை (சீவக. ௧௧௮ உரையில்) மேற்கோள்காட்டினர் இவ்வுரையாசிரியரும்.

௧. (அ) அறநெறியே வெற்றிக்கு முதலென்றும் (ஆ) அறம் பொருந்தாத முயற்சி பயன்படாது தொலையுமென்றும் (இ) அறந்தலை நின்றார்க்கழி வில்லை யென்றும் (ஈ) அறம் வெல்லும் பாவந்தோற்கு மென்றும் (உ) அறத்தினலன்றி வெல்வலரி தென்றும் பெரியோர் கூறுவன இங்கே அறிதற்பாலன.

௨. அழிவில் கூட்டத்திற்குரிய பொருள்களுள் பொழுது மறப்பாதலென் பதற்கு, "புல்லிய கேளிர் ..........களைவா ரிலேன்" என்னும் பகுதி மேற்கோள்; தொல். மெய்ப். சூ. ௨௪. 'தெய்வமஞ்சல்' இனம்.

௧. (அ) "கனவினுற், ஞேன்றின னைகத் தொடுத்தேன்மன் யான்றன் னைப், பையெனக் காண்கு விழிப்பயான் பற்றிய, கையுளே மாய்ந்தான் கரந்து" கலி. ௬௨: ௩௩ - ௩௪. (ஆ) "துஞ்சுங்காற் றேண்மேல ராகி விழிக்குங்கா, னெஞ்சத்த ராவர் விரைந்து" குறள். ௧௨௧௮.

௪. (அ)"அறனிலி"(ஆ)"அறனில்லா வன்பிலி" கலி.௬௨:௪,அ௬:௩௩-௩௪.

௫. (அ) "கரு னெழுந்த வருகெழு செந்தீக்கு, நீருட் குளித்து முயலாகும், நீருட் குளிப்பினுங் காமஞ் சுடுமேகுன் றேறி, யொளிப்பினுங் காமஞ்

(பிரதிபேதம்) * முயவில், † என்றேவுரைத்து. ‡ அல்லிபாகெல்லி. || + முனிவேன்.

ஐந்தாவது நெய்தல் உள். ௯௯௩

வீசமில் கேள்வ னுறீஇய காமத்தீ
நீருட் புகினுஞ் சுடும்
௩௩ ஓஒகடலே, (௧)எற்றமி லாட்டியென் னேமுற்று ளொன்றிந்நோ
யுற்றறியா தாரோ நகுக நயந்தாங்கே
யிற்று வறியின் முயக்கலேன் மற்றென்னை
யற்றத்திட் (௨)டாற்றறுத்தான் மார்பு

எ - து: அங்ஙனங் கூறி, அது எரிய மேகத்தே மறைந்து விடுதலின் அதனை நோக்கித் தேடுமாறு அதற்குக் கூறக் கருதி, அக்கள்வனனவன் மறைந்திருக்கக்கடவனோ என்று †காட்டும்படி, யான் நீண்ட இலையினையுடைய தாழை நிற்கின்ற சிவந்த மணலையுடைய கானலிற் பொழில்கடோறும் தேடிச்

சுடும்" நாலடி. ௯௦. (ஆ)"அளிக்கு மெய்யுயிர் காண்றழ வஞ்சினள், குளிக்கு நீரும் கொதித்தெழக் கூசமால், விளிக்கும் வேலையை வெங்க ணனங்கனை, யொளிக்க லாமிடம் யாதெனவுன்னுமால்" கம்ப.சூர்ப்ப. எ௧. (இ)"உள்ளினுஞ் சுட்டிடு முணருங் கேள்வியிற், கொள்ளினுஞ் சுட்டிடுங் குறுகி மற்றதைத், தள்ளினுஞ் சுட்டிடுந் தன்மை யீதினுற், கள்ளினுங் கொடியது காமத் தீயதே" கந்த. மாயைநீங்கு. ௧௧.

(ஈ) "கடலின் மூழ்கினுங் குன்றிடை யொளிப்பினுங் காமரு முடல் விராயுயி ருகவேதே போலும்" விநாயக. இந்திரன் சாபம். ௩௪.

௧. (அ) எற்றமென்னு முரிச்சொல் துணிவாகிய குறிப்புணர்த்தற்கு, "எற்றமி லாட்டியென் னேமுற்றுள்" என்பது மேற்கோள்; தொல். உரிச். சூ. ௩௪-௩௪. நச். சேன். உரி. சூ. ௩௨. இரா. மேற்கூறிய இடங்களி லெல்லாம் இச்சொல், எற்றமென்று பதிப்பிக்கப்பெற் றிருத்தல் பிழையே. அது பிழையென்பதும் எற்றமென்றலே திருத்தமென்ப தும் தொல்காப்பியச் சூத்திரத்தை உய்த்துணர்வார்க்குப் புலனும். இதனை இங்கே காட்டப்படும் சான்றோர்கள் ஆட்சியும் வலியுறுத்தும். (ஆ) "எற்றிவரைக்கானே" கலி. ௧௪௯: ௧௧. (இ) "எற்ற முடைமை யெதிர்கோளி னறிப" முதுமொழி. ௧௫. (ஈ) "எற்றமி லாள ராகி" திரு வானைக்காப். கோமிசப். ௨௧.

௨. (அ) "அரும்பிடி ஈம்மை யாற்றறுத் தன்றால்" (பெருங். (௪) ௯: ௭) என்பதும் (ஆ) "ஆற்றறுப்பார்" (குறள். ௭௬௮) என்பதன் விசேடவுரை யில், 'ஆற்றென்பது முதனிலைத் தொழிற்பெயர்; முன்னெல்லாம் வலியராவார் போன்று ஒழிதலின் வலியறுப்பாரென்றார்' என்று பரிமேலழகர் எழுதியிருப்பதும் இங்கே அறிதற்பாலன.

(பிரதிபேதம்) * மார்பு. ஆங்கு கடலொடு..........பசப்பே. எ-து: அன்னம் கூறி அறி கரிய, † காட்டக்கருதி யான்.



சென்று பார்ப்பேன்; அன்னஞ் சென்று பார்த்துக் காணுமையின், ஓடிச் சென்று அவனை ஒளித்திருந்து காணக் கடவேனென்று கருதி ஒளித்திருப் பேன்; நீயும் இன்னனம் ஒளித்திருந்தே தேடென்று கூறினன்; அன்னங் கூறிப் பின்பு அவனிருக்கும் இடங்களுங் கூறக்கருதி, பூவினையுடைய * அடும்பின்மலரைக்கொண்டு எமக்குத்தரும் கோதையைக் கட்டின இடத்தை உவ்விடத்தே பாராய்; அமைதியில்லாதான் யாங் கொண்டு விளையாடுஞ் (௧) சாய்ப்பாவையையும் மலர்களையும் கொண்டுவந்து நமக்குக் காட்டி யான் தன்பின்னே செல்லும்படி அவற்றைக்†கொண்டோடியஇடத்தைஉவ்விடத்தே பாராய்; எமக்குத் தானெழுதுந் தொய்யிலை எழுதிய அவ்விடத்தை உவ்விடத்

தேபாராய்; மனத்தில் அறனில்லாதவன், தையால்! நின்னைப் பிரியேன்; நீ தெளியென்று தெளிவித்துப் பின்னர் மெல்ல முயங்கிய அவ்விடத்தை †உவ்விடத்தே பாராயென்று கூறினாள்; அங்ஙனங் கூறின அளவிலே அம்முயல் ‡கருமேகத்து மறைந்தேபோதலின் அதனைக் கைவிட்டு இடையே தன்மேல் வந்துற்ற வளியை நோக்கி, வளியாகிய தெய்வமே! [நீ] திங்களின் ஒளி போலன்றி விசும்பிடத்தும் ஞாலத்திடத்தும் பரக்கும் பல கதிர்களையுடைய ஞாயிற்றின் ஒளியுள்ள இடமெல்லாஞ்சென்று நாடுதற்குரிய நீ ||உயவுத்தேரை ஊர்ந்துவந்து தன்னால் அளிக்கத்தக்க என்னுள்ளத்திடத்தே கெடாத காம நோயைச்செய்து என்னைக் கைவிட்டுப்போன அன்பிலாதவனை அந்நோய் நீங்கி என்மனந் தெளியும்படியாக எதிர்ப்படுவாய்; அங்ஙனம் எதிர்ப்பட்டு வேட்கை மிகுதியான் எம்முடைய இயற்கை நலத்தை நுகர்ந்து பின்பு எம்மை ஒரு காரணமின்றி வெறுத்து அவ்வியற்கை நலத்தைக்கொண்டு இம்மண்ணகத்தே ஒளித்தவனைக் கொண்டுவந்து காட்டுவாய்; காட்டாயாகில் என்கண்ணீரைத் தெளித்து அதன்கண் எழுகின்ற அழலாலே நின் மேனியெல்லாஞ் சோச் சுடுவேனென்றுங் கூறினாள்; அங்ஙனங் கூறி அதனைப் பின்னர்க் காணாமையின், தான் அவனைத் தேடக்கருதி, கடலை நோக்கி, மிக்கு வருகின்ற கரிய கடற் றெய்வமே! என்னைப் பாதுகாவானாய்த்துறந்தவனை யான் தேடிக் காணுமிடத்தை நீ விட்டுப் போகாமல் எறுவாயாயின் நின்னிடமெல்லாம் வெறுமணலாம்படி என் காற்புறத்தாலே நின்னுடைய நீரெல்லாம் போம்படி இறைப்பேன்; அது முடியுமோவெனின், அங்ஙனம் ÷முயலின் அதற்கு அறக்கடவுள் உதவியாதலு முண்டாயிருக்குமென்றுங் கூறினாள்; அங்ஙனங் கூறி, ஓதம் வடிந்ததனைக் கண்டு என்னைக் கைவிட்டுப்போனவனை நீ தேடிக் கொண்டு வந்து தருவையாயின் அதற்குக் கைம்மாறாக என்னேயைச்சொல்லி

---

௧. சாய்ப்பாவை - தண்டான் கோரையைக் கிழித்துச்செய்த பாவை; (அ) "சாய்க்கொழுதிப் பாவைதர் தினைத்தற்கோ" (கலி. ௭௧: ௭) என்பதும் அதனுரையும் (ஆ) "பைஞ்சாய்ப் பாவை யீன்றனென் யானே" (ஐங். ௧௫) என்பதும் இங்கே அறிதற்பாலன.

(பிரதிபேதம்) * அடம்பின், † கொண்டாடிப்பயவிற்றை உவ்விடத்தே, ‡ கருத்தமேகத்து, || உரவுத்தேரை, ÷ முயறுவேன் அதற்குக் கடவுள்.

நினக்கு ஒரு பாட்டினைப் பாடுவேனென்றுங் கூறினுள்; அங்ஙனங் கூறிப் பாடுகின்றவள் என்னைக் கூடின சேனிர் வந்து கூடுங் காலம் இரவோ பகலோ என்றறியேன்; ஆதலால் என்னை வருத்தும் பகற்பொழுதுபோய் இராப் பொழுதாவதாக என்று கருதிப் பகற் பொழுதை வெறுப்பேன்; அதுபோய் இராவான காலத்திடத்து அவ்விராக்காலத்தை * அப்பொழுதேவெறுப்பேன்; அப்படியே ஓஒ! யான் உற்ற வருத்தத்தைக் கடலே! நின்னை ஒழியப் போக்கு வாரை வேறுடையேனல்லேனென்றுங் † கூறினுள்; அங்ஙனங் கூறிப் பின்னும், கடலே! அறனில்லாதவன் தெளிய என் கண்ணுள்ளேவந்து தோன்றுகையினுலே கூடின இமையை விழித்துப் பிடித்துக் கொள்வே னென்று கருதி யான்விழிக்கப் பின்னையும் ஓடிப்போய் என்னெஞ்சத்துள்ளே மறைந்துநின்று அப்பொழுதே யான் துயிலாத காமநோயைத் தாராநிற்கும்; கடலே! ஊரையெல்லாந் தனக்குள்ளாக்கிக்கொண்டு காந்துங் கடியநெருப்புத் தன்னை அவிக்குநீரைச் சொரியச் (க) ‡சினமாறும்; அதுபோலன்றி அருளில் லாத என்சேள்வன் என்னை உறுத்திய இந்தக் காமமாகிய நெருப்புத் தனக்குப் பகையாகிய நீருள்ளே புகினும்மோ வேமாறு சுடாநிற்கும்; கடலே! தன் மனத்து ஒரு துணிவில்லாதாள் என்ன பித்தேறினுளென்று கூறி, இக்காம நோயுற்றறியாதவர்களோ என்னை இகழ்ந்து சிரிக்க; இக்காமநோய்க்குத்துணை யாவதோர் ஆனறுதியிலே பின்னை என்னை விட்டுவைத்து என்வலியை அறுத் தவன் ||மார்பினை யான் விரும்பின அக்காலத்தே பின்பு இத்தன்மைத்தாக வருத்துமென்று அறியின் முயங்கேன்; அக்காலத்து அறிகவேன்காணென்றுங் + கூறினுள். எ - று.

ஓஒ, வருத்தக்குறிப்பு. ஓகாரம், பிரிநிலை. ஆற்றல், ஆற்றெண விகார மாயிற்று.

ஆங்கு, அசை.

௬அ கடலொடு புலம்புவோள் கலங்கஞர் தீரக்
கெடலருங் காதலர் துணைதரப் பிணிநீங்கி
யறனறிந் தொழுகு மங்க ணாளனைத்
(௨)திறனிலா ரெடுத்த தீமொழி யெல்லா
நல்லவை யுட்படக் கெட்டாங்
கில்லா கின்றவ ளாய்நுதற் பசப்பே

---

௧. கனம் - வெம்மை. இந்நூற்பக்கம் ௩௦௨: ௩ - ஆம் குறிப்புப் பார்க்க.

௨. "ஐயற் காங்கிளங் கோளரி யறிவிலா னுரைத்த, பொய்யிற் போம்படி போக்கினன் கடிதினிற் புக்கான்" கம்ப. பிரமாத்திர. ௭௦.

(பிரதிபேதம்) * அப்பொழுதென்றுவெறப்பேன். † கூறினள்.ஒஉ. வருத்தக்குறிப்பு. அன்னனை கூறி. ‡ லொமாறுவதுபோலன்றி, || மார்பினையளை யான், ✢ கூறினள். ஓகாரம் பிரிநிலை. ஆற்றல் விகாரம் 'ஆங்கசை, அன்னனை கடலோடே,



எ - து: அன்னனை கடலோடே வருந்திக் கூறினவளுடைய மனங்கலங்கும் வருத்தந்தீரும்படி அவள் காதலர் விரைந்து வரக் கெடுதலரிய காமநோய் நீங்கி, இவளுடைய அழகிய நுதலிற் பசப்பு, அறநெறியறிந்து நடக்கும் கண்ணோட்டமுடையவனை அத்திறமில்லாதார் உண்டாக்கிச்சொன்ன * தீயமொழிகளெல்லாம் நன்மக்கள் இருக்கின்ற அவைக்குள்ளே ஆராய்ச்சிப்பட அவை கெட்டாற் போல, இல்லையாகாநின்றது; என்னவியப்போவெனக் கண்டார் கொண்டு கூறிற்றாக உரைக்க. எ - று.

இது கண்டார்க்கு அவராக்கங் கண்டு மருட்கை பிறந்தது.

† 'மருவழிப் பட்டதென் னெஞ்சு' என்னுந்துணையுங் கூறத்தகாதன கூறலின் மடனிறந்தவாறும் 'அறம்புணை யாகலு முண்டு' எனத் தன்னுடம்பும் உயிரும் வருந்திய நிலைதோன்றக் கூறுதலாற் கலக்கமெய்தியவாறுங் காண்க.

இஃது 'எங்குந் தெரிந்தது கொள்வே னவனுள் வழி' என ஐஞ்சீரான் ஒன்றும் ‡ 'உறுக்கரண், தொய்யில் பொறித்த வழி' என ஈரடியான் ஒன்றும் வருதலிற் கலிவெண்பாவின் வேறுபட்ட பாநிலைவகைக் கொச்சகம். (௨௨)

(கசரு.) துணையுநர் விழைதக்க சிறப்புப்போற் கண்டார்க்கு
நனவினு ளுதவாது நள்ளிருள் வேறாகுங்
கனவி னிலையின்றாற் காம மொருத்தி
யுயிர்க்கு முசாஅ முலம்வரு நோவாள்
கயல்புரை யுண்க ணரிப்ப வரிவரப்
பெயல்சேர் மதிபோல வாண்முகந் தோன்றப்
பலவொலி கூந்தலாள் பண்பெல்லாந் துய்த்துத்
துறந்தானை யுள்ளி யழூஉ மவனை
மறந்தான்போ லாலி ங்கூஉ மருளுஞ்
சிறந்ததன் ஞாணு நலனு நினையாது
காம முணைஇயா ளலந்தாளென் றெனைக்காண
நகான்மின் கூறுவேன் மாக்காள் மிகாஅது
மகளிர், தோள்சேர்ந்த மாந்தர் துயர்கூர, நீத்தலு
நீள்சுரம் போகியார் வல்லவர் தளித்தலு
மூழ்செய் திரவும் பகலும்போல் வேறாகி
வீழ்வார்கட் டோன்றுந் தமொற்ற ஞாலத்துள்
வாழ்வார்கட் கெல்லாம் வரும்;
தாழ்பு, துறந்து தொடிநெகிழ்த்தான் போகிய கான
மிறந்தெரி நையாமற் பாஅய் முழங்கி

(பாடபேதம்) * நிமொழிகள். † அருவழிப், ‡ உதக்காணத் தொய்யில்.

## ஐந்தாவது நெய்தல் உஅ. ககக

வறந்தென்னை செய்திபோ வானஞ் சிறந்தவென்
கண்ணீர்க் கடலாற் கனைதுளி வீசாயோ
கொண்மூக் குழீஇ முகந்து;
நுமக்கெவன் போலுமோ வூரீ ரெமக்குமெய
கண்பாயல் கொண்டுள்ளாக் காத லவன்செய்த
பண்பு தரவந்த வென்றொடர் நோய்வேது

கொள்வது போலுங் கடும்பகன் ஞாயிறே
யெல்லாக் கதிரும் பரப்பிப் பகலொடு
செல்லாது நின்றீயல் வேண்டுவ னீசெல்லிற்
புல்லென் மருண்மாலைப் போழ்தின்று வந்தென்னைக்
கொல்லாது போத லரிதா லதனொடி யான்
செல்லாது நிற்ற லிலேன்;
௩௨ ஒல்லையெங், காதலர்க் கொண்டு கடலூர்ந்து காலைநாட்
போதரிற் காண்குவேன் மன்னோ பனியொடு
மாலைப் பகைதாங்கி யான்;
௩௫ இனியனென், றேம்படுப்பன் ஞாயி றினி;
௩௬ ஒள்வளை யோடத் துறந்து துயர்செய்த
கள்வன்பாற் பட்டன் றொளித்தென்னை யுள்ளிப்
பெருங்கடல் புல்லெனக் கானல் புலம்ப
விருங்கழி நெய்த லிதழ்பொதிந்து தோன்ற
விரிந்திலங்கு வெண்ணிலா வீசும் பொழுதினன்
யான்வேண் டொருவனென் னல்ல லுறீஇயான்
றான்வேண்டு பவரோடு துஞ்சுங்கொ றுஞ்சாது
வானு நிலனுந் திசையுந் துழாவுமென்
னுைப் படர்மிக்க நெஞ்சு;
௪௫ ஊரவர்க் கெல்லாம் பெருநகை யாகியென்
னுருயி நெஞ்சும னங்குநீ சென்றி
நிலவுமிழ் வான்றிங்க ளாய்தொடி கொட்ப
வளிபுற மாறி யருளான் றுறந்தவக்
காதலன் செய்த கலக்குறுநோய்க் கேதிலா
ரெல்லாருந் தேற்றார் மருந்து;

௬௧ வினைக்கொண்டென காமநோய் நீக்கிய வூரி
ரெனைத்தானு மெள்ளினு மெள்ளலன் கேள்வ
னினைப்பினுங் கண்ணுள்ளே தோன்று மனைத்தற்கே
யேமரா தேமரா வாறு;
௬௫ கனையிருள் வானங் கடன்முகந் தென்மே
லுறையொடு நின்றீயல் வேண்டு மொருங்கே
நிறைவளை கொட்பித்தான் செய்த துயரா
லிறையிறை பொத்திற்றுத் தீ;
௬௯ எனப்பாடி;
நோயுடை நெஞ்சத் தெறியா வினைபேங்கி
யாவரு மெங்கேள்வற் காணீரோ வென்பவட்
கார்வுற்ற பூசற் கறம்போல வெய்தர்தார்
பாயல்கொண் டுள்ளா தவரை வரக்கண்டு
மாயவன் மார்பிற் றிருப்போல் பவள்சோ
ஞாயிற்று முன்ன ரிருள்போல மாய்ந்ததென்
னாயிழை யுற்ற துயர்.

(க)இதுவுமது. இதற்கும் (உ) முன்னர்க் கூறிய உரையைக் கூறிக் கொள்க.

இதன் பொருள்.

அனையுகர் விழைதக்க சிறப்புப்போற் கண்டார்க்கு
*நனவினு ளுதவாது கனவிருள் வேறுகுங்
(ந)கனவி னிலையின்றாற் காம மொருத்தி
யுயிர்க்கு †முசாஅ முலம்வரு மோவாள்
௫ கயல்புரை யுண்க ணரிப்ப வரிவாரப்
பெயல்சேர் மதிபோல வாண்முகந் தோன்றப்

---

க. இச்செய்யுளும் தேறுதலொழிந்த காமத்து மிகுதிறமாகிய பெருந் திணைக்கு மேற்கோள்; தொல். அகத். சூ. ௫௯. ௩ச.

உ. இந்நூற்பக்கம் அஅ௫-அஅக. பார்க்க.

௧. "கனவின் னெய்திய செல்வத்தனையதே" (கலி. ௧௮: ௨௪) என்பதும் அதன்குறிப்பும் "கண்படைகொண் டமர்வாழ்வும் பொய்யாகிக்கனவு கண்ட கதையாயிற்றே" கந்த. காமதகன. ௪0௧. என்பதும் நோக்குக.

(பிரதிபேதம்) * னிணைதவாது. † வயாஅம்.

௮௪௯ **கலித்தொகை ௧0௧.**

வாய்பகுத் திட்டுப் புடைத்தனான் * றின்னன்கொன்
மாயோனென் றுட்கிற்றென் னெஞ்சு

எ - து: கஞ்சன்முதலியோர் வாவிட்ட கழுத்தின்மயிரினையுடைய குதிரையை வாயைப் பிளந்துபோகட்டுக் கையால் † அடித்த அஞ்ஞான்றைக் கண்ணன் இத்தன்மையன்கொல்லென்று கூறும்படியாக ஒழியாத கோபத்தோடே வெவ்விதாய்த் தன்மேலே சென்ற சிவந்த ஏற்றைச் செவியடியிற் கொம்புகளைப் பிடித்துக்கொண்டு அதன்வலியை மீட்டுத் தழுவும், காயாம்பூவாற் செய்த கண்ணியையுடைய பொதுவன் அழகைப்பாராய்; ‡ அவனைக் கண்டு என்னெஞ்சு உட்கிற்றுக்காணென்றாள். எ - று.

௫௪ ஆங்கு, (௧)இரும்புலித் தொழுதியும் (௨)பெருங்களிற் றினமு
மாறுமா றுழக்கியாங் குழக்கிப் பொதுவரு
மேறுகொண் டொருங்குதொழூஉ விட்டனர் விட்டாங்கே
மயிலெருத் துறழணி மணிநிலத்துப் பிறழப்
பயில்இதழ் மலருண்கண்
மாதர் மகளிரு மைந்தரு மைந்துற்றுத்
(௩)தாதெரு மன்றத் தயர்வர் (௪)தழூஉ
௬௧ (௫)கொல்லேற்றுக் கோடஞ்சு வானை மறுமையும்
புல்லாளே || ஆய மகள்

கடு மூழ்செய் (டு)திரவும் பகலும்போல் வேறுகி
வீழ்வார்கட் டோன்றுந் தமோற்ற ஞாலத்துள்
வாழ்வார்கட் கெல்லாம் || வரும்

எ - து: மக்கள் விரைந்தனராய் விரும்புதல் தக்கதொரு தலைமைபோலே இருக்கின்ற காமமானது நள்ளிருட்கண்ணே கண்டவர்களுக்கு கனவின்கண் உதவாதே வேறுபட்டுப் போங் கனவினும் நிலைபெறுதல் இன்றாயிருந்தது; எவ்வாறெனிற் பலவாய்த் + தழைகின்ற கூந்தலையுடையாளாகிய ஒருத்தி தன் குணங்களை யெல்லாம் நுகர்ந்து தன்னைக் கைவிட்டவனை நினைந்து கெட்

க. மருளுமென்பதற்கு உரை காணப்படவில்லை.

உ. (அ) "உயிரினுஞ் சிறந்தன்று நாணே" தொல். கள. ரு. உஉ. (ஆ) "உயிரினுஞ் சிறந்தன், ஞுஎ்யாது மிலளாகி" கலி. கஎஎ: அ - க. (இ) "நாணுக் குறைவில ணங்கைமற் றெஎ்மரும்" பரி. கூ: சக. (ஈ) "நாண்முதற் பாசக் தட்ப" (உ) "நாண்சமக் கலாத நங்கை" சீவக. சஎ௦, உசசரு. (ஊ) "எண்பாலோவா நாண்........தம், பூண்பாலரகக் காண்பவர் கல்லார்" கம்ப. கைகேயி. ருக.

ரு. "யாக்கண்ணிற் காண நகுப வறிவில்லார், யாம்பட்ட தாம்படா வாறு" குறள். கக௪௦.

ச. (அ) "புணர்வும் பிரிவு, நன்பக லமையமு மிரவும் போல, வேறுவே றியல வாகி மாறெதிர்க், துளவென வுணர்ந்தனை யாயின்" என்பது ஒப்புநோக்கற்பாலது; அகம். கூஉஎ: க-ச.

டு. "உலக்காணைக் காதலர்" என்பதன் உரையில் (குறள் கக௪அ) 'அவர் செலவும் பசப்பினது வரவும் பகலிரவுகளின் செலவும் வரவும்போல்வ தறிந்து வைத்து அறியாதாய் போல நீ சொல்லுகின்றது தென்னை யென்பதாம்' என்று பரிமேலழகர் எழுதியிருப்பது ஈண்டறிதற்பாலது.

(பிரதிபேதம்) * அல்லாந்தாள், † மிகா அது தோன்றுசேர்ந்தமர்ந்தார்த்தவர், ‡ வவ்வாறெனிற். தறும், || வரும் தாழபு எ - து: மக்கள், + தழைக்கின்ற.





பேர்ப்புக் கொன்றும்; அவனோடு கூடமாற்றினைச் சிலபோழ்சவும்; நெஞ்சு

* சுழலும்; பெய்கின்ற மழையைச் சேர்ந்த மதிபோலே தன்முகந் தோன்றும் படியாகக் கயலையொக்குந் தன்கண்களினின்றும் † அரித்துவிழுகின்ற நீர் முகத்தே வடியும்படி ஒழியாளாய் அழாநிற்கும்; அவளை மறந்தானைப்போலே ஆராய்ந்து இடையே கருவுதலுஞ் செய்யும்; ஆகையினாலே தனக்குச் சிறந்த முன் (க) காணையும் ‡ மற்றுமுள்ள நன்மைக்குணங்களையும் நிலைபெறநினையாதே காமமொன்றையுமே (உ) நினைத்தவன் அவமந்தானென்று இங்ஙனம் இகழ்ந்துகூறி, எல்லாருங்காணஎன்னைச்சிறியாதேகொள்ளும்; (ங) ஐயறிவினையுடையவர்களே! சுருக்க யான் அதன்றன்மை கூறுவேன்; கேண்மினென்று கூறுகின்றவள், மகளிர் தோளைச்சேர்ந்தஆடவர் அவர்கள்வருத்தமிகும்படி பிரிதலும் பின்னர் நீண்ட சுரத்தைப்போனவர்கள் விரையவந்து அருள்செய்தலுமாகிய இரண்டும் இரவும் பகலும் போலே முறைமைசெய்து வேறாய் ஒருவரை ஒருவர் விரும்புவாரிடத்துத் தோன்றும்; இன்பம் நிலையில்லாமையான தமோற்றமாயிருக்குமது தனக்கேயன்றி உலகத்துக்கூடியிருந்து வாழ்வார்களுக்கெல்லாம் வருவதுஞ் செய்யுமென்று || அதன்றன்மை கூறினாள். எ - று.

---

க. "காணுவரை யில்லாக் காமம்" அகம். உ௦௪: உ௦.

உ. முனைதலென்பதற்கு நினைதலென்னும் பொருள் வேறெங்குங் காணப்படவில்லை.

௩. (அ) "மாவு மாக்களு மையறி வினவே" (ஆ) "மக்க டாமே யாறறி வுயிரே" தொல் மரபு. சூ. ௩உ, ௩௩. (இ) "அவமதிப்பு மான்ற மதிப்பு மிரண்டு, மிகைமக்க ளான்மதிக்கற் பால- நயமுணரார், கையறியா மாக்க ளிழிப்பு மெடுத்தேத்தும், வையார் வடித்தநூ லார்" நாலடி. க௬௩. (ஈ) "செவியிற் சுவையுணரா வாயுணர்வின் மாக்கள்" (குறள் ௪உ௦) என்பவைகளும் (உ) "தவஞ்செய் மாக்க டம்முடம் பிடாஅது, ததன்பய மெய்திய வளவை மான" (பொருந. ௯௧. ௯உ) என்புழி, மாக்களென்பதற்கு, 'மக்களென்னாது மாக்களென்றார்; வீடுபேறு குறியாது செல்வத்தைக் குறித்தலின்' என்றும் (ஊ) "பொழுதளக் தறியும் பொய்யா மாக்கள்" (முல்லை.௫௫) என்புழி, மாக்களென்பதற்கு, 'அறிவில்லாதோர்' என்றும் (எ) "மூவறு பாடை மாக்களால்" (சீவக. ௩௩.) என்புழி, மாக்க ளென்பதற்கு, 'மிலேச்சராதலின் ஐயறிவிற் குரிய மாக்களென்னும் பெயராற் கூறினார்' என்றும் (ஏ) "மையலங் கோயின் மாக்கள்" (சீவக. ௧உ௭௮) என்புழி, மாக்களென்பதற்கு,

'மக்கட்குரிய மனனின்றி அறிவு கெட்டமையின், ஐயறிவுடையா ரென்று மாக்களென்றார்' என்றும் இவ்வுரையாசிரியர் எழுதியிருக்கும் விளக்கங்களும் (ஐ) "கடவாமடிசி" என்னுஞ் சூத்திரத்தின் விசேடவுரையில் 'கையறியா மாக்கட்கன்றி நாலியற்றும் அறிவினையுடைய

(பிரதிபேதம்) * பழுதும், † மறித்து; ‡ மற்றன்ன, || அதனை நன்மை கூறினான். றந்து.



கஅ தாழ்பு; துறந்து தொடிநெகிழ்த்தான் போகிய கான
(க)மிறந்(உ)தெரி நையாமற் பாஅய் முழங்கி
வறந்தென்னை செய்தியோ வானஞ் சிறந்தவென்
கண்ணீர்க் கடலாற் (ஈ)கனை துளி வீசாயோ
கொண்மூக் குழீஇ முகந்து

எ - து: அன்னைக் கூறி அவர் சுக்ககுல் யாம் இங்ஙன்மாயினே மென்று கருதி அழுகின்றவள் ஆண்டெழுந்த வெண்மேகத்தைநோக்கி, வானமே! நீ பெய்யாதே வறந்து என்னைகாரியஞ் செய்கின்றாய்? நின் இனத்தோடே கூடி எங் கண்ணீரால் சிறந்த கடலிலே முகந்து பரந்து முழங்கி முன்னர் என்னிடத்தே தாழ்ந்து பின்னர் என்னைத் துறந்து * செருக்(ச)தொடியை உட்பட நெகிழ்த்தவன் போகிய கானத்தின் நெருப்பு மிக்குச் சுடாமற் செறிந்த துளியை வீசாயோ? வீசென்று மழையை நோக்கிக் கூறினாள். எ - று.

கூ நுமக்கெவன் போலுமோ வூரி ரெமக்குமெங்
(ரு)கண்பாயல் கொண்டுள்ளாக் † காத லவன்செய்த

---

மக்கட்குப் பலகலைக்குரிசில் பவணந்தியென்னும் புலவர் பெருமான் புகழ்போல விளங்கி நிற்றலான் உலகமலையாமை யுள்ளிட்ட பத்தழ கோடும் பிறந்து நின்றது இச் சூத்திரமென்று உணர்க' என்று (நன்.

பத். கு ௧௦.சங்க :.விருத்தி) காணப்படுவதும்(ஏ)"தக்கவின்ன தகாதன வின்னவென், றொக்க வுன்னல ராயி னுயர்ந்துள, மக்களும் விலங்கே" (கம்ப. வாலி. ௧௩௨) என்பதும் இங்கே அறிதற்பாலன.

௧. (அ) "வியப்பிறந் தன்று" புறம். ௨௧௭: ௧. (ஆ) "இறப்பச் சிறிதென் றது" (இ) "இறப்ப நினையுங்கால்" (ஈ) "இறப்பவே தீய செயினும்" நாலடி. ௧௧; ௧௭௪; ௨௨௩. (உ) "இன்ப மிறந்ததே" சீவக. ௧௭௦. (ஊ) "இறப்பப் புகழ்ந்தன்று" பு - வெ. கைக். ஆண். ௭. என்பவற்றிலும் இறத்தலென்பது மிகுதலென்ற பொருளில் வருதல் காண்க.

௨. (அ) "கோடெரி நைப்பவும்" பொருந. ௨௩௪. (ஆ) "எரிகானனைப்ப" நற். ௧௭௭: ௧. (இ) "ஒள்ளெரி நைப்ப" புறம். ௨௪௦: ௧௦.

௩. (அ) "கனைதுளி" (ஆ) "கனைபெயற் றண்டுளி" கலி. ௧௩; ௭; ௧௦: ௨௨.

௪. இந் நூற்பக்கம் ௮௪௦: ௧-ஆம் குறிப்பும் இச்செய்யுள் ௪௭-ஆம் அடியும் இங்கே அறிதற்பாலன.

௫. (அ) "கண்பாயல் கொண்டு" (ஆ) "கண் பாயல் கொள" (இ) "கண் பாயல் பெற்றபோல்" கலி. ௭௦: ௮; ௮௭: ௧௩; ௧௨௧: ௫.

(பிரதிபேதம்) * நெருக்குந் தொடியை, † காதலவன் செய் பண்பு.

௩௨௪ கலித்தொகை ௧௪௫.

பண்பு தரவந்த வென்றொடர் நோய்(௧)வேது
கொள்வது போலுங் (௨) கடுப்பகன் ஞாயிறே
யெல்லாக் கதிரும் பரப்பிப் பகலொடு
செல்லாது *நின்றீயல் வேண்டுவ லீசெல்லிற்
(௩)புல்லென் மருண்மாலைப் போழ்தின்று வந்தென்னைக்
கொல்லாது போத லரிதா லதனொடியான்
செல்லாது நிற்ற லிலேன்
௩௨ துல்லியெவ், காதலர்க் கொண்டு கடலூர்ந்து காலைநாட்
போதரிற் (௪) காண்குவேன் மன்னோ பனியொடு
மாலைப் பகைதாங்கி †யான்

இனியனென், றேம்படுப்பன் ஞாயி றிவி

எ-து: அங்ஙனங் கூறி, மீண்டும் அவ்வூரிலுள்ளாரை நோக்கி, ஊரிலுள்ளீர்! இக்கடும்பகல் எமக்கு எங்கண் (௫) உறக்கத்தைக் கைக்கொண்டு எம்மை நினையாத காதலையுடையவன் என்னிடத்துச் செய்த குணங்கள் தருகையினாலே வந்த என்னுடைய இடையறாத நோயான் வருங் குளிரை ‡ வேது கொள்வதுபோலே இராநின்றது; இது நடுக்கு என்போலே இருக்கின்றது || கூறாயினென்றாள்; அங்ஙனங் கூறி, இங்ஙனம் வேதுகொண்டு என்னைக் காக்குங் + கடும்பகல் ஞாயிறே! நீ எல்லாக் கதிர்களையும் பரப்பி இப்பகற் பொழுதோடே போகாது நிற்றலை விரும்பாநின்றேன்; அதற்குக் காரணம் என்னெனில், நீ போகிற் புற்கென்ற மயக்கத்தைத் தரும் மாலைக்காலம் இன்று வந்து என்னைக்கொல்லாமற்போத லரிது; அதனோடே யான் உயிர் போகாநிற்குந் தன்மையையுடையேனல்லேன்; ஆதலாற் X காவென்றாள்; என்று பின்னும் ஞாயிறே! நீ எங்காதலரை விரையக் கொண்டு கடன்மேலே வந்து நாட்காலையிலே இவ்வுலகிலே போதுவாயாயின், யான் என்னுயிரின் மயக்கத்தோடே மாலையாகிய பகையையும் பொறுத்து, நின்னிடத்து அவன்

௧. "வேதுகொண் டொற்றியே" கலிங்க. கடை. ௧௨.

௨. கடியென்னு முரிச்சொல் விளக்கமென்னுங் குறிப்புணர்த்தி வருதற்கு, "கடும்பகன் ஞாயிறு" என்பது ௧௪. உரையிலும் "கடும்பகல்" என்பது சேனா. உரையிலும் மேற்கோள்; தொல். உரிச். ௬. ௮௭.

௩. "புன்கண்ணை வாழி மருண்மாலை யெங்கேள்போல், வன்கண்ண தோநின் றுணை" குறள். ௧௨௨௨.

௪. 'காண்குவேன் கொல்லோ' என்று உரையிலுள்ளது.

௫. இந்நூற்பக்கம் ௧௬௬: ௩-ஆம் குறிப்புப் பார்க்க.

(பிரதிபேதம்) * நின்றீதல் வேண்டேடேனி செல்லிற், † யான். எ-து. அங்ஙனங்கூறி, ‡ வேதுகொள்வது போலே, || கூறாயினென்றாள். உம்மை மிகை நிறை. அங்ஙனங்கூறி, + கடும்பகலையுடைய ஞாயிறே, X காவென்றாள்.

இனியன்; அவனை நீ தனித்திராதேகொள்ளென நெஞ்சினைப்பாதுகாப்பதுஞ் செய்வேன்; அவ்வனம் பாதுகாத்துப் பின்னர் அவனைக் காண்பேன்கொல்லோ; என்றாட்கூறினாள். எ - று.

உம்மை, இசைநிறை. நின்றீயல், தொழிற்பெயர்த்திரி†சொல்.

௩௬ ஒள்வளை யோடத் துறந்து துயர்செய்த
கள்வன்பாற் பட்டன் றெளித்தென்னை யுள்ளிப்
பெருங்கடல் புல்லெனக் கானல் புலம்ப
விருங்கழி (க)நெய்த லிதம்பொதிந்து தோன்ற
விரிந்திலங்கு வெண்ணிலா வீசும் பொழுதினான்

---

க. நெய்தலென்பது ஒரு நீர்ப்பூங்கொடி; இதனானே கடல் சார்ந்த நிலம் நெய்தனிலமெனப்பட்டதென்பார் ஒருசாரார். (தொல் அகத். சூ. ௫. இள. நச். நாற்கவி. அகத். சூ. க. உரைபார்க்க.) இக்கொடி திரண்டதாளையும் பசிய இலையையும் நறுமணமுள்ள பூவையுமுடையது; இதன் இலை யானைக்கன்றின் காதிற்கும், இதன்முகிழ் மாணுக்கர்குமிக்கும், இதன் பூவிதழ் வேலுக்கும் உவமையாய் வந்துள்ளன. இதற்கு விடியற்காலத்தில் மலர்தலும் மாலைக்காலத்திற் குவிதலும் இயல்பாம். இம்மலரால் நெய்தனிலமகளிர் தழையும் மாலைமுதலியனவும் செய்து அணிதலும் சிற்றில் முதலியவற்றுக்குப் புனைதலும் உண்டென்று பண்டைநூல்கள் கூறும். இம்மலரிற் கருநிறமுடைய சாதி கருநெய்தலென்றும் வெண்ணிறமுடையசாதிவெண்ணெய்தலென்றும் வழங்கப்பெறும். இவற்றுட் கருநெய்தற் பூவுக்கு நீலமணியும் அதனிதழுக்கு மகளிர் கண்ணும் உவமையாக வருகின்றன. மகளிர் கண்ணுக்கு இவ்விதழும் உவமையாம். (இந் நூற்பக்கம் அகரூ : ௩ ஆம் குறிப்புப் பார்க்க.) இவையும் பிறவும் (அ) "கணைக்கா னெய்தல்" பெரும்பா. உகரு; நற். ககஅ : ௬; குறுந். ௯; அகம். ௩௫௦ : ௪. (ஆ) "சிறுபாசடைய நெய்தல்" நற். உஎ : கக. (இ) "கமழ்நறு நெய்தல்" நற்

உஅரு: உ. (ஐ) "நெய்தல், கட்கமழ்ந் தாணுத் துறைவற்கு" ஐங். கஙக. (உ) "இரும்பிடி............நெய்தலம் பாசடை புரையு மஞ்செவிப், பைதலங் குழவி தழீஇ" நற். சஎ: க - ச. (ஊ) "நெய்தன் முகிழ்த் துணைய வாய்குமிழ்" சிறுபஞ். ரு௦. (ஏ) "நெய்த லிடையிடை வாளை பிறழ்வனபோ, லுநிலவ் கெண்டை னவி ரொளிவா டாயினவே" கலவழி. ருரு. (ஏ) "வைகறைக், கட்கமழ் நெய்த லூதி யெற்படக், கண்போன் மலர்ந்த காமர் சுனைமல, ரஞ்சிறை வண்டி னரிக்கண மொலிக்குங், குன்ற" முருகு. எரு-எஎ. (ஐ) "வைகறை மலரு நெய்தல் போலத், தகைபெரி துடைய காதலி கண்ணே" ஐங்குறு. கஅஅ.

(பிரதிபேதம்) * உறிஞன் கின்றியல், † சொல். இனியனென்றேய்ப்படுப்பன் ருயிறின் யொன்னன.



கலித்தொகை கசரு.

யான்வேண் டொருவனென் னல்லனுழீ இயான்
றான்வேண்டு பவரோடு துஞ்சங்கொ றுஞ்சாது
வானு நிலனுந் திசையுந் * துழாவுமென்
னுனைப் படர்மிக்க நெஞ்சு

(ஒ) "வள்ளிதழ் நெய்தல் கூம்ப............புலம்பொடு வந்த புன்கண் மாலை" (ஓ) "நெய்தல் கூம்ப நிழல்குணக் கொழுக" நற். ககஎ: ரு-எ; கஅஎ: க. (ஔ) "தண்கடற் சேர்ப்பன் பிரிந்தெனப் பண்டையிற், கடும்பகல் வருதி கையறு மாலை, கொடுங்கழி நெய்தலுங் கூம்பக், காலை வரினுங் களைஞரோ விலரே" ஐங். கஅரு. (௦) "நெய்த, லுண்டா தகன்டு வண்டினந் துறப்ப,...........வந்தமாலை" அகம். ருச௦: ச - க. (அஅ) "புன்கண்கூர் மாலைப் புலம்புமென் கண்ணே போற், றுன்ப முழவாய் துயிலப் பெறுதியா, லின்கள்வாய் நெய்தானீ யெய்துங் கனவினுள், வன்கணர் கானல் வரக்கண் டறிதியோ" சிலப். எ: ருரு. (ஆஆ) "நெடுங்கா னெய்த, லம்பகை நெறித்தழையணி பெறத்தைஇ" நற். கக: எ-அ. (இஇ) நெய்தற், பூவுட னெறிதருஉத் தொடலை தைஇ" நற் கருஅ: ச-எ, (ஈஈ) "நெய்தலம் பகைத்தழைப்

பாவை புனையா, ருடலகக் கொள்வோ ரின்மையிற, றொடலைக் குற்ற சிலபூ வினரோ" ஐங். கஅஎ. (உஉ) "செய்த, னெகேத்தொடை வேய்ந்த நீர்வார் கூந்தல்" குறுந். சஉக. (ஊஊ) ''ஒன்னுதன் மகளிர்......... செய்த, லகல்வரிச் சிறுமனை யணியுந் துறைவ'' நற். உஅங: க - ங. (எஎ) "மணிக்கலத் தன்ன மாயிதழ் செய்தற், பாசடைப் பனிக்கழி" பதிற். கூ0: உ-ங. (எஎ)"மணிநிற செய்தல்"ஐந்திணை யெழு. ச0.(ஐஐ) "தண்ணே ரொப்பின் கமழ்நறு செய்தல்" நற் உஅங: உ. என்ப வற்றால் அறியலாகும். பிங்கல முதலிய நிகண்டுகளையும் உரைகளையும் நோக்க, கருசெய்தலும் நீலமும் ஒன்றே யென்ற ஐயமுறுமாயினும், (ஒஒ) "கட்கமழு நறுசெய்தல், வள்ளித ழவிழ்நீலம்" மது. உ௫0-உ௫க.

(ஔஔ) "பல்லிதழ் நீலமொடு செய்த னிகர்க்குந், தண்டுறை யூரன்" ஐங். உ. என்பவற்றால் இவை வேறுவேறென்பது விளக்கமாகும். இங்கே கூறிய ஐங்குறுநூற்றுச் செய்யுளின் விசேடவுரையில், (ஔஔ) 'சிறப் புடைய கருங் குவளையுடனே சிறப்பில்லாத செய்தல் நிகர்க்கும் ஊர னென்றது, குலமகளிருடனே பொதுமகளிர் இகலுமூரன்' என்று எழுதியிருப்பதும் உற்றுநோக்கற் பாலது. (ஃஃ) "சிறுமா ணெய்தல்" புறம். கக: உ. எனவருவதும் நோக்குக. (அஅ) "நீணறு செய்தல்"

நற்றி. எக. (ஆஆ) "தண்ணறு செய்தற் றளையவிழ் வான்பூ" ஐங். கக0. என வெண்ணெய்தலும் சிலவிடத்துக் கூறப்படுகிறது. வெண் ணெய்தலும் ஆம்பலும்ஒன்றாயின் அதுவும்பயின்று வருவதென்னலாம்.

(பிரதிபேதம்) ஈழவு மேன்.

## ஐந்தாவது நெய்தல் உஅ. கூஉஎ

எ - து: அன்னைம் ஞாயிற்றை நோக்கிக் கூறின அளவிலே மாலைக்கால முந் திங்களும் * வந்தன; அவற்றான் வருத்தமிக்கு, என்னுடைய அமையாத வருத்தமிக்க நெஞ்சு முன்பே ஒள்ளிய வளை கழலும்படி என்னைக் கைவிட்டுப்

பின்பு வருத்தஞ்செய்த கள்வனை உள்ளி என்னை ஒளித்துப்போய் அவன்பாற் பட்டது; அது தான் மீண்டுவந்து பெருங்கடல் தன்னிறந் தோன்றுமற் புற் கெனக் கானல் பறவைகள் முதலியனவின்றித் தனிப்பக் கழியின்செய்தல் இதழ்குவிந்துதோன்ற வந்த †மாலைப் பின்னர் விளக்குகின்ற வெண்ணிலாப் பாக்கும்பொழுதின் கண்ணே விசும்பையும் நிலத்தையுந் திசைகளையும் அவ னைத் தேடித் (க) துழாவாநிற்கும்; இங்ஙனம் என்னை அல்லலுறீஇயினவன், தான் விரும்பாமல் யான் விரும்பப்பட்டான் ஒருவன்; அவன் தன்னை விரும்பு கின்ற என்னோடே துயிலாது தனியே துயில்கொள்ளுமோ சொல்லாயோ என்று கூறினாள். எ - று.

வேண்டுபவர் என்றாள், தன்னைப் பிறர்போல.

சுகு (உ) ஊரவர்க் கெல்லாம் பெருநகை யாகியென்

(௩) னாருயி ரெஞ்சுமன் னங்குநீ சென்றீ

நிலவுமிழ் வரன்‡திங்கா ளாய்தொடி கொட்ப

வளிபுற மாறி யருளான் றுறந்தவக்

காதலன் செய்த கலக்குறுநோய்க் கேதிலா

ரெல்லாருந் தேற்றார் மருந்து

எ - து. அங்ஙனங் கூறி, எழுந்த திங்களை நோக்கி, நிலவைக் கான்ற திங்களே! தோள்மெலிந்தகாலத்துச் செருகலாமென்று ஆராய்ந்த தொடி உட் படச்சுழலும்படி அளித்தலை என்னிடத்து மாறி, பின்னர் என்னை ‖ அருள் செய்யாதே கைவிட்ட அக்காதலன் செய்த, மனக்கலக்கம் உறுகின்ற காம நோய்க்கு நின்னை ஒழிய அயலிலுள்ளார் எல்லாரும் [அதற்கு] ஒருமருந்தைத் தெளிவித்துக் கூறார்; ஆதலால் ஊரவர்க்கெல்லாம் பெரியதோர்நிகழ்ச்சி யுண்டாம்படி என் அரிய உயிர் போகாநிற்கும்; இதனை நோக்கித் திங்களாய

---

க. "கவிழ்ந்து, நிழ்றுழாம் யானை" தண்டி. சூ. உக: மேற்கோள்; "சிறு குரங்கின் கையாற் றுழா" பழ. நிக.

உ. "ஊர்க் கெல்லாஞ் சாலும், பெருநகை யல்க னிகழ்ந்தது" கலி. சுஙி. க - உ.

௩. (அ) "ஆருயி ரெஞ்சும், வகையினுல்" (ஆ) "ஆருயி ரெஞ்ச" கலி:

௧௩௧: உ௪-உ௭; ௪௯௩: ௧௩.

(பிரதிபேதம்) * வந்தென அவற்றுள். † மாலையின்னர். ‡ திங்களாய்த்தொடி. || அருளை செய்யாதே, ÷ இகட்டு.



புத்தேளே! நீ (௧) அவன்பாற் * சென்று என்குறை முடிப்பாயாக என்று கூறினாள். எ - று.

ஆசி, ஆக.

௫௧ விளக்கொண்டேன் காமநோய் நீக்கிய வூரீ
ரெனைத்தானு †மெள்ளினு மெள்ளலன் கேள்வ
னினைப்பினுங் கண்ணுள்ளே தோன்று மனைத்தற்கே
யேமரா தேமரா வாறு

எ - து; அன்னைக் கூறிய திங்கள் போகா நிற்றலின் அதனைக் கைவிட்டு இன்னும் நம் வருத்தமுணர்ந்து வினவிய ‡ ஊரிலுள்ளாரே நம் வருத்தந் தீர்த்தற்குரியரென்று கருதி, ஊரீர்! நீர் என்னை இகழ்ந்திருக்கினும் என்கேள்வன் சிறிதும்என்னை இகழ்கிறான்; அதற்குக் காரணமென்னெனில், மெய்யுற்றுப்புணர்ந்து யான் பரிகாரப்படாததொரு நெறியிலே நின்று நெஞ்சால் நினைப்பிடத்துத்தோன்றுதலினுங் காட்டிற் ||கண்ணினிடத்தேதோன்றும்; அவ்வளவு அருள்செய்தற்கு என்னெஞ்சு தான் பரிகாரப்படுகின்றதில்லை; இதனை நும்முடையதோர் தொழிலாக ஏறட்டுக்கொண்டு எனது காமநோயை நீக்குதற்கு நல்ல ×காலமென்று கூறினாள். எ - று.

௫௫ கனையிருள் (உ)வானங் கடன்முகந் தென்மே
லுறையொடு நின்றீயல் வேண்டு மொருங்கே
நிறைவளை கொட்பித்தான் செய்த துயரா
லிறையிறை (௩)பொத்திற்றுத் தீ

எ - து: அன்னைக் கூறி, அவனைத் தந்து ÷ இவர் இந்நோயை நீக்குமளவும் செறிந்த இருளையுடைய மேகமே! நிறைந்த வளை சுழலப் பண்ணினவன் செய்த வருத்தத்தாலே எனக்குச் சந்துதொறுஞ் சந்துதொறும் காமத்தீ மூண்டது; இதன் வெம்மை ஆறும்படி கடலிலே முகந்து என்மேலே சோ

இடைவிடாமற்பெய்யுந் துளியோடே நிற்றலைச் செய்தல் ∴ வேண்டும்; என்று கூறினள். எ - று.

---

௧. 'ஈங்கு முதலியன தன்மைக்கண்ணும் ஆங்கு முதலியன படர்க்கைக் கண்ணும் அடக்கப்பட்டன' (தொல். கிளவி. சூ. உ௮. நச்) என்பது இங்கே அறிதற்பாலது.

௨. "கார்தலைக் கொண்டு பொழியினுந் தீர்வது, போலாதென் மெய்க் கனலு நோய்' கலி ௧௪௪: ௪௪-௪௫.

௩. "எரிபொத்தி" (கலி. ௩௪. ௧௧) என்பதும் அதன் குறிப்பும் பார்க்க.

(பிரதிபேதம்) * சென்றேதுறை, † என்னிறுமென்னிலன், ‡ வரிதுன்னாரே அவனே நம் வருத்தந் தீர்த்தற்குரியானென்று கருதினீர்! நீரென்னே, || கண்ணிடத்தே, × காரணமென்று ┼ அவன் இங்கோவை, ∴ வேண்டுமென்று.



௩௧ எனப்பாடி
நோயுடை நெஞ்சத் தெறியா விளிபேஎய்
யாவிரு மெங்கேள்வற் காணீரோ வென்பவட்
கார்வுற்ற பூசற் கறம்போல வெய்தந்தார்
பாயல்கொண் டுள்ளா தவரை வரக்கண்டு
மாயவன் மார்பிற் * றிருப் போல் பவள்சேர
(௩)ஞாயிற்று முன்ன ரிருள்போல மாய்ந்ததென்
னாயிழை யுற்ற துயர்

இ - ள்: †என்று அங்கு அவ்வனஞ்சொல்லிக் காமநோயையுடைய நெஞ்சிலே அடித்துக்கொண்டு வருந்தி அழுது, நீங்கள் எல்லீருந் தேடிச் சென்றும் எங்கணவரைக் காணப் பெற்றிலீரோ என்று கூறுகின்றவட்கு உற்ற வருத்தமானது, தன் துயிலைவாங்கிக்கொண்டு தன்னைநினையாதவரைத் தன்னிடத்தே வரக்கண்டு அவர் மார்பிடத்தே மாயவன் மார்பில் திருச்சேர்ந்தாற்போலே அவள்சேர ஞாயிற்றின்முன் இருள் கெடுமாறு போலக் கெட்டது; ஆதலால், இவ்வாயிழை பசப்புற்ற வருத்தத்திற்(கு அறக்)கடவுள் உதவித் தீர்த்தாற்போல

அவரும் உதவித் தீர்த்தாரென்று கண்டார் வியந்து தம்மிற் கொண்டுகூறிற்றாக உரைக்க. எ - று.

இது கண்டார்க்கு அவளாக்கம் கண்டு மருட்கை பிறந்தது.

'நோய்வேது கொள்வதுபோலுங் கடும்பகல்' என்னுந்துணையும் கூறத் தகாதன கூறலின்‡ மடனிறந்தவாறும் 'பனியொடு மாலைப்பகை தாங்கியான்' எனத் தன் வருத்தந் தோன்றுமற் கூறலின் வருத்தமிறந்தவாறும் 'கண்ணீர்க் கடலால்' என்றதனையும் 'வானுநிலனுந் திசையுந் துழாவுமென்.....னெஞ்சு' என்றதனையுந் தான் வியவாமையின் ‖மருட்கையிறந்தவாறும் 'எங்கண்பாயல் கொண்டு' என்றும் 'ஒள்ளிழையோட' என்றும் வனப்பு மிகுதி கூறலின் மிகுதி யிறந்தவாறுங் காண்க.

இஃது ஐஞ்சீரடிவந்த தாவும் ஐஞ்சீரடுக்கிய குறுவெண்பாட்டும் ஓரடியா னென்றும் பெற்றுக் கலிவெண்பாவின் வேறுபட்ட பாகிலைவகைக் கொச்சகம்.

(கசஎ) உரைசெல வுயர்ந்தோங்கிச் சேர்ந்தாரை யொருநிலையே
வரைநில்லா விழுமமுறீஇ நடுக்குரைத்துத் தெறன்மாலை
யரைசினு மன்பின்றுங் காமம் புரைதீர

க. "ஞாயிற்று முன்ன ரிருள்போல மாய்ந்ததென், ஞயிழை மேனிப் பசப்பு" (கலி. சஉ: ககூ-கூஉ) என்பதும் அதன் குறிப்பும் ஒப்பு நோக்கற்பாலன.

(பிரதிபேதம்) * இருப்போலயன்சோ † என்றதனை ‡ மடனிறந்தவாறும் ‖ மருட்கை பிறந்தவாறும்.





வண்ணமென் சேக்கையு ளாரா தளித்தவன்
ரு றுன்னி யகலத் துறந்த வணியளாய்
நாணு நிறையு முணர்கல்லா டோண்ஞெகிழ்பு
பேரம ருண்க ணிறைமல்க வந்நீர்தன்
கூரெயி றுடிக் குவிமுலைமேல் வார்தாத்
தேர்வழி நின்று தெருமரு மாயிழை

கூறுப கேளாமோ சென்று;

கக எல்லிழாய், எற்றி வரைந்தானை நாணு மறந்தாளென்
றற்றனிர் போல வினவுதிர் மற்றிது
கேட்டீமி னெல்லீரும் வந்து;

கச வறந்தெற மாற்றிய வானமும் போனு
நிறைந்தென்னை மாய்ப்பதோர் வெள்ளமும் போனுஞ்
சிறந்தவன் றூவற நீப்பப் பிறங்கிவர்
தென்மே னிலைஇய நோய்;

கஅ நக்கு நலனு மிழந்தா ளிவளென்னுந்
தக்கவிர் போனு மிழந்திலேன் மன்னோ
மிக்கவென் னுணு நலனுமென் னுள்ளமு
மக்கா லவனுழை யாங்கே யொழிந்தன
வுக்கா ணிஃதோ வுடம்புயிர்க் கூற்றாகச்
செக்கரம் புள்ளித் திகிரி யலவனொடியா
னக்கது பன்மா னினைந்து;

உ௦ கரைகாணு நோயு ளழுந்தா தவனைப்
புரைதவக் கூறிக் கொமிமை றுவல்வீர்
வரைபவ னென்னி. னகலா னவனைத்
திரைதரு. முந்நீர் வளாஅக மெல்லா
நிரைகதிர் ஞாயிற்றை நாடென்றேன் யானு
முரைகேட் புழியெல்லாஞ் செல்வேன் புரைதீர்ந்தான்
யாண்டொளிப் பான்கொல்லோ மற்று;

௩.௨ மருள்கூர் பிணைபோன் மயங்கவெந் நோய்செய்யு
மாலையும் வந்து மயக்கி யெரிநுதி
யாமந் தலைவந்தன் றாயி னதற்கென்னோய்
பாடுவேன் பல்லாருட் சென்று;

௬௫ அஞ்சார் கொலையேறு கொள்பவ ரல்லதை
நெஞ்சிலார் தோய்தற் கரிய வுயிர்துறந்து
நைவாரா வாயமக டோள்
௬௮ வலியா வறியா வுயிர்காவல் கொண்டு
நலிவாய் மருப்பஞ்சு நெஞ்சினர் தோய்தற்
கெளியவோ வாயமக டோள்
௭௧ விலைவேண்டா ரெம்மினத் தாயர் மகளிர்
கொலையேற்றுக் கோட்டிடைத் தாம்வீழ்வார் மார்பின்
முலையிடைப் போலப் புகின்
௭௪ ஆங்கு
(க)குரவை தழீஇயா மரபுளி பாடித்
†தேயா(உ)விழுப்புகழ்த் தெய்வம் பரவுது
மாசில்வான் முந்நீர் பரந்த தொன்னில
மாளுங் கிழமையொடு புணர்ந்த
வெங்கோ வாழியரிம் மலர்தலை யுலகே.

எ - து: அவ்விடத்தே அப்படிக்காட்டி (ங.)மயிலினதுகழுத்தை மாறுபடுகின்ற அணியப்பட்ட காயாம்பூவாற் செய்த கண்ணிகள் பலவும்போலும் நிறத்தையுடைய சிவந்தநிலத்தே மாறுபட்டுக்கிடக்கும் பொதுவரும் பெரிய புலித்திரளும் பெரிய களிற்றுத்திரளும் தம்முள் மாறுமாறாய்ப் பொருதாற்

---

க. "முல்லை நிலத்துக் கோவலர், பல்லா பயன்றருதற்கு மாயோன் ஆகுதிபயக்கும் ஆபல காக்கவெனக் குரவை தழீஇ மடைபல கொடுத்தலின் ஆண்டு அவன் வெளிப்படுமென்றார்" (தொல். அகத். சூ. ௫. நச்.) என்பது ஈண்டு அறிதற் பாலது.

உ. (அ) "புகழொத் தீயே யிகழுந ரடுநனை" (ஆ) "புகழ்ந்த வுற்றோர்க்கு மாயோ னன்ன, வுரைசால் சிறப்பிற் புகழ்சால் மாற" புறம். ௫௬: ௧௩, ௫௭: ௨-௩; (இ) "உரைசால் சிறப்பி னெடியோன்" சிலப். ௨௨. ௪௦.

ங. (அ) "கருநனைக் காயா கணமயி லவிழவும்" சிறுபாண். ௧௬. (ஆ) "புல்லென் காயாப் பூக்கெழு பெருஞ்சினை, மென்மயி லெருத்திற் றோன்றும்" குறுந். ௧௮௩. (இ) "கலவ மாமயி லெருத்திற் கடிமல

ரவிழ்த்தன காயா" சேவக. கடுடுஅ. எனவும், (ங) "பூவை மலர்புரை யெருத்த மஞ்ஞை" காஞ்சிப். சுழுவாய்ப். கஅடு.(உ) "பறவைப்பூவை

(பிரதிபேதம் * வேண்டாரேம்மினாயர், † தொய்யாவிருப்புகழ்.

ஐந்தாவது நெய்தல் உக. 

ருச யானுற்ற வெவ்வ முரைப்பிற் பலர்த்துயிற்றும்
யாமநீ துஞ்சலை மன்;
ருஅ கதிர்கொண்ணு ஞாலந் துயிலாரா தாங்கண்
முதிர்பெண்மேன் முற்றிய வெந்நோ யுரைப்பிற்
கதிர்கண் மழுங்கி மதியு மதிர்வதுபோ
லோடிச் சுழல்வது மன்;
சஉ பேரூர் மறுகிற் பெருந்துயிற் சான்றீரே
நீரைச் செறுத்து நிறைவுற வோம்புமின்
கார்தலைக் கொண்டு பொழியினுந் தீர்வது
போலாதென் மெய்க்கனலு நோய்;
சசு இருப்பினு நெஞ்சங் கனலுஞ் செலினோ
வருத்துறும் யாக்கை வருந்துத லாற்றே
னருப்ப முடைத்தென்னு ளெவ்வம் பொருத்திப்
பொறிசெய் புனைபாவை போல வறிதுயங்கிச்
செல்வேன் விழும முழந்து;
ருக எனவாங்குப் பாட வருளுற்று;
வறங்கூர் வானத்து வள்ளுறைக் கலமரும்
புள்ளிற் கதுபொழிந் தாங்கு மற்றுத்தன்
னல்லெழின் மார்பன் முயங்கலி
னல்ல தீர்ந்தன் றாயிழை பண்பே.

(க) இதுவுமது. இதற்கும் (உ) முன்னங் கூறிய உரையைக் கூறிக்கொள்க.

இதன் பொருள்.

உரைசெல வுயர்ந்தோங்கிச் சேர்ந்தாரை யொருவிலையே

வரைநில்லா விழுமமுறீஇ நடுக்குரைத்துத் தெறன்மாலை
யரைசினு மன்பின்றுங் காமம் புரைதீர
(ங)வன்னமென் சேக்கையு ளாரா தளித்தவன்

---

க. இச்செய்யுளும் தேறுதலொழிந்த காமத்து மிகுதிறமாகிய பெருந்திணைக்கு மேற்கோள்; தொல். அகத். ரு. கஉ. ௩௪.

உ. இந்நூற்பக்கம் அஅுு-அஅக. பார்க்க.

ங. (அ) "தூவி யன்னமென் சேக்கையுள்" (கலி. கங: கரு) என்பதும் (ஆ) "இணைபட.........துணைபுண ரன்னத்தின் றூவிமெல் லணை" (கலி. எஉ: க-உ) என்பதும் (இ) அதன் குறிப்பும் இங்கே அறிதற்பாலன.

கஙஉ கலித்தொகை க௬௪.

ரு றுன்னி யகலத் துறந்த வணியளாய்
நாணு நிறையு முணர்கல்லா டோண்ஞெகிழ்பு
(க)பேரம ருண்க ணிறைமல்க வந்நீர்தன்
கூரெயி(உ)று டிக் குவிமுலைமேல் *வார்தரத்
தேர்வழி நின்று தெருமரு மாயிழை
கூறுப கேளாமோ† சென்று
கக எல்விழாய்,(ங)எற்றி வரைந்தானை நாணு மறந்தாளென்
‡றுற்றனிர் போல வினவுதிர் மற்றிது
கேட்டீமி னெல்லீரும் வந்து
கச வறந்தெற மாற்றிய வானமும் போலு
நிறைந்தென்னை மாய்ப்பதோர் வெள்ளமும் போலுஞ்
சிறந்தவன்(ச)றூவற நீப்பப் பிறங்கிவர்
தென்மே னிலைஇய நோய்

எ-து: ||அரசன் தனக்குப் புகழ் உயர்ந்து நடக்கும்படியாகத் தம்மறிவான் மிக்குச் சேர்ந்த (ரு) அமைச்சரை முன்னர் நடுக்கமான மொழிகளைக் கூறிப் பின்னர் ஒரு படியிலே எல்லையில்லாத இடும்பைகளை உறுவித்துக் கொல்லுதலை இயல்பாகவுடைய கொடுங்கோலரசனிலுங்காட்டில், × கணவர்க்கு மகளிர்க் குண்டாகிய காமத்தாலும் அவர்மேல் நிகழும் அன்பு இல்லையாமாயிருந்தது ;

எங்ஙனேயென்னில் அவ்வாயிழை தன்றலைவன் அன்னத் தூவியாற் செய்த மெல்லிதாகிய சேக்கையிலே அளித்து இராக்காலத்தேவந்து துன்னிக் கூரிய எயிற்றினீரை நுகர்ந்து குற்றந் தீரத் தலையளிசெய்து நீங்குகையினாலே அத் தலையளியால் ஆராமல் தன்னை நீங்கின அணிகளை யுடையளாய்த் தனக்கியல்பாகிய நாணையும் நிறையென்னுங் குணத்தையும் தாங்குதல் + வேண்டுமென்று அறியாளாய்த் தன் தோள் மெலிந்து பெரிய அமர்த்த

---

க. "போம ருண்கணின் றேழி" கலி. கo: கக.

உ. ஆடுதலென்பதற்கு நுகர்தலென்னும் பொருள், "செய்தற்று தமர்த் தாடி" (கலி. எச: உ) என்றவிடத்தும் கூறப்பட்டிருக்கிறது.

ங. இந்நூற் பக்கம் ககரு: க-ஆம் குறிப்புப் பார்க்க.

ச. இந்நூற் பக்கம் எசஎ: ரு-ஆம் குறிப்புப் பார்க்க.

ரு. "புரைதவப் பயனோக்கார் தம்மாக்க முயல்வாரை, வரைவின்றிச் செறும்பொழுதிற் கண்ணோடா துயிர்வௌவு, மரைசினுந் நிலையில்லாப் பொருளைவு நச்சுபவோ" (கலி. அ: கரு-கஎ.) என்பதும் இந்நூற் பக்கம் ருச: க-ஆம் குறிப்பும் பார்க்க.

(பிரதிபேதம்) * வாரகத்தேர்வழி, † சென்று எற்றி, ‡ உற்றநீர்போல, ‖ அரைசன் × மகளிர்க்குண்டாகிய காமத்தாலும் கணவர்க் கவர்மே னிகழுமன்பு + வேணுமென்று.



உண்கண் நீர்நிறைகையினாலே அந்நீர் தன் குவிந்த முலைமேலே வடியாநிற்க அவனைத் தேடிவந்தோர்கூற்றிலே நின்று மனம் சுழலாநிற்கும்; இனி யாம் இவளிடத்தே சென்று இவள் கூறுவனவற்றைக் கேளாது * இருப்பேமோ? கேட்கக்கடவேமென்று நம்மிலே கூறி என்னிடத்தே வந்து எல்லிழாயென்று என்னை வினித்து, பிரியேன் என்று பிரிதலை வரைந்தவனைப் பிரியானெனத் துணிந்து அவன் பிரிதலின் நாணையும் மறந்தாள் என்று கூறி எனக்கு அன்புற்றீர்போல நீ என்னுற்றனை என்று வினவுகின்றவர்களே! பின்னை இவ் வருத்தத்தை எல்லீருங் கேட்பீராக என்று கூறுகின்றவள், (க) எனக்குச் சிறந்தவன் என்வலியறும்படி என்னைக் கைவிடுகையினாலே பெருகிவந்து என்மேல் நிலைபெற்ற இக் காமநோய். கோடை (உ) உலகத்தைச் சுடும்படியாகப் (ங) பெய்

யாமற்போன மேகம் வருத்துமாற்றையும்போலும்; பெருகி என்னுயிரைப் (ச) போக்குவதோர் நீர் வெள்ளம் வருத்துமாற்றையும் போலும்; என்றுகூறி னான். எ - று.

கஅ நக்கு நலனு மிழந்தா னிவனென்னுந்
தக்கவிர் போலு மிழந்திலேன் மன்னோ
† மிக்கவென் னானு நலனுமென் னுள்ளமு
மக்கா லவனுழை யாங்கே யொழிந்தன
(ரு)வக்கா னிலைத்தோ வுடம்புயிர்க் கூற்றாகச்
(கூ)செக்கரம் புள்ளித் திகிரி யலவனொடியா
னக்கது ‡பன்மா னினைந்து

---

க. "சிறந்தானை வழிபடீஇ" (கலி. க: உகூ) என்பதும் அதன் உரையும் அதன் குறிப்பும் பார்க்க.

உ. (அ) "வானத், தனிமாறு பொழுதினிவ் வுலகம் போலுமின், னனிமாறு பொழுதினிவ் வாயிழை கவினே" (கலி. உரு: உஎ-உக) என்பதும், (ஆ) அதன் குறிப்பும் (இ) "விண்ணின்று பொய்ப்பின் விரிநீர் வியனுலகத், துண்ணின் றுடற்றும் பசி" (குறள். கந.) என்பதும் நோக்குக.

ந. (அ) "கழிந்தது பொழிந்தென வான்கண் மாறினும்...........எல்லா வுயிர்க்கு மில்லால் வாழ்க்கை" புறம். உ0ந: க-ந; (ஆ) "பெயற்பான் மழைபெய்யாக் கண்ணும்........என்னேயுலகுய்யுமாறு" நாலடி. கஎ.

ச. (அ) "நீர்மிகிற் சிறையு மில்லை" புறம். ருக: க; (ஆ) "நீர்மிகி னில்லை சிறை" பழ. கக0; (இ) "சிறையு முண்டோ செழும்புனல் மிக்குழீஇ" மணி. ரு: கக; (ஈ) "சிறையென்ப தில்லை செவ்வே செம்புனல் பெருகு மாயின்" ஆனா. கல்யாண. கருரு.

ரு. இந்நூற் பக்கம் ருநஅ: ரு-ஆம் குறிப்பும் "இவ்விருந்த சான்றீர்" கலி. கநக: ந-ச என்பதும் இங்கே அறிதற்பாலன.

கூ. "செக்கர் ஞெண்டின்" அகம். உ0: ச.

பிரதிபேதம்) * இருப்போமோ, † மிக்கவே காணும், ‡ பன்மானினைந்து.

எ - து: அங்ஙனங்கூறி, அவன் அன்பிலனாதலை அறியாதே அவனோடே புணர்ந்து தன் அழகினையும் நாணினையும் உள்ளத்தினையும் இவள் இழந்தாள் என்னுந் தகுதிப்பாட்டினை யுடையீர்போலே இருந்தீர் ; அவன் அன்பில னல்லன்; அஃதென்னையெனில், அவன் இந்த * உடம்பினின்று போகின்ற உயிர்க்கு உறுதியாம்படி, சிவந்தநிறத்தினையும் புள்ளிகளையுமுடைய தேருருள் போன்ற ஆண்பால் அலவன் பெண்பால் அலவனோடே நிகழ்த்துகின்ற பல மாட்சிமைகளையும் யான் நின்னிடத்தே நிகழ்த்தும்படி நின்னெஞ்சாலே நினைந்து அவை நிகழ்த்துகின்றவற்றையும் அவ்விடத்தே பாராய் என்றான்; அதனால், அவனன்புடைமை யறிந்தே யான் அவனோடு(க்)†நக்கது; அக்காலத்தே என்னாணும் என்னலமும் என்னுள்ளமும் புணர்ச்சியான் மிகுதியைப் பெற்றன; அவை அவன் நீங்கிய அப்பொழுதே அவனிடத்தே நின்று விட்டன ; ‡ ஆதலாற்றான் நோயும் மிகவுறும் ; அவற்றை இகந்த தன்மை யுடையேனல்லேனென்று கூறினாள். எ - று.

௨௫ கரைகாணு நோயு ளழுந்தா தவனைப்
புரைதவக் கூறிக் கொடுமை நுவல்வீர்
வரைப்வ ‖னென்னி னகலா (உ)னவனைத்
திரைதரு × முந்நீர் (ந)வளா அக மெல்லா
நிரைகதிர் ஞாயிற்றை நாடென்றேன் யானு
முரைகேட் புழியெல்லாஞ் செல்வேன் புரைதீர்ந்தான்
யாண்டொளிப் பான்கொல்லோ மற்று

எ-து : அங்ஙனங் கூறி என்னைப்போல ஒர் எல்லைகாணாத காமநோயிலே மூழ்காதவனை உயர்ச்சி கெடும்படி அவன் பிரிந்து நாண்முதலியவற்றைத் தாராத கொடுமையை நாடி அவன் வந்த ┼ காலத்தன்றே நீ இவை பெறுவது என்று கூறுகின்றவர்களே ! யான் நிரைத்த கதிர்களையுடைய ஞாயிற்றை நோக்கித் திரையைத் தருகின்ற கடல்சூழ்ந்த உலகமெல்லாந் தேடி அவனைக் கொண்டு வா என்றுஞ் சொல்லிவிட்டேன்; அதுவேயன்றி யானும் அவன்

---

க. நக்கது - புணர்ந்தது; இச்சொல் இப்பொருளில் வருதல் (அ) "அவர்

நக்கதன் பயனே" "ஈக்கு நலனுமிழந்தாள்"(கலி. கா.எ: எ; சசக: கஅ) என்பவற்றினுரையாலும் துணியலாகும்.

உ. "ஆங்கெதிர் நோக்குவன் ஞாயிறே யெங்கேள்வன், யாங்குள னாயினும் காட்டிமோ" கலி. கசஎ: உஎ-உஅ.

ங. (அ) "தெண்கடல் வளாகம்" புறம். கஅக. க; (ஆ) "கொங்கை முன் றிற் குங்கும வளாகத்து" சிலப். அ: உக; (இ) "நாமநீர் வரைப்பி னுனில வளாகமும்" சிதம்பர மும்மணிக். க: உ.

(பிரதிபேதம்) *, உடம்பினின்றும் போகின்ற, † கக்கயக்காலத்தே, ‡ ஆதலாலதனேயும் || என்னிலகலான், × முன்னீர்வளாகமெல்லா, + காலத்ததன்றே.

## ஐந்தாவது நெய்தல் உக. கசுரு

இவ்விடத்தான் என்னும் வார்த்தை கேட்கலாம் இடமெல்லாஞ் சென்று தேடுவேன்; இங்ஙனந் தேடுமளவின் உயர்ச்சியிரிந்தவன் பின்னை எவ்விடத்தே ஒளித்திருப்பான்? அவனை அகப்படுத்திக் கொண்டு அர்ச்சகன் முதலியன வாங்கியே விடுவேன்; என்னை நெஞ்சாலே வஞ்சித்திருக்கின்றவன் என் னிடத்தினின்றுநீங்கான்; என்றுங் கூறினள். எ - று.

சொல்லும் ஓவும், அசை.

கஉ. மருள்கூர் பிணைபோன் மயங்கவெந் நோய்செய்யு
மாலையும் வந்து மயங்கி யெரிநுதி
யாமந் தலைவந்தன் றாயி னதற்கென்னோய்
பாடுவேன் பல்லாருட் சென்று

கக. யானுற்ற *வெவ்வ முரைப்பிற் (க)பலர்த்துயிற்றும்
யாமநீ துஞ்சலை மன்

எ - து: அன்னைக் † கூறிய அளவிலே மாலையும் இரவும் வருகின்றதனை உணர்ந்து, மயக்கமிக்க மான்பிணைபோல யான் மயங்கும்படி வெவ்விய காம

நோயை உண்டாக்கும் மாலைக் காலமும் ‡ வந்து அதனோடே மயங்கி எரியின் கொழுந்துபோற் கொடிய இராக்காலமும் || அவ்விடத்தே வந்ததாயின், அவ் விடத்தே யான் பட்ட வருத்தத்தை என்னைப்போல வருந்தும் பலமகளிருக் குள்ளே சென்றுகூறுவேன்; நினக்கு முறைப்பட்டுக்கூறிற் பலரையுந் துயிலப் பண்ணும் இராக்காலமே! நீ தானும் மிகவும் வருந்தித் × துயில்கொள்ளாய்; ஆதலால் என்னுறுநோயை நினக்குச் சொல்லேனென்றேனென்றும் கொடுமை நுவல்கின்றவர்களை நோக்கிக் கூறினாள். எ - று.

௩௮ எதிர்கொள்ளு ஞாலந் ÷ துயிலாரா தாங்கண்
முதிர்பென்மேன் முற்றிய வெந்நோ யுரைப்பிற்
கதிர்கண் மழுங்கி மதியு மதிர்வதுபோ
லோடிச் சுழல்வது மன்

எ - து: அன்னை கூறியபின்னர்த் திங்கள் வருத்துமென் றுணர்ந்து ஞாலத்தி ✝ லுள்ளாரால் அவ்விசும்பிடத்தே (௨) பிறையான பருவத்தே எதிர்

---

௧. "மன்பதை யெல்லா மடிந்த விருங்கங்குல்" (கலி. ௬௯: ௩.) என்பதும் அதன் குறிப்பும் பார்க்க.

௨. (அ) "தொழுதுகாண் பிறையிற் றோன்றி" (ஆ) "பலர் தொழச், செவ்வாய் வானத் தையெனத் தோன்றி, யின்னம் பிறந்தன்று பிறையே" குறுந். ௧௭௮; ௩௦௭. (இ) "அப்பிறை, பதினெண் கணனு

(பிரதிபேதம்) * எவ்வமுறைப்பின். ✝ கூறினவளவிலே. ‡ வந்தது; அதனோடே. || இவ் விடத்தே வந்ததால் யான் தன்னிடத்தே பட்ட. × துயில்கொள்ளாயென்று என்னுறுநோயைச் சொல்லுவேனென்றும். ÷ துயிலாதார் தாங். ✝ உள்ளார் அவ்.



கொள்ளப்பட்டுப் பின்பு முதிர்ந்து யான் துயிலாராமல் என்மேல் வந்து விளைத்த மதியும் யானுற்ற வெவ்வியநோயை முறைப்பட்டுக்கூறின் தன்கதிர்கள் ஒளி மழுங்கி நடுங்குவதுபோலே ஓடி மிகவுஞ் சுழன்று திரியும்; ஆதலான் நமக்

கன்றி அதற்கும் என்னையைக் கூறேனென்றும் கூறினாள். எ - று.

௪௨ பேரூர் மறுகிற் பெருந்துயிற் சான்றீரே
நீரைச் (௧)செறுத்து நிறைவுற வோம்புமின்
(௨)கார்தலைக் கொண்டு பொழியினுந் தீர்வது
போலாதென் மெய்க்கண துநோய்

எ - து: அங்ஙனங் கூறி, பெரிய ஊரில் தெருவிலே யான் உறுகின்ற வருத்தத்திற்குப் பரிகாரஞ் செய்யாமற் பெரிய உறக்கத்தைக் கொள்ளக் கருதிய சான்றீரே! என்மெய்க்கண் நின்று எரியுங் காமநோய் மழையெல்லாம் என்னிடத்தே நின்று பெய்யினும் ஆறுவது * போல இருக்கின்றதில்லை; இது தணியும்படி உலகத்துள்ள நீரை என்னிடத்தே நிறையும்படி அடைத்து வைத்து என்னுயிரைப் பாதுகாப்பீராக என்றும் கூறினாள். எ - று.

௪௩ இருப்பினு நெஞ்சங் கனலுஞ் செலினே
வருத்துறும் யாக்கை வருந்துத லாற்றே
(௩)னருப்ப முடைத்தென்னு னெவ்வம் பொருந்திப்
பொறிசெய் புனைபாவை போல வறிதுயங்கிச்
செல்வேன் விழும முழந்து

---

மேத்தவும் படுமே" புறம். ௧: ௯-௧௦. (ஈ) "ஒள்ளிழை மகளி ருயர்பிறை தொழூஉம், புல்லென் மாலை" அகம். ௨௩௯: ௯-௧௦.

௧. "செறுத்தோ ருடைப்பினுஞ் செம்புனலோ டோர்" நாலடி. ௨௨௨.

௨. "கனையிருள் வானங் கடன்முகந் தென்மே, லுறையொடு நின்றீயல் வேண்டு மொருங்கே, நிறைவளை கொட்பித்தான் செய்த துயரா, லிறை யிறை பொத்திற்றுத் தீ" கலி. ௧௪௫: ௫௫-௫௮.

௩. அருப்பம் - அருமை; இது பண்பாகு பெயராய் அரிய அரணை உணர்த் திற்று; இது (அ) "வேட்டுப் புழை யருப்ப மாட்டி" முல்லை. ௨௬. (ஆ) "அம்புமி ழயிலருப்பம்" மது. ௬௭. (இ) "அரசுநிலை தளர்க்கு மருப்பமு முடைய" மலை. ௩௭௮. (ஈ) "வீங்கு சிறை வியலருப்பம்" (உ) "அருப்பம் பேணா தமர்கடந் ததூஉம்" புறம். ௭௭: ௨௮; ௨௨௪: ௧. என்புழியும் இப்பொருளில் வருதல் காண்க. இச்சொல்லை, திட்பம், ஒட்பம், நுட்பம், செப்பம், வெப்பம், தறுகட்பம் என்பவற்றொடு ஒப்பு நோக்குக. அருப்பம், திண்மை யென்பாருமுளர்.

எ-து: அங்ஙனங் கூறிப் பின்னர்த் தன் னோயின் செய்தி கூறுகின்றவள், அவன் என்னெஞ்சிடத்தே விடாமலிருப்பினும் அதனால் அமையாது தான் காந்தாநிற்கும்; அவன் ஒருகாற்போமின் தான் அதற்கு வருத்தமுறாநிற்கும்; * அங்ஙனம் என்னெஞ்சு †வருந்துதலை ஆற்றேனாய்ப் (௧) பலவுறுப்புக்களையுங் கூட்டி இயங்குவதோர் பொறியாகச் செய்த புனைந்த பாவைபோல, இம்மையிலே அழுந்தி மயங்கிய யாக்கையோடே ‡ சிறிதுசெல்வேன்; அதனால் தணியாத என்னிடத்து உண்டாகிய எவ்வமானது பிறரால் அழித்தற்கு அரிய அரணின் றன்மையையுடைத்து; இவ்வரணை அழிக்கலாவதோர் உபாயம் காணவீராக; என்றும் கூறினாள். எ - று.

௫க எனவாங்குப் பாட வருனாற்று
 வறங்கூர் வானத்து(௨)வள்ளுறைக் ‖ கலமரும்

---

௧. "பல்கிழி யும்பயி னூந்துகி னூலொடு, கல்லாக் கும்மெழு குக்கலுஞ் சான்றன, வல்லன வும்மமைத் தாங்கெழு காலிடைச், செல்வதோர் மாமயில் செய்தன னன்றே." என்பது நோக்குக; சீவக. ௨௩௫.

௨. வானம்பாடியின் இயல்பை (அ) "துளிநசை வேட்கையான் மிசை பாடும் புள்ளிற்றன், னளிநசைஇ யார்வுற்ற வன்பினேன் யானாக" (கலி. ௪௬ : ௨௦-௨௧) என்பதனாலும் (ஆ) அதன் குறிப்பாலும் (இ) "வானம் பாடி வறங்களைந் தானாது, அழிதுளி தலைஇய புறவில்" ஐங். ௪௧௮. (ஈ) "பொறிவரி, வானம் வாழ்த்தி பாடவு மருளா, துறை துறந் தெழிலி நீங்கலின்" அகம். ௬௭: ௧-௩. (உ) "நீரிம்பை, புள்ளி னோக்க வறியும்" நான்மணி. ௧௧. (ஊ) "துளியுண் பறவைபோற் செவ்வனோர்ப் பாரும்" பழ. ௨௮; (எ) "தற்பாடு பறவை பசிப்பப் பசையற, நீர்சூல் கொள்ளாது மாறிக் கால்பொரச், சிரை வெண் டலைச் சிறுபுன் பொண்மூ, மழைகா லூன்று............கொடுங்கோல் வேந்தன் காக்கு நாடே" ஆசிரியமாலை. (ஏ) "சாதக மூரல் குரல்

வாய்மடை திறப்ப.........எழுந்தனர்" கல். கூஅ: கஎ-௩௦. (ஐ) "வானத்தின் றுள்ளி யல்லால் வருந்தினும் விரும்பல் செல்லா, மானத்தை யுடைய புள்ளின்" மேரு. கஉக. (ஒ) "கொண்டல்பே ரொலியினாற், றூவிலா மகிழ் வுறுஞ் சாதகத் தன்மையாய்" (ஓ) "கொண்டல் கண்டிடு சாதகம் போலுளங் குளிர்ந்தார்" கந்த. திருவவ தார. ௩௦; அக்கினிமுகா. உஉ௯. (ஔ) "துன்னிய சாத கம்போற் சூழ்ந்துநோக் குநர்கட் கெல்லாங், கன்னியர் துழாய்மி லைந்த கரு முகில் கடைக்க ணோக்கான், மன்னிய கருணை வெள்ள மழைசொரி வழக்கு மென்பார்" பாகவதம். (க) கண்ணபிரான் றுவரை. ௩௦. (ஃ) "மழையை நோக்கிய, சாதக மெனத்தனை யாளு மன்னவன், போதன தடிமலர் புந்தி நாடொறு, காதலிற் பூசையுங் கண்டி வந்தனன்" (பிரதிபேதம்) * இங்ஙனம், † வருந்தலில், ‡ செறிதே சிற்பென், || அலம்வரும்.

118



புள்ளிற் கதுபொழிந் தாஅங்கு மற்றுத்தன்
னல்லெழின் மார்பன் முயங்கலி
னல்ல தீர்ந்தன் றாயிழை பண்பே

எ - து: என்று அவ்விடத்தே சொல்லாநிற்க, கோடைக்கால மிக்க வானத்திடத்தே மேகத்தினது வலிய துளியைப் பெறுதற்குச் சுழன்று திரியும் வானம்பாடிக்கு அம்மேகம் பெய்தாற்போலத் தன்னுடைய நல்ல அழகையுடைய மார்பன் அருளுதலுற்று வந்து முயங்குகையினாலே ஆயிழை யுடைய அல்லலாகியகுணம் போயிற்று; என்று கண்டார் வியந்து தம்மிற் கொண்டுகூறிற்றாக உரைக்க.

இது, கண்டார்க்கு அவராக்கங் கண்டு மருட்கை பிறந்தது.

'என்மே னிலைஇய நோய்' என்னுந் துணையும் கூறத் தகாதன கூறலின் மடனிறந்தவாறும், * 'இழந்திலேன்மன்னோ' என வருத்தந் தோன்றாமற் கூற லின் வருத்தமிறந்தவாறும் 'ஞாயிற்றை நாடென்றேன்' என்றதனைத் தான் வியவாமையின் மருட்கையிறந்தவாறும் 'என்னுணு நலனும்' என்றும் மான் பிணைபோன்ற யான் இப்பொழுது 'மருள்கூர் பிணைபோன் மயங்க' என்றும் வனப்புமிகுதி கூறலின் மிகுதியிறந்தவாறுங் காண்க.

இஃது ஐஞ்சீரடிவந்தத்தரவும் ஐஞ்சீரடுக்கிய இடைநிலைப்பாட்டும் 'என

வாக்குப்படவருளூற்று’ என முச்சீரான் வந்த சொற்சீரடியும் வந்து ஆசிரியச் சுரிதகத்தால் இற்ற கலிவெண்பாட்டு. (௨௧)

(௧௪௭.) ஆறல்ல மொழிதோற்றி யறவினை கலக்கிய
தேறுக ணறவுண்டார் மயக்கம்போற் காமம்
வேற்றுருபாற் றனது கொல்லோ சிறடிச்
சிலம்பார்ப்ப வியலியா ளிவண்மன்னோ வினிமன்னும்
புலம்பூரப் புல்லென்ற வளப்பினாள் விலங்காக
வேனுதி யுறநோக்கி வெயிலுற வுருகுந்தன்
றேணல முண்டானைக் கெடுத்தாள்போற் றெருவிற்பட்
டேண்யாது மிலளாகி யுயிரினுஞ் சிறந்ததன்
னாண்யாது மிலளாகி நகுதலு நகூஉ மாங்கே
பெண்மையு மிலளாகி யழுதலு மழூஉந் தோழியோ
ரொண்ணுத லுற்ற துழைச்சென்று கேளாமோ;

---

விநாயக. மனோற் சுடர். ௭௧௧. (௮௮) “மழைமுகி லபெப்பச் சாதகக் குருகு வாஞ்சையிற் றளிமந்த் தாங்கு” திருவானைக்காப். தீர்த்த. ௩0. என்பவற்றாலும் அறிக.

(பிரதிபேதம்) * இழிந்திலேன்.



௧௬. இவர்யாவ ரேமுற்றூர் கண்டீரே யோஒ
வமையுந் தவறிலீர் மற்கொலோ நகையின்
மிக்கதன் காமமு மொன்றென்ப வம்மா
புதுநலம் பூவாடி யற்றுத்தாம் வீழ்வார்
மதிமருள நீத்தக் கடை;
௧௭ என்னையே மூசிக் கதுமென நோக்கன்மின் வந்து;
௧௮ கலிஇய கண்புருவந் தோளுசுப் பேனர்
சிலமழைபோ லூழ்ந்திருண்ட கூந்த லவற்றை
விலைவன மாற வறியா தொருவன்
வலையகப் பட்டதென் னெஞ்சு;

௨௨ வாழிய கேளிர்;
௨௯ பலவுஞ்கூ டேற்றித் தெளித்தவ னென்னை
முலையிடை வாங்கி முயங்கின னீத்த
கொலைவனைக் காணேன்கொல் யான்;
௨௯ காணினு மென்னை யறிதிர் கதிர்பற்றி
யாங்கெதிர் நோக்குவன் ஞாயிறே யெங்கேள்வன்
யாங்குள னாயினுங் காட்டீமோ காட்டாயேல்
வானத் தெவன்செய்தி நீ;
௩௦ ஊரிரு ணீக்கும் விசும்பின் மதிபோல
நீருள்ளுந் தோன்றுதி ஞாயிறே யவ்வழித்
தேரை தினப்பட லோம்பு;
௩௩ நல்கா வொருவனை நாடியான் கொள்வனைப்
பல்கதிர் சாம்பிப் பகலொழியப் பட்டீமோ
செல்கதிர் ஞாயிறே நீ;
௩௯ அறாஅ லின்றரி முன்கைக் கொட்கும்
பறாஅப் பருந்தின்கட் பற்றிப் புணர்ந்தான்
கறாஅ வெருமைய காடிறந் தான்கொல்லோ
வுறாஅத் தகைசெய்திவ் வூருள்ளான் கொல்லோ
செறாஅ துளனாயிற் கொள்வே னவனைப்
பெறாஅதியா னேவே னவனையெற் காட்டிச்
சுறாஅக் கொடியான் கொடுமையை நீயு
முறாஅ வரைசநின் னோலைக்கட் கொண்டீ

௧௪௦ கலித்தொகை கசசா

மறாஅ வரைசநின் மாலையும் வந்தன்
றறாஅ தணிகவிந் நோய்;
௪௪ தன்னெஞ் சொருவற் கினைவித்தல் யாவர்க்கு
மன்னவோ காமத்தின் னம்பு;

சஅ கையாறு செய்தானைக் காணிற் கலுழ்கண்ணாற்
பையென நோக்குவேன் றூழ்தானை பற்றுவே
னையக்கொண் டென்னை யறியான் விடுவானே
லொய்யெனப் பூச விடுவேன்மன் யானவனை
மெய்யாகக் கள்வனோ வென்று;
ருக. வினவன்மி னூரவி ரென்னையெஞ் ஞான்று
மடாஅ நறவுண்டார் போல மருள
விடாஅ துயிரொடு கூடிற்றென் னுண்கண்
படாஅமை செய்தான் றொடர்பு;
ருஎ கனவினாற் காணிய கண்படா வாயி
னனவினான் ஞாயிறே காட்டாய்நீ யாயிற்
பனியின்ற மாலூர்ந் தவன்வரக் காமன்
கணையிரப்பேன் கால்புல்லிக் கொண்டு;
எனவாங்கு;
சஉ கண்ணிணை பு கலுழ்பேங்கின
டோண்ஞெகிழ்பு வளைநெகிழ்ந்தன
ளன்னையோ வெல்லீருங் காண்மின் மடவரன்
மென்னடைப் பேடை துணைதரத் தற்சேர்ந்த
வன்னவான் சேவற் புணர்ச்சிபோ லொண்ணுதல்
காதலன் மன்ற வவனை வரக்கண்டாங்
காழ்துயர மெல்லா மறந்தனள் பேதை
நகையொழிந்து நாணுமெய் நிற்ப விறைஞ்சித்
தகையாகத் தையலாள் சேர்ந்தா னகையாக
நல்லெழின் மார்ப னகத்து.

(க) இதுவுமது. இதற்கும் (உ) முன்னங் கூறிய உரையைக் கூறிக்கொள்க.

---

க. இச்செய்யுளும் தேறுதலொழிந்த காமத்து மிகுதிறமாகிய பெருந் திணைக்கு மேற்கோள்; தொல். அகத். சூ. கக. நச.

உ. இந்நூற்பக்கம் அஅ௯-அ௯க. பார்க்க.

போலப் பொருத ஏற்றைத் தழுவிக்கொண்டு சேரத் தொழுவை விட்டுப் போனர்; அவர் போன அப்பொழுதே நெருங்கிய இதழ்களையுடைய மலர்போலும் உண்கண்ணினையுடைய காதலையுடைய மகளிரும் அவர் கணவரும் வலியுற்றுத் தாதாகிய எருவையுடைய மன்றத்திலே குரவைக் கூத்தை ஆடுவார்கள்; ஆண்டு யாமுஞ் சென்று அக்குரவைக்கூத்தின் கண்ணே கூடிக் கொல்லுகின்ற ஏற்றினுடைய கோட்டிற்கு அஞ்சும் பொதுவனை மறுபிறப்பினும் ஆயர்மகள் தழுவாளென்றும், ஆயர்மகள் தோள், அஞ்சாராய் உயிரைத் துறந்து கொலைத்தொழிலையுடைய ஏற்றைக்கொன்பவர் *செறியுமவையல்லது வருந்துகல்வர்து தழுவுதற்கு நெஞ்சில்லாதவர்கள் செறிதற்கரியவென்றும், உயிராவது ஒரு காற்றாக உணராதே அதனைக் காவல்கொண்டு †அதனுடனே ஒரு செறிவாயேற்றின் மருப்பினை அஞ்சும் நெஞ்சினையுடையார் செறிதற்கு ஆயர்மகளிருடைய தோள் எளியவாயிருக்குமோவென்றும், கொலைத் தொழிலையுடைய ஏற்றினது கொம்பினிடையிலே தாம்விரும்பும் மகளிருடைய மார்பின் முலையிடையிலே விழுமாறுபோல வீழில், எம்முடைய இனத்தில் ஆயர் தத்தம் மகளிர்க்கு ‡முலைவிலை வேண்டாரென்றும், யாம் சுற்றத்தார்கூறும் முறைமையைப் பாடிக் குரவைக் ||கூத்தாடி அவ்விடத்துக் குற்றமில்லாத அழகையுடைய கடவிடத்தே பரந்து கிடக்கின்ற பழைய நிலத்தையாளும் உரிமையோடே பொருந்தின எம்முடைய பாண்டியன் இந்த அகன்ற இடத்தையுடைய உலகின்கண்ணே வாழ்வானாகவென்று அவ்விடத்துக் ÷கெடாத சீரிய புகழையுடைய தெய்வத்தைப் பரவுவோம்; நீயும் அங்ஙனம் பரவுதற்குப் போதுவாயாகவென்றாள். எ-று.

"மரபுநிலைதிரியா" என்னும் (க)சூத்திரத்து "விரவும்பொருளும் விரவும்" என்றதனால், குரவையாடல் ஏறுகோடற்கைக்கிளையுள் விராய்வருமென்றும தெய்வத்தையன்றி அரசனை வாழ்த்திய வாழ்த்தும் விராய்வருமென்றுங் +கூறலின் இங்ஙனங்கூறினர். இவ்விதி இவ்வாறே மேல் ×வருவனவற்றிற்குங் கொள்க.

இதனால, தலைவிக்கு ** நினைதல் பிறந்தது.

இது "குட்ட மெருத்தடி††யுடைத்து மாகும்"(உ)என்பதனாற்கூட்டம்பட்ட

தாவும் 'புரிபுபுரிபு ..............வேறு' என இரண்டடி மூடுகியலும், 'அரிபரி

---

மலர்ந்தனைய பசியகழுத்து மயில்'' உத்தாகோச. தீர்த்தச்சிறப்பு. ௩க என்வும் வருவன இங்கே நோக்கற்பாலன.

க. தொல். அகத். சூ. சுகூ. இச்சூத்திரத்தின் இவுருரையில் இக்குறிப்பி னுள்ள செய்திகளோடு 'விரவும் பொருள் விரவும்' எனவே ஆய்ச்சியர் குரவைக்கூத் தல்லது வேட்டுவவரிக்குரிய வெறியாட்டு விரவாதென் றுணர்க' என்னுஞ் செய்தியும் காணப்படுகின்றது.

உ. தொல். செய். சூ. ககக.

(பிரதிபேதம்) * செய்யுமதல்லது, † அத்துடனே. ‡ முதலிலே வேண்டார், || கூத்தையாடி யவ்விடத்து, ÷ கோடாத சீரிய, × கூறிலிளனை கூறினர், + வருவ வற்றிற்கும், ** கினைத்தல். †† உடைத்தமென்றதனால், குட்டம் தரவும்.

## ஐந்தாவது நெய்தல் ௬0. கசசு

### இதன் பொருள்.

ஆறல்ல மொழிதோற்றி யறவினை கலக்கிய
தேறுக ணறவுண்டார் மயக்கம்போற் காமம்
வேறுரு† பாற் றனது கொல்லோ சீறடிச்
சிலம்பார்ப்ப வியலியா ளிவண்மன்னோ வினிமன்னும்
புலம்பூரப் புல்லென்ற வனப்பினாள் விலங்காக
வேனுகி யுறநோக்கி வெயினுற வருகுந்தன்
(க)றேனல முண்டானைக் கெடுத்தான்போற் ‡ றெருவிற்பட்
டேண்யாது மிலனாகி (உ)யுயிரினுஞ் சிறந்ததன்
றுண்யாது மிலனாகி (ங.) நகுதலு நகூஉ மாங்கே
பெண்மையு மிலனாகி யழுதலு மழூஉந் தோழியோ
ரொண்ணுத லுற்ற துழைச்சென்று கேளாமோ
கஉ இவர்யாவ ரேமுற்றார் கண்டவரே யோஒ
வவையுந் தவறிலிர் மற்கொலோ நகையின்
மிக்கதன் காமமு மொன்றென்ப வம்மா

புதுநலம் பூவாடி யற்றுத்தாம் வீழ்வார்
மதிமருள நீத்தக் கடை

கள என்னைபே மூசிக் (ச) கதுமென நோக்கன்மின் வந்து

எ-து: தோழீ! அறநெறியல்லாத தீமொழிகளைத் தம்மிடத்தே தோற்றுவித்து அறமாகிய தொழில்களைத் தம்மிடத்துத் தோன்றுமற் கலக்கவேண்டித் தெளியுக்(ந்)கள்ளையும் ஈரவையும் உண்டவர்களுடைய உலகியல் கெட்ட மயக்கம் போல (கூ) நன்மக்கள் ஆற்றுகின்ற காமம் உலகியல் தப்பி வேறோர்

---

க. "தோளைல முண்டு துறக்கப் பட்டோர்" (கலி. உஅ: அ.) என்பதும் அதன் குறிப்பும் ஒப்பு நோக்குக.

உ. (அ) "சிறந்ததன் ஞானும்"(கலி. கசஙு: கO)என்பதும்(ஆ)அதன்குறிப்பும் (இ) "உயிரினுஞ் சிறந்த நாணு நனிமறந்து" நற். கஎ: அ. என்பதும் ஈண்டு ஒப்பு நோக்கற் பாலன.

ங. "உண்ணலு முண்ணேன்" (கலி. உஅ: எ.) என்பதும் அதன் குறிப்பும் இங்கே அறிதற்பாலன.

ச. இந்நூற் பக்கம் சஉஉ: எ-ஆம் குறிப்புப் பார்க்க.

ரு. "கையறி யாமை யுடைத்தே பொருள்கொடுத்து, மெய்யறி யாமை கொளல்" குறள். கஉரு.

சு. "காமநீ ராழி யடக்குமா றுள்ளத் தவன்" நள. சயம். எஅ.

(பிரதிபேதம்) * தேற்றி யறவினைக்கலக்கிய. † பாலாற்றுளது. ‡ தெருவுள்பட்டு.



பகுதியாய் விட்டதோ? அதற்குக் காரணமென்னெனில் இப்பொழுது மிகவும் தன் கணவனில்லாத தனிமையுறக்கையினாலே பொலிவழிந்தழகினையுடையளாகிய இவள் வேறுதி செய்யுங் கொடுமையைப் பொறம்படி எதிரேநோக்காதே விலங்குதலுண்டாக நோக்குகையினாலே நெஞ்சுருகுங் கணவனைக் கெடுத்தாள் போலே தெருவிலே புறப்பட்டு வெயில் தன்மேலே உறும்படி தன் சிறிய அடியிற் சிலம்பு ஒலிப்ப எங்குந் திரிதரும் நிலைமையளாயினள்; அதுவேயன்றி உண்சிறிதுமிலளாய் மேனி மெலிந்து உயிரினுஞ் சிறந்த நாணும் சிறிதுமிலளாய் நகுதலையுஞ் செய்யாநிற்கும்; அப்பொழுதே பெண்டன்மையுமிலளாய்

அழுதலையுஞ் செய்யாநிற்கும்; இதனை நெஞ்சாலே தேர்ந்துபார்; அங்ஙனம் ஓர்ந்து பார்த்து இவளுற்ற வருத்தத்தை யாம் இவ்விடத்தே சென்று கேளாமோ? கேட்போம் என்று கூறி மொய்த்துக் கடுகவந்து என்னைப் (க) பாராதே கொள்ளுங்கோள்; நமக்கு முன்னே வந்து என்னைச் சூழ்ந்துநின்ற இவரைக் கண்டீரே; ஓஓ! இவரே சூழ்ந்துநிற்க அமையும்; நீர்தாம் இதற்கு முன்பு *மிகவும் யானுற்ற தவறுடையீரல்லீர்போலேயிருந்தது, நமக்கும் ஒருகாலத்தே உண்டாம்; இனி யான் கூறுவதனைக் கேட்பீராக; தேறுதல் ஒழிந்த காமத்து மிகுதிறமும் ஒருகாமம் என்று (உ) நூல்களிலே கூறுவர்கள்; ஆதலால் அதனையுற்றுநின்ற என்னை இகழாதே கொள்ளுங்கோள்; வண்டு எமுற்றுரியார் யாரிதேமுற்றதென்று தாம் விரும்பப்பட்ட ஆடவர் தம்மதி மயங்கும்படி கைவிட்டவிடத்து அவர்பெற்ற நலன் கெடுகின்ற தன்மை (ங) பூ வண்டு நுகர்ந்து தன் புதிய நலம் சிறிது கெட்ட நிலைமைத்து; காணுங்கோளென்று கூறினாள். எ - று.

(சு) நறவு; தேனுற் †சமைத்தமைத்தது. ஆற்றுதல் - நடத்துதல்.

நோக்கி என்ற எச்சம், காரண காரியப்பொருட்டு. தோள் நலத்தைப் ‡புணர்ந்தவன், ஒருபெயர் மாத்திரையாய் நின்றது. இவரை என்னும் இரண்டாவது || "ஒழியாது வருதலும்" (ரு) என்பதனான் ஒழிந்தும் நின்றது. ஓஓ, இரக்கக் குறிப்பு.

---

க. "புறப்பற்றுத், தள்ளுங்கோ ளுரவித் துமேர் தான்பன்னி, கொள்ளுங் கோ ளூர்மருவுங் கோல்" நூற்றெட்டுத் திருப்பதியந்தாதி. ருஅ.

உ. "தேறுத லொழிந்த காமத்து மிகுதிற, மிக்க காமத்து மிடலொடு தொகைஇச், செப்பிய நான்கும் பெருந்திணைக் குறிப்பே" தொல். அகத். சூ. ருக.

ங. இந்நூற்பக்கம், உகஎ: ச-ஆம் குறிப்பில் இவ்விடத்துக்குப் பொருந்துபவை ஒப்பு நோக்கற்பாலன.

ச. நறவென்பது கள்ளின் பொதுப் பெயராயும் வரும்.

ரு. தொல். தொகைமரபு. சூ. கரு.

கஅ கலீஇய கண்புருவந் தோ ணுசுப் பேஎர்
சிலமழைபோ ருழ்ந்திருண்ட கூந்த லவற்றை
விலைவன மாற வறியா தொருவன்
வலையகப் பட்ட தென் னெஞ்சு
உஉ வாழிய கேளிர்
உங பலவுங்கூ டேற்றித் தெளித்தவ னென்னை
முலையிடை வாங்கி முயங்கின னீத்த
(க) கொலைவனைக் காணேன்கொல் யான்
உசு காணினு மென்னை யறிதிர் கதிர்பற்றி
யாங்கெதிர் நோக்குவன் (உ) ஞாயிறே யெங்கேள்வன்
யாங்குள னாயினுங் காட்டிமோ காட்டாயேல்
வானத் தெவன்செய்தி நீ
கூ0 ஆரிரு ணீக்கும் விசும்பின் மதிபோல
நீருள்ளுந் தோன்றுதி ஞாயிறே யவ்வழித்
தேரை தினப்பட லோம்பு
கூங நல்கா வொருவனை நாடியான் (ங) கொள்வனைப்
பல்கதிர் சாம்பிப் பகலொழிபப் பட்டிமோ
செல்கதிர் ஞாயிறே நீ

எ-து: அவ்வனங் கூறி, அவனோடே கலந்த கண் புருவம் தோள் நுசுப்புச் சிலமழைபோலே நீண்டிருண்ட கூந்தல் என்கின்றவற்றின் அழகைப்பெறும் விலையின் வளப்பத்தை அறிந்து கொடுத்தவனிடத்து உள்ளவற்றைக் கொள்ளுதல் அறியாதே ஒருவன் கூறிய (ச) பொய்யாகிய வலையிலே என் நெஞ்சு அகப்பட்டுவிட்டது ; என்றுகூறி, பின்னும் (ரு) கேளிர்! வாழ்வீராக ; என

க. "கொலைவன் சூடிய" (கலி. கOங: கடு.) என்பதும் அதன் குறிப்பும் பார்க்க.

உ. "அவனைத், திரைதரு முந்நீர் வளாஅக மெல்லா, நிரைகதிர் ஞாயிற்றை நாடென்றேன்" கலி. கசஅ :உஎ - உக.

௩. 'உரைப்பனே' என்பதற்கு, 'உரைக்கும் அளவும்' என்று பொருளும், 'உரைப்பனே, இசைச்சொல்' என்று விசேடக் குறிப்பும் எழுதியிருப்பதை நோக்குக; கலி. கசச: கடு.

௪. "பொய்வலைப் பரீஉம் பெண்டு" ஐங்குறு. உஅரு.

௫. 'இர்' ஈறு ஈராய் விளியேற்கு மென்பது, தொல். விளி. சூ. கஉ. நச். உரையால் அறியலாகும்.

௨௫௯ **கலித்தொகை கசஎ.**

அவர்க்கு முகமன்கூறி அவன் இயற்கைப் புணர்ச்சியிலும் பல சூளுறவாலும் என்மனத்தைத் தேற்றிப் * பின்னும் தெளிவித்தவன் என்னை அணைத்து முலையிடத்தே முயங்கினான்; அங்ஙனம்(க)முயங்கிப் பின்னர்த் தெளிவு பொய்யாம்படி கைவிட்ட கொலைத்தொழிலை வல்லவனை யான் தேடிக் காணேனோ? அவன் என்னைக் கண்டானாயினும் அவனால் யான் பெறும் பொலிவை அறியமாட்டீர்; என அவரை நோக்கிக் கூறி, அவர் மறுமொழி கொடாமையின், ஞாயிற்றை நோக்கி, ஞாயிறே! போதற்கு அரிய இருளைப்போக்கும் விசும்பிடத்து † மதி தோன்றுமாறுபோல நீயும் நீருள்ளேயுந் தோன்றுவை; அங்ஙனந் தோன்றின் விடத்து ஆண்டு வாழுந் தேரை இரை என்று இன்னப்பிறதேலைப் பரிகரித்துக்கொள்; என அதற்கு முகமன்கூறி, ஞாயிற்றை வானிடத்தே இருந்து எவ்விடமுங் காண்கின்ற நீ எனக்கு என்ன காரியஞ் செய்வை? ஒன்றுஞ் செய்யாயாயினும் இப்பொழுது எக்கேள்வன் யாதோரிடத்தே இருந்தானாயினும் எனக்குக் ‡ கொண்டுவந்து காட்டுவாய்; நீ காட்டாயாயின், யான் நின் கதிர்களைப் பிடித்துக்கொண்டு அவ்விசும்பிலே ஏறி அவனைப் பார்ப்பேன்; அதற்கு நீ செய்யுங்காரியம் எனக்கு அருளாத ஒப்பிலாதானை காடி யான் பிடித்துக்கொள்ளுமளவும் ஞாயிறே! நீ குவிந்துசெல்லும் பலகதிர் பகற்காலத்தோடே இவ்விடத்தே நிற்கச் சிலகதிரோடே படுவாயாக; என்றுகூறினள். எ - று.

அறிதிரென்றது, அறியமாட்டீர் என்ற இகழ்ச்சிக்குறிப்பு.

கக அறூஉ வின் (உ) றரி (௩) முன்கைக் கொட்கும்
பறூஉப் பருத்தின்கட் பற்றிப் புணர்ந்தான்
கறூஉ வெறுமைய காடிறந்தான் கொல்லோ

‖ வுறூஉத் தகைசெய்திவ் வூருள்ளான் கொல்லோ
செறூஉ தானாயிற் கொள்வே னவளைப்
பெறூஉதியா னேவே னவனையெற் காட்டிச்
சுறூஉக் + கொடியான் கொடுமையை நீயு
முறூஉ × வரைசநின் னோலைக்கட் கொண்டு

௧. (அ) "கொலையொக்குங் கொண்டேண் மாறல்" நான்மணி. ௮; (ஆ) "கொண்டேண் மாறல் கொடுமையிற் றுவ்வாது" முதுமொழிக். ௩௭.

௨. 'அரிமுன்கை' என்பதற்கு இவ்வுரையாசிரியர் (அ) 'அழகினையுடைய முன்கை' என்றும் (ஆ) 'மெல்லிய முன்கை' என்றும் முன்பு (கலி. ௫௪: ௩, ௫௧: ௪.) பொருள் கூறியிருக்கிறார்; ஈண்டு அத்தொடரில் அரியென்பதைப் பண்பாகு பெயராகக் கொண்டு 'ஐதாகிய மயிர்' என்று பொருள் கூறுகிறார் போலும். (இ) "அரிமயிர் முன்கை" (பொருந. ௩௨.) (ஈ) "அரியமயிர்த் திரண் முன்கை" (புறம் ௧௧: ௧) என வருதல் இப்பொருளோடு ஒப்பு நோக்கற்பாலன.

௩. "வளைமுன்கை பற்றி நலிய" கலி. ௫௧: ௧௦.

(பிரதிபேதம்) * பின்னும் என்னைத் தெளிவித்தவன் என்னை, † நின்கணிருட்டோன்றுமாறு போல, ‡ கொடுமைக்க, ‖ அருத்தகை, + கொடியாய் கொடுமையை. × அரசரின்.

## ஐந்தாவது நெய்தல் ௩௦. ௯௪௫

மருஉ * வரைசநின் மாலையும் வந்தன்
றுருஉ தணிகலிந் நோய்
௪௯ தன்னெஞ் சொருவற் கினைவித்தல் யாவர்க்கு
மன்னவோ காம நின் † னம்பு

எ – து: உலகத்தார் வேண்டிக்கொண்ட காரியங்களை மருத ஞாயிறே! என் கையினின்று நீங்குதலின்றாய் ஐதாகிய மயிரினையுடைய என் முன்கையிலேகிடந்து சுழலும் வளையிடத்தைப் பிடித்துத் தெளிவித்துக் கூடினவன், பார்ப்பயன் கோடற்குச் சிலகாட்டிக் கறக்கப்படாத காட்டெருமைகளையுடையவாகிய காட்டைக் கடந்துபோயினனோ? அன்றியே என்னோடு அன்

புரூதோர் தகைமையை எனக்குச் செய்து இவ்வூரிடத்தே இருந்தானோ? இரண்டும் அறிகின்றிலேன்; ‡ அவனைக் கூடப்பெறாதே நோவா நின்றேன்; அதற்குமேலே நீ உண்டாக்கும் மாலைக்காலமும் வந்தது; இனி இந்நோய் என்னிடத்தினின்று நீங்காது; அவன் இவ்விடத்துளனாயின் அவனை எனக்குக் காட்டுவாய்; காட்டினால் அவனைக் கோபியாதே மனத்தாலே கைக்கொள்வேன் என்றாள்; அது காட்டாமற்படுதலின் அதனைக்கைவிட்டு (க)ச்செவ்விதலைமை செய்தலன்றி ஒருபாதுமூந கூற்றமே! சுறாக்கொடியையுடைய இக்காமன் செய்கின்ற கொடுமைகளை நீயும் நின் ஓலையிடத்தே ‖ எழுதிவைத்துக்கொண்டு தண்டிப்பை; அவன் ✝ எமக்கு(உ)வழிபடுதெய்வமாதலின் அவனைத் தண்டியாமற் றணிவாயாக என்று கூறினாள்; அங்ஙனங் கூறி, காமனை எதிர்பெய்து கொண்டு, காமா! நின்னுடைய அம்புகள் தனக்கு உரியதாகிய நெஞ்சினைத் தன்மேல் அன்பிலாதானொருவன் பொருட்டு வருத்துவித்தல் சிலர்க்கேயன்றி எல்லார்க்கு × மாக்! தன்மையையுடையவோ அல்லவோ? என்றுங் கூறினாள். எ - று.

க. இந்நூற் பக்கம் ககச: உ-ஆம் குறிப்புப் பார்க்க.

உ. (அ) நாலாயிர. நாச்சியார் திருமொழி. க-ஆவது 'தையொரு திங்கள்' என்பதிலுள்ள க0 பாசுரங்களும் (ஆ) "காமவேள் கோட்டந் தொழுதார் கணவரொடு, தாமின் புறுவர்" சிலப். க: க0-கக; (இ) "தாமரைச் செங்கட் செவ்வாய்த் தமனியக் குழையினாயோர், காமனின் குடையேன் காளை சீவக னகலஞ் சேர்த்தின், மாமணி மகர மம்பு வன்சிலைக் கரும்பு மான்றேர், பூமலி மார்ப வில வூரொடும் பொலிய வென்றான்" சீவக. உ0கஎ; (ஈ) "பதுமா பதியெனும் பைந்தொடிக் கோமகள், கன்னி யாயத் துன்னுபுசூழ, மதிற்புறங் கவைஇய புதுப்பூங் காவின், மகர வெல்கொடி மகிழ்களைக் காமற்கு, நகரங் கொண்ட நாளணி விழவினு, னெழுநா டோறுங் கழுமிய காதலொடு, வழிபா டாற்றிய போதரும்" பெருங். (க) கூ: உஎ-௩௩ என்பவைகளும் நோக அறிதற்பாலன.

(பிரதிபேதம்) * அவைசாவின், † மார்பு, ‡ யான் அவனைக், ‖ எழுதிக்கொண்டு வைத்துத் தண்டிப்பை, ✝ நமக்கு வழி. × அத்தன்மையை.

ஒகாரம், எதிர்மறை. பருப்பருர்து, ஈண்டு(க)குருகென்பதனை உணர்த்தி நின்றது. மறுவலாசன், *வரோதயனென்னும் பொருட்டு. (?)

சஅ கையாறு செய்தானைக் காணிற் †கலுழ்கண்ணாற்

(உ) பையென நோக்குவேன் றாழ்(ங)தானை பற்றுவே
னையங்கொண் டென்னை யறியான் ‡விடுவனேல்
(ச) லொய்யெனப் பூச விடுவேன்மன் ||யானவனை
மெய்யாகக் கள்வனோ வென்று

எ - து: அன்னைக் கூறி, இனி வருகின்ற இராக்காலத்து நின் அம்புகள் இறந்துபடவியாமல் யான் உயிர்கொண்டிருக்கும்படி அருளுமாயின், அவசத்தாற் சிறிது துயிலேற்றக் கலங்கின கண்ணாலே எனக்குக் கையாற்றைச் செய்தவனைக் கனவிலே கண்டேனாயின், அக்கண்ணைக் கடுக விழித்துப் பராரதே மெத்தெனப் பார்ப்பேன்; ✝பார்த்தபின் தப்பிப்போகாதபடி தாழ்ந்து கிடந்த துகிலைப் பிடித்துக்கொள்வேன்; பிடித்துக்கொண்டு என் (ரு) மேனி வேறுபாட்டினைக் கண்டு இவள் நக்தலைவியோ × அல்லளோ வென்று ஐயத்தை நெஞ் சிடத்தே கொண்டு என்னை அறியாதே கைவிடுவனாயின் என் (சு) நாண் முதலிய குணங்களையும் மேனிநலத்தினையும் மெய்யாகக்கைக்கொண்டு∴போன கள்வனென்று எல்லாருங் கேட்கும்படி § விரைபக் கூப்பிடுவேன் என்று காமனை நோக்கிக் கூறினாள். எ - று.

ஓ, அசை.

---

க. குருகு - வளையல்.

உ. "பையெனக் காண்கு விழிப்பயான் பற்றிய. கையுளே மாய்ந்தான் கரந்து" கலி. கசஉ: கரு-கக.

ங. "அரிவே யுண்க ணவன்பெண்டிர் காண,், தாருந் தானையும் பற்றி" அகம். உஎசு: அ-க.

ச. ஒய்யென வென்பது விரைய வென்னும் பொருளில் வருவதோர் இடைச்சொல்; கலி. கஎ: கஅ, கஉக: க; சீவக. அ00, அகசு, கஙஉ, கஅகங, கஅகஅ. இவற்றில், 'ஒய்யென' என்பதன் உரை நோக்குக.

ரு. "நெஞ்சம்..........தொன்னல விழந்தவென் பொன்னிற நோக்கி,
யேதி லாட்டி யிவளெனப், போயின்று கொல்லோ" நற். இக: ரு-௯௦.
௬. "உள்ளங் கொண்டா ரிவரென் றுணர்த்திடப், புள்ள வாங்கணை வே
ளிடைப் போதல்போ, லள்ளி லைச்செழுஞ் சோலயி லன்பரைக்,
கள்ளுண் கோதையர் கைப்பிடித் தேகினர்" நைடத. போதுகொய். உ.
(பிரதிபேதம்) . * வரோவையன், † கலிழ்கண், ‡ விலோவேல், || யான்றன்லெ, ✢ அப்
பார்த்தவன்.தப்பி. × அல்லயோ, ∴ போனவென கல்வன், § விளைவாய்க்.

## ஐந்தாவது நெய்தல் ௬௦. கூசள

ருக. வினவன்மி * ஞாயி றென்னையெஞ் ஞான்று
படாஅ (க) நறவுண்டார் போல மருள
விடாஅ துயிரொடு கூடிற்றென் னுண்கண்
படாஅமை செய்தான் றொடர்பு

எ - து: அங்ஙனங் கூறி, வரிஅன்னீர்! எங்களைநோக்கிக் கூறுகின்ற நீர் ஞாயிற்றையுங் காமனையும் நோக்கிக் கூறியதற்கு அவை என்செய்யுமென்று என்னைக் கேளன்மின்; எக்காலும் என்கண் துயிலாமையைச் செய்தவன் தந்த நட்பின் உண்டான நோய் மடாநறவை யுண்டாரைப்போல மயக்கும்படி விடாதே உயிரைப்பொருந்துந் தன்மையோடே கூடிவிட்டது; இனி இவ்வுயிரைக் † காக்கும்வழி உண்டாயிற் காப்பீராக என்றுங் கூறினன். எ- று.

ருஎ (உ) கனவினாற் காணிய ‡கண்படா வாயி
னனவினான் ஞாயிறே காட்டாய்நீ யாயிற்
(௩) பனியீன்ற மாலூர்ந் தவன்வரக் காமன்
கணையிரப்பேன் கால்புல்லிக் கொண்டு

எ - து: அதற்கு அவர் மறுமொழி கொடாதிருத்தலின், முற்கூறிய ஞாயிற்றையுங் காமனையுமே பின்னும் நினைந்து, வருகின்ற இராக்காலத்துக் கனவின்கண்ணே அவனைக் கண்டு ஆற்றுதற்குக் காமன்கணை செய்கின்ற கொடுமையாலே கண் துயிலாவாயின், || ஞாயிறே! (௪) எப்பொருளையுங் காட்டுகின்ற நீ கனவின்கண் வந்தாகிலும் அவனைக் காட்டாயாயில், இவ்வாறே

வருத்தமுற்றப் பனியின்ற குதிரையையேறி (ரு) அவன் என்பால் தானே வரும்படியாக அக்காமன்காலைக் கட்டிக்கொண்டு நின் அம்புகளை எனக்குத் தா + வேண்டுமென்று காமனை இன்னும் இரந்துகொள்வேன்; என்றும் × கூறினள். எ - று.

---

க. "நறவுண்டார் மயக்கம் போல்" கலி. கசஎ: உ.

உ. (அ) "கயலுண்கண் யானிரப்பத் துஞ்சிற் கலந்தார்க், குயலுண்மை சாற்றுவேன் மன்" (ஆ) "நனவினா னல்கா தவரைக் கனவினாற், காண்டலி னுண்டென் னுயிர்" (இ) "நனவென வொன்றில்லை யாயிற் கனவினாற், காதலர் நீங்கலர் மன்" குறள். கஉகஉ, கஉகரு, கஉகசு.

ங. "பனியின்ற மாவும்" கலி. கஙஅ: கஉ.

ச. " கண்பயங் கெடப் பெயர " (கலி. கசஅ: ங) என்பதும் அதன் குறிப்பும் பார்க்க.

ரு. " சொற், றேற்று வந்தென் சிலம்படி கைதொழு, தோற்பன் " சீவக. அ௲.

(பிரதிபேதம்) * வனரீதென்கை, † காக்கலாம் வழி, ‡ கண்படாவாயின், || ஞாயிறே! நீ வந்தாலும் எப்பொழுதும் காட்டுகின்ற நீ வனவின்கண் அவனைக், + வேண்டு மென்று, × கூறினள் ஆங்கனை.

கசஅ கலித்தொகை கசன்.

எனவாங்கு

எ - து: எனச்சொல்லி. எ - று.

ஆங்கு, அசை.

கசஉ கண்ணிணை * கலுழ்பேங்கின

டோண்ணெகிழ்பு வளைநெகிழ்ந்தன

என்னையோ வெல்கிருங் காண்மின் மடவான்

மென்னடைப் (க)பேடை †துணைதரத் தற்சேர்ந்த

வன்னவான் சேவற் புணர்ச்சிபோ லொன்றுதல்

காதலன் மன்ற வவனை வரக்கண்டாங்

காழ்துயர மெல்லா மறந்தனள் பேதை
நகையொழிந்து நாணுமெய் நிற்ப விறைஞ்சித்
தகையாகத் தையலாள் சேர்ந்தா னகையாக
நல்லெழின் மார்ப னகத்து.

‡எ - து: இவ்வொண்ணுதல் (உ) அன்னையோ || என்று இனைந்து கண் கலங்கி அழுதாள்; தோண்மெலிந்து வளைநெகிழ்ந்தாள்; இப்பேதை, மடப்பம் வருதலினையும் மெல்லிய நடையினையுமுடைய அன்னப்பெடை விரைந்து செல்ல, அதனைச்சேர்ந்த அன்னச்சேவலின் கூட்டம்போலே, பின் தன் காதலன்வர ||அங்கே அவனைக்கண்டு தான் அழுத்தின துயரமெல்லாம் அறுதியாக ✠மறந்தாள்;மறந்து,இத்தையலாள் பின்னர் ஊரிலுள்ளார் நகைத்தகையையும்

---

க. (அ) "அன்னத் தன்ன மென்னடை யன்னத்துப், புணர்வி னன்ன தண்டாக் காதல" பெருங். (௪) கக: அ௦-அக. (ஆ) "ஆரம் பெருகு கின்ற வன்பினு லன்ன மொத்தும்" சீவக. கஅக. (இ) "தாவிவான் பெடைதுணை துறந்த சொல்லென, வாவிவா யிளவன மயங்கு மென்ப வே" சூளா. ககர. கக. (ஈ) "தாவுயி ருறத்தனி தழுவும் பேடையை, பூவுயிர் பிரித்தெனப் பிரிந்த வோதிமம்' கம்ப. பம்பை. க௫. (உ) "அஞ்சியோடின ரன்னமுஞ் சேவலு மென்ன" பிரபோத்த. உருத்திரசக். ௪௨.

உ. 'அன்னையோ' என்பது ஈண்டு வருத்தத்தைக் காட்டி வந்ததோர் இடைச் சொல்; (அ) "அம்மனை யோவென் றஞ்சிப், பனிக்குறுநன் னுசுப்பிற் பாவை" (ஆ) "அம்மனை யோவெனுத, துன்னென னெஞ்சின வாய்" சீவக. எ௫௫, எ௪௦. என்புழி, 'அம்மனையோ' என வருதலும் காண்க; இஃது அச்சம் காட்டி வந்ததென்றலுமாம்.

(பிரதிபேதம்) *வளிம்பு, † வினதாத், ‡ எ - து: எனச்சொல்லி இவ்வொண்ணுதல், || அங்கே, ✠ முன்னா மறந்தாள்.

போக்கி, போன (க) நாணமும்,தன் மெய்பிடத்தே வந்து நிற்கையாலே தலையிறைஞ்சி, தன்மெய்யிடத்தே அழகுண்டாக மனத்திடத்தே நகையுண்டாக அக்கல்லெழின் மார்பனிடத்தே சேர்ந்தாள்; இம்மகிழ்ச்சியையும் எல்லீருங் காண்பீராகவெனக் கண்டார்வியந்துதம்மிற்கொண்டு கூறிற்றாக உரைக்க.எ-று.

இது, கண்டார்க்கு * அவராக்கங் கண்டு மருட்கை பிறந்தது.

'தொலைவாகக் காணேன்கொல் யான்' என்னுந்துணையும் கூறத் தகாதன கூறலின் மடனிறந்தவாறும் 'செறுஅ தீனஞயிற் கொள்வேன்' என்றதனால், தன் வருத்தந் தோன்றுமற் கூறலின் வருத்தமிறந்தவாறும் 'காமன்கணை பிரப்பேன்' †என்றதனால் அவனை வருத்துவேன் என்று‡அவனைவியவாமையின் மருட்கையிறந்தவாறும் 'கலைஇய.........புருவம்' ‖ என்று உறுப்பான் வனப்பு மிகுதி கூறலின் மிகுதியிறந்தவாறுங் காண்க.

இஃது ஐஞ்சீரடி வந்த தரவும் நெடுவெண்பாட்டும் ஐஞ்சீரான் வந்த ஈரடியாஞென்றும் நெடுவெண்பாட்டும் இருசீராஞென்றும் குறுவெண்பாட்டும் × நெடுவெண்பாட்டும் இரண்டு குறுவெண்பாட்டும் நெடுவெண்பாட்டும் குறுவெண்பாட்டும் மூன்று நெடுவெண்பாட்டும் தனிச்சொல்லும் வஞ்சியடியிரண்டுமுன்னர்விரவி யாப்பின் வேறுபட்ட கொச்சகவெண்பாவும் பெற்ற கொச்சகக்கலி. (கூ0)

(கசஅ.) தொல்லியன் ஞாலத்துத் தொழிலாற்றி ஞாயிறு
வல்லவன் கூறிய வினைதலை வைத்தான்போற்
கல்லடைபு கதிருன்றிக் கண்பயங் கெடப்பெயர
வல்லது கெடுப்பவ னருள்கொண்ட முகம்போல
மல்லனீர்த் திரையூர்பு மாவிருண் மதிசீப்ப
வில்லவ ரொழுக்கம்போ லிருங்கழி மலர்கூம்பச்
செல்லுமென் னுயிர்ப்புறத் திறுத்தந்த மருண்மாலை;
அ மாலை நீ;
இன்புற்றார்க் கிறைச்சியா யியைவதே செய்தாய்ம
னன்புற்று ரழநீத்த வல்லனுட் கலங்கிய
துன்புற்றார்த் துயர்செய்த றக்கதோ நினக்கு;

க. (அ) "வதுவை யயர்தல் வேண்டுவல்......இவள், வதுவைகாணுறேக் கமுக் காண்குவல் யானே" (கலி. ௯௨: ௨௩-௨௫) என்பதும் (ஆ) அதன் குறிப்பும் (இ) "வதுவைகாட் கலிங்கத்து ளொடுங்கிய............ மடந்தை" (கலி. ௬௯: ௩-௪) என்பதும் (ஈ) அதன் குறிப்பும் (உ) இந் நூற்பக்கம் அகஎ: ௩-ஆம் குறிப்பும் இங்கே அறிதற்பாலன.

(பிரதிபேதம்) * அவர்களைக்கம், † என்றதின, என்முனவின. ‡ அதனிவிய. || என்று முறுப்பாக. × செடுவெண்பாட்டுமோண்டும் இரண்டேழு.

௬௫0 கலித்தொகை ௧௪௯.

௧௨ மாலை நீ;
கலந்தவர் காமந்தைக் கனற்றலோ செய்தாய்ம
வலங்கொண்டு நல்காதார் நனிநீத்த புலம்பின்க
ணலந்தவர்க் கணங்காத றக்கதோ நினக்கு ;
௧௬ மாலை நீ;
எங்கேள்வற் றருதலுந் தருகல்லாய் துணையல்லை
பிரிந்தவர்க்கு நோயாகிப் புணர்ந்தவர்க்குப் புணையாகித்
திருந்தாத செயினல்லா லில்லையோ நினக்கு ;
எனவாங்கு;
௨௧ ஆயிழை மடவர லவல மகலப்
பாயிருட் பரப்பிணைப் பகல்களைந் ததுபோலப்
போயவர் மண்வேளவி வந்தனர்
சேயுறை காதலர் செய்வினை முடித்தே.

இது "வெளிப்படை தானே கற்பினொ டொப்பினு, ஞாங்கர்க் கிளந்த மூன்றுபொரு ளாக, வரையாது பிரிதல் * கிழவோற் கில்லை" (க) என்பதனுள் அரசன் மல்கோடற்கு ஏவுதலின் வானணைதிரும் பிரிவின் கண், தலைவன் வரைவிடைவைத்து வேந்தற்குற்றுழிப் பிரிந்துழி அவள் வருத்தமிகுதி கண்டார் கூறியது.

இதன்பொருள்.

தொல்லியன் ஞாலத்துத் தொழிலாற்றி ஞாயிறு

வல்லவன் கூறிய வினைதலை வைத்தான்போற்
கல்லடைபு கதிருன்றிக் (உ) கண்பயங் கெடப்பெயர
(௩) வல்லது கெடுப்பவ னருள்கொண்ட முகம்போல
மல்லனீர்த் திரையூர்பு மாலிருண் மதிசேப்ப

---

௧. தொல். கள. சூ. ௫௦.

௨. (அ)"மலர்தலை யுலகத் திருளறி விளக்கு, மன்னுயிர் விழிக்கக் கண்ணிய கண்ணும்.........பரிதிவா னவ்வே" கல். ௩௩:௨௩-௩௪; (ஆ) "இருவிழிகள் வாண்முகத்தி லிருந்தாலும் வானிரவி பொழுந்தா வன்றிக், கருதுமிலப் பல்பொருளுங் காண்டலரிதாம்" திருக்குற்றலப். நூற்பயன். ௧.

௩. "குட்டுவன், குடிபுறந் தருங்காற் றிருமுகம் போல, வுலகுதொழத் தோன்றிய மலர்கதிர் மதியம்" சிலப். ௨அ: ௩௭-௩௯.

(பிரதிபேதம்)*மியைக்கில்லை.



பறப்பனசுற்றி' எனவும் 'உருவமாலைபோல' எனவும் முச்சீரான்வந்த சொற்சீரடிபெற்ற கொச்சகமும், ஓரடியான்வந்த அம்போதரங்கங்களும் *'பயிலிதழ் மலருண்கண்' எனச் சொற்சீரடிபெற்ற கொச்சகமும் வந்து கலிவெண்பா வுறுப்பின் வேறுபட்டு வந்த கொச்சகக்கலி. "முச்சீர் முரற்கையு ணிறை யவு நிற்கும்" (௧)என்பதனான் முச்சீரடியும் வந்தன. (௩)

(௧0௪.) மலிதிரை யூர்ந்துதன் மண்கடல் வெளவலின்
மெலிவின்றி மேற்சென்று மேவார்நா டிடம்படப்
புலியொடு வின்னீக்கிப் புகழ்பொறித்த கிளர்கெண்டை
வலியினான் வணக்கிய வாடாச்சீர்த் தென்னவன்
௫ றொல்லிசை நட்ட குடியொடு தோன்றிய
நல்லினத் தாய ரொருங்குதொக் கெல்லாரும்
வானுற வோங்கிய வயங்கொளிர் பனைக்கொடிப்

பானிற வண்ணன்போற் பழிதீர்ந்த வெள்ளையும்
பொருமுரண் மேம்பட்ட பொலம்புனை புகழ்நேமித்
திருமறு மார்பன்போற் றிறல்சான்ற காரியு
மிக்கொளிர் தாழ்சடை மேவரும் பிறைநுதன்
முக்கண்ணா னுருவேபோன் முரண்மிகு குராலு
மாகடல் கலக்குற மாகொன்ற மடங்காப்போர்
வேல்வல்லா னிறனேபோல் வெருவந்த சேயு மாங்கப்
பொருவரும் பண்பி னவ்வையும் பிறவு
முருவப்பல் கொண்மூக் குழீஇயவை போலப்
புரிபு புரிபு புகுத்தனர் தொழூஉ ;
அவ்வழி, முன்னெயிற் றோள ரிவனைப் பெறுமிதோர்
வெள்ளேற் றெருத்தடங்கு வான் ;
ஒள்ளிழை, வாருறு கூந்தற் றுயில்பெறும் வைமருப்பிற்
காரி கதனஞ்சான் கொள்பவ னீரரி
வெரூஉப்பிணை மானோக்கி னல்லாட் பெறூஉமிக்
குரூஉக்கட் கொலையேறு கொள்வான் வரிக்குழை

---

௧. தொல். செய். சூ. ௭௦.

பிரதிபேதம்) * பயில்தழமருண்கண்.





வில்லவ ரொழுக்கம்போல (௧) லிருங்கழி மலர்கூம்பச்
(௨) செல்லுமென் னுயிர்ப்புறத் * திறுத்தந்த மருண்மாலை

எ - து: ஞாயிறு தன்கதிர்களாலே ஞாலத்திடத்துப் பழைய இயல்பினை யுடைத்தாய்த் தான்செய்துபோதும் பொருள்களை விளக்குந் தொழிலிலே யன்றி நடத்தி, பின்னர்க் காமன் தனக்கு யான் பிரிந்திருந்தாரை வருத்து தற்கு நீ போவாயாக என்று கூறியகாரியத்தினைத் தன்றலையிலே ஏறட்டுக்

கொண்டுபோவான்போலே அத்தகிரியைச் சேர்ந்து, பல்லுயிருந்தங்கண்களாற் கொள்ளும் பயன்கெடும்படி போக, தீவினையைப் போக்குகின்றவனுடைய அருளைக்கொண்ட முகம்போலத் திங்கள் வளப்பத்தையுடைய கடலிற் றிரை மேலே தோன்றி அம்மயக்கத்தையுடைய இருளைப் போக்க, பொருளில்லா தார் நிகழ்த்தும் இல்லறம்போலக் கரிய கழியின் மலர்கள் ஒழுகக் குவிய, தேய்கின்ற என்னுயிரின் புறத்தே வந்துவிட்ட மாலாய்! நீ அறிவு மயங்கு நிலையுடைய மாலையாய் இருந்தாய்; என்றுங் கூறினாள். எ - று.

அ மாலைநீ
(ரு) இன்புற்றார்க் கிறைச்சியா யியைவதே செய்தாய்ம
னன்புற்றா ரழநீக்க வல்லனாட் கலங்கிய
† துன்புற்றார்த் துயர்செய்த றக்கதோ நினக்கு

எ - து: அங்ஙனங் கூறியவள், அதற்குக் காரணமென்னெனின், கூடி இன்பமுற்றவர்களுக்கு நேயமாய் அவர்கள் தம்மிற் கூடும் நிலைமையையோ மிகவும் முன்பு செய்துபோந்தாய்; இப்பொழுது ஆடவர் தம்மேல் அன்புற்ற மகளிர் அழும்படி தம்மைக் கைவிட்டதனால் உண்டான அல்லலிடத்தே நின்று கலங்கிய துன்பமுற்ற மகளிரை வருத்தஞ் செய்தல் நினக்குத் தக்கதன்றே; என்றாள். எ - று.

மேல் வருகின்றவற்றிற்கும் இங்ஙனங் கூட்டி உரைக்க.

---

க. "இம்மாலை, இருங்கழி மாமலர் கூம்ப" கலி. கஙO: கக-கஉ.

உ. புறம் இடப்பொருளைக் காட்டிவரும் உருபாய் வருதற்கு, இவ்வடி மேற்கோள்; நன். பெயரி. சூ. ௬௫. மயிலை. சங்கர. வி. இரா.

௩. "மாலைநீ, தூவறத் துறந்தாரை நினைத்தலிற் கயம்பூத்த, போதுபோற் குவிந்தவென் னெழினல மெள்ளுவா, யாய்சிறை வண்டார்ப்பச் சினைப் பூப்போற் றளைவிட்ட, காதலர்ப் புணர்ந்தவர் காரிகை கடிகல்லாய்" கலி. சகஅ: க-சஉ.

(பிரதிபேதம்) * இறத்தமருள், † துன்புற்றார் துயர்செய்தல்.

கஉ. மாலினி

கலந்தவர் காமத்தைக் * கனற்றலோ செய்தாய்ம
லலங்கொண்டு நல்காதார் நனிநீத்த புலம்பின்க
ணலந்தவர்க் கணங்காத றக்கதோ நினக்கு

எ - து: மகளிரைக் கூடிய கணவருடைய மனவேட்கையை அம்மக ளிர்க்குத் துணையாய் நின்று அவர் மனத்தினின்று நீங்காது † கனன்றெரியுந் தன்மையையோ முன்பு ‡ மிகவுஞ் செய்தாய்; இப்பொழுது அம்மகளிர் ‖ நலத் தைக் கைக்கொண்டு பின்பு அவர்க்குக் கொடாத ஆடவராலே தந்நலம் போன தனிமையிடத்தே நின்று அலந்த மகளிர்க்குத் துணையாகாதே வருத்தமாகல் நினக்குத் தக்கதன்றோ; என்றாள். எ - று.

கங. மாலினி

எங்கேள்வற் (க) றருதலுந் தருகல்லாய் துணையல்லை
பிரிந்தவர்க்கு நோயாகிப் புணர்ந்தவர்க்குப் புணையாகித்
திருந்தாத செயினல்லா லில்லையோ நினக்கு

எ - து: எம்முடைய கேள்வனை × முன்புபோல மனத்தைக் கனலப் பண்ணி ஈண்டுத் தருதலுஞ் செய்திலை; ஆதலால் நீ எமக்குத் துணையல்லை; தான் பிரிந்திருந்த மகளிர்க்கு அப்பிரிவாற்றோன்றிய நோயின்வடிவு நீதானே யாய்க் கூடியவர்களுக்கு அவர் பெறும் இன்பத்திற்கோர் தெப்பமாய், இங்ஙனம் நன்மையாகாத காரியங்களைச் செய்தொழுகுமதல்லது நினக்கு நன்மை யாகச் செய்யுங் காரியங்கள் இல்லையோ; என்றாள். எ - று.

இது, கலக்கம் என்னும் மெய்ப்பாடு.

+ எனவாங்கு

எ - து: என்று சொல்லி. எ - று.

ஆங்கு, அசை.

உக ஆயிழை மடவா லவல மகலப்
பா(உ)யிருட் பாப்பினைப் பகல்களைந் ததுபோலப்
போயவர் (ங) மண்வௌவி வந்தனர்
சேயுறை காதலர் செய்வினை முடித்தே.

௧. "உண்ணலு முண்ணேன்" (கலி. ௨௩: ௭) என்பதும் அதன் குறிப்பும் நோக்குக.

௨. "ஞாயிற்று முன்ன ரிருள்போல் மாய்ந்தது" (கலி. ௪௨: ௩௧) என்பதும் அதன் குறிப்பும் இங்கே அறிதற்பாலன.

௩. "மண் வெளவி வருபவர்" கலி. ௩௧: ௧.

(பிரதிபேதம்) *, கனைறலோ, ‡ சின்நெறியும், ‡ மிகச் செய்தாய், || கலத்தைக் கொண்டு, × முன்பு போல் மனத்தை, + எனையாக்கு துக்கமே.

## [illegible]ராவது நெய்தல் ௩௨. [illegible]

* இ - ள்: திருந்தின இழையினையுடைய மடப்பம் வருதலையுடையவள் வருந்தியவிடத்தே அரிய நிலத்தே உறைகின்ற காதலர் பகைவரிடத்துச் செய்யும் போர்த்தொழில்களைப் போய் முடித்து அவர்மண்ணைக் கைக்கொண்டு பரந்த இருட்பரப்பினை ஞாயிறு போக்கினாற்போல அவள் வருத்தம் நீங்கவந்தார்; இஃது என்னவியப்போ எனக் கண்டார்கூறியதாக உரைக்க. எ - று.

இது, கண்டார்க்கு † அவர் ஆக்கங்கண்டு மருட்கை பிறந்தது.

"தானே சேறலுந் தன்னொடு சிவணிய, வேனோர் சேறலும் வேந்தன் மேற்றே" (௧) என்பதனால், முடியுடைவேந்தன் தன் பகைமேற் சென்று மண்கோடல் உரித்து என்றதனானும், வாளாணெதிரும் பிரிவு முடியுடை வேந்தர்க்குச் சிறுபான்மையென்றும் அவர் ஏவப்பிரியும் அரசர்க்குப் பெரும்பான்மையென்றுங் கூறலானும், "வெளிப்படை தானே கற்பினொடு பொருந்தும், ஞாங்கர்க் ‡கிளந்த மூன்றுபொருளாக, வரையாது பிரிதல், || கிழவோற் கில்லை" (௨) என்றதனான்வரைவிடைவைத்து மண்கோடற்குப்பிரிதலில்லையென்று அதனை விலக்கினமையானும் கண்டார் களவிற்கூறுதலின்மையானும், இப்பாட்டும் × அவள் மிகவும் வருத்தம் எய்தின நிலைமையைக்கண்டு வருந்தினோர் அவன் வந்து கூட வருத்தம் நீங்கினமை கண்டு வியந்து கூறிய பெருந்திணையாம்.

இதுவும் இடையிடை சொற்சீரடிவந்து எண்ணிடையிட்டுச் சின்னங் குன்றிய கொச்சகம். (௩௨)

(௧௪௬) நிரைதிமில் களிறாகத் திரையொலி பறையாகக்

கரைசேர் புள்ளினத் தஞ்சிறை படையாக
வரைசுகால் கிளர்ந்தன்ன வுரவுநீர்ச் சேர்ப்பகேள் ;
௪ கற்பித்தா னெஞ்சழுங்கப் பகர்ந்துண்ணான் விச்சைக்கட்
டப்பித்தான் பொருளேபோற் றமியவே தேயுமா
லொற்கத்து ளுதவியார்க் குதவாதான் மற்றவ
னெச்சத்து ளாயினுமஃ தெறியாது விடாதேகாண் ;
௮ கேளிர்க ணெஞ்சழுங்கக் கெழுவுற்ற செல்வங்க
டாளிலான் குடியேபோற் றமியவே தேயுமாற்
சூள்வாய்த்த மனத்தவன் விளைபொய்ப்பின் மற்றவன்
வாள்வாய்நன் றாயினுமஃ தெறியாது விடாதேகாண் ;
ஆங்கு;

---

௧. தொல். அகத். சூ. ௰௪.
௨. தொல். களவியல். சூ. ௰௦.
(பிரதிபேதம்) * ௪ - ௬ : என்று சொல்லித் திரும்பினை, † அடியனாக்கம், ‡ சேர்ந்து, ‖ பிற ழற்கில்லை, × இவள் மிகவும்.



[illegible] அனைத்தினிப் பெரும வதனிலை நினைத்துக்காண்
சினை இய வேந்த னெயிற்புறத் திறுத்த
வினைவரு பருவரல் போலத்
துனைவரு நெஞ்சமொடு வருந்தினள் பெரிதே.

இது வரைவு நீட்டித்துழித் தலைவியது ஆற்றாமை கூறித் தலைவனை வரைவு கடாயது.

இதன் பொருள்.

நிரை (க) திமில் களிறாகத் (உ) திரையொலி பறையாகக்
கரைசேர் (ங) புள்ளினந் தஞ்சிறை படையாக
வரைசெல் கிளர்ந்தன்ன (ச) வுரவுநீர்ச் சேர்ப்பகேள்

எ - து: நிரைத்த திமில்கள் களிறாகத் திரையொலிக்கின்ற ஓசை பறையாக இனத்தினையும் அழகிய சிறகினையுமுடைய கரையைச் சேர்ந்த புட்கள் காலாட்படையாகப் பாண்டியன் (ரு) பகைவர்மேற் படையெழுச்சியாய்ச் சென்றுவொத்த செலவினையுடைத்தாகிய வலியினையுடைய கடலைச் சேர்ந்த நிலத்தை யுடையவனே! யான் கூறுகின்றதனைக் கேள். எ - று.

(சு) தான் பாதுகாக்கின்ற கரையை அரசனைப் போலே சென்று அழிக்கின்ற கடற்சேர்ப்பனென்றதனால், தான் பாதுகாக்கப் படுகின்ற நம்மை

---

க. இந்நூற்பக்கம் அ௨௨: க.ஆம் குறிப்பு நோக்கற்பாலது.

உ. "குணில்பொரக் குளிறின முரசம்.........முனையினுற் கடலக முழக்க மொத்தவே" சீவக. ௨௨௨௨.

ங. "கம்புட் கோழியுங் கனைகுர னாரையுஞ், செங்கா லன்னமும் பைங்காற் கொக்குங், கானக் கோழியு நீர்நிறக் காக்கையு, முள்ளு மூரலும் புள்ளும் புதாவும், வெல்போர் வேந்தர் முனையிடம் போலப், பல்வேறு குழூஉக்குரல் பரந்த வோதையும்" சிலப். ௧0: ௧௧௪-௧௧௯.

ச. "உரவுநீர்ச்சேர்ப்ப" (கலி. ௧௨௩: ௨௨) என்பதும் அதன்குறிப்பும் பார்க்க.

ரு. "முடிமன ரெழுதரு பருதி மொய்களி, றுடைதிரை மாக்கல மொளிறு வாட்படை, யடுதிற லெறிசுறா வாகக் காய்ந்தன், கடலிரண் டெதிர்ந்த தோர் கால மொத்ததே." சீவக. ௨௨௨௩.

சு. (அ) கலி. ௧௨௫. தாவின்விசேடவுரையில், 'தன்னாற் பாதுகாக்கப் படுகின்ற மணற்குன்றைத் தானே கரைத்தாற்போல நின்னாற் பாதுகாக்கப்படுகின்ற இவளை நீதானே வருத்தாநின்றாய் என உள்ளுறையுவமங்கொள்க' என்றும் (ஆ) சீவக. ௨௪0-ஆம் செய்யுளின் முன்குறிப்பில், 'தனக்குவேலியாகிய கரையைக் கடல் தானே கொல்லுகின்றாற் போலத் "தமக்குக்காவலாகிய அரசனைப் படை தாமே கொல்லுகின்றது" தென்றார்' என்றும் இவர் எழுதியிருப்பனவை ஈண்டு அறிதற் பாலன.

வளர்ந்துகொண்டு பாதுகாவாமல் * அழிக்கின்றனென உள்ளுறையுவமம் தக்கவாறுணர்க. இனிப் பகையின்றி இருக்கின்ற கடல் பகைபோற் றோன்றி னாற்போல, அயலார் பகைபோல அலர்கூறி வருத்துகின்றாரென்றலுமொன்று.

௪ (க) † கற்பித்தா னெஞ்சழுங்கப் பகர்ந்துண்ணான் ‡ விச்சைகட்
டப்பித்தான் பொருளேபோற் றமியவே தேயுமா
(உ). லொற்கத்து ‖ ளுதவியார்க் குதவாதான் மற்றவ
னெச்சத்து ளாயினு × மஃ தெறியாது விடாதேகாண்

எ - து: தனக்கோர் வருத்தமுற்றவிடத்து உதவினவர்கட்கு ஓர் வருத்தம் வந்தால் உதவாதவன், தன்னை முன்முதலிய கற்பித்த ஆசிரியன் தன்பால் ஒன்றுபெறாமல் மனம்வருந்த, தன்கைப்பொருளை அக்கல்விப்பொருட்குக் கைம்மாறாகக் கொடுத்துஉண்ணானாய், தான்கற்ற விச்சையிடத்தே தப்புப் பண்ணிக்கொண்டவனுடைய கல்விப்பொருள் நாடோறுந் தேயுமாறுபோல, தானே தானாகத் தேயாநிற்பன் ; அதுவேயன்றிப் பின்பு (ந) அச்செய்நன்றிக் கேடாகிய அது தன்னுடம்பினை ஒழித்து உயிர்போனவிடத்தே யாயினும் நுகர்வியாமற் போகாதுகாண். எ - று.

---

க. "குரவர் தக்கிணை காத லோடு வழக்கிலார், தீப்ப வங்களும்" சேது. சங்கதீர்த்த. ௨௦.

உ. (அ) "செல்வத் துட்சேர்ந்தவர் வளனுண்டமேற்றவ, ரொல்கத்து நல்கிலா வுணர்விலார்" (ஆ) "முன்னொன் றுதமக்காற்றி முயன்றவரிறுதிக்கட், பின்னொன்று பெயர்த்தாற்றும் பீடிலையாளர்" (கலி. ௨௫: ௪௬ - ௫௦, ௩௪: ௪-௫)என்பனவும் அவற்றின்குறிப்புக்களும்இங்குஅறிதற்பாலன.

ந. (அ) "நிலம்புடை பெயர்வ தாயினு மொருவன், செய்தி கொன்றோர்க் குய்தி யில்லென, வறம்பா டிற்றே" புறம். ௩௪: ௫-எ. (ஆ) "நன்றி மறப்பது நன்றன்று நன்றல்ல, தன்றே மறப்பது நன்று" (இ) "என்

நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை, செய்ந்நன்றி கொன்ற மகற்கு" குறள். கoஅ, ககo. (ஈ) "நன்றி, செய்தாரப் பிழைத்தோர்க் குய்வில வென்னும், குன்றா வாய்மை நின்றநில காட்டி" கல் ச: கக-கஉ. (உ) * ஒன்றொரு பயன்றனை யுதவி னோர்மனம், கன்றிட வொருவினை கருதிச் செய்வரேற், புன்றொழி லவர்க்குமுன் புரிந்த நன்றியே,கொன்றிடு மல்லது கூற்றும்வேண்டுமோ" கந்த. இரணியன் யுத்த. கா. (ஊ) "உதவிகொன் றார்க்கென் றேனு மொழிக்கலா முபாய முண்டோ" கம்ப. கிட்கிந்தை. கஉ. (எ) "எந்நன்றி கொன் றார்க்கு முய்வுண்டா முய்வதில்லை யிருமை யான, செய்ந்நன்றி கொன்ற மகற் கென்றுரைக்கு நூல்" சேது. சேதுபலச். அஉ.

(பிரதிபேதம்) * அழிக்கின்றுயென, † கற்பித்தார்நெஞ்சு ‡ விச்சைகடைப்பிடித்தான், || உதவி யார்க் குதவாது மறந்தவன், × அஃதுதெரியாது.

கஙிக கலித்தொகை.

கேளிர்க ணெஞ்சழுங்கக் கெழுவுற்ற செல்வங்க
(க) * டாளிலான் குடியேபோற் றமியவே தேயுமாற்
† சூள்வாய்த்த மனத்தவன் வினைபொய்ப்பின் மற்றவன்
வாள்வாய்நன் றாயினுமஃ தெறியாது விடாதேகாண்

எ - து: தான் சூளுறுகின்ற சூளுறவினைக் காண்கின்றவர் மனங்கொள் ளும்படி சூளுற்ற மனத்தையுடையவன் தான் சூளுற்ற காரியத்தினை முடிவு போக்காது பொய்த்துவிவெனுயின், தன்னைச் சேர்ந்து வாழுஞ் (உ) சுற்றத்தா ருடையநெஞ்சு தான் ஒன்றை அறியாமையால் வருந்தும்படி தன்னோடே கெழுமுதலுற்ற செல்வத்திடத்தே தானின்று அச்செல்வத்தை மேலே மேலே வளர்க்கும் முயற்சிதானும் இல்லாதவனுடைய குடி நாடோறுந் தேயுமாறு போலத் தானே தானாகத் தேயாநிற்பன்; அதுவேயன்றிப்‡பின்னர் அச்சூளுற வினைப் பொய்த்த (ங) தீவினை மறுமையில் விரவின் அது வாளின் வாய்கூரி தாய்ச் சுவர்க்கம் பெற்றானாயினும் நுகர்வியாமற் போகாதுகாண். எ - று.

இது வரைந்துகொள்வல் எனச் சூளுற்றதனைப் பொய்த்தாயென்றான்.

ஆங்கு, அசை.

கக. ‖ அணைத்தினிப் பெரும வதனிலை நினைத்துக்காண்
சினைஇய வேந்த னெயிற்புறத் திறுத்த
வினைவரு பருவரல் போலத்
துணைவரு நெஞ்சமொடு வருந்தினள் பெரிதே.

எ - து: பெருமா! செய்ந்நன்றிக்கேடு பொய்ச்சூளுறவாகிய தீவினையின் தன்மை யாம்முற்கூறிய அத்தன்மைத்து; இனி நீதான் + அத்தன்மைத்தாதலை

க. (அ) "குடியென்னுங் குன்றா விளக்க மடியென்னு, மாசூர மாய்ந்து கெடும்" (ஆ) "மடியை மடியா வொழுகல் குடியைக், குடியாக வேண்டு பவர்" (இ) "மடிமடிக் கொண்டொழுகும் பேதை பிறந்த. குடிமடியுந் தன்னினு முந்து" (ஈ) "குடிமடிந்து குற்றம் பெருகு மடிமடிந்து, மாண்ட வுஞற்றி லவர்க்கு" குறள். கூ0க, கூ0உ, கூ0ங, கூ0ச.

உ. (அ) "சிறியவன் செல்வம்போற் சேர்ந்தார்க்கு நிழலின்றி" (ஆ) "இளை யழிய வாழ்பவ னாக்கம்போற் புல்லென்று" (கலி. க0: உ, ஙச: கஅ.) என்பவையும் அவற்றின் குறிப்புக்களும் இங்கே அறிதற்பாலன.

ங. (அ) "வினைப்பகை யுற்றுரு முய்வர் வினைப்பகை, வீயாது பின்சென் றடும்" குறள். உ0எ. (ஆ) "ஊழ்வினை யுருத்துவந் தூட்டு மென்பது உம்" சிலப். பதி. ருஎ. (இ) "ஒளிப்பினு மூழ்வினை யூட்டாது கழி யாது" இறை. சூ. உ. மேற்கோள். (ஈ) "உயிர்புகுஞ் சட்டக வுழி தொறு முழிதொறும், பழவினை புகுந்த படகம் போல" கல். கக: க-உ.

(பிரதிபேதம்) * அலிலான் † குன்பொயத்த யனத்துவன் வினைவயிற்பின், ‡ பின்னைக்குறுகி வின, ‖ அணைத்தசி, × அத்தன்[illegible]லிதுகலை.

ஐந்தாவது நெய்தல்[illegible]. கூறுள

உ. இசசெய்யுளை இளம்பூரணர் ...யின்றுகித தாழிசைபெற்றுவரும் கொச்சகவொருபோகென்றுகூறி, 'நிரைதிமில் .. ..சோப்பகேள்' இது நான்கடியாகி வாராமையிற் றாழிசையாயிற்று. 'கற்பித்தான் ..... ..... விடாதேகாண்' 'கேளிர்கள் .. ..விடாதே காண' இவையிரண்டும் தாழிசை. 'ஆயது, .. ..பெர்தே' இது சுரிதகம்'' என்று விளக்குவார்; தொல். செய். சூ.சுசஉ. 'தரவின் றாகித'

(பிரதிபேதம்) * நினைதஅரசன், †[illegible]சரிதகமம், ‡பாவகை யிலகொச்சகம்.



புதுத்திங்கட் கண்ணியான் பொற்பூண்ஞான் றன்னநின்
கதுப்புலறுங் கவினையாப் காண்டலுங் காண்பவோ;
ஆங்கு;
அரும்பெற லாதிரையா னணிபெற மலர்ந்த
பெருந்தண் சண்பகம் போல வொருங்கலர்
பொய்யா ராகுத றெளிந்தன
மையீ ரோதி மடமொழி யோயே.

இது பொருள்வயிற் பிரிந்த தலைவனை நினைந்து ஆற்றாத தலைவியைத் தோழி ஆற்றுவித்தது.

இதன்பொருள்.

* அயந்திகழ் நறுங் (க) கொன்றை யலங்கலந் தெரியலா
† னியங்கெயி லெயப்பிறந்த வெரிபோல வெவ்வாயுங்
(உ) கனைகதிர் தெறுதலிற் கறித்தெழுந்த காம்புத்தீ
மலைபரந்து தலைக்கொண்டு முழங்கிய முழங்கழன்
மயங்கதர் மறுகலின் மலைதலைக் கொண்டென
விசும்புற நிவந்தழலும் விலங்கரு வெஞ்சுரம்

எ - து: நீர்நிலைக்கருகே விளங்குகின்ற அலங்கலையுடைய கொன்றை மாலையையுடைய(ங) இறைவன் திரிபுரங்களெய்கையிலேதோன்றின முழங்கும்

க. (அ) ''கண்ணி கார்நறுங் கொன்றை'' புறம். க: க;(ஆ)''கொன்றைத் தார் சுவற்புரள '' கலி. க: கக. என்பவற்றால், கொன்றைப்பூ

இறைவனுக்குக் கண்ணியும் தாருமாதல் அறியப்படும்; அஃதன்றி மாலையுமாதல் "கொன்றை யவன்" (கலி கசஉ: உஅ)என்பதன் குறிப் பால் அறியலாகும்; (ஈ) "கார்விரி கொன்றைப் பொன் னேர் புதுமலர்த், தாரன் மாலையன் மலைந்த கண்ணியன்" (அகம். கட வுள்.) என மூன்றுமாகக் கூறப்படுதல்காண்க.

உ. "கனைகதிர் தெறுதலால்" (கலி. கக : கச) என்பதும் அதன் குறிப் பும் பார்க்க.

ந. "மட்டவிழ் மூதூர் மலை மிதாறு பரிஇய, கட்டமர் கூந்தற் கன்னி மங் கைய, ட்டிறு மறையும் விட்டெரி கொளுவலி, வெட்டெனச் சூழிய திசை திசை தொடரா, மைந்தலை யுந்தி யவுகா ளுகை, மந்தர விவ்வி னந்நண்ணன் விட்ட, தீவா யம்பு திரிதரு நகலி, ஹேவா தெழு மடங் குட்குவாத் தோன்றி" பெருங். (க) சங: கசு-கஉச.

(பிரதிபேதம்) * ...த்தழ, † ...செயில்.

## ஐந்தாவது நெய்தல் ந.ந. கூடுக

வெம்மையையுடைய நெருப்பு விசும்புற நிவந்து அழலுமாறு போல, தெறித்த கிரணங்களையுடைய ஞாயிறு எவ்வாயுஞ் சுடுகைகளாலே முனிந்த (க) மூங்கில் தம்மிலே இழைதலைக் கொண்டதாக அதனிடத்தே கடுத்தெழுந்த முழங்கிய காட்டுத்தீ அவ்விடத்தைக் கைக்கொண்டு விசும்பிலே உறஓங்கி வெம்மையைச் * செய்யும், (உ) விலங்குகள் பலகாலுந் திரிகையினாலே மயங்கின அதரை யுடைய, மலைகள் பக்குநுறுக்கிட்டுக் கிடக்கும் போதற்கரியசுரத்தை.எ - று.

செய்யுஞ்சுரம். அதரையுடையசுரம், போதற்கரியசுரம்; என்க.

விலங்கு, வருவிக்க. அலங்கலையுடைய கொன்றை என்றார், (ந)தாராகப் பூத்தலின். அலங்கல், அசைவுமாம்.

எ இறந்துதா மெண்ணிய வெய்துதல் வேட்கையா
லறந்துறந் தாயிழா யாக்கத்திற் பிரிந்தவர்

---

க. (அ) "ஞெலிக்கழை முழங்கழல் வயமா வெரூஉங், குன்றுடை யருஞ் சுரம்" (ஆ) "முளிவயிர்ப் பிறந்த வளிவளர் கூடெரிச், சுடர்விடு நெடுங்கொடி விடர்முகை முழங்கு, மின்னு வருஞ்சுரம்" ஐங்குறு.

௩.௭௭, ௩௬௫. (இ) "கைப்பொருத வோசையாற் கண்ணுமிழ்ந்த செந்தீ யான், மெய்ப்பொருது மீதெழுந்த வெம்புகையா-லெப்ப, வெதிர்வேங் கடுங்கானம் போன்றதே வெம்போ, ரெதிர்வேர்தர் செய்த விடம்" பாரதம். (ஈ) "வயிரமெனக் கடுநெருப்பை மிகமூட்டி வளர்க்கினுயர் வரைக்கா டென்னச், செயிரமரில் வெகுளிபொரச் சேரவிரு திறத்தே முஞ் சென்று மாள்வோம்" வில்லி. கிருட்டினன். க.

௨. (அ) "மாகிரை, மாஅல் யானை யொடு மறவர் மயங்கித், தூறதர் பட்ட வாறுமயக் கருஞ்சுரம்" கலி. ௫: க-௩. (ஆ) "மாமறுகலின் மயக்குற்றன வழி"............(இ) "மானதர் மயங்கிய மலைமுதற் சிறுநெறி" நாற். ௬. ககக. மேற்கோள்.

௩. (அ) "எதில பெய்ம்மழை காரென மயங்கிய, பேதையங் கொன்றைக் கோதையிலை நோக்கி" (ஆ) "குறும்பல் கோதை கொன்றை மலர" ஐங்குறு. ௪௬௨. ௪௬௭. (இ) "காண்மலர்க் கொன்றையும் பொலந்தார் போன்றன" பரி. க௪: க௦. (ஈ) "பொன்போலுர் கொன்றை புரித்தன" திணைமாலை. க௦௬. (உ) "தாரி னார்விரி கொன்றையாய்" (ஊ) "தொடைகவில் கொன்றையந் தாரினும்" (எ) "தொடை மலி யிதழியும்" (ஏ) "தொடைய லார்நறுங் கொன்றையான்" (ஐ) "தொடைகவில் கொன்றை யொடு" (ஒ) "தாரணி கொன்றை யும்" (ஓ) "தாருறு கொன்றை தம்முடி வைத்த சைவனர்" (ஔ) "கனிவளர்தாரப் பொன்னிதழிக் கமழ்தார்|கொண்டார்" தேவாரம் (ஃ) "கொன்றைகண்மேற், றூங்குபொன் மாலைகளோடு" நாலா யிர.நாச்சியார். க. க.

(பிரதிபேதம்) * செய்யுஞ் காதலையெங்க மல்லகன்பாந்து........போற்றகளிபரம் ...............வகையுடைய கம் [illegible]

## ௬௬௦ கலித்தொகை கருo.

(க) "பிறங்குநீர் சடைக்கரந்தா னணியன்ன நின்னிறம் பசந்துநீ பிணையையாய் * நீத்தலு நீப்பவோ

எ - து: ஆயிழாய்! தாம் எண்ணிய காரியங்களைப் பெறுதலானுள்ள விருப்பத்தாலே அறத்தினைக் கைவிட்டு வெஞ்சுரத்தையிறந்து பிறங்குகின்ற

நீரைச் சடையிலே மறைத்தவனொத்த பொருளாக்கத்திலே பிரிந்தவர் அழகினை யுடைய நின்னிறம் பசந்து நீ இத்தன்மையையாக நின்னைக் கைவிடுதலுஞ் செய்வரோ? அங்ஙனஞ் செய்யார்காண். எ - று.

(௨) இறைவனை ஒத்தபொருள் என்றார், பொருள் நின்றழிவில்லாது பல விடத்துஞ் சென்றதேனும் ஒன்றானும் தனக்குக் கேடின்றி யிருத்தலின்.

அணி-அழகு.

கக கரிகாய்ந்த கவலைத்தாய்க் (ங) கல்காய்ந்த காட்டகம்
வெருவந்த வாறென்னார் விழுப்பொருட் ககன்றவ
ருருவவேற் றார்தியா † னொள்ளணிநக் கன்னநின்
‡ னுருவிழந் தினையையா யுள்ளலு முள்ளுபவோ

எ - து: வெந்த கரியினையுடைய பல வழியினையுடைத்தாய்க் கற்கள் காய்ந்த காட்டகத்தை வெருவுதல் வந்த வழியென்று கருதாராய் வடிவை * யுடைய எறுகிய கூர்மையை யுடையானை ஒத்த விழுப்பொருட்கு அகன்றவர் ‖ நக்கஒள்ளிதாகிய அணியினையுடைய நின்னுருவை இழந்து நீ ✢ இத்தன்மை யையாக அப்பொருளையேநினைத்தலையுஞ் செய்வாரோ? அங்ஙனஞ்செய்யார் காண். எ - று.

∴ நக்கு என்னும் எச்சம் ஒள்ளிதாகிய என்னும் வினை கொண்டது.

---

க. "தேறுநீர் சடைக்கரந்து" கலி. க: ௨.

௨. "அருவிதாழ்ந்த" (புறம். ககஅ: க) என்னும் செய்யுளில் 'ஆலமர் கடவுளன்னநின்' என்றதற்கு ஆலின்கீழமர்ந்த முக்கட் செல்வனாகிய கடவுளையொப்ப என்னும் நிலைபெற் றிருப்பேனென் றிருக்கின்ற நின் னென்று மைப்பினுமமையும்' என்று எழுதியிருக்கும் பின்னுரையும் "வீதலறியா விழுப்பொருள்" (கலி. அக: ௨க) என்பதற்கு எழுதியிருக்கும் உரையும் கண்டு அறிதற் பாலன.

௩. (அ) "மலை வெம்பிய போக்கரு வெஞ்சுரம்" (கலி. அ: க) என் பதும் (ஆ) "மலைவெம்ப" (கலி கங: ௫) என்பதும் (இ) அதன்உரையும் ஒப்பு நோக்கற் பாலன.

(பிரதிபேதம்) * நீக்க[illegible]லோ. † ஒள்ணக்க வணியனின், ‡ வெருவிழந்த, ‖ நைக்கு ஒ[illegible]டைய, ✢ இதன்மையாக, ∴ [illegible]ம்.

வேயுறழ் மென்றோட் டுயில்பெறும் வெந்துப்பிற்
௨௫ சேஎய் சினனஞ்சான் சார்பவ னென்றுங்
கறைவனர் நல்லாரை யாயர் முறையினு
ஞண்மீன்வாய் சூழ்ந்த மதிபோன் மிடைமிசைப்
பேணி நிறுத்தா ரணி ;
௨௮ அவ்வழிப், பறையெழுந் திசைப்பப் பல்லவ ரார்ப்பக்
குறையா மைந்தக் கே ளொதி செடுத்த
நறைவலஞ் செயவிடா இறுத்தன வேறு;
௩௨ அவ்வேற்றின்,
மேனிலை மிகலிகலின் மிடைகழி பிழிபு மேற்சென்று
வேறுதி புரைவிறற் றிறனுதி மருப்பின் மாறஞ்சான்
பானிற வெள்ளை யெருத்தத்துப் பாய்ந்தானை
நோனுது குத்து மிளங்காரித் தோற்றங்காண்
பான்மதி சேர்ந்த வரவினைக் கேள்விடுக்கு
நீனிற வண்ணனும் போன்ம் ;
௩௯ இரிபெழு பதிர்பதிர் பிகர்துடன் பலர்நீங்க
வரிபரி பிறுபிறுபு குடர்சோரக் குத்தித்தன்
கோட்டழியக் கொண்டானை யாட்டித் திரிபுழக்கும்
வாடில் வெகுளி யெழிலேறு கண்டை யஃதொன்று
வெருவரு தூம மெடுப்ப வெகுண்டு
திரிதருங் கொல்களிறும் போன்ம் ;
௪௫ தாளெழு துணிபிணி யிசைதவிர் பின்றித் தலைச்சென்று
தோள்வலி துணிபிணி துறக்திறந் தெய்தி மெய்சாய்ந்து

கோள்வழுக்கித் தன்முன்னர் வீழ்தான்மேற் செல்லாது
மீளும் புகரேற்றுத் தோற்றங்காண் மண்டமருள்
வாளகப் பட்டானை யொவ்வா னெனப்பெயரு
மீளி மறவனும் போன்ம் ;
௩௧ ஆங்க, செறுத்தறுத் துழக்கி யேற்றெதிர் நிற்ப
மறுத்து மறுத்து மைந்தர் சாரத்
தடிகுறை யிறுபிறுபு தாயின கிடப்ப
விடியுற ழிசையி னியமெழுந் தார்ப்ப

ஐந்தாவது நெய்தல் ௧௩. ௧௩௩

கொதித்துராய்க் குன்றிவர்ந்து (க) கொடிக்கொண்ட கோடையா
லொதுக்கரிய நெறியென்னு ரொண்பொருட் ககன்றவர்

(உ) புதுத்திங்கட் கண்ணியான் பொற்பூண்ஞான் றன்னநின்
* கதுப்புலறுங் கவினையாய்க் காண்டலுங் காண்பவோ

எ - து: ஞாயிறு கிழக்குத்திசையிடத்து உதயகிரியிலே வந்து தோன்றிப் பின்பு கொதித்துப் பரந்து தான்கொண்ட கோடைக் காலத்தாலே போதற்கு

அரிய வழியென்று கருதாராய்ப் புதிய திங்களாகிய கண்ணியையுடையானை யொத்த ஒள்ளியபொருட்கு அகன்றவர் பொன்னாற்செய்த தலைக்கோலங்கள் தாழ்ந்து விளங்கினாற் போலும் நின்மயிர் அவ்வாறன்றிக் காய்கின்ற அழகை நீ யுடையையாக அப்பொருள் வேட்கையை மனத்தாற் காணுதலையுஞ் செய்வரோ? அங்ஙனஞ் செய்யார்காண். எ - று.

ஆங்கு, அசை.

உ0 அரும்பெற (௩)லாதிரையா னணிபெற மலர்ந்த
பெருந்தண் சண்பகம் போல வொருங்கவர்
பொய்யா ராகுத றெளிந்தன
மையீ ரோதி மடமொழி யோயே

எ - து: கருமையினையும் செய்ப்பினையுமுடைய † ஒளியினையும் மடப்பத்தையுடைய மொழியினையுமுடையாய்! பெறுதற்கு அரிய ஆதிரையானை யுடைய(ச)இறைவன்றிருமேனி அழகைப்பெறும்படி மலர்ந்த பெரியகுளிர்ந்த இச்சண்பகம் பருவம்பொய்யாதவாறுபோல அவர் தாம் கூறிய பருவத்தைப் பொய்யாராய்வருதலை அவர்கூறியகூற்றால்நீயும்யானும் ஒருங்கு தெளிந்தேம்;

க. "கொடிமிசை மையறு மண்டிலம்" கலி. க௪௩: கக-க௨.

உ. (அ)" திங்கட் புதுமுகிழ் சூடினாரே "தேவாரம். (ஆ) " குளிர் மதிக் கண்ணியார்க்கு" சீவக. உ0அ. (இ) "அஞ்செறி வேணியிற் கண்ணியென விருந்து, தூற்றுமறு வொழிந்த வேற்றத் தானும் " கல். உகூ: ௩௨-௩௩; (ஈ) " திங்கட் கண்ணி முழுமுதலை " கூர்ம. தக்கனைச். கக. (உ) " மாசறு மிளமதிக் கண்ணி வார்சடை, யீசன்மேல் " காசி. காசியின் சிறப்பு. உஎ. (ஊ) "திங்களாம் கண்ணி யானை" சேது. சேதுகுண்டச். ௪௩. (எ) " ஆறுடிய வேணியின் மிமிசையிக் கவிழ்தாடிய வெண்மதிக் கண்ணியனே" (ஏ) " காண்மதிக் கண்ணி யார்தாம் " திருவானைக்காப். பராசரன். ௪௧, கவுதமப். ௩௩. (ஐ) " வினையு மா மதிக் கண்ணியான் " விநாயக. கணபதி. க௪. (ஒ) "உருவவெண் டிங்கட் கண்ணி யோண் சுடர்க்கு" உத்தரகோச. ஐந்தெழுத்து. கக.

௩. "பின்னரு, மாதிரையா னாதிரையா னென்றென் றயர்வுறமா, லூர் திரைநீர் வேலி யுலகு" முத்தொள். கடவுள் வாழ்த்து.

௪. "செண்பக மலரெனச் சிவந்த மேனியாள்"

(பிரதிபேதம்) * கதைப்புலரும் கவின், † ஒளியினையுடைய மடப்பத்தை.





அன்னைத் தெளிந்த பருவம் கழிவதற்கு முன்னே வருவர்; அவர் மொழியைத் தெளிவாயாக என ஆற்றுவித்தாள். எ - று.

இது வைம்மிதலென்னும் மெய்ப்பாடு எய்திநின்ற தலைவிக்குப் பின்னர்ச் சூழ்ச்சி பிறந்தது.

(ந) இஃது இளவேனிற் பருவங்குறித்து வற்புறுத்திப் பிரிய ஆற்றியிருந்து அப்பருவம் வந்தபின்னர் ஆற்றுளாய் இரங்குகின்ற தலைவியைத் தோழி ஆற்றுவித்தலான் இரக்கமாகிய உரிப்பொருள் சிறத்தலின், அ

வுரிப்பொருள் முதலினுங் கருவினுஞ் சிறந்ததென்று இரக்கத்திற்கு உரிய நெய்தலிற் கோத்தார்; "முதல்கரு வுரிப்பொரு ளென்ற * மூன்றே, நுவலுங் காலை முறைசிறந் தனவே, பாடலுட் பயின்றவை நாடுங் காலை" (௨) என்றாராகலின். இது பாலைக்கு உரிய முதலுங் கருவும் † வந்து அதற்கு உரிய உரிப்பொருள் சிறவாமல் நெய்தற்கு உரிய உரிப்பொருள் சிறந்ததாயிற்று.

இது தரவியல் ஒவ்வாது ‡ அதனகப்பட்டுவருஞ் சுரிதகத்தானிற்ற ஒத்தாழிசைக்கலி. (௩௩)

" முல்லை ‖ குறிஞ்சி மருத நெய்தலெனச், சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே" (௩) என்புழி, சொல்லாத முறையாற் சொல்லவும் படுமென்றலின் இத்தொகையைப் பாலை குறிஞ்சி மருதம் முல்லை நெய்தலென இம்முறையே × கோத்தார் ✢ நல்லந்துவனார்.

நெய்தற்கலி முற்றும்.

## கலித்தொகை முற்றும்.

நெய்தற்கு ஆசிரியன் பாரத்துவாசி
நச்சினார்க்கினியன் செய்த
உரை முற்றும்.

---

௧. "திணைமயக் குறுதலும்" என்னுஞ் சூத்திரவுரையில் 'மயக்குறுதலும்' என்றதனான் அவ்வவ நிலங்கட்கு உரிய முதலுங்கருவும் வந்து உரிப்பொருள் வேறுதலன்றி அவ்வவ் நிலங்கட்கு உரித்தல்லாத முதலுங் கருவும் வந்து உரிப்பொருண் மயங்குவனவுங் கொள்க வென்றும், 'தெய்வமுணாவே' என்னுஞ்சூத்திரத்தினுரையில் 'எந்நில மருங்கின் என்பதனால் பூவும் புள்ளும் வரைவின்றி மயங்கு மெனவே ஒழிந்த கருவும் மயங்கு மென்பது 'சூத்திரத்துப் பொருளன்றியும்' என்பதனை உரையிற் கொள்க வென்றும் கூறி இச்செய்யுளை மேற்கோள் காட்டினர் நச்சினார்க்கினியர்; தொல். அகத். சூ. ௧௨; ௧௮.

௨. தொல். அகத். சூ. ௩. ௩. தொல். அகத். சூ. ௫.

(பிரதிபேதம்) * மூன்றென, † வந்துபாலைக்குரிய, ‡ அதன்கணகப்பட்டு. ‖ குறிஞ்சி. × கோத்தார கலித்தொகைக்கு ஆசிரியன்பாரத்துவாசி நச்சினார்க்கினியான் செய்த உரைமுற்றும். ✢ நல்லந்துவனார.

# உரைச்சிறப்புப்பாயிரம்.

---

பாற்கடல் போலப் பரந்த நன்னெறி
நாற்படு வான்பொரு ளுண்ணிதி னுணர்ந்து
போக்கறு கேள்விப் புலவோர் புலத்தி
னற்பொருள் பொதிந்த தூக்கமை யாப்பினைத்
† தேக்கிய சிந்தைய ரனைவர் பாற்பட
வெழுத்துஞ் சொல்லும் பொருளுமிம் மூன்று
மிழுக்கற வாய்ந்த ‡ வழுக்கிறேல் சீர்த்தித்
தொல்காப் பியமெனுந் தொடுகடற் பரப்பை
மறுவுங் குறையு மின்றி யென்றுங்
கலையி னிறைந்த கதிர்மதி யென்ன
நிலையுடை கலத்தி னெடுங்கரை காணக்
கல்லா மாந்தர் கற்பது வேண்டியு
நல்லறி வுடையோர் நயப்பது வேண்டியு
முறையிடை யிட்ட காண்டிகை யுரைந்தார்.
ஆன்றோர் || புகழ்ந்த வறிவினிற் றெரிந்து
சான்றோ ருரைத்த தண்டமிழ்த் தெரிய
லொருபது பாட்டு × முணர்பவர்க் கெல்லா
முரையற + முழுதும் புரைபட வுரைத்தும்
ஒலித்திரைத் தலத்தி லுணர்ந்தோ ருரைக்கும்
கலித்தொகைக் கருத்தினைக் காட்சியிற் கண்டதற்
குள்ளுறை யுவமமு மேனை யுவமமுந்
தெள்ளிதிற் றெரிந்து திணைப்பொருட் கேற்ப

வுள்ளுறை யுவமத் தொளித்த பொருளைக்
கொள்பவர் கொள்ளக் குறிப்பறிந் துணர்த்தி
யிறைச்சிப் பொருளுக் கெய்தும் வகையைத்
திறப்படத் தெரிந்து சீர்பெறக் கொளீஇத்
துறைப்படு பொருளொடு சொற்பொருள் விளக்கி

---

(பிரதிபேதம்) * உரைதரப், † நோக்கமைச்சிறைய, ‡ வழுத்தற்றொல், || புகழ்வறிவினிற், × உரையவர்க்கெல்லாம், + முழுதும் படைவுரு விதரும்.

ஆக்ஷ கலித்தொகை

முறைப்பட வினையை முடித்துக் காட்டிப்
பாட்டிடை மெய்ப்பாடு பாங்குறத் தெரித்துப்
பாற்பட நூலின் யாப்புற வுரைத்த
நாற்பெயர் பெயரா நடப்பக் கிடத்திப்
போற்ற வின்னுரை பொருள்பெற * விளம்பியும்,
வையம் புகழ்ந்து மணிமுடி சூட்டிய
பொய்யில் வான்கதை பொதிந்த செந்தமிழ்ச்
சிந்தா மணியைத் தெண்கடன் மாநிலம்
வந்தா தரிப்ப † வண்பெரு வஞ்சிப்
பொய்யா மொழிபுகழ் மையறு காட்சித்
திருத்தரு முனிவன் கருத்திது வென்னப்
பருப்பொருள் கடிந்து ‡ பொருட்டொடர்ப் படுத்து
வினையொடு முடியப் புனையுரை யுரைத்தும்,
நல்லறி வுடைய தொல்பே ராசான்
கல்வியுங் காட்சியுங் காசினி யறியப்
பொருடெரி குறுந்தொகை யிருபது பாட்டிற்

கிதுபொரு ளென்றவ னெழுதா தொழிய
கிதுபொரு ளென்றதற் கேற்ப வுரைத்தும்,
தண்டமிழ் ‖ தெரித்த வண்புகழ் மறையோன்
வண்டிமிர் சோலை மதுரா புரிதனி
லெண்டிசை விளங்க வந்த வாசான்
பயின்ற கேள்விப் பாரத்து வாச
னுன்மறை துணிந்த நற்பொரு ளாகிய
தூய ஞான நிறைந்த சிவச்சுடர்
தானே யாகிய தன்மை யாள
னவின்ற வாய்மை நச்சினார்க் கினிய
× னிருவினை கடியு மருவியம் பொதியின்
மருவிய குறுமுனி தெரிதமிழ் விளங்க
வூழி யூழி காலம்
வாழி வாழியிம் மண்மிசை யானே.

---

(பிரதிபேதம்) * அமைத்தும், † வரைபெரு வஞ்சிப், ‡ பொருட்டொடர் படுத்து, ‖ தெரிதவண் புகழ், × அருவினைகடியும்.

## உரைச்சிறப்புப்பாயிரம் [illegible]

தொல்காப் பியத்திற் றொகுத்த பொருளனைத்து
* மெல்லார்க்கு மொப்ப வினி துரைத்தான்—சொல்லார்
† மதுரைநச்சி னார்க்கினியன் மாமறையோன் கல்விக்
கதிரின் சுடரெறிப்பக் கண்டு.

---

பச்சைமா லனைய மேகம் பௌவநீர் பருகிக் கான்ற
வெச்சிலைத் திசையு முண்ணு ‡ மமிழ்தென வெழுநா வெச்சின்
மெய்க்கா முறுநர் கின்னேர் || மிசைகுவர் வேத போத
× னச்சினார்க் கினிய னெச்சி னறுந்தமிழ் நுகர்வர் நல்லோர்.

---

# +கலித்தொகைக்கு
## ஆசிரியன் பாரத்துவாசி நச்சினார்க்கினியன் செய்த
## உரை முற்றும்.

(பிரதிபேதம்) * எல்லார்க்கு மேற்பவினிது, † மதுரா புரியினியான் மாமறையோ னின்பக், கதிரார் சுடர். ‡ அமிர்தென || நுகர்குவர், × நச்சினார்க் கினியா ருவி னல்லுரை கவில்வர் நல்லோர். + கலித்தொகைக்கு நச்சினாற்கினியர்

## நான்காவதுமுல்லை ச. ௧௦௧.

௫௫ பாடேற்றுக் கொள்பவர் பாய்ந்துமே லூர்பவர்
கோடிடை நுழைபவர் கோட்சாற்று பவரொடு
புரிபுமேற் சென்ற நூற்றுவர் மடங்க
வரிபுனை வல்விலை வைவ ரட்ட
பொருகளம் போலுந் தொழூஉ
௬0 தொழூஉவினுள், கொண்டவே றெல்லாம் புலம்புகத் தண்டாச்சீர்
வாங்கெழி னல்லாரு மைந்தரு மல்லலூ
ராங்க ணயர்வர் தழூஉ;
௬௩ பாடுகம் வம்மின் பொதுவன் கொலையேற்றுக்
கோடு குறிசெய்த மார்பு;

௬௰ நெற்றிச் சிவலை நிறையழித்தா னீண்மார்பிற்
செற்றார்கண் சாயயான் சாரா தமைகல்லேன்
பெற்றத்தார் கவ்வை யெடுப்ப வதுபெரி
தற்றியா னாயர் மகள் ;

௬௰௧ தொழீஇஇ; ஒருக்குநா மாடுங் குரவையு ளம்மை
யருக்கினான் போனோக்கி யல்லினாப் செய்தல்
குருஉக்கட் கொலையேறு கொண்டேன்யா னென்னுந்
தருக்கன்றோ வாயர் மகன் ;

௭௰ நேரிழாய், கோளரி தாக விறுத்த கொலையேற்றுக்
காரி கதனஞ்சான் பாய்ந்த பொதுவற்கே
யார்வுற் றெமர்கொடை நேர்ந்தா ரலரெடுத்த
வூரவரை யுச்சி மிதித்து ;

என ஆங்கு;

தொல்கதிர்த் திகிரியாற் பரவுது மொல்கா
வுருமுறழ் முரசிற் றென்னவற்
கொருமொழி கொள்கவிவ் வுலகுட னெனவே.

இது "நாடகவழக்கினும்" என்னும் (க)சூத்திரத்துப் "பாடலுளமை யாத" என்றதனல் ஏறுதழுவியவாற்றைத் தோழி தலைவிக்குக் காட்டிக்

க. தொல். அகத். சூ. ௫௩. இச்சூத்திரத்தின் இவருரையிலும் இச்செய்யுள் மேற்கோளாக இக்குறிப்பு, சிறிது வேறுபாட்டோடுவிளக்கமாக உளது.



கூறி, இக்குரவையுள் அவனைப் பாடுகம் வாவென்றுட்டு, அவன் உடம்பாட்டினன், தான் அலரச்சம் நீங்கினமையும் அவன் தன்னை வருத்தினமையுங் கூறிப் பாடி, பின்னர்த் தோழி நமர் அவற்கு நின்னைக்கொடைநேர்ந்தா ரெனக்கூறியது.

முதன் போதல்.

(௧)மலிதிரை யூர்ந்துதன் (௨)மண்கடல் வௌவலின்
மெலிவின்றி மேற்சென்று மேவார்நா டிடம்படப்
(௩) *புலியொடு வின்னீக்கிப் புகழ்பொறித்த கிளர்கெண்டை
வலியினான் வணக்கிய (௪)வாடாச்சீர்த் (௫)தென்னவன்
றொல்லிசை நட்ட குடியொடு தோன்றிய
நல்லினத் தாய ரொருங்குதொக் கெல்லாரும்
(௬)வானுற வோங்கிய வயங்கொளிர் (௭)பனைக்கொடிப்
பானிற வண்ணன்போற் பழிதீர்ந்த வெள்ளையும்

---

௧. தரவுசுற்றடிகுறைந்தும்வருமென்பதற்கு "மலிதிரை.........தொழுஉ" என்னும் பகுதி மேற்கோள். தொல். செய். சூ. ௧௧௧. நச்.

௨. "அடியிற் றன்னள வரசர்க் குணர்த்தி, வடிவே லெறிந்த வான்பகை பொறாது, பஃறுளி யாற்றுடன் பன்மலை யடுக்கத்துக், குமரிக்கோடுங் கொடுங்கடல் கொள்ள, வடதிசைக் கங்கையு மிமயமுங் கொண்டு, தென்றிசை யாண்ட தென்னவன்" சிலப். ௧௧: ௧௭ - ௨௨. என்பதும் 'அங்ஙனமாகிய நிலக்குறைக்கு சோழநாட்டெல்லையிலே முத்தூர்க் கூற்றமும் சேரமானாட்டுக்குண்டூர்க் கூற்றமுமென்னுமிவற்றை இழந்த நாட்டிற்காக ஆண்டதென்னவன்' என்றெழுதிய உரையிலுள்ள செய்தியும் ஈண்டு அறிதற்பாலன.

௩. அரசர் பிறவரசரிடம் வலியாற்கொண்ட நாட்டைத் தமதென அறிவித்தற்காக அங்கே தம் கொடியைப் பலருமறியப் பொறித்தல் மரபு; இதனை, "கோண்மாக் குயின்ற சேண்விளங்கு தொடுபொறி, நெடுநீர்க் கெண்டையொடு பொறித்த, குடுமிய வாகபிறர் குன்றுகெழு நாடே" (புறம். ௫௮: ௩௦ - ௩௨) என்பதனானும் அறிக.

௪. "வாட்டருஞ்சீர்" சிலப். ௧: ௪௧.

௫. "வீவில் குடிப்பி றிருங்குடி யாயரும்" கலி. ௧௦௪ ௭.

௬. "தேம்படு பனையின் றிரன்பழத் தொருவிதை, வானுற வோங்கி" வெற்றி.

௭. பனைமுன் கொடிவரின் ஐகாரம் கெடாது நிற்றற்கு, "பனைக்கொடி" என்பது மேற்கோள்; தொல். உயிர். சூ. ௮௩. இளம். நச்.

(பிரதிபேதம்) * புலிவொடு.

பொருமுரண் மேம்பட்ட ‡பொலம்புனை புகழ்சேஎய்த்
(௧)திருமறு மார்பன்போற் றிறல்சான்ற காரியு
(௨)மிக்கொளிர் தாழ்சடை மேவரும் பிறைநுதன்
முக்கண்ணா னுருவேபோன் முரண்மிகு குராலு
மா(௩)கடல் கலக்குற மாகொன்ற மடங்காப்போர்
வேல்வல்லா னிறனேபோல் வெருவந்த †சேயு மாங்கப்
பொருவரும் பண்பி னவ்வையும் பிறவு
முருவப்பல் கொண்மூக் குழீஇயவை போலப்
புரிபு புரிபு புகுத்தனர் தொழூஉ

௧. "திருமறு மார்பநீ யருளல் வேண்டும்" பரி. ௧: ௩௧. திருமறு—ஸ்ரீ வத்ஸம்.

௨. "உமையொடு புணர்ந்த விமையா நாட்டத்துக், கண்ணனங் கவி ழொளிக் கடவுள்" பெருங். (௧) ௫௩: ௧௫ - ௧௬.

௩௦ (அ) "பார்முதிர் பனிக்கடல் கலங்கவுள் புக்குச், சூர்முத றடிந்த சுடரிலை நெடுவேல்" திருமுருகு. ௬௰-௬௧. (ஆ) "பாயிரும் பனிக்கடல் பார்துகள் படப்புக்குச், சேயுயர்பிணிமுக மூர்ந்தம ருழக்கித், தீயழ லவைப்பத் திரியவிட் டெறிந்து, கோயுடை நுடங்குசீர் மாமுத றடிந்து, வென்றியின் மக்களு ளொருமையொடு பெயரிய, கொன்னுனை வஞ்சாக் கொடுவினைக் கொம்முறை, மாய வவுணர் மருங்கறத் தபுத்தவேல்" பரி. ௫: ௧-௭. (இ) "கட்டுடைச் சூருடல் காமங்கொண்டு பற்றியுட் புகுந்து பசுங்கடல் கண்டு, மாவொடுங் கொன்ற மணிநெடுந் திருவேற், சேவலங் கொடியோன்" (ஈ) "விண்ணுடைத் தண்ணும் கண்ணிலா வொருத்தன், மறிதிரைக் கடலுண் மாவெனக் கவிழ்ந்த, கனவுடல் பிளந்த வொளிகெழு திருவேற், பணிப்பகை யூர்தி" (உ) "மேல்கடற் கவிழ்முகப் பொரியுடன் மாவு, நெடுங்கடற் பரப்பு மயிர்தொழி லரக்கரு, மென்னுளத் திருளு மிடைபுகுந் துடைத்த, மந்திரத் திருவேன் மறங்கெழு மயிலோன்" (ஊ) "கடுவினை யங்குரங் காட்டியுள் ளழுக்கா, றெண்டிசைச் சாகைகொண் டிருண்மனம் பொதுளிக், கொடுங்கொலை வகுத்துக் கடும்பழிச் சடையலர், திரண்டைஞ்ஞூறு திரண்டவக்காவதஞ், சுற்றுடல்பெற்றுத் துணைப்பதிறுயிர, மற்றதி னீண்டு மணியுடற் போகி, யைம்பது நூறுட னகன்றுசுற் றொழுக்கிப், பெருங்கவி ழிணர்தக் தலைகிழ்ம் குலவிய, வடன்மாக் கொன்ற நெடுவேற் குளவன்" கல். ௧௧: ௪-௭; ௧௪: உ௭-௩௦; ௭௩: உ-௫; ௮௧: ௧-௯. என்பவைகளும் (எ) "நளியிரும் பரப்பின் மாக்

(பாடபேதம்) * புலம்புன, † சேவுமாங்க.



எ - து: தன் நாட்டைக் கடலிலுடைய மிக்க திரையேறிக் கைக் கொண்டுவிடுகையினாலே தனக்கு நாடு இடமுண்டாம்படியாக மனத்தின் இளைப்பின்றாய்ப் பகைவரைத் தன் வலியினாலே தாழ்க்கவேண்டி அவர்மேலே சென்று அவருடைய புலிப்பொறியையும் விற்பொறியையும் அவர் நாட்டி னின்றும் போக்கி விளங்குகின்ற கயலை அவ்விடத்தே பொறித்த புகழை

புடைய கெடாத தலைமையினையுடைய பாண்டியனுடைய பழைய புகழை நிலைபெறுத்தின குடியோடு ஒக்கத் தோன்றின பசுவினத்தில் ஆயரெல்லாரும் சேரத் திரண்டு விளங்குகின்ற வாளிலேயுறும்படி *ஓங்கிய ஒளிபெருகுகின்ற (க)பனைக்கொடியினையுடைய(உ)பாலின நிறத்தையுடைத்தாகிய நிறத்தினை

---

கடன் முன்னி, யானைக்குடை யவுண ரேயம் புணர்க்குஞ்; சூருடை முழுமுத றடிந்த பேரிசைக், கடுஞ்சினவிறல்வேள்" (பதிற். ௧௧: ௩-௬) என்பதும் அதில் சூருடை முழுமுதலென்பதற்கு, "சூரவன்மா, தனக்கு அரணாகவுடைய மாவின்முதலென்றவாறு; இனி, சூரவன்மா, தான் ஒருமாவாய் நின்றானென்று புராணமுண்டாயிற் சூரனுதற் றன்மையையுடைய மாவின் முதலென்றவாறும்' என்று எழுதியிருக்கும் உரைப்பகுதியும் (ஏ) "போரெதிர்ந் தேற்றார் மதுகை மதந்தபக், காரெதிர்ந் தேற்ற கமஞ்சூ லெழிலிபோ, னீர்நிரந் தேற்ற நிலந்தாங் கழுவந்துச், சூர்நிரந்து சுற்றிய மாதபுத்த வேலோய்" (பரி. ௧௮: ௧-௪) என்பதும் அதன் உரையும், (ஐ) "கவிழிணர், மாமுத றடிந்த மறவில் கொற்றத், தெய்யா நல்லிசைச் செவ்வேற் சேஎய்" திருமுரு. ௫௯ - ௬௧. என்புழி, "மாமுத றடிந்த" என்பதற்கு 'அவுணரெல்லாரும் தம்முடனே எதிர்த்தார் வலியிலே பாதி தங்கள் வலியிலே கூடும்படி மந்திரங்கொண்டிருந்து சாதித்ததொரு மாவை வெட்டினான்' என்று எழுதியிருக்கும் விசேடவுரையும் ஈண்டு அறிதற்பாலன.

௧. (அ) "அடல்வெங் காஞ்சிற் பனைக்கொடி யோனும்" புறம். ௫௬: ௪, (ஆ) "பொற்பனை வெள்ளையைப் போற்று. தொழுகின்று" இன்னா. ௧. (இ) "மடற்பனை யுயர்த்த மதிநிறப் பெருமனுக்கு" (ஈ) "கார், வெள்ளோட்டினம் பனைமிசை யுயர்த்தோனென விளர்த்த"(உ)"வானுற்ற தண்பனை யுயர்த்தவன்" (ஊ) "கள்ளவிழும் வெண்டோட்டுக் கரும்பனைமீ மிசையுயர்த்த, வெள்ளிவரை யனையானும்" (எ) "போந்தை மீதுயர்த்த வென்றிப் புரவலன்" பாகவத. (ஏ) சையாதி, ௨௪. (௧௦) வேய்ங்குழல். ௧௩. உருக்குமிணி மண. ௧. பிரத்துமனன்மணம். ௧௪. சுபத்திரைமணம். ௧௮.

௨. (அ) "பானிற வண்ணனுக்கிற் பழியுடைத்து" சீவக. ௨௦௧. (ஆ) "பான்மேனியான்" பழ. ௧௩.

(பிரதிபேதம்) * ஒள்ளிய பிணைக்கொடி.



புடையவனைப்போலே பழித்தலீற்ற வெள்ளையேற்றையும் பொருகின்ற மாறு பாட்டினாலேஎனையவற்றின்மேலான பொன்னாற்பனைத்தபுகழையுடைத்தாகிய சக்கரப்படையையுடைய திருவாகிய மறுவையுடைத்தாகிய மார்பினைப் போலே அமைந்த கரிய ஏற்றையும் மிக்குவிளங்குகின்ற தாழ்ந்த (க) சடையினையும்ஒரு*பாகத்திலேமேவுதல்வரும்பிறைபோன்றநுதலினையுடையாளையு முடைய மூன்றுகண்ணினையுடையானுடைய நிறம்போலே மாறுபாடு மிக்க குரலேற்றையும்பெருமையையுடையகடல் கலக்குறும்படி உள்ளேசென்று மாமரத்தைவெட்டின மீளாத †போரையுடைய வேலை எறிந்த (உ)முருகனது நிறம்போல அழகுநிவந்த ஏற்றையும் அவ்வாப்புவாரும் குணத்தினையுடைய ஏற்றையும் ஒப்பில்லாத பிறஏற்றையும் வடிவையுடையவாகியபல மேகங்கள் திரண்டவைபோல முழங்குப்பர விரும்பி விரும்பித் தொழுவிலே புகுதவிட்டார். எ - று.

௧௮ அவ்வழி, (௩)முள்ளெயிற் றேஎர் (௪)இவளைப் பெறுமிதோர்
வெள்ளேற் றெருத்தடங்கு வான்

எ - து: ‡அவ்விடத்து இந்த ஒப்பில்லாத வெள்ளிய ஏற்றின் கழுத்திலே கிடக்குமவன் கூரிய எயிற்றினையும் அழகினையுமுடைய இவளைக்கூடும். எ-று.

---

௧. (அ)“பிறைநுதல் வண்ணமாகின்று” (ஆ) “கறைமிடற்றண்ணல் காமர் சென்னிப், பிறைநுதல் விளங்கு மொருகண்போல” (இ) “பால்புரை பிறைநுதற் பொலிந்தசென்னி. நீல மணிமிடற்றொருவன்” புறம். ௧:௯. ௫௫: ௪ - ௫ ௯௧: ௫ - ௬ (ஈ) “பிறைநெற்றியோடுற்ற முக்கண்ணினார்” (உ) “பிறைதாங்கு நெற்றியர்” (ஊ) “பிறைசேர் நுதலிடைக் கண்ணமர்ந் தவனே” (எ)“இங்க டலகம் பதிக்க நுதலர்” தேவாரம். என வருதலால், பிறைநுதலென்பதற்கு, பிறையணிந்த நுதலென்று பொருள்கொண்டு ‘சடைமேவரும்’என்பதற்கு அதற்கேற்பப்பொருள் சொல்லினும் அமையும்.

௨. முருகவேள் செந்நிறமுடையவரென்பதை, 'செவ்வேள்' 'சேய்' என வழங்கும் பெயர்களும் வலியுறுத்தும். "உருவு முருவத்தீ யொத்தி" என்பது பரி. ௧௧: ௧௩.

௩. (அ) ஏறுதழுவினனுக் குரியனிவனெனவந்த கைக்கிளைக்கு, "முள்ளெயிற்றேஎர்...... ......கொள்பவன்" என்னும் பகுதி மேற்கோள்' தொல். அகத். சூ. ௩௩. ௩௪. (ஆ) முள்ளெயிறு இந்நூற்பக்கம் ௩௩: ௧-ஆம் குறிப்புப் பார்க்க.

௪. "இவளைப் பெறுமிதோர்... .......சார்பவன்" இவ்வடிகளோடு "காரி கதனஞ்சான் பாய்ந்தாளைக் காமுறுமிவ், வேரி மலர்க்கோதை யாள் .. பிரதிபேதம்) * பாகத்தேமேவுதல். † போரையுடைய முருகனை.‡ அவ்விடத்த கல்லாயிரீத் வெளப்பில்லாத.

## ௩௱௩ கலித்தொகை ௧௦௪.

௨௦ ஒள்ளிழை, வாருறு(௧)கூந்தற் றுயில்பெறும் வைமருப்பிற்
(௨)காரி கதனஞ்சான் கொள்பவன்

எ - து: கூரிய கொம்பையுடைய கரிய ஏற்றினது கோபத்தை அஞ்சாது அதனைத் தழுவுமவன் இந்த ஒள்ளிய இழையினையுடையாளுடைய வாருதலுற்ற கூந்தலிலே துயிலுதலைப் பெறும். எ - று.

௨௧ சாரி

*வெரூஉப்பிணை (௩)மானோக்கி னல்லாட் பெறூஉமிக்
(௪)குரூஉக்கட் கொலையேறு கொள்வான்

எ - து: குரால் †நிறத்தவாகிய கண்ணினையுடைய கொலைத்தொழிலையுடைய ஏற்றைத் தழுவுமவன், வெருவுதலையுடைய பிணையாகிய மானைக்குப் போலும் நோக்கினையுடைய இரண்டாகியகண்களையுடைய இந்த ‡நல்லாளைக் கூடும். எ - று.

(௫)அரி, ஆகுபெயர்.

௨௩ வரிக்குழை,
வேயுறழ் (௬)மென்றோட் டுயில்பெறும் வெந்துப்பிற்
||சேஎய் சினனஞ்சான் சார்பவன்

.........பூவைப் புதுமல ரான்" (சிலப்.௯௯: கொளு, ௧ - ௭.) என்னும் பகுதிகள் ஒப்புநோக்கற் பாலன.

௧. (அ) "மகளிர், விரிமென் கூந்தன் மெல்லணை வதிந்து" பதிற். ௫௦: ௧௮ - ௧௧. (ஆ) "இருளெங் கூந்த லின்றுயில்" (இ) "கூந்தன் மெல் லணைத் துஞ்சி" அகம். ௨௩௩: ௧௦, ௩௦௮: ௧௩. (ஈ) "இருண்மென் கூந்த லேமுறு துயிலே"

௨. "காரி கதனஞ்சான்" கலி. ௧௦௪: ௭௪.

௩. "மாஎ்பிணை யன்ன மகிழ்மட நோக்கே"

௪. "குருஉக்கட் கொலேயேறு" கலி. ௧௦௪: ௭௧.

௫. அரி, செவ்வரி கருவரி; இச்சொல் இங்கே அவற்றையுடைய கண்ணை உணர்த்தி நிற்றலான் ஆகுபெய ரென்றார்.

௬. ஆடவர் தம்மனைவியர்தோளிற் றுயில்வதாகக் கூறல் மரபு:(அ) "அரிவை தோளிணைத் துஞ்சிக், கழிந்த நாளிவண் வாழு நாளே" குறுந். ௩௨௩. (ஆ) "தாம்வீழ்வார் மென்றோட் டுயிலி னினிதுகொ, றாமரைக் கண்ணா னுலகு" குறள். ௧௧௦௩.

(பிரதிபேதம்) * வெருப்பின, † நிறத்தையுடையனவாகிய, ‡ கல்லேனை கடும்வரிக்குழை. || சேனிணைஞ்சான்.

## நான்காவது முல்லை ௪. ௬௫௬

எ - து: வெய்ய வலியினையுடைய வெகுண்ட எற்றின து சினத்தை அஞ் சானும் அவனைத் தழுவுமவன், வரியினையுடைத்தாகிய குழையினையுடையா ளுடையமூங்கிலையொக்கும் மெல்லியதோளிலே* துயிலுதலைப் பெறும். எ-று.

வரி - (க) அருப்புத்தொழில்.

உறு, என்றாக்

கறைவனர் நல்லாரை யாயர் முறையினு
ஞண்மீன்வாய் சூழ்ந்த மதிபோன் மிடைமிசைப்
பேணி நிறுத்தா ரணி

எ - து: †என்று நல்லாயர் தமக்குரிய முறைமையாலே ‡சுற்றமானவாகிய் காளாகிய மீன்கள் தன்னிடத்தைச் சூழப்பட்டமதிபோலே அவ்விடத்திலிட்ட பரண்களின்மேலே தத்தம் மகளிரைத் திரளாக ஒப்பித்து இருக்கின்றனர். எ - று.

(௨)மீனும் மதியும், ஆயத்திற்கும் மகளிர்க்கும் ||உவமை.

௨௬ அவ்வழிப், பறையெழுந் திசைப்பப் பல்லவ ரார்ப்பக்
குறையா மைந்தர் கோலொதி ரெடுத்த
நறைவலஞ் செயவிடா இறுத்தன வேறு

எ - து: அவ்விடத்துப் புகை வலம்வர விடப்பட்டு இறுத்தப்பட்டன வாகிய ஏறுகள், பறை மிக்கொலிக்கையினாலும் பலரும் ஆரவாரிக்கையினாலும் வலிகுறையாத ஆயர்கோடற்குஎழுதற்கு எதிரே என்றன. எ - று.

௩௨ அவ்வேற்றின்
(௩)மேனிலை மிகலிகலின் மிடைகழி பிழிபு மேற்சென்று
வேலுதி புரைவிறற் றிறனுதி மருப்பின் மாறஞ்சான்

---

௧. அருப்புத்தொழில் என்றது ஆபரணங்களில் நுண்ணிதாகச் செய்யும் சிறிய அரும்புபோன்ற வேலைகளை. "தாள் களங்கொளக் கழல்பறைந் தன" (புறம். ௪: ௩) என்புழி 'கழல்பறைந்தன' என்பதற்கு, 'வீரக்கழ அருப்புத்தொழில் பறைந்தவை' என்று எழுதியிருக்கும் உரை கண்டு அறிதற்பாலது.

௨. "தாரகையோடு ஆயத்தார்க்கு ஒத்த பண்பு, பன்மையும் ஒன்றற்குச் சுற்றமாய் அதனிற் சூழ்ந்து நிற்றலும்.........மதியோடு தலைமகட்கு ஒத்த பண்பு, கட்கினிமையும் சுற்றத்திடை அதனின் மிக்குப் பொலிதலும்" என்று (கோவையார். ௧௨௪) பேராசிரியர் எழுதியிருக்கும் விசேடவுரை இங்கே அறிதற்பாலது.

௩. "ஐஞ்சீரடி முடுகியலோடொன்றாய் வந்த வெண்பா,கலிக்கு உறுப்பாய் வருதற்கு, "மேனிலை மிகலிகலின்..........வண்ணனும் போன்ம்" என்னும் பகுதி மேற்கோள்; தொல். செய். சூ. ௧௪, ௩௪.

(பிரதிபேதம்) * துயிலைப்பெறும் என்னும் கறையுடை நல்லாரை, † என்று தமக்குரிய, ‡ சுற்றமானாகிய, || உவமை அரியாருபெயர். வரி அருப்புத்தொழில். அவ்வழி.

பானிற வெள்ளை யெருத்தத்துப் *பாய்ந்தானை
நோனாது குத்து மிளங்காரித் தோற்றங்காண்
பான்(க)மதி சேர்ந்த வரவினைக் கோள்விடுக்கு
நீனிற வண்ண னும் போன்ம்

இ - ள்: அந்த ஏறுகளின்மேலே நிலைபெறும் மிகுதலையுடைத்தாகிய மாறுபாட்டினாலே மிடைமிசையினின்றும் இழிந்து அதனைவிட்டுச்சென்று வேலினது முனையையொக்கும் †முனையையுடைய கொம்பினது விறலாகிய திறத்தினையுடைய மாறுபாட்டிற்கு அஞ்சாளுகிப் பானிறம்போலும் வெள்ளிய ஏற்றினது கழுத்திலே ‡பாய்ந்தானைப்பொருதே மேற்சென்று குத்தும் இளைய காரிய ஏற்றினது தோற்றரவு, பால்போலும் மதியைச் சேர்ந்து மறைத்த பாம்பினை அது மறைத்ததன்மையை விலக்கும் நீலநிறம்போலும் || நிறத்தை யுடையவனையும் ஒக்கும்; அதனைப் பாராயென்றாள். எ - று.
வண்ணன், மாயோன்.

௩௧ (உ)இரிபெழு பதிர்பதிர் பிகந்துடன் பலர்நீங்க
வரிபரி பிறுபிறுபு குடர் சோரக் குத்தித்தன்
கோடழியக் கொண்டானை யாட்டித் திரிபுழக்கும்
(ங)÷வாடில் வெகுளி யெழிலேறு கண்டை +யிஃதொன்று

க. (அ) "மாமதிகோண், முன்னம் விடுத்த முகில்வண்ணன்" பெரிய திருமடல். ௧௧. (ஆ) "தேம்பவிளங்கிங்கட் சிறைவிடுத் தைவாய்ப், பாம்பினணைப் பள்ளிகொண்டாய்" பெரியதிருமொழி. (கக) அ: எ.(இ)"கோள்வாய் மதிய செடியான்விடுத் தாங்கு" சீவக. சடுச. (ஈ) "பான்மதி விடுத்தனே" வா - வி. மேற்.

உ. நாற்சீரடியும் ஐஞ்சீரடியும் முடுகியலடியாக வந்ததற்கு (அ) "இரி பெழு..........தலைச்சென்று" என்னும் அடிகள் தோல். செய். கு. கஙெ. பேர். உரையிலும் (ஆ) "இரிபெழு...... ......கண்டை யிஃதொன்று என்னும் அடிகள் தோல். செய். கு ௧௧. பேர். உரையிலும்

முடுகுவண்ணத்திற்கு (ஓ) " இரிபெழுபதிர்பதிர் பிசக்து " என்பது தொல். செய். சூ. உ௩௩. நச். உரையிலும் மேற்கோள்.

௩. வாடுதல் குறைதலென்னும் பொருளில் வருதலை "வாடாத்த வைவை கினக்கு" (பரி. ௯: ௭0௯) என்பதன் உரையாலும் அறிக.

(பிரதிபேதம்) * பாய்ந்தாங்கக் கோணத குத்த, † முனையுடைய கொம்பினது விறலாற் றுதலையுடைய, ‡ பாய்ந்தவனைப், || சிறந்தவையுடையவனையும், ÷ வாடா வெருளி, + இஃதுதொன்று, அஃதொன்று.

## நான்காவது முல்லை ௪. ௩௫௯

வெருவரு (௧)தாம மெடுப்ப வெருண்டு
திரிதருங் கொல்களிறும் போன்ம்

எ - து: பலரும் எழுந்திருந்து சென்று அதிர்ந்து அதிர்ந்து கெட்டு அவ்விடத்தைக் கடந்து சேர நீங்கும்படியாக *மாலும்பு முறிந்து குடர்களற்றுக் கவிழும்படி குத்திவிட்ட பின்பு தன் கொம்பின் †வலியழியத் தழுவினவனை அலைத்துக்கொண்டு திரிந்து துகைக்கும் குறையாத கோபத்தினையுடைய அழகினையுடைய ஏறு, வெருவுதல் வருதற்குக் காரணமான மருந்தினைப் புகைக்க அதற்கு வெருண்டு திரிதருங் கொல்கின்ற களிற்றையும் ஒக்கும்; இஃதொன்றைப் பாராயென்றாள். எ - று.

சாடி காளெழு துணிபிணி யிசை‡தவிர் பின்றித் தலைச்சென்று
தோள்வலி துணிபிணி துறந்திறந் தெய்தி மெய்சாய்ந்து
கோள்வழுக்கித் தன்முன்னர் வீழ்ந்தான்மேற் செல்லாது
மீளுநர் புகமேற்றுத் தோற்றங்காண் மண்டமருள்
(உ)வாளகப் பட்டானை யொவ்வா னெனப்பெயரு
மீளி மறவனும் போன்ம்

---

௧. தூபமெடுத்தலால் களிறு வெருளுமென்பது உதயணன் சரித்திரத்து, யூகி பிரச்சோதனன் நகரைக் கலக்குதற்கு யானைக்குத் தூமமூட்டிய செய்தியைக்கூறும் "ஆனைதன் னிலைகண் டெய்தி யகிலிடும் புகையு மூட்டிச், சேனைமன் னகர முழுத்துச் சிறைவீடுன் கடனே யென்று,

மானநல் யூகி யானைச் செவியின்மர் திரத்தைச் செப்ப, யானைதன் மதக்கம் பத்தி லருத்தலை யுதறிற்றன்றே" என்னும் (உதயணகுமார (க) உஞ்சைக்காண்டம். அறு - ஆம்) செய்யுளாலும் அறியலாகும்.

உ. (அ) "வலொழ் மார்பி, னம்புசே ருடம்பினர்ச் சேர்ந்தோ ரல்லது, தும்பை சூடாது மலைந்த மாட்சி யன்னர் பெரும" (ஆ) "ஒன்னார் மெலிவிடத்தும்...........செல்லாமை தான்றலையே" (இ) "மங்கை மாழ வுறையேனேல் வாளமருட், பக்கப்பட் டார்மேற் படை கினைத் தே னுகென்றான்" (ஈ) "கைப்படை யொன்று மின்றிக் கைகொட்டிக் குமா ரார்ப்ப, மெய்ப்படை வீழ்த்த நாணி வேழமு மெறிதல் செல் லான், மைப்படை நெடுங்கண்மாலை மகளிர்தம் வனப்பிற்சூழ்ந்து, கைப்படு பொருளிலாதான் காமம்போற் காளைமீண்டான்" (உ) "கைத் துயிர் குடிப்ப வென்று வெற்றிறு ளிடறுகையான், மெய்த்தலைச் சூலமோர்சான் வெறுங்கையா னென்று வெள்கி" (ஊ) "சென்றவன் றன்னைநோக்கிச் சிரித்துநீ சிறியை யுன்னை, வென்றவை மும்மை யெல்லாம் விளிப்பெனோ" (எ) "எனக் காற்ற வார்மேன், மாகால் வரிவெஞ்சிலையோடும் வளைத்த போது, சேகாரும்" என்பவை, ஈண்டு அறிதற்பாலன.

(பிரதிபேதம்) * எறும்பு மெறும்பு முரிந்து, † வலிகெடத் தழுவியவனை ‡ தவிர்வினறி.



எ - து: தோள்வலியாலே துணிந்து எறுதழுவுதல் எக்காலமும் மனத்தைச் செலுத்துதலின் அம்மனம் பிணித்த முயற்சியாலே எழுந்து துணிந்த இசை தவிர்தலன்றி அதனிடத்தே சென்று மற்றுள்ளார் தழுவுமாற்றைக் கடந்து சேர்ந்து மெய்யைத்தழுவித் தான்கொள்ளும் நிலையைத்தப்பித் தன் முன்னே வீழ்ந்தவன்மேலே செல்லாமல் *மீளுகின்ற புகர் நிறத்தையுடைய எற்றினது தோற்றாவு, மிக்குச்செல்லும் போருள் தன்கையில் வாளோடே அகப்பட்டவனை எனக்கு ஒவ்வானென்று வெட்டாமல் மீளும், கூற்றுவனை யொத்த மறவனையும் ஒக்கும்; இதனைப் பாராயென்றாள். எ - று.

இக ஆங்க, செறுத்தறுத் துழக்கி †யேறெதிர் நிற்ப
மறுத்து மறுத்து மைந்தர் சாரத்

தடிகுறை யிறுபிறுபு தாயின கிடப்ப
விடியுற ழிசையி னியமெழுந் தார்ப்பப்
௫௫ பாடேற்றுக் கொள்பவர் பாய்ந்துமே லூர்பவர்
‡கோடிடை நுழைபவர் கோட்சாற்று பவரொடு
புரிபுமேற் சென்ற நூற்றுவர் படங்க
(௧)வரிபுனை (௨)வல்வி லைவ ரட்ட
பொருகளம் போலுந் தொழூஉ

எ - து. அங்ஙனம் கொம்பு மார்பிற்படுதலை மார்புகொடுத்து ஏற்றுக கொள்பவரோடும் மேலே பாய்ந்து ||ஏறுபவரோடும்கோட்டிடையிலே சென்று புகுவாரோடும் ஏறுகொள்ள வல்லேனென்று சாற்றுவாரோடும் ஏறுகள் பொருதபின்பு பொருவாரை அறுத்துச் செறுத்து எதிரேறிந்த அதனைப் பொறாமல் மைந்தர் விலக்குமவரை ✝மறுத்துமறுத்துச் சென்று தழுவுகையாலே என்புகள் முறிந்து முறிந்து நசைகளற்றுப் பாந்தளாய்க் கிடக்க (௩) இடியோடே மாறுபடுகின்ற எற்றினது முழக்கோடே வாச்சியங்கள் மிக்கு ஆரவாரிக்க அத்தொழூஉ, போரைவிரும்பி மேலேசென்ற துரியோதனுதிகள் படும்படி வரிந்து புனைந்த வலிய வில்லையுடைய தருமன் முதலியோர் கொன்ற பொருகின்ற களத்தையொக்கும். எ - று.

௧. 'வரிப்புனை பந்தொடு" முருகு. ௬௮.

௨. (அ)"வல்வி லோரி கொல்லிக் குடவரை" குறுந். ௧௦௦.(ஆ) "கொல்லியாண்ட வல்வி லோரியும்" புறம். ௧௫௮ ௫. (இ) "வல்வி லிராமன்" நாலா. பெரியதிருமொழி. (௬) ௯ ௪.

௩. "உரும்மி னதிருங் குரல்போற பொருமுர, ணல்லேறு" (கலி. ௧௦௫: ௨௧ - ௨௭.) என்பதும் அதன் குறிப்பும் பார்க்க.

(பிரதிபேதம்) * மீறுகின்ற கிறதனை, ✝ எற்றெதிர். ‡ கோட்டிடை, || ஏறுமவரோடு, மறுத்தச் செறுறு.

சுo தொழுவினுள், கொண்டவே றெல்லாம் புலம்புகத் தண்டாச்சீர்
வாங்கெழி லல்லாரு மைந்தரு மல்லலூ
ராங்க ணயர்வர் தழூஉ

எ - து: அத்தொழுவிடத்துத் தழுவிக்கொண்ட ஏறுகளெல்லாம் மேயும் நிலத்தேபோக அமையாத சீரினையும் நோக்கினோர் கண்ணை வாங்கிக்கொள்ளும் *அழகினையுமுடைய ஆய்ச்சியரும் ஆயரும் வளப்பத்தையுடைய ஊரிடத்தே குரவையாடுவரெனத் தோழி தலைவிக்குக் காட்டிக் கூறினாள். எ - று.

சுக பாடுகம் வம்மின் பொதுவன் கொலைமேற்றாக்
கோடு குறிசெய்த மார்பு

எ - து: கூறி, பொதுவனுடைய கொலைத்தொழிலையுடைய ஏற்றினுடைய கொம்புகள் குறியிட்டுவிட்ட மார்பைப் பாடுவேமாக வாருங்கோளெனத் தலைவியையும் ஆயத்தையும் நோக்கிக் கூறினாள். எ - று.

சுஉ நெற்றிச் சிவலை †நிறையழித்தா னீண்மார்பிற்
செற்றார்கண் சாயயான் சாரா தமைகல்லேன்
பெற்றத்தார் கவ்வை யெடுப்ப வதுபெறி
துற்றீயா ளாயர் மகள்

எ - து: அதுகேட்ட தலைவி, நெற்றியிலே சிவந்த சுட்டியினையுடைய ஏற்றைவிரவி நிறைதலைக்கெடுத்தவனுடைய நீண்ட மார்பிலே பகைத்து அலர் கூறுகின்ற மகளிர் நம்மை இகழ்ந்து பார்க்குங் கண்கள் இகழ்ந்து பாராநிற்குக் கும்படியாக யான் சாராமல் அமைந்திரேன்; இனி, பசுவையுடைய ஆய்ச்சியர் அலர்கூறுவதற்குப் பெரிதும் வருத்தமுறேன் யானென்றாள். எ - று.

ஆயர்மகளென்று தன்னைப் பிறர்போற் கூறினாள்.

சுங (க)தொழீஇஇ

எ - து: தொழில்செய்கின்றவளே. எ - று.

(உ)ஒருக்குநா மாடுங் குரவையு ளம்பை
(ங)யருக்கினன் போனேக்கி யல்லனேப் செய்தல்

---

க. இந்நூற்பக்கம் ௩௪௪: க-ஆம் குறிப்புப் பார்க்க.

உ. புகுமுகம்புரிதல் கைக்கிளைக்கண் வந்ததற்கு, "ஒருக்குநாம்………. மகன்" என்னும் பகுதி மேற்கோள்; தொல். மெய்ப். சூ. கக. பேர்.

மு - வி. கு. ௫௮௦.
க. "அருக்கு மங்கையர் மலரடி" திருப்புகழ்.
(பாதிபேதம்) * அழுலினையுடைய, † கிறையழித்த கேள்மார்பிற் சென்றார்.



(க)குரூஉக்கட் கொலேறு கொண்டேன்யா னென்னுந்
தருக்கன்றோ வாயர் மகன்

எ - து: ஆயர்மகன் ஆயத்தோடே நாம் ஆடுங் குரவைக்கூத்திலே நம்மை அருமைசெய்தான்போலே நோக்கி நமக்கு வருத்தத்தைத் தரும் நோயைச் செய்தல் *நிறத்தையுடைய கண்ணையுடைய கொலையேற்றையான்கொண்டே னென்னும் மனச்செருக்கன்றோ? அது வேறொன்றல்லவே என்றாள். எ - று.

௭௩. நேரிழாய், †கோளரி தாக நிறுத்த கொலையேற்றுக்
காரி கதனஞ்சான் பாய்ந்த பொதுவற்கே
யார்வுற் றெமர்கொடை நேர்ந்தா ரலரெடுத்த
வூரா ரை (உ)யுச்சி மிதித்து

எ - து: அதுகேட்ட தோழி, ஒத்த இழையினையுடையாய்! கொள்ளுத லரிதாக நஞ்சுற்றத்தார் நிறுத்தின கொலைத்தொழிலையுடைய எருதாகிய காரியினது கோபத்திற்கு அஞ்சானாய்த் தழுவின பொதுவனுக்கே எம்முடைய சுற்றத்தார் ‡மகிழ்ச்சியிறைதலுற்று அலரை மிகக் கூறிய ஊரிலுள்ளாரைத் தலையிலே மிதித்துக் கொடுத்தலைப்பொருந்தினர்; இனி வருந்தாதே கொள் ளென்றாள். எ - று.

||எமரென்றாள்;"தாயத்தினடையா" என்னும்(௩)சூத்திரவிதியால் அவர் அலர் கூறிய அவர்க்கே கொடுத்தலின், அவர் உச்சியிலே மிதித்த தன்மைத் தென்றாள்.

௭௪ ஆங்கு
தொல்கதிர்த் திகிரியாற் பரவுதுமொல்கா
வுருமுறழ் (ச)முரசிற் றென்னவற்
(ரு)கொருமொழி கொள்கவிவ் வுலகுடன் ÷ னெனவே

௧. "குளூஉக்கட் கொலேயேறு" கலி. ௧௦௪: ௨௩.

௨. உச்சியிலே மிதித்தலென்றது இழிவுபடுத்துதலை: "மதித்திறப் பாரு மிறக்க மதியா, மிதித்திறப்பாரு மிறக்க" என்பது; நாலடி. ௬௧.

௩. தொல். பொருளி. ௬. ௨௭.

௪. பாண்டியற்கு முரசாற் சிறப்புக் கூறுதலை. "முரசுமுழங் குளப்பவர்" (கலி. ௧௩௨: ௪) என்பனவும் அதன் குறிப்பாலும் அறிக.

௫. "குமரியொடு வடவி மயத், தொருமொழிவைத் துலகாண்ட சேரலா தற்கு" சிலப். ௨௯.

(பிரதிபேதம்) * சிறத்தையுடைத்தாகிய, † கோவலரியாக, ‡ மகிட்சி, ‖ எமரென்றுள் தலைத் தாயத்தி, ÷ என்னவே.



எ - து: கெடாத (௧)உருமேற்றை மாறுபடுகின்ற முரசினையுடைய அவ்விடத்திற் பாண்டியனுக்கு இவ்வுலகுசேர அவனுடையஒருமொழியைக்கேட்பதாகவென்றுகூறிப் பழைதாகிய கதிரையுடைய சக்கரப்படையையுடையானை வாழ்த்துதும்; அதற்கு நீயும் வருகவென்றாள். எ - று.

ஒருமொழி, ஆணை. தென்னவற்கென்னும் நான்காவது இவ்வுலகம் நடப்பதாகவென்று போந்த பொருளொடு முடியும்.

இதனால், தலைவிக்குப் புணர்ச்சியுவகை பிறந்தது.

"ஆயர் வேட்டுவர்" என்னும்(௨)சூத்திரத்தில்†ஆயரினுங்கிழவருங்கிழத்தியரும் உளரென்று‡ஆதலான், இவர்க்கும் களவொழுக்கம் நிகழு‖மென்பதாம். "நாடகவழக்கினும்" என்னும் (௩)சூத்திரத்திற் பாடலுள் அமையாதனவாய்க் களவொழுக்கம் நிகழ்ந்து ஏறு÷தழுவி வரைவுடன் பட்டாராகக் கூறினர். மேலும் இங்ஙனம் களவு நிகழ்ந்து ஏறுதழுவி வரைகின்றதாகக் கூறும் ÷பாட்டுக்களுக்கெல்லாம் இதுவே விதியாகக் கொள்க.

இது தரவும் ஐஞ்சீரடிப்பெற்ற குறுவெண்பாட்டும் ஐஞ்சீரடிப்பெற்ற நெடுவெண்பாட்டும் ஐஞ்சீரடிப்பெற்ற கொச்சகமும் ×வழியசைபுணர்ந்த சொற்சீரடியும் முடுகியலோடு தொடர்ந்த கொச்சக வெண்பாவும் நாற்சீரடி முடுகியலோடு தொடர்ந்து ஐஞ்சீரடியும் வந்த கொச்சகவெண்பாவிரண்டும் ஐஞ்சீரடியும் ஆசிரியத்தளையும் விரவி ஈறு வேறோர் சீரான் இற்ற கொச்சக வெண்பாவும் **ஐஞ்சீரடுக்கியவற்றிற் குறுவெண்பாட்டும் ஐஞ்சீரடுக்கிய நெடு வெண்பாட்டிரண்டும் தனிச்சொல்லும் சுரிதகமும் பெற்றுவந்த கலிவெண் பாவின்வேறுபட்ட (௪)கொச்சகம். "வெண்டளை விரவியு மாசிரியம் விரவியு,

---

௧. (அ) "உருமிடி முரசமொடு" (ஆ) "இடிமுரசியம்ப" (இ) "இடியுமிழ் முரசம்" (ஈ) இடியென முழங்கு முரசின்" (உ) "உருமின் முரசெழுந் தியம்ப" (ஊ) உருமுரற் றன்ன வுட்குவரு முரசமொடு" (எ) "உருமி னிரங்கு முரசின்" (ஏ) "முரசம்.........உருமி னுரறுபு சிலைப்ப" (ஐ) "உருமிசை முரசம்" (ஒ) "முர சிடியுமிழ் தழங்கென முழங்க" (ஓ) "உருமி னிடிமுர சார்ப்ப" என முரசொலிக்கு உருமொலி உவமையாய் வருதல் காண்க.

௨. தொல். அகத். சூ. ௨௧.

௩. தொல். அகத். சூ. ௫௩.

௪. (அ) "மலிதிரை யூர்ந்து" என்னு முல்லைப்பாட்டின், "இரிபெழு பதிர் பதிர் பிசைந்துடன் பலர் நீங்க" 'தாரொழு துணிபிணி யிசைதவிர் பின்றி' எனவு முடுகுதலிற்கொச்சகமாயிற்று; இதனுட் சொற்சீரடியும் வந்தது என்பர் நச்; தொல். செய். சூ. ௧௫௫. (ஆ) இச்செய்யுள்

(பிரதிபேதம்) * யாழ்த்துமதற்கு, † துயரிதுங் மெழுச்சியெகும், ‡ ஆவின், || மெண்டனூட நாடக, ÷ தழுவ வரைவு, + பாட்டுக்களுக்கு மிதவே, × வழியசைப் புணர்ந்த, ** ஐஞ்சீரடுக்கிய வெண்பாட்டிரண்டிற் றனிச்சொல்லும்.

மைஞ்சீ ரடியு முளவென மொழிப" (௧) என்பதனுன் மூவகைப் பாவிற்கும் ஐஞ்சீரடிவருதல் பெற்றாம். (௪)

(௧0௫.) அரைசுபடக் கடந்தட் டாற்றிற் றந்த
முரைசுகெழு முதுகுடி முரண்மிகு செல்வற்குச்
சீர்மிகு சிறப்பினோன் றொல்குடிக் குரித்தெனப்
பார்வளர் முத்தமொடு படுகடல் பயந்த
வார்கலி யுவகைய ரொருங்குடன் கூடித்
தீதின்று பொலிகெனத் தெய்வக் கடியயர்பவர்
வீவில் குடிப்பி னிருங்குடி யாயருந்
தாவி லுள்ளமொடு துவன்றி யாய்புடன்
வள்ளுரு ணேமியான் வாய்வைத்த வளைபோலத்
தெள்ளிதின் விளங்குஞ் சுரிநெற்றிக் காரியு
மொருகுழை யவன்மார்பி லொண்டார்போ லொளிமிகப்
பொருவறப் பொருந்திய செம்மறு வெள்ளையும்
பெரும்பெயர்க் கணிச்சியோன் மணிமிடற் றணிபோல
விரும்பின செருத்தி நேர்திமிற் குராலு
மணங்குடை வச்சிரத்தோ னாயிரங் கண்ணேய்க்குங்
கணங்கொள் பல்பொறிக் கடுஞ்சினப் புகரும்
வேல்வலா னுடைத்தாழ்ந்த விளங்குவெண் டுகிலேய்ப்ப
வாலிது விளர்ந்த வெண்காற் சேயுங்
கால முன்பிற் பிறவுஞ் சால
மடங்கலுங் கணிச்சியுங் காலனுங் கூற்றுந்
தொடர்ந்துசெல் லமையத்துத் துவன்றுயி ருணீஇய
வுடங்குகொட் பனபோற் புகுத்தனர் தொழூஉ;
அவ்வழி,
காரெதிர் கலியொலி கடியிடி யுருமி னியங்கறங்க
வூர்பெழு கிளர்புளர் புயர்மங்குலி னறைபொங்க
நேரிதழ் நிரைநிரை நெறிவெறிக் கோதைய ரணிநிற்பச்

புணர்தற்பொருண்மைத்தாயினும் முல்லைக்குரிய கருப்பொருளான் வருதலின் முல்லையாயிற்றென்பர் இளம்; தொல். அகத். சூ. ௨௪.

௧. தொல். செய். சூ. ௧௩:

## நான்காவது முல்லை ரு.

தூர்பெழு துதைபுதைத் துகள்விசும் புறவெய்த்
வார்புடன் பாய்ந்தா ரகத்து;
௧௦ மருப்பிற் கொண்டு மார்புறத் தழீஇய
பொருத்திடை படங்கிய மிமிலிறப் புல்லியுக்
தோளிடைப் புகுதந்துத் துதைந்துபா டேற்று
நிரைபுமேற் சென்றுரை நீண்மருப் புறச்சாடிக்
கொளவிடங் கொளவிடா நிறுத்தன வேறு;
௧௫ கொள்வாரைக் கொள் வாரைக் கோட்டுவாய்ச் சாக்குத்திக்
கொள்வார்ப் பெறூஉக் குரூஉச்செகில் காணிகா
செயிரிற் குறைநாளாற் பின்சென்று சாடி
யுயிருண்ணுங் கூற்றமும் போன்ம்;
௧௯ பாடேற் றவரைப் படக்குத்திச் செங்காரிக்
கோடெழுந் தாடுங் கணமணி காணிகா
நகைசா லவிழ்பத நோக்கி நறவின்
முகைசூழுந் தும்பியும் போன்ம்;
௨௩ இடைப்பாய்ந் தெருத்தத்துக் கொண்டானோ டெய்தி
மிடைப்பாயுங் வெள்ளேறு கண்டைகா
வாள்பொரு வானத் தரவின்வாய்க் கோட்பட்டுப்
போதரும் பான்மதியும் போன்ம்;
௨௭ ஆங்க, ஏறும் பொதுவரு மாறுற்று மாறு

விருபெரு வேந்தரு மிகலிக்கண் ணுற்ற
பொருகளம் போலுந் தொழூஉ;
௫0 வெல்புக ழுயர்நிலைத் தொல்லியற் றுதைபுதை துளங்கிமி
னல்லேறு கொண்ட பொதுவன் முகனோக்கிப்
பாடில வாயமகள் கண்;
௫௫ நறுந்தா லென்கோலைங் கூந்த லுளரச்
சிறுமுல்லை நாறிய தற்குக் குறுமறுகி
யொல்லா துடன்றெமர் செய்தா ரவன்கொண்ட
கொல்லேறு போலுங் கதம்;
௫௭ நெட்டிருங் கூந்தலாய் கண்டை யிஃதோர்சொல்;

௬4



௫௮ .கோட்டினத் தாயர் மகனொடியாம் பட்டதற்
கெங்க ணைமரோ பொறுப்பர் பொருதார்
தங்கண் பொடிவ தெவன்;
௬௧ ஒண்ணுதால்;
இன்ன வுவகை பிறிதியாதி யாயென்னைக்
கண்ணுடைக் கோல ளலைத்ததற் கென்னை
மலரணி கண்ணிப் பொதுவனொ டெண்ணி
யலர்செய்து விட்டதிவ் வூர்;
௬௬ ஒன்றிப் புகரினத் தாயமகற் கொள்ளிழா
யின்றெவ னென்னை யெமர்கொடுப்ப தன்றவன்
மிக்குத்தன் மேற்சென்ற செங்காரிக் கோட்டிடைப்
புக்கக்காற் புக்கதென் னெஞ்சு;
என,
௭௧ பாடிமிழ் பரப்பகத் தரவணை யசைஇய
வாடுகொ ணேமியாற் பரவுது நாடுகொண்
டின்னிசை முரசிற் பொருப்பன் மன்னி

யமைவா லருளி யார்க்கு
மிமையாத் தும்பரும் விளங்குக வெனவே.

*இஃது எறுதழுவியவாற்றைத் தோழி தலைவிக்குக் காட்டிக் கூறி, அவன் ஏறுதழுவிய தலைவனை விருப்போடு நோக்கியவற்றைத் தன்னுள்ளே கூறி, முன்னர்க் கனவின்கண் தமர்கோபித்ததனையும்அயலார்போறந்திருந்த தன்மையினையும் தலைவிக்குக் கூற, அவளும் அவர் அலர்கூறியது நன்றென்று கூறி, †அன்றே என்னெஞ்சு கலந்துவிட்டது; இனிஅவர்கோடுப்பதாகக் கூறிய நாளிற் செய்வதென்னென மகிழ்ந்து ‡கூற, அதுகேட்ட தோழி யாம் அங்ஙனங் கூடி இனிதிருக்குமாறு காக்கின்ற பாண்டியன் நீடு வாழுமாறு தெய்வத்தைப் பரவுகம் வாவெனக் கூறியது.

இதன் பொருள்.

(க)அரைசுபடக் கடந்தட் டாற்றிற் றந்த
முரைசுகெழு முதுகுடி மூரண்மிகு செல்வற்குச்

---

க. (அ) அரைசு என்பது உயர்திணை யாண்பாலை யுணர்த்தி வருதற்கு 'அரைசுபடக் கடந்தட்டு' என்பது மேற்கோள்; தொல். சொலி. ரு. (பிரதிபேதம்) * இது எறுதழுவியவற்றைத் தோழி. † இன்றே, ‡கூறுவதுகேட்ட.

## நான்காவது முல்லை ரு.

கூகள்

சீர்மிகு சிறப்பினோன் (க)றொல்குடிக் குரித்தெனப
பார்வளர் முத்தமொடு படுகடல் பயந்த
ரு வார்கவி *யுவகைய ரொருங்குடன் கூடித்
தீதின்று பொலிகெனத் தெய்வக் கடியயர்மார்
(உ)வீவில் குடிப்பி னிருங்குடி யாயருந்

(ங)தாவி னுள்ளமொடு துவன்றி யாய்புடன்
வள்ளுரு னேமியான் வாய்வைத்த வளைபோலத்
௧0 தெள்ளிதின் விளங்குஞ் (ச)சுரிநெற்றிக் காரியு
(ரு)†மொருகுழை யவன்மார்பி லொண்டார்போ லொளிமிகப்
பொருவறப் பொருந்திய செம்மறு வெள்ளையும்

டு. நச். (ஆ) "அரசுபடக் கடந்த வானுச் செற்றத்தவன்" பரி. உ௨: ௩.
(இ) "அரைசுபடக் கடக்கு முரைசா லோன்றல்" புறம். ௨௧௧: ௧.

௧. "செல்லு நீரு மெல்லார்க்கு மெளியவென, வரைய சாந்தமுந் திரைய முத்தமு, மிமிழ்குரன் முரச மூன்றுட னாளுந், தமிழ்கெழு கூடற் றண்கோல் வேந்தே" புறம். ௫௮: ௧0 - ௧௩.

௨. "தொல்லினை கட்ட குடியொடு தோன்றிய, நல்வினத் தாயர்" கலி. ௧0௪: ௫-௬.

௩. இப்பகுதி 'தாவி லுள்ளமொடு' என்றும் படிக்கும்படி ஒரு பிரதியி லுள்ளது; தாவென்னுஞ் சொற்போலவே தாவென்னுஞ் சொல்லும் வருத்தமென்னும் பொருளை யுடையதாயின் மோனை நயமுற, "தாவி லுள்ளமொடு" என்றும் கொள்ளலாம்.

௪. "கரிகெற்றிக் காரி" கலி. ௧0௬: ௨௧.

௫. (அ) பலராமன் யமுனையால் அளிக்கப்பட்டதும் மிகச் சிறந்ததுமான ஒரு குண்டலத்தை அணிந்தனனென்பது புராணகதை; (ஆ) அவனிலை யைக் கூறுவதாகிய "கண்களியா" என்னு முதலையுடைய வெண்பாவி லுள்ள 'ஒண்குழையொன் றொல்கி யெருத்தலைப்ப' என்பதை இனைத் தெனவறிந்தபொருள்வினைப்படுதொகுதியின்உம்மைபெற்றுவருமென் பதற்கு மேற்கோள்காட்டி, (தொல். கிளவி. சூ. ௩௩) சேனாவரை யரும் (நேமி. சொல். ௧௫) நேமிநாத வுரைகாரரும் (நன். பொது. சூ. ௪௮) மயிலைநாதரும் 'ஒன்றும்' எனற்பாலது, 'ஒன்று' என உம்மை யின்றி வந்தது செய்யுள் விகாரமென்றும் (தொல். கிளவி. சூ. ௩௩) நச்சினார்க்கினியர் (குழை) ஒன்றேனும் இனைத்தென அறிந்தபின் உம்மை வேண்டும்; அது விகாரத்தாற் றொக்கதென்றும் எழுதியிருப்ப வையும் இவன் ஒரே குழையினனென்பதை வலியுறுத்தும். (இ) (பிரதிபேதம்) * உடீகைபார். † ஒருகுழை பொருவன் மார்பினெண்டார்.

௩௭ ஆறு **கலித்தொகை ௧0௫.**

பெரும்பெயர்க் கணிச்சியோன் மணிமிடற் றணிபோல
விரும்பிணை ரெருத்தி னேந்திமிற் குராலு
மணங்குடை வச்சிரத்தோ னுயிரங் கண்ணேய்க்குங்
கணங்கொள் பல்பொறிக் கடுஞ்சினப் புகரும்
*வேல்வலா னுடைத்தாழ்ந்த விளங்குவெண் டுகிலேய்ப்ப
வாலிது கிளர்ந்த வெண்கார் சேயுங்
(க)கால முன்பிற் பிறவுஞ் சால
மடங்கலுங் கணிச்சியுங் (உ)†காலனுங் கூற்றுந்
தொடர்ந்துசெல் லமையத்துத் துவன்றயி ருணீஇய
வுடங்குகொட் பனபோற் புகுத்தனர் தொழூஉ

எ - து: ‡அரசுகள் படும்படியாக வென்று கொன்று நெறியாலே கொண்டுவந்த தலைமைமிகுகின்ற ‖சிறப்புக்களையுடையோனுடைய பழைதாகிய குடிக்குரித்தென்றுகூறிய, பாண்டிமண்டலம் பயந்த விளைவுகளும் ஒலிக்கும் ÷கடலில் வளர்ந்த முத்தத்தோடே மற்றும் பயந்த பொருள்களும் (௩)மூன்று ×முரசமுங் கெழுமும் முதிய குடியிற்பிறந்த மாறுபாடு மிகுகின்ற

---

* "ஒருகுழை யொருவன்போ லிணர்சேர்ந்த மராஅமும்" கலி. ௨௬: ௧.
(௧) "தாதொரு குழையோ னிளவலே" வில்லி. இராசசூய. ௧௩௪.
(௨) "எரிமணிக் குன்றிரண் டென்ன வேந்தரோ, டொருகுழை யொருவனும்" (௩௩) "கம்மைகயிற் றிருவ மாநகர், வாரொரு குழையி னன் வாங்க" (எ)செக்கர்மாமணி, யொருகுழை யுலாவரு வுலம்கொ டோனினன்" (ஏ) "திருநகர்................கம்மையில் வீழ்தல் போன்றமத், றொருகுழை யவன்வலியுணர்த்து கின்றதால்" பாக.

(௪0) அக்குரூரன் வந்த. ௨௨. சாம்பன்மணம்புரி. ௫0, ௫௩, ௫௪. என வருபவையும் இங்கே அறிதற்பாலன.

௧. (அ) "காலமுன்ப" புறம்: உ௩: ௧௭. (ஆ) "ஆற்றல் காலனொ டொக்கும் ..........தேன்வியன்" பெருங். (௧) ௩௬: ௧௦௦ - ௧௦௨. (இ) "வெவ் திறற் காலனை" கந்த. மார்க்கண்டேய. உ௧௧.

௨. (தென் புலத்திறைவன்) "செற்றியிற் காலன் செல்ல நீள்பெருங் கால பாச, மற்றைவெங் கால தண்டம் வந்திரு மருங்குஞ் செல்ல, வுற்றபே ரூழிக் காலத் துருத்திர மூர்த்தி யொப்பச், சுற்றிய சேனை யோடுந் தோன்றின னுலகந் துட்க" இராமா. திக்குவிசயப். ௬௧.

௩. "முரைசுமூன் றுள்பவர்" கலி. ௧௩௨: ௪. என்பதும் அதன் குறிப்பும் ஈண்டு அறிதற்பாலன.

(பிரதிபேதம்) * வேல்வல்லான். † காலமுன்கூற்றும். ‡ அமரககளம்படும்படியாக. || சிறப் புக்களையுடைய பழையதாகிய, ÷ கடல்விளக்குமுத்தந். × முரசுங்கெழுமும்.



அச்செல்வனுக்குத் தீதின்றிப்பேரிவனவாகவென்று உட்கொண்டு, தெய்வத் திற்குச் சிறப்புக்களைச் செய்தற்கு அவனுடைய கேடில்லாத குடியின்பின்பு தோன்றிய பெரியகுடியிற் பிறந்த ஆயரும், ஒருங்குநிறைந்த செருக்கினை யுடைய உவகையராய்ச் சேரக்கூடி, ஏறுதழுவுங்காற் பிறர்க்குத் துன்பம் நிகழுமென்னும் வருத்தமில்லாத உள்ளத்தோடே நிறைந்து ஏறுகளை ஆராய்ந்து, வள்ளிய உருண்ட சேமிப்படையவன் ஊதிய சங்குபோலத் தெள்ளிதாக விளங்குஞ் சுட்டியையுடைத்தாகிய நெற்றியையுடைய காரிய ஏற்றையும், (௪) நம்பிமூத்தபிரானுடைய திருமார்பில் ஒள்ளிய சிவந்த(௨)மாலை போல ஒளிமிகும்படியாக ஒப்புமைகளிண்டு பொருந்திய சிவந்தமறுவினையுடைய வெள்ளியஏற்றையும், பெரிய *பெயமையுடையகணிச்சிப்படையினையுடையா னுடைய நீலமணிபோலுந் திருமிடற்றில் அழகுபோலக் கரிய சர்ச்சரையை யுடைய கழுத்தினையும் எக்கினை குட்டேற்றினையுமுடைய (௩)குரால் நிறத்தினை யுடைய ஏற்றையும், வருத்தமுடைய வச்சிரப்படையையுடையோனுடைய ஆயிரங் கண்களையொக்கும் இரட்சிகொண்ட பலவாகிய புள்ளிகளையுங் கடிய

† சினத்தையுமுடைய நிறத்தையுடைய ஏற்றையும், முருக்கலருடைய நிறமுடையாய்த் தாழ்ந்த விளங்குகின்ற வெள்ளிய துகிலைப்போப்ப நன்றாய் உயர்ந்த வெள்ளிய கால்களையுடைய சிவந்த ஏற்றையும், ‡ காலனது வலிபோலும் வலியையுடைய பிற ஏறுகளையும், சால நிறைகின்ற பல்லுயிர்களை உண்ண வேண்டி அழுத்தியும் கலக்கியும் காலனும் கூற்றுவனும் அவ்வுயிர்களை விடாமற்செல்கின்ற ஊழிமுடிவாகிய காலத்தே அவை மேலேச் சுழன்று திரியுமாறுபோலவர் சுழன்று திரியும்படி தொழுவிடத்தே மேரப் || புகுதவிட்டார். எ - று.

பார்பயந்தன கடல்பயந்தனவென இரண்டிற்கும் பயந்தன என்னாத் தொழிற்பெயரைக் கூட்டுக. இனிப் பார்(வளர்முத்தம்)-(௪) நிலத்தில் வளர்ந்த

---

௧. இந்நூற்பக்கம் ௧௪௪. ௨-ஆம் குறிப்புப் பார்க்க.
௨. 'கொடுமிட னுஞ்சிவான் ஞூர்போன் மராத்து, நெடும்பனைச் சூழ்பூ யயிலாலுஞ் சீர" கலி. ௩௧: ௧ - ௨.
௩. குரால்நிறம் - கபிலநிறம்; "குராலான் படுதுய ரிராவிற்கண்ட, வுயர் திணை யூமன் போலத், துயர்பொறக் கல்லேன்" குறுந். ௨௨௪.
௪. முன்பொருகாலத்துப் பாண்டியனவையிற் பொருளீட்டுதற்குச்சிறந்த வழியாதென்ற கேள்வி வந்தது. அப்போது ஒரு வாணிகன் வாணிகஞ் செய்தலென்றும். ஒரு வேளாளன் பயிர்செய்தலென்றும் கூறினார். அரசன் அவ்விருவருக்கும் சிறிது பொருளுதவி இதனைக்கொண்டு நீங்கள் கூறியவழியால் பெரும்பொருளாக்குகவென்று விடுத்துச் சில யாண்டு கழித்துத் தன் றூதரை நோக்கி அவர் நிலையை வினவினன்.

(பிரதிபேதம்) * பெயரையுமுடைய, † சினத்தையுமுடைய வேற்றையும், ‡ காலதுவலி, || புகுதவிட்டார். எ-று: பயந்தனகடல்பயந்தன.



முத்தென்றுமாம். உடன் *புகுத்தனரென்க. (௫) முருகன் தனக்கு உரித்தல்லாத வெண்டுகில் உடுத்தாற்போலக் கால் வெளுத்த ஏறு. முன் இறைவன் கைய தாய் ஊழிமுடிவின்கண் அவன் ஏவலால் உயிர்த்திரமேற் றிரியுங் கணிச்சி. (௨) காலன், † கூற்றுவனேவலாளன்.

அத்தூதர் வணிகன் வாணிகத்தாற் பெருஞ்செல்வம் ஈட்டியுளானென்றும் வேளாளன் செழிப்பாக ஒரு கருப்பந்தோட்டம் பயிர்செய்திருக்கிறனென்றும் சொன்னார்கள். அரசன் அதனைக்கேட்டு அவர் நிலையை நேரே அறியக் கருதியதனால் அவ்விருவரும் உறையும் ஊரிலுள்ள கொற்றவையின் திருவிழாவிற்குச் சென்றிருந்தபொழுது முதலில் வணிகனையழைப்பித்து வினவ அவன் தனக்குக் கொடுத்த பொருளைப் பதின்மடங்கு பெருக்கியிருப்பதாகச் சொன்னான். பின்பு அரசன் வேளாளனை யழைப்பித்து வினவ, அவன் அங்கிருந்தே தன் கருப்பந்தோட்டத்தைக் காட்டி இது என் பொருளீட்டம் என்றனன். அரசன் இது செழித்த தோட்டமேயாயினும் வணிகனீட்டிய பொருளிற் பத்திலொரு பங்கிற்கேனும் இணையாமோவென வேளாளன் அவன் பொருள் இதன் விலையிற்பத்திலொருபங்கிற்கும் இணையாகாதென்றான். அரசன் அதனைக்கேட்டு வேளாளனை இகழ்ந்துரைக்க, அவன் தன் தோட்டத்திலிருந்து ஒரு கரும்பைக் கொணர்ந்து அரசன் முன்னிலையில் அடித்து முறித்தனன். அதிலிருந்து முத்துக்கள் தெறித்தன. அரசன் அம்முத்துக்களை நோக்கி ஒவ்வொன்றும் மிக்க விலைபெறுமென்பதையறிந்து மகிழ்ந்து அவ்வேளாளனுக்கு முத்து என்றும் அக்கரும்படித்தவிடத்திற்கு முத்தடித்த களமென்றும், அங்குள்ள அம்பிகைக்கு முத்தாலம்மனென்றும் அந்நாட்டுக்கு முத்தூரொடென்றும் பெயர் புனைந்தனன் என்ப. இச்செவி வழிநிலைச் செய்தி இங்கே கருதத்தக்கது.

௧. "உடையு மொலியலுஞ் செய்யை" என்பதனால், (பரி. ௧௯: ௧௭) முருகனுக்கு வெண்டுகில் உரித்தன்றென்றார்.

௨. (அ) "ஆல மென்ன வனலென்ன வந்தகன், ஞால மெல்லா நடுங்கக் கொதித்திடும், வேலை வெம்சின லென்ன வெகுண்டுவெம், கால னன்னவற் கின்ன கழறினன்" (ஆ) "என்னை யேவுதி யென்னி லிராவணன், றன்னை நாளுயி ருண்பன்" இராமா. திக்குவிசய. ௭௨ - ௭௩. (இ) "அத்தக னத்துணை யமைச்ச னாகிய, வெத்திறக்காலனை விளித்துக் காசியி, வர்தண னெருமக னவன தாவியைத், தந்திடு கென்றலுந் தரணி யெய்தினன்" (ஈ) "போன காலனு மறலியை வணங்கியே புகுந்த, பான்மையாவையு முரைத்தலும்" கந்த. மார்க்கண்டேய.

உகக, உஉக. (உ) "கடையுகத்திடிவிற்பால கடற்படை வடக்குவாயிற், (பிரதிபேதம்) * புகுத்தினரென்க. †, சுற்றுபவனேவலாள். அவ்வழி,



உக அவ்வழி

எ - து: அவ்வனம் அவர் புகுத விட்ட இடத்து. எ - று.

(க)காரெதிர் கலியொலி கடியிடி (உ)யுருமி னியங்கறங்க
(ரு)வூர்பெழு கிளர்புளர் புயன்மங்குலி னறைபொங்க
நேரிதழ் நிரைநிரை நெறிவெறிக் கோதைய ரணிநிற்பச்
சீர்கெழு சிலைநிலைச் செயிரிகன் மிகுதியிற் சினப்பொதுவர்
தூர்பெழு துகைபுதை துகள்விசும் புறவெய்த
வார்புடன் ‡பாய்ந்தா ரகத்து

எ - து: கார்காலத்துத் தம்மில் எதிர்ந்த கலிப்பினையுடைய உருமினது கடிய இடியொலிபோல வாச்சியங்கள் ஒலியாநிற்கப் பரந்து உயர்ந்து எழுகின்ற அசைதலையுடையமேகம்போலத் திசைகளிலே புகைமூச்செழாநிற்கப் புறவிதழ் ஒடிந்த மணத்தையுடைய ஒத்தவிதழாற் கட்டின மாலையையுடைய மகளிர் நிரைநிரையாக அணியாநிற்கக் குற்றத்தைச் செய்த மாறுபாட்டின் மிகுதியாலே தலைமைபொருந்தினநிலைக்கின்றநிலைமையினையுடைய சினத்தையுடைய பொதுவர் எழுகின்ற நெருங்கின கண்கள்மறைத்தற்குக் காரணமான துகளாலே விசும்பு † தூர்ந்தமிகும்படி அத்துகள் சென்று சேரும்படியாக ஆர்த்து அத்தொழுவினுள்ளே சேரப் பாய்ந்தார்' எ - று.

கூ0 மருப்பிற் கொண்டு மார்புறத் தழீஇயு
மெருத்திடை யடக்கியு ‡மிமிலிறப் புல்லியுந்
தோளிடைப் ‖புகுதந் துதைந்துபா டேற்று
நிரைபுமேற் சென்றுரை நீண்மருப் புறச்சாடிக்
கொளவிடங் கொளவிடா நிறுத்தன வேறு

புடைவிரித் தார்க்கு மோதைப் பொருமுழக் கியமன் கேளா, விடை தெரித்துரைமினென்ன விலங்கெயிற்றலங்கொ டிண்டோண், மிடை வலி மிருத்துக்காவிருவரை விடுப்பச் செல்வார்" வேதாரணிய.

சோரச். கஎ.

க. கலிப்பாவில் ஐஞ்சீரடி முடுகி வந்ததற்கு, "காரெதிர்............ரணி நிற்ப" என்பது மேற்கோள்; தொல். செய். சூ. கக. பேர்.

உ. "இடியார் பிணை துவைப்ப" பு - வே. உழிஞை. உஎ.

௩. "பமெழை யாடும் வரையகம் போலும், கொடிநறைசூழ்ந்த தொழூஉ" கலி. க0ௗ: உ0 - உக.

(பிரதிபேதம்) * பாய்ந்தனாகத்து. † தூர்ந்தபோம்படியத்துகள், ‡ இயின்றுபுல்லியும், || புகுத் துத்துறைந்து,

கஎஉ கலித்தொகை கOரு

௩0 கொள்வாரைக் கொள்வாரைக் (சு) *கோட்டுவாய்ச் சாக்காட்டிக் கொள்வார்ப் பெறூஉக் குரூஉச்சேகில் காணிகா (க)செயிரிற் குறைநாளாற் பின்சென்று சாடி யுயிருண்ணுங் கூற்றமும் போன்ம்

எ - து: அங்ஙனம் பாய்ந்து கொம்பிடத்தே பிடித்துக்கொண்டும் மார்பிலே உறும்படி தழுவிக்கொண்டும் †கழுத்திடத்திலே அடங்கிக்கிடந்தும் குட்டேறு முறியும்படி தழுவியும் தோளுக்குள்ளே கழுத்தைப் புகவிட்டுப் பிடித்தும் நெருங்கிக் கொம்புகள் தம்மேலேபடுதலை ஏற்றுக்கொண்டும் நிரைத்துத் தம்மேலே சென்ற ஆயரைப் பின்னர்க் கீழேவீழ்த்து நீண்ட மருப்புத் தைக்கும்படி குத்தி அவர்கள் தழுவுகின்ற கழுத்திடத்தைக் தழுவக்கொடாதே ஏறுகள் அவரை நீக்கி நிறுத்தின; அங்ஙனம் நிறுத்தினபின்பும் சென்று தழுவுவாரைத் தழுவுவாரைக் கோட்டிடத்தே சாம்படி குத்திப் பின்பு சென்று

௧. "சாப்புல்லற் பாற்று" என்பதற்கு, 'சாம் வண்ணம் பொருந்தற் பான்மை யுடைத்து' என்று பொருள்கூறி, 'சாவவென்பதனிறுதிநிலை விகாரத்தாற் றொக்கது' என இலக்கணமெழுதி, 'கோட்டின்வாய்ச் சாக்குத்தி' என்புழிப்போல வென இதனை மேற்கோளுங் காட்டினர் பரிமேல்; குறள். ௬௪௧. இந்நூற்பக்கம் ௯௨௩: ௨-ஆம் குறிப்புப்பார்க்க.

௨. (அ) "காலனுங் காலம் பார்க்கும்" புறம். ௪௧: ௧. (ஆ) "எண்ணி யுயிர் கொள்வான் வேண்டித் திரியினு, முண்ணூற் றுணைக்காக்குங் கூற்று" பழ. ௮௯. (இ) "ஞாலத் தின்னுயிர் வாழ்வோர் காப்பட், காலம் பார்க்குங் காலன் போல" பெருங். (௧) ௩௭: ௨௦௪-௨௦௫. (ஈ) "சாற்று நாளற்ற தெண்ணித் தருமம்பார்த், தேற்றம் விண்ணென்ப தன்றி யிவளைப்போ, ஞற்றங் கேட்டலுந் தின்ன கயப்பதோர், கூற்றுண் டோ" கம்ப. தாடகை. ௬௪. (உ) "நோற்றவோன் புடைய வாழ் நாள் வரமிவை நுனித்த வெல்லாங், கூற்றினுக் கன்றே வீரன் சரத் திற்குங் குறித்ததுண்டோ" கம்ப. நிந்தனைப். ௬௯. (ஊ) "அறுதெ வோம்பிய செய்கைய னென்பதா லவனைக், கொடிய னொப்பரா வறி விலார் செய்வினை குறித்து, முடிவி லாருயி ரெவற்றிற்கு முறை புரிந் திடலா, னடுவ னென்கின்ற தவன்பெய ருலகெலா நவிலும்" (எ) "கொல்வன்னெனக் காலந்தெரி கூற்றுமென நின்றேன்" கந்த. மார்க்கண்டேய. ௨௨௨. இரண்டாநாட் சூரபன்மன். ௨௧௯. (ஏ) "நாள் வரைக்கு நமனுனந்த வாளியார்" கழுக்குன்ற. பசுவாசு. ௮. (ஐ) "மாயு நாளுற நடுவ னோர்க்கேயாட்படுந் தூதர் நீர்போ யாங்கவற் கொணர்மி னென்ன" வேதாரணிய. சோரச். ௧௯. (ஒ) "நாள்வரை யறையே கோக்கு நடுவனுர் தூத ரெய்ப்ப" திருவானைக்கா. திருநாட்டுச். ௮௩.

(பிரதிபேதம்) *கோட்டின்வாய்ச். † கழுத்திலே.

நான்காவது முல்லை டு. ௬௭௩

தழுவுவாரைப் பெருமல் நின்ற சிறந்தையுடைய சிவர்த ஏறு உயிர்குறை நின்றாரிடத்தே அவர்பின்னேசென்று குற்றத்தைச்செய்து தங்கைத்து

உயிரையுண்ணுங் கூற்றவனையும்போலும்; இதனைப்பாராயென்றாள். எ - று.

௩௩ பாடேற் றவரைப் படக்குத்திச் செங்காரிக்
கோடெழுந் தாவின் கனமணி காணிகா
*நகைசா லவிழ்பத நோக்கி நறவின்
முகைசூழுந் தும்பியும் போன்ம்

எ - து: சிவந்த கரிய ஏற்றினுடையகொம்புகள் †படுதலை மார்பிலே ஏற்றவர்களைக் கொம்புகளாலே படும்படி குத்தி மேனோக்குதலாலே வீழ்ந்த குருதியால் நனைந்து அசையும் பலவாகத் திரண்ட திரட்சியையுடைய சிறிய மணிகள் ஒளியமைந்த நறும்பூவினது முகையவிழுஞ் செவ்வியைநோக்கி அதனைச் சூழ்ந்து திரியும் தும்பியையும்போலும்; அதனைப்பாராயென்றான். எ - று.

“நறுவிதழ் கண்டன்ன ‡செவ்விரற் கேழ்ப” (க) என உவமைகூறலின் நறும்பூவைக்கண்டமணிக்கு (உ)உவமைகூறவே சிறியமணிகள்கோத்துக்கட்டினமையும் கோடெழுந்தென்றதனால் அக்கோடு எழுந்தகாலத்து வீழ்ந்த குருதியால் அவை சிவந்தமையும் பெற்றாம்.

௩௭ இடைப்பாய்ந் தெருத்தத்துக் கொண்டானோ டெய்தி
மிடைப்பாயும் வெள்ளேறு கண்டைகா
(௩)வாள்பொரு வானத் தரவின்வாய்க் கோட்பட்டுப்
போதரும் பான்மதியும் போன்ம்

---

க. கலி. ௮௪: ௨௨.

உ. நறும்பூவை ஏற்றின் கொம்புக்கும் தும்பியை அக்கொம்பிற் கட்டிய மணிக்கும் உவமையாகக் கொள்வது பொருத்தமென்று தோற்றுகிறது. “அவ்வளை வெரிநி னரக்கீர்த் தன்ன, செவ்வரி யிதழ சேணாறு நறவின், னறுந்தா தாடிய தும்பி பசுங்கேழ்ப், பொன்னுரை கல்லி னன்னிறம் பெறூஉம், வளமலை” (நற். ௨௫) என்பதனால்நறும்பூ, செவ்வரியையும் தும்பிமொய்த்தலையுமுடைய தென்பது விளங்கும்; “களிர் கொடியன நறவினாயக நறுமலரன நறவம்” (சூளா. தூது.

௯.) என வருதலால் இதன் முதல் ஒருகொடி யென்று தெரிகிறது. மயிலைநாதரும் ஒருகொடியென்றே கூறினர். இதனை ஓடையென்பது போல ஒரு மரத்துக்கும் ஒருகொடிக்கும் பெயரென்பாருமுளர்.

௩. "வான்போழ் வானத்து வயங்குகதிர் சிதறி" நற். கு. ௪௪௭. மேற்.

(பிரதிபேதம்) * தலைசால், † படித்தலை மார்பிலே, ‡ மெல்லிரற்கேறப,



எ-து: கலிவே பாய்ந்தெய்திக் கழுத்திடத்தே தழுவிக்கொண்டு கிடந்தவனுடே பாணின்மேலே தாவிப்பாயும் வெள்ளிய ஏறு பாம்பின்வாயாற் சிறிதிடம் விழுங்கப்பட்டு அப்பாம்புடனே ஒளியைத்தருகின்ற விசும்பிலே போதலைச்செய்கின்ற, பால்போலும் மதியையும்போலும்; இதனைக்காணென்றான் எ - று.

(க)*இகா முன்னிலையசை. அது காவெனத் திரிந்தது.

௪௭ ஆங்க, ஏறும் பொதுவரு மாறுற்று †மாறா
இருபெரு வேந்தரு மிகலிக்கண் ணுற்ற
பொருகளம் போலுந் தொழூஉ.

எ - து: அங்ஙனே ஏறுகளும் இடையரும் தம்மின் மாறுபடுகையினாலே அத்தொழு இருவராகிய பெரியவேந்தர் மாறுபட்டு எதிர்ப்பட்ட போர்மாறாத பொருகளத்தையொக்கும் என்றான். எ - று.

இத்துணையும், தோழி தலைவிக்குக்காட்டிக் ‡கூறியது.

௫0 வெல்புகழ் உயர்நிலைத் தொல்லியற் றுதைபுதை துராங்கிய
னல்லேறு கொண்ட பொதுவன் முகனோக்கிப்
பாடில வாயமகள் கண்

எ - து: செருங்கின கழுத்தையெல்லாம் மறைத்தலையுடைய அசைகின்ற குட்டேற்றினையுடைய || நல்ல எற்றைத்தழுவின, வெல்கின்ற புகழ் உயர்கின்ற நிலைமையையுடைய, பழைதாகிய குலத்தியல்பினையுடைய, பொதுவன் முகத்தை நோக்கி ஆய்ச்சாதியிற்பிறந்த மகளுடைய கண் இமைத்தலை ×யிலவாயிருந்தன. எ - று.

இது, தோழி தன் னெஞ்சோடே அவன் விரும்பக் கூறியது.

௧. "நில்லிகா வென்பாள்போ னெய்தற் றொடுத்தாளே, மல்லிகா மாலை வளாய்" என்புழி, நில்லிகா வென்பாள் போல் என்பதற்கு நில்லென்பாள் போல் என்று பொருள் கூறி, 'இக வென்னும் அசை இகாவென வீறு திரிந்தது' என்று (பரிபாடல். ௧௧: ௧௦௪-௧௦௫.) பரிமேலழகரும் காண்கா வென்பதற்குக் காண்பாயாக வென்று பொருள்கூறி, 'இக வென்னும் முன்னிலையசை இகாவென ஈறு திரிந்தது' என்று (சிலப். ௧௮: ௬௧) அரும்பதவுரைகாரரும் அடியார்க்கு நல்லாரும் எழுதியிருப்பதை நோக்க இங்கும் 'இக, முன்னிலையசை; அது இகா வெனத் திரிந்தது' என்று இருக்கவேண்டுமென்று தோற்றுகிறது.

(பிரதிபேதம்) * இதுமுன்னிலையசை. † மாமுல்லைபெரு. ‡ கூறினை வெல்புகழ். || வல்லேற் றை, × இல்லையாயிருந்தனவெனத் தோழி தன்னுளேயவன்விரும்பக்கூறினள், ÷ நறுநுதலாய்.



௫௧. *நறுநுதா லென்கொ(க)லோ கூந்த லுளரச்
சிறுமுல்லை நாறிய தற்குக் †குறுமறுகி
யொல்லா துடன்றெமர் செய்தா ரவன்கொண்ட
கொல்லேறு போலுங் கதம்

எ-து: நறிய நுதலினையுடையாய்! ஐவகைப்பட்ட கூந்தலை ஆற்ற அது (உ)வெண்ணெயின் நாற்றம் நீங்கிச் சிறிய முல்லைப்பூவின் நாற்றம் மேவி மிக நாறியதற்கு ‡எம்முடைய சுற்றத்தார் பொறுக்காதே ||அண்ணிதாக மனஞ் சுழன்று பாறுபட்டு அவன் தழுவின கொல்லுகின்ற ஏறுபோலுங் கோபத்தினைச்செய்தார்; அன்று அவர் இங்ஙனங் ÷கோபித்தது என்னபயனையுடைத் தாயிற்றென்றாள். எ - று.

இது தலைவியைநோக்கிக் கூறியது.

௫௨. (௩)நெட்டிருங் கூந்தலாய் கண்டை +யிஃதோர்சொல்;
கோட்டினத் தாயர் மகனொடியாம் ×பாட்டதற்
கெங்க ணெமரோ பொறுப்பர் பொறாதார்
தங்கண் பொடிவ தெவன்

எ - து: நெடிய கரிய கூந்தலையுடையாய்! இன்னும் யான்கூறுகின்ற ஈதொரு சொல்லையும் நெஞ்சால் ஆராய்ந்துபாராய்; கொம்பையுடையவாகிய எருமையினத்தை யுடைய ஆயர்மகனோடே யான் **கூடியதற்கு எம்முடைய சுற்றத்தாரை இன்னும் பொறுப்பர்; அதுபொறுத அயலார் ††தம்முடைய கண்கள் எங்கண்களை நோக்கித் தீய்ந்துபோவது என்னபயனை ‡‡யுடைத்தென்றாள். எ - று.

௬க ஒண்ணுதால்

இன்ன வுவகை பிறிதியாது (ச)யாயென்னைக்
(ரு)கண்ணுடைக் கோல லலைத்ததற் கென்னை

---

க. இந்நூற்பக்கம் ௫அசு: க-ஆம் குறிப்புப் பார்க்க.

உ. பாலையும் வெண்ணெயையும் நெய்யையும் தந்தலையில் தடவிக் கொள்ளுதல் ஆய்ச்சாதியாருக்கு இயல்பு.

ந. "நெட்டிருங் கூந்தற் கடவுளர்" கலி. கஙு: ஙரு.

ச. "அன்னை யலையு மலைபோயிற்று" ஐந்திணையெழு. ந.

ரு. (அ) "நண்ணிய மென்பர லேக்குங்கோல் காணுங்கால், கண்ணல்ல தில்லைபிற" என்பதும், 'நண்ணிய மென்றிருக்கு மமைச்சரை அரசர்

(பிரதிபேதம்) * நறுநுதலா யென்கொலோ கூந்தலுளாய். † குறுமருகுபொல்லாது, ‡ நம்முடைய, || அன்னிதாக அன்னிதாக மனம், ÷ கோபித்தென்ன பயனை.

╪ இஃதுநேரர், × பட்டதற்கென்கண். ** கூடியயதற்கு, †† தம்முடைய தங்கண்கள், ‡‡ உடைத்தென்னத் தலைவியைநோக்கிக்கூறினள், ஒண்ணுதால்.



மலரணி கண்ணிப் பொதுவனோ டெண்ணி
பலர்செய்து விட்டதில் லூர்

எ-து: அதுகேட்ட தலைவி, ஒள்ளிய நுதலினையுடையாய்! (க)யாய் தன் கண்களுடையவாகிய கோலை *யுடையளாய் என்னைவருத்தியதற்கு இவ்வூர் என்னை மலரணிந்த கண்ணியை யுடைய பொதுவனோடே கூட்டமென் றெண்ணி (உ)அலரையுண்டாக்கிவிட்டது; இத்தன்மைத்தாகியஉவகை நமக்கு

வேறியாதுதானென மகிழ்ந்து கூறினள். எ - று.

அலைக்குங்கோலின் காரியத்தைக் கண்கள் செய்தமைபற்றிக் கண்க ளுடையவாகிய கோலென்றாள்.

கூ* ஒன்றிப் புகரினத் † தாயமகற் றொவ்விழா
யின்றெவ னென்னை யொர்கொப்ப தன்றவன்
மிக்குத்தன் மேற்சென்ற செங்காரிக் கோட்டிடைப்
புக்கக்காற் புக்கதென் னெஞ்சு

எ - து: அங்ஙனம் கூறியபின்னரும் ஒள்ளிய இழையினையுடையாய்! தன்மேல் மிக்குச்சென்ற சிவந்த கரிய ஏற்றினுடைய கோட்டிடையிலே இற்றைநாள் ‡அவன்செல்ல என்னெஞ்சும் உடன்சென்றது; இனிச்சுற்றத்தா ரெல்லாரும் பொருந்திப் புகழையுடைய பாத்திரத்தையுடைய ஆய்ச்சாதியிற் பிறந்த மகனுக்கு என்னைக்கொடுப்பதாக அறுதியிட்ட அற்றைநாளிற் கொடுக் கின்றது என்னபயனை யுடைத்தென்று தலைவி மகிழ்ந்து கூறினள். எ - று.
என (ங)

அலைக்குங்கோலாவது கண்ணெனவுணர்ந்துத் தன்வெகுளிநோக்கால் அவர் வெருடற் குறிப்புடைய வென்பது கருத்தாக்கு வாருமுளர்' எனப் பரிமேலழகர் பிறர்கோட் கூறி யிருத்தலும் (குறள். எ௬௦) (ஆ)"கொத் தார் மலர்க்குழல் வல்லிநம் மன்னை குரிசில்வந்த, செந்தா மரை யடி கண்டனள் போலுமித் திண்சிலம்பில், வந்தா ரெவரென, வந்தார் சிலரிலர் மற்றிங் கென்றே, னெந்தா னெடிதுயிர்த் தான்கொடி தா யென்னை நோக்கினனே" (அம்பிகாபதிகோவை. உ௩௧) என்பதும் ஈண்டு அறிதற்பாலன.

க. யாய் - என் தாய். "யாயு ஞாயும் யாரா கியரோ" குறுந். ௪௦.

உ. "களித்தொறுங் கள்ளுண்டல் வேட்டற்றாற் காமம், வெளிப்படுந் தோறு மினிது" குறள். ௧௧௪௫.

ங. எனவென்பது. இங்கே அசைநிலை.

(பிரதிபேதம்) * உடையாயாய் † ஆயர்மகற்கு. ‡ இவன்செல்ல.

எக (க)பாடிமிழ் பரப்பகத்* தரவணை யசைஇய
வாடுகொ ணேமியாற் பரவுது நாடுகொண்
டின்னிசை முரசிற் (உ)பொருப்பன் மன்னி
யமைவர லருவி யார்க்கு
மிமையத் தும்பரும் †விளங்குக வெனவே.

எ-து: அதுகேட்ட தோழி, யாம்(ங)இல்லறம்நிகழ்த்தி இனிதிருக்குமாறு காத்தற்குப் பிறநாடுகளைக்கொண்டு இனிய ஓசையையுடைத்தாகிய முரசினையுடைய பாண்டியன் அமைந்து வருதலையுடைய அருவி ஆரவாரிக்கும் இமயத்திற்கு வட‡திசையிலேயும் மன்னி விளங்குகவென்று உட்கொண்டு முறிதலையுடைத்தாகிய முழங்குகின்ற கடலிடத்துப் பாம்பணையிலே பள்ளிகொண்ட வெற்றி கொண்ட சக்கரத்தினை யுடையோனை வாழ்த்துவேமென்றாள். எ - று.

இதனால், தலைவிக்குப் புணர்வாகிய உவகை பிறந்தது.

இது தரவும் தனிச்சொல்லும் ஐஞ்சீரடி பலவும் விராய் முடுகுவண்ணம் அடியிறந்தோடிய கொச்சகவெண்பாவும் கொச்சகமும் இரண்டு நெடுவெண்பாட்டும் "வெண்பாட் டீற்றடி முச்சீர்த்தாகும்" (ச)என்றதனான் இடையிற்று முச்சீரடிவந்த நெடுவெண்பாட்டும் ஐஞ்சீரடி பெற்ற குறுவெண்பாட்டும் ஐஞ்சீரடி முடுகியலோடு தொடர்ந்த கொச்சகவெண்பாவும் நெடுவெண்பாட்டும் ஈரடியாறொன்றும் குறுவெண்பாட்டும் தனிச்சொல்லும் இரண்டு நெடுவெண்பாட்டும் தனிச்சொல்லும் சுரிதகமும் பெற்று வந்த கொச்சகம். (௫)

(க0ரு.) கழுவொடு சுடுபடை சுருக்கிய தோற்கண்
ணிமிழிசை மண்டை யுறியொடு தூக்கி
யொழுகிய கொன்றைத் தீங்குழன் முரற்சியர்
வழூஉச்சொற் கோவலர் தத்த மினநிரை
பொழுதொடு தோன்றிய கார்நனை வியன்புலத்தார்;

---

*. முல்லை நிலத்துக்குத் திருமால் தெய்வ மென்பதற்கு "பாடிமிழ் பரப்பகத் தரவணை............பரவுதும்" என்பது மேற்கோள்; தொல்.

அகத். ௬. ரு. ௧௪.

உ. இந்நூற் பக்கம் ௧௧ரு: ௪-ஆம் குறிப்புப் பார்க்க.

௩. "காவற்பொருட்டு அரசன் வாழ்க.........., என யாய் இல்லறத்திற்கு வேண்டுவன விரும்பி ஒழுகியதல்லது பிறிது நினைத்திலள்" என்னும் (ஐங்குறுநூறு. ௧.) உரைப்பகுதி இங்கே நோக்கற்பாலது.

௪. தொல். செய். ௬. எஉ.

(பிரதிபேதம் * முன்னி, † விளக்குகெனவே, ‡ நிசையிலே மின்னி.



## கலித்தொகை ௧0௬.

சு அவ்வழி,
நீறெடுப்பவை நிலஞ்சாடுபவை
மாறேற்றுச் சிலைப்பவை மண்டிப்பாய் பவையாய்த்
துளங்கிமி லல்லேற் றினம்பல களம்புகு
மள்ளர் வனப்பொத் தன;
௧௧ தாக்குபு தம்முட் பெயர்த்தொற்றி யெவ்வாயும்
வைவாய் மருப்பினான் மாறுது குத்தலின்
மெய்வார் குருதிய வேறெல்லாம் பெய்காலைக்
கொண்ட னிரையொத் தன;
அவ்வேற்றை;
௧ரு பிரிவுகொண் டிடைப்போக்கி யினத்தோடு புனத்தேற்றி
யிருதிறனா நீக்கும் பொதுவ
ருருகெழு மாநில மியற்றுவான்
விரிதிரை நீக்குவான் வியன்குறிப் பொத்தனர்;
உ0 அவரைக், கழல வுழக்கி யெதிர்சென்று சாடி
யழல்வாய் மருப்பினாற் குத்தி யுழலை
மரத்தைப்போற் றொட்டன வேறு;
உரு தொட்டதம், புண்வார் குருதியாற் கைபிசைந்து மெய்திமிரித்
தங்கார் பொதுவர் கடனாட் பரதவ

ரம்பியூர்ந் தாங்கூர்ந்தா ரேறு;
௨௯ ஏறுதங் கோலஞ்செய் மருப்பினாற் றோண்டிய வரிக்குடர்
ஞாலக்கொண் டெழூஉம் பருந்தின் வாய்வழீஇ
யாலுங் கடம்பு மணிமார் விலங்கிட்ட
மாலைபோற் றூங்குஞ் சினை;
ஆங்கு;
௩௧ தம்புல வேறு பரத்தர வுய்த்தத
னன்புறு காதலர் கைபிணைந் தாய்ச்சி-
ரின்புற் றயர்வர் தழூஉ;
௩௪ முயங்கிப் பொதிவே முயங்கிப் பொதிவே
முலைவேதி னெற்றி முயங்கிப் பொதிவேங்
கொலையேறு சாடிய புண்ணையெங் கேளே;

## நான்காவது முல்லை ௯. ௯௭௯

௩௭ பல்லூழ் தயிர்கடையத் *தாஅய புள்ளிமேற்
கொல்லேறு கொண்டான் குருதி மயக்குறப்
புல்லலெங் தோளிற் கணியோவெங் கேளே;

௪௦ ஆங்கு, போரேற் றருந்தலை யஞ்சலு மாய்ச்சியர்
காரிகைத் தோள்கா முறுதலு மிவ்விரண்டு
மோராங்குச் சேற லிலவோவெங் கேளே;
௪௩ கொல்லேறு கொண்டா னிவள்கேள்வ னென்றூரார்
சொல்லுஞ்சொற் கேளா வளைமாறி யாம்வருஞ்
செல்வமெங் கேள்வன் றருமோவெங் கேளே;
ஆங்க;
௪௭ அருந்தலை யேற்றொடு காதலர்ப் பேணிச்
சுரும்பிமிர் கானநாம் பாடினம பரவுது
மேற்றவர் புலங்கெடத் திறைகொண்டு
மாற்றாரைக் கடக்கவெம் மறங்கெழு கோவே.

இது தத்தம் இனம் தத்தம்புலத்துப் பிரிப்பான்புக்கவர் ஏறுகொண்ட வாறுகண்டு*ஆய்ச்சியர்தங்காதன்மிகுதியால்†தங்காதலரைக்கைபிணைந்து

தாவையடித் ‡தென்னன்வாழ்கெனக் கானம்பாடியது.

இதன் பொருள்.

(௩.) கழுவொடு சுடுபடை சுருக்கிய தோற்கண்
ணிமிழிசை மண்டை யுறியொடு தூக்கி

---

௧. "கொன்றையந் தீங்குழல்...........கேளாமோ தோழீ" (சிலப். ௧௭. 'கன் றுகுணிலா')என்னுந்தாழிசைகளின்விசேடவுரையில்,"கொன்றை ஆம்பல் முல்லை என்பன சிலகருவி. இனி அவற்றைப் பண்ணென்று கூறபவெனின். அங்ஙனம் கூறுவாரும் ஆம்பலும் முல்லையுமே பண் ணுதற்குப் பொருந்தக் கூறினல்லது கொன்றை என ஒருபண்இல்லை யாதலா( ... ... ..)னும் கலியுள் முல்லைத் திணையின்கண் ஆறும்பாட்டி னுள், இப்பாட்டில் 'கழுவொடு ... ... ...வியன் புலத்தர்' எனக்கருவி கூறினமையானும் 'அன்றைப் பகர்கழிச் தாளின் நிரப்பகற், கன் றின் குரலும் கறவை மணிகறங்கக், கொன்றைப் பழக்குழற் கோவல ராம்பலும். மொன்றல் சுரும்பு நரம்பென வார்ப்பவும்' என வனையா பதியுள்ளும் கருவி கூறிப் பண்கூறுதலாலும் இவை ஒரு பொருண் மேல் மூன்றடுக்கிவந்த ஒத்தாழிசையாதலானும் இரண்டு பண்ணும்

(பிரதிபேதம்) * ஆச்சியர், † தத்தினகாதலரை, ‡ தென்னவன்வாழ்கென.



யொழுகிய கொன்றைத் தீங்குழன் முரற்சியர்
*வழூஉச்சொற் கோவலர் தத்த மினநிரை
பொழுதொடு தோன்றிய கார்நனை வியன்†புலத்தார்

எ - து: பால் பற்றறச் சிவுதலைச்செய்த(க)கறவைக்கலங்கள் வைத்த உறி யோடே தோற்பையிடத்தே கழுவோடேசுட்டுக்கோல்களையும்இட்டுச்சுருக்கிய பைகளையுந் தூக்கி மேவவார்ந்த கொன்றைக்காயைத் திறந்து சமைத்த இனிய குழலில் உண்டான ஓசையராய் வழுவின சொல்லையுடைய ‡கோவலர் தம் முடைய தம்முடைய இனமாகிய பசுக்கள் கார்காலத்தோடே தோன்றின அப்பொழுது வரும் மழையாலே நனைந்த அகற்சியையுடைய நிலத்திடத்தா ராயினர். எ - று.

பழிசை ||பாடமாயின், பழித்தலையுடையதென்க. பழித்தலையுடையது பழிசை. முரற்சியர் என்னும் எச்சம் உடையவென்னும் வினைக்குறிப்போடு +முடிந்தது. (உ) கழுவாவது கறத்தற்கரிய பசுக்களைக் கறத்தற்கு இரண்டு தலையுஞ் சீவி மாலையாகக்கட்டிக் கழுத்தில் இடுவது.

ங அவ்வழி

(ங)நீறெடுப்பவை நிலஞ்சாடுபவை
மாறேற்றுச் சிலைப்பவை மண்டிப்பாய் பவையாய்க்

---

ஒன்று கருவியுமாகக் கூறின் செய்யுட்கும் பொருட்கும் வழூஉச் சேறலானும் அங்ஙனங்கூறாத லமையாதென்க" என்று அடியார்க்கு நல்லார் எழுதியிருப்பது ஈண்டு அறிதற்பாலது.

க. "இன்கா லுறியன் பானைய னகலன்" அகம். உஎச: க.

உ. (அ)"காருகு வீங்கிய சேதாத் தொகுத்துக், குளம்புங் கோடும் விளங்கு பொன் னுறீஇத், தளையுந் தாம்பு மனைகடை மத்தும், கழுவுங் கலனும் வழுவில பிறவும், பைம்பொனி னியன்றவை பாற்பட வகுத்துக், குன்றுக் கோடி கொடுத்துவப் போரும்" பெருங். (க) நக: கச-கக. (ஆ) "கழுவொடு பாகர் கலங்காமல் யாத்துத், தொழுவிடை யாயத் தொகுமின்" (தொல். புறத். சூ. ங. நச. மேற்.) என்பவற்றில் இச்சொல் வருதல் காண்க.

ங. (அ) "அடியிட்டு நிலங் கிளைத்தண்டமெண் டிக்கும் போர்ப்பப், பொடி யிட்டுவேர்த்துப் பொருகோட்டினிற் குத்திக் கோத்திட், டிடியிட் டதிர்கா ரெதிரேற்றெழுந் தாங்கு சோக்கிச், செடியிட்டிருகண் ணழல் சிந்த நடந்த தன்றே" திருவிளை. மாயப்பசுவை. கஎ. (ஆ) "கானிலங்

(பிரதிபேதம்) * வழூச்சொல், + புலத்தர் எ-து: கழுவாவது...........கழுத்திலிடுவது பால் பற்றச், ‡ கோவர் தம்முடைய, || பாடமாயின் பழித்தலையுடையது பழிசை யாம்.முரற்சிய ரென்னும், + முடிந்தது அவ்வழி.

நான்காவது முல்லை சா. சுஅக

துளங்கிமி லல்லேற் றினம்பல களம்புகு
மள்ளர் வனப்பொத் தன

எ - து: அவ்விடத்துத் துளங்குகின்ற குட்டேற்றினையுடைய நல்ல ஏற்றினங்கள் பலவும் முன்பு காலாலே வெட்டி நீற்றை எழுப்புமவை இப்பொழுது (க)மழைபெய்தமையிற் (உ) கோட்டுமண் கொள்ளுமவை ஒன்றோடொன்று மாறுபடுதலை மேற்கொண்டு முழங்குமவை மிக்குப்பாயுமவையாய்ப் போர்க்களத்தே *செல்லும் வீரர் அழகையொத்தன. எ - று.

கக தாக்குபு தம்முட் பெயர்த்தொற்றி வெவ்வாயுள்
வைவாய் மருப்பினுன் மாறாது குத்தலின்
மெய்வார் குருதிய வேறெல்லாம் பெய்காலைக்
கொண்ட னிரைபொத் தன

எ - து: ஒன்றோடொன்று தாக்கி மீண்டு அடிப்பறித்துச்சேர்த்து கூரிய இடத்தையுடைய கொம்பாலே மாறாமல் எவ்விடத்துங் குத்தலையினாலே மெய்யினின்றும் வடிகின்ற குருதியையுடைய †ஏறுகளெல்லாம் காட்காலைப் பெய்யும் ‡மேகநிரையையொத்தன. எ - று.

காட்காலைமேகம் சிவந்திருத்தலின், உவமையாயிற்று. பெய்யு மேகம் அதற்கு அடைகூறிற்று.

கரு அவ்வேற்றை
பிரிவுகொண் டிடைப்போக்கி யினத்தோடு புனர்த்தேற்றி
யிருதிறனா நீக்கும் பொதுவ

---

நீறி வான்மிசை யுயர்த்துக் கதிர்மணி மருப்பிடை நோக்கி, யானின வேறு யடுசமர்க் கெழுந்தா னசனியே றென்னவோ ரவுணன்" பாக. (௪0) ஸ்ரீ காரதர். ௮.

க. "பெயல, கடுநீர் வரித்த செந்நில மருங்கின், விடுநெறி யீர்மணல் வாரணஞ் சிதறப், பாம்புறை புற்றத் தீர்ம்புறங் குத்தி, மண்ணுடைக் கோட்ட வண்ண னல்லேறு, நடனிலை வேட்கையின் மடநாகு தழீஇ, யூர்வயிற் பெயரும் பொழுதில்" அகம். ௬௪: எ - கங.

உ. (அ) "கோட்டுமண் கொண்ட மார்பம்" சீவக. உஉ௬௪. (ஆ) "கோட்டுமண் கொள்ளா முலை" முத் ........... (இ) "கோட்டுமண் கொண்ட குனிர்திங்கள்" நள. சுயம். ௬0உ. (ஈ) "கோட்டுமண் கொண்டு" கூர்ம. ஆதவர்சிறப்பு. ௮. (உ) கோட்டுமண் கொள்ளும் வேழம்" தணிகை. வீரட்ட. ௬உ.

ருருகெழு (௧)மாநில மியற்றுவான்
*விரிதிரை நீக்குவான் வியன்குறிப் பொத்தனர்

எ - து: † அவ்வேறுகள் போர்செய்யாமற் பிரிதலைத் தாம் உட்கொண்டு அவை இரண்டு கூறாக நீக்கும்படி நடுவே சிலஏறுகளைச்செலுத்தி விலக்கிப் பின்னர்ப் பசுத்திரளோடே மேயும்புலத்திலே எற்றித் தத்தம் இனங்களைப் பிரிக்கும் இடையர் பழையவடிவுகளெல்லாங்கெழுமும்படி பெரியநிலத்தைப் ‡படைத்தற்கு அகற்சியையுடைய கருத்தினையுடைய,(௨) அந்நிலத்தை மறைத் துக்கிடந்த கடலைப் போக்கும் நான்முகனையொத்தார். எ - று.

எற்றையென்றது எற்றிற்கு ஐகாரவீற்றதோர்பெயர்; "ஆற்றலொடு புணர்ந்த வாண்பாற் கெல்லா, மேற்றைக் கிளவி யுரித்தென மொழிப" (௩) என்றலின்.

௨0 அவரைக், (௪)கழல வுழக்கி யெதிர்சென்று சாடி
யழல்வாய் மருப்பினாற் குத்தி (௫)யுழலை
மரத்தைப்போற் றொட்டன வேறு

எ - து: அங்ஙனம் நீக்குகின்றவர்களை அவ்வேறுகள் ஓடும்படி மிதித்து ஓடாமல் நின்றவர்களை எதிர் சென்று அழலுகின்ற இடத்தையுடைய கொம் பாலே குத்திச் சாடி உழலைகோத்த மரத்தைப்போலத் துளைத்தன. எ - று.

---

௧. (அ) "மாறி யுலகம் வருத்தநாள் வரம்பு கடந்து மண்முழுது, மேறி யொடுங்கு மெறிகடல்போ லெயின்மா நகர மெய்தினார்" (ஆ) "தேர் செலும் வேகத்து வேலைநீ, ரோங்கு நாளி னொருங்கு முலகுபோர், றுங்க லாற்றலில் லார்தமை மாறித்தா, நீங்கினார்"

௨. "உலாசெய் நான்முக னுறங்குழிப் புவிகொள வொருங்கே, திரை செய் வான்கடல் சென்றெனச் சென்றது சேனை" கந்த. திக்கு. ௧0.

௩. தொல். மரபி. சூ. ௪௧.

௪. "கோவலர், கழலக் காடுபோய்" சீவக. ௪௨௨.

௫. உழலைமரம், தொழுவமுதலியவற்றுள் மாடுகளைப் புகாமல் தடுப்பதற்கு அவற்றின் வழியில் இருபக்கத்தும் உழலையை (கழிகளை) இழுத்துப் போம்படி துளைத்துநிறுத்தியிருக்கும் மரம்; இது கடப்புக்காலெனவழங்கும். "கன்று தாம்பரிக், துழலை பாய்ந்தலா முன்றில்" என்பது சீவக. ௪௨௨.

(பிரதிபேதம்) * விரைநிரை, † ஏற்றையென்றது..............என்றலின் அவ்வேறுகள், ‡ படைத்தற்கு இக்கிலத்தை மறைத்துக்கிடந்த அகற்சியையுடைய கடலைப் போக்கும் கருத்தினையுடைய நான்முகனையொத்தார், அவரைக்.

நான்காவது முல்லை ௫. ௬அக

௨௩ தொட்டதம் புண்வார் குருதியாற் கைபிசைந்து மெய்திமிர்த்
தங்கார் பொதுவர் கடலுட் பரதவ
(௧)ரம்பியூர்ந் தாங்கூர்ந்தா ரேறு

எ - து: பொதுவர் அவ்வேறு துளைத்த தம்முடைய புண்களினின்றுஞ் சோருகின்ற குருதி வழுக்குதலாலே மணலை அள்ளிக் கையைப் பிசைந்து *உடம்பையுந் (௨)திமிர்ந்து தாழ்க்க நில்லாராய்க் கடலுக்குள்ளே பரதவர் (௩)சிறியதெப்பத்தை ஏறினாற்போல ஏற்றைத் தழுவினார். எ - று.

௨௪ ஏறுதங் கோலஞ்செய் மருப்பினாற் போழ்ந்திட்ட வரிக்குடர்
ஞாலக்கொண் டெழூஉம் பருந்தின் †வாய்வழீஇ
யாலுங் கடம்பு மணிமார் விலங்கிட்ட
மாலைபோற் றூங்குஞ் சினை

எ - து: அவ்வேறுகள் தம்முடைய அழகுசெய்கின்ற கொம்பாலே போழ்ந்திட்ட வரிகளையுடைய குடர்கள் நான்று விழும்படி எடுத்துக்கொண்டு உயர்ந்துபோம் பருந்தின் வாயினின்றுந் தப்பி ஆலமரத்தையுங் ‡கடப்பமரத்தையும் (௪)ஆண்டு உறையுந்தெய்வங்கட்கு ||மகிழ்ச்சியுண்டாகவேண்டி அணிதலைச்செய்தற்கு விலங்க இட்டுவைத்த மாலைகள்போலே கொம்புகடோறுந் + தூங்காநிற்கும். எ - று.

௩௦ ஆங்கு
தம்புல மேறு பரத்தர வுய்த்தத
மன்புறு (௫)காதலர் கைபிணைங் × தாய்ச்சிய
ரின்புற் றயர்வர் தழூஉ.

க. "மறை யேற்றின் மேலிருந் தாடித் துறையம்பி, யூர்வான்போற் றோன்று மவன்" கலி. ௧௦௩: ௩௮-௩௯.
உ. திமிர்தல் - பூசுதல்; "திமிரத் திமிரக் கனவாய சந்தன சிதனமே" என வருதல் காண்க. திமிருதச் செய்தலென்பாரு முளர்.
௩. அம்பியென்பது தெப்பத்துக்கும் நீரிற் செலுத்தும் எல்லாக் கருவி களுக்கும் பெயரென்பவாயினும் ஈண்டேற்றுக்கு உவமையாய் வருதலிற் சிறியதெப்பமென்று பொருள்கூறினர். "தண்புன லாடுந் தடங்கோட் டெருமை, திண்பிணி யம்பியிற் றோன்றுமூர" என்பது ஐங்குறு. ௯௮.
௪. இந்நூற்பக்கம் ௩௨௧: ௩, ௩௨௨: ௧-ஆம் குறிப்புக்கள் பார்க்க.
௫. குரவை யென்பது: (அ) "குரவை யென்பது கூறுங் காலைச், செய் தோர் செய்த காமமும் விறலு, மெய்த வுரைக்கு மியல்பிற் றென்ப" (ஆ) "குரவை யென்ப தெழுவர் மங்கையர், செந்நிலை மண்டலக்

(பிரதிபேதம்) * உடம்புந்திமிர்த்த, † வாய்வழியாலும், ‡ கடம்பமரத், || மகிட்சியுண்டாக வேண்டியதனிதலைச்செய்தற்கு, + தாக்காவிற்கும், தம்புல். × ஆய்ச்சியர்,

௩௮௫ கலித்தொகை ௧௦௩.

■

எ - து: அப்பொழுது ஆய்ச்சியர் தாம் மேயும் புலத்திலே ஏறு பரத்தலைச் செய்யும்படி செலுத்தின தம்முடைய அன்புமிக்க காதலருடைய கையைக் கோத்து இன்பமுற்றுக் குரவையாடுவர். எ - று.

௩௪ முயங்கிப் பொதிவே முயங்கிப் பொதிவே
(க)முலைவேதி னெற்றி முயங்கிப் பொதிவேங்
கொலையேறு சாடிய புண்ணையெங் கேளே

எ - து: எம்முடைய தோழீ ! கொலைத்தொழிலையுடைய ஏறுகள் சாடின புண்களைத் தழுவிக்கொண்டு பொதிந்துவிடக் கடவேம்; எங்ஙனந் தழுவுவ தென்று கேட்பாயாயின் முலையின் வெம்மையாலே ஆறம்படி ஒற்றித்தழுவிக் கொண்டு பொதிந்துவிடக் கடவேம். எ - று.

---

கடகக் கைகோத், தந்நிலைக் கொட்பின் ருட லாகும்" என்னும் (சிலப். பதி. எ. உரைமேற்.) சூத்திரங்களால் தலைவனது காமமும் வென்றியும் தோன்றக்கூறி எழுமங்கையர் கைகோத்துச் சுழன்று ஆடுவதென்றே அறியப்படுமாயினும், (சிலப். கூ: கஉ) "இருவகைக் கூத்தின்" என்பதன் விளக்க வுரையால், குரவையென்றது: காமமும் வென்றியும் பொருளாகக் குரவைச்செய்யுள் பாட்டாக எழுவரேனும் எண்மரேனும் ஒன்பதின்மரேனும் கைபிணைந்தாடுவது என்றுஅறியப் படுகின்றது. இவையும் (இ) "மாயவனுடன் றம்முனாடிய, வாலசரிதை நாடகங்களில், வேனெடுங்கட் பிஞ்ஞையோடாடிய குரவை யாடுதும்" (ஈ) "மாயவன்றன் முன்னினொடும் வரிவளைக்கைப் பின்னை யொடும், கோவலர்தஞ் சிறுமியர்கள் குழற்கோதை புறஞ்சோர, வாய்வளைச்சீர்க் கடிபெயர்த்திட் டசோதையார் தொழுதேத்தத், தாதெருமன் றத்தாடுங் குரவையோ தகவுடைத்தே" சிலப். கா. என வருபவைகளும் (உ) "இடவல" என்பதற்கு, 'ஆய்ச்சியரோடு குரவைகோத்தலால் அவர்க்கு

இடமும் வலமும் ஆயினோய்' பரி. கூ: அ௩ என்று எழுதியிருக்கும் உரையும் (ஊ) "களிதலென்பதற்கு தன்னைச் சேவிக்கு மகளிரொடு

குரவையாடிச் செறிதல்" (பதிற். ருஉ: கக) என்று எழுதியிருக்கும் உரையும் (எ) "பரதவர், வெப்புடைய மட்டுண்டு, தண்குரவைச் சீர் தூங்குந்து" (ஏ) "குறவர் மாக்கள், வாங்கமைப் பழுனிய தேறன் மகிழ்ந்து, வேங்கை முன்றிற் குரவை யயரும்" புறம். உச: ச - கூ, கஉக: க - கூ, என வருபவைகளும் இங்கே அறிதற்பாலன.

க. (அ) "புண்களைத் தடமுலை வேதுகொண் டொற்றியும்" கலிங்க.

கஎ. கஉ.(ஆ) "புண்வருத்தத் தன்னைநோக்கிக், கொம்மையையொற் றிடக்கொடுத்து" தனிப்பாடல். என்பவையும் (இ) "கொம்மை வரி முலை வெம்மை வேதுநீஇ" சிலப். உஅ: கக. (ஈ) "கொம்மை வரு முலை வெம்மையிற் றடைஇ" நெடுநல். ககூ. என்பவையும் இங்கே அறிதற்பாலன.

## நான்காவது முல்லை கூ. கூ அடி

கூஎ பல்லூழ் (க)தயிர்கடையத் தாஅய *புள்ளிமேற்
கொல்லேறு கொண்டான் குருதி மயக்குறப்
புல்லலெங் தோளிற் கணியோவெங் கேளே

எ - து: எம்முடைய தோழீ! பலமுறையாகத் தயிரைக் கடைகையி னாலே பாய்ந்த புள்ளிகளின்மேலே கொல்லுகின்ற ஏற்றைத் தழுவினவ னுடைய குருதி மயக்கமுறும்படி தழுவுதல் எம்முடைய தோளிற்கு அழகு மாத்திரையோ? அதிலுஞ்சிறந்ததொன்றன்றோ. எ - று.

௪0 ஆங்கு, போரேற் றருந்தலை யஞ்சலு மாய்ச்சியர்
காரிகைத் தோள்கா முறுதலு மிவ்விரண்டு
மோராங்குச் சேற லிலவோவெங் கேளே

எ - து: எம்முடைய தோழீ! ஆயர் பொருகின்ற ஏற்றினது சேருதற் கரிய†தலையை அஞ்சுதலும் ஆய்ச்சியர் எறுதழுவாதவருடைய காரிகைத்தோளை விரும்புதலுமாகிய இவ்விரண்டு நிலையும் இக்குடிப்பிறந்தவர்களுக்கு ஒன்றாக ‡செல்லுதல் ஈண்டு இல்லையோ. எ - று.

காரிகைத்தோளென்றது, இகழ்ச்சி; வடுப்படாததோளாதலின்.

௪௩ கொல்லேறு கொண்டா னிவள்கேள்வ னென்றூரார்
சொல்லுஞ்சொற் கேளா வளைபாறி யாம்வருந்த
செல்வமெங் கேள்வன் றருமோவெங் கேளே

எ - து: எம்முடைய தோழீ! இவளுடைய கணவன் கொல்லுகின்ற ஏற்றைத் தழுவினனென்று ||ஊரார் புகழ்ந்துசொல்லுகின்ற அச்சொல்லைக் கேட்டு மோரைவிற்று யாம் வருஞ் செல்வத்தை எங்கணவன் தருமோ. எ-று.

ஒகாரம், தெரிநிலை. என்றது, அவன் புறத்துப் + போய் இப்புகழ்கேட்

என்னைவிடானென அவன் தன்மேலுள்ள விருப்பங் கூறிற்று. இவை குரவைப்பாட்டு.

சசு ஆங்க

(உ)அருந்தலை யேற்றொடு காதலர்ப் பேணிச்
சுரும்பிமிர் கானநாம் பாடினம் பரவுது
மேற்றவர் புலங்கெடத் திறைகொண்டு
மாற்றாரைக் கடக்கவெம் மறங்கெழு கோவே

க. "தயிர்ப்புளி, மொய்த்த தோரணவார்" சீவக. சஉரு.
உ. அருந்தலை யென்பதற்கு இக்கும் இச்செய்யுள் சO-ஆம் அடியிற்குறித்த பொருளே கொள்க.

(பிரதிபேதம்) * புன்னியின்மேற், † தலையருந்ததும், ‡ சொல்லுதலினடுவில்லையோ, || வார் புகழ்ந்த, × போயப்புகழ்.



எ - து: எற்றையும் நங்காதலரையும் பாதுகாத்துச் சுரும்பினம் ஒலிக்கின்ற கானத்தை நாம் பாடினமாய்த் திருமாலைப் பரவுவேம்; அப்பயனாலே எம்முடைய மறம்பொருந்திய பாண்டியன் பகைவர்நிலமென்னும் பெயர் கெட்டுத் தன்னிலமென்னும் பெயர்பெறும்படி அவர்நாட்டைத் திறைகொண்டு பகைவரை வெல்வானாக என்றார். எ - று.

இந்நிலப்பண்பிருந்தவா*றென்னென்று கண்டோர் கூறிற்றாகக்கொள்க.

இது, கண்டார்க்குப் புதுமையாகிய மருட்கை பிறந்தது.

இது முன் ஒருகொச்சகமும் தனிச்சொல்லும் முட்டடியின்றிக் குறைவு சேர்ந்தாகிய சொற்சீரடிபெற்ற கொச்சகவெண்பாவும் நெடுவெண்பாட்டும் தனிச்சொல்லும் சொற்சீரடிவந்த கொச்சகமும் ஐஞ்சீரடுக்கிய குறுவெண்பாட்டிரண்டும் ஐஞ்சீரடுக்கிய நெடுவெண்பாட்டும் தனிச்சொல்லும் குறுவெண்பாட்டும் நான்கு தாழிசையும் தனிச்சொல்லும் சுரிதகமும் பெற்ற கொச்சகம்.

(கO௭.) எல்லா விஃதொன்று கூறு குறும்பிவர்
புல்லினத் தார்க்குங் குடஞ்சுட் டவர்க்குமெங்
கொல்லேறு கோடல் குறையெனக் கோவினந்தார்

பல்லேறு பெய்தார் தொழூஉ;
௫ தொழுவத்து;

சில்லைச், செவிமறைக் கொண்டவன் சென்னிக் குவிமுல்லைக்
கோட்டங்காழ் கோட்டி னெடுத்துக்கொண் டாட்டிய
வேழை யிரும்புகர் பொங்கவப் பூவந்தென்
கூழையுள் வீழ்ந்தன் றுமன்;
௧௦ அதனைக், கெடுத்தது பெற்றார்போற் கொண்டியான் முடித்தது
கேட்டன ளென்பவோ யாய்;
௧௨ கேட்டா லெவன்செய்ய வேண்டுமோ மற்றிகா
வவன்கண்ணி யன்றோ வது;
௧௪ பெய்போ தறியாத்தன் கூழையு ளேதிலான்
கைபுனை கண்ணி முடித்தாளென் றியாய்கேட்பிற்
செய்வதி லாகுமோ மற்று;
எல்லாத் தவறு மறும்;
ஓஓ அஃதறு மாறு;

---

(பிரதிபேதம்) * என்றுகண்டோர்கூற்றாகக்கொள்க.



௧௬ ஆயர் மகனாயி னாயமகள் நீயாயி
னின்வெய்ய னாயி னவன்வெய்யை நீயாயி
னின்னைநோ தக்கதோ வில்லைம னின்னெஞ்ச
மன்னைநெஞ் சாகப் பெறின்;
அன்னையோ;
௨௪ ஆயர் மகனையுங் காதலை கைம்மிக
ஞாயையு மஞ்சுதி யாயி னரிதரோ
நீயுற்ற நோய்க்கு மருந்து;

௨௭ மருந்தின் றியா னுற்ற துயராயி னெல்லா
வருந்துவே னல்லனோ யான்;

௨௯ வருந்தாதி;
மண்ணிமா சற்றநின் கூழையு ளேறவன்
கண்ணிதந் திட்ட தெனக்கேட்டுத் திண்ணிதாத்
தெய்வமால் காட்டிற் றிவட்கென நின்னையப்
பொய்யில் பொதுவற் கடைசூழ்ந்தார் தந்தையோ
டையன்மா ரெல்லா மொருங்கு.

இது தலைவி தோழிக்குஅறத்தோடுநிற்பத் தமர் *வரைவுடன்பட்டமை அவட்கு அவள் சொல்லியது.

இதன் பொருள்.

எல்லா விவ்வொன் றெ †கூறு குறும்பிவர்
(க)புல்லினத் தார்க்குங் (௨)குடஞ்சுட் டவர்க்குமெங்
(௩)கொல்லேறு கோடல் (௪)குறையெனக் கோவினத்தார்
பல்லேறு பெய்தார் தொழூஉ

---

க. (அ) "புல்லினத்தாயனீ யாயிற் குடஞ் சுட்டு, நல்லினத் தாயரெமர்" கலி. ககரு: அ - க. (ஆ) "புல்லினத்தாய மகன்" கலி. ககஙி: ௪.

௨. (அ) "நீரார் நிழல குடஞ்சுட் டினத்துள்ளும்" கலி. க0௯: ௩. (ஆ) "கடுஞ் சுவையா னன்கு, குடஞ்சுட் டினத்தாற் கொடு" பு - வெ. வெட்சிப். க அ.

௩. "கொல்வேறு கொண்டான்" கலி. க0௪: ௫௩.

௪. குறை யென்பதற்கு இன்றியமையாததென்று சேனாவரையரும் பரிமே லழகரும் முடிக்கப்படும் பொருளென்று புறநானூற்றுரையாசிரியரும் பொருள் கூறுவர்.

(பிரதிபேதம்) * வரைவுடம்பட்டமை.† கூறுக்குறும்பு.

எ - து: எடீ ! குரும்பிடத்தே பரந்திருக்கின்ற ஆட்டிடையர்க்கும் இப்பகு இன்னதனைக் குடம்பால் 'போதுமென்று கட்டுதலையுடைய பசு விடையர்க்கு மாகக் கோவினத்தையுடைய நஞ்சுற்றத்தார் எம்முடைய கொல்லுகின்ற ஏற்றைத் தழுவுதலே காரியமென்று தொழுவிலே ஏறுகளைப்புகுதவிட்டார். எ - று.

ரு தொழுவத்துச்

சில்லைச், (க)செவிமறைக் கொண்டவன் சென்னிக் குவிமுல்லைக்

(உ)கோட்டங்காழ் கோட்டி னெடுத்துக்கொண் டாட்டிய

வேலைமை யிரும்புகர் பொங்கவப் பூவக்தென்

கூழையுள் விழ்ந்தன்று மன்

எ - து: அத்தொழுவிடத்துச் சிலுமைக்குணத்தையுடைய செவிமறை யாயிருக்கின்ற ஏற்றைத் தழுவினவனுடைய சென்னியிற் கிடந்த குவிந்த (ங) முல்லைப் பூவாற் கட்டின வளையினை யுடைய கண்ணியைக் கொம்பிலே எடுத்துக்கொண்டு அலைத்த ஏழையாகிய பெரிய புகரேறு தான்ருகையினுலே அப்பூ வந்து என்மயிருக்குள்ளே மிகவும் வீழ்ந்தது. எ - று.

ஏழையென்முன் களவொழுக்கம் *வெளிப்படுதல் இறவாமற் கோட்டால் அலைத்தமைபற்றி.

கo அதனைக்,(ச)கெடுத்ததுபெற்றார்போற் கொண்டியான்முடித்தது கேட்டன ளென்பவோ யாய்

எ - து: அக்கண்ணியை, கெடுத்ததொன்று மீண்டு பெற்றாரைப்போல எடுத்துக்கொண்டு யான்முடித்ததன்மையை யாய் கேட்டாளென்று சொல்லு வர்களோ ? ஈதொரு வார்த்தையை எனக்கு விளங்கக் கூறுவாயென்முள். எ - று.

†இஃதொன்று கூறு என்னுஞ்சொல்லை என்பவோ என்பதன் பின்னே கூட்டிப் பொருள்கூறுக.

---

க. "செவிமறை நேர்மின்னு நுண்பொறி வெள்ளை" கலி. கOக: உஎ.

உ. (அ) "கோட்டங் கண்ணியுங் கொடுஞ் திரையாடையும்" புறம். உஎரு:

(ஆ) "கோட்டுப்பூச் சூடினும்" குறள். ககஙக.

௩. "தேன்சொரி முல்லைக்கண்ணிச் செந்துவராடையாயர்" சீவக. ௪அ௫.
௪. (அ)கெடுத்துப்படு நன்கல மெடுத்துக் கொண்டாங்கு" நற். ௧அ௨: ௫.
(ஆ) "பழந்தன மிழந்தன படைத்தவரை யொத்தாள்" கம்ப. உருக்காட்டு: ௬௫. (இ) "இழந்தனம் பெற்றவர்போ லிராக்கதர்க ளிரைத்தீண்டி யிழந்தநங்கள், பழம்பதியிற் குடிபுகுந்து" இராமா. வரைவெடுத்த. ௫௫.

(பிரதிபேதம்) * வெளிப்படுத்தல், † இதுவொன்று.

## நான்காவது முல்லை எ. ௬அ௬

௧௨ கேட்டா லெவன்செய்ய வேண்டுமோ மற்(க)றிகா
வவன்கண்ணி யன்றோ வது

எ - து: மேல் தோழி, அக்கண்ணி வரைந்துகோடல் தாழாத அவனுடைய கண்ணியன்றே? அதனைப் பின்னை யாய் கேட்டால் என்ன பரிகாரம் *யாஞ்செய்யவேண்டும்? அதற்கு ஒன்றும்வேண்டாவென்றாள். எ - று.
ஓ; அசை.

௧௪ (உ)பெய்போ தறியாத்தன் கூழையு ளேதிலான்
கைபுனை கண்ணி முடித்தாளென் றியாய்கேட்பிற்
செய்வதி லாகுமோ மற்று

எ - து: அதுகேட்ட தலைவி, (௩)முடிக்கும் பூ †இதுவென்றறியாத தன்னுடைய மயிரில் எதிலான் கையாலே புனைந்தகண்ணியை முடித்தாளென்று தாய்கேட்கில் அதற்குப் பின்னை அவள் வெகுளாமற்செய்வதொரு பரிகாரம் இல்லையாயிருக்குமோ என்றாள். எ - று.

மயிருக்கு (௪)மணந்தரும் பூ முடித்தல் வேண்டுமென்று அறியாதவள்.

௧௭ எல்லாத் தவறு மறும்

எ - து: அதுகேட்ட தோழி, இனி எல்லாத் தவறுகளும் நீங்குங்காணென்றாள். எ - று.

அவன் வரைவுணர்த்தமையின்.

௧அ ஓஒ அஃதறு மாறு

எ - து: அதுகேட்ட தலைவி, ஓஒஎன வியந்து அத்தவறு அறுமாறென்னையென வினவினள். எ - று.

க. இருத்தல் - தாழ்த்தல்.
உ. "புல்லினத் தாய மகன் சூடி வந்ததோர், முல்லை யொருகாழுங் கண்ணியு மெல்லியால், கூந்தலுட் பெய்து முடித்தேன்" கலி. கக௬. ௪ - ௯.
௩. முடிக்கும் பூ - சூடும்பூ; சூடாப்பூ, எருக்கு முருக்கு முதலியவை.
௪. மணத்தின் பொருட்டே பூக்களை மக்கள் அணிவரென்பது, "ஆண்க் கனக மணக்கரிற் பூமண மார்கொள்ளுவர்" என்பதனாலும் எருக்கு முதலியன மணமில்லாதன வென்பது, "தன்னியலு ரினும் விரை சார்க். தறியாத புல்லெருக்கும்" (வாட்போக்கிக். கக.) என்பது முதலியவற்றாலும் அறியலாகும்.

(பிரதிபேதம்) * செய்யவேணுமதற்கொன்றுவேண்டா, †ஈதென்றறியாதன்மையிரில்.

37



கக. ஆயர் மகனாயி னாயமக ணீயாயி
(க)நின்வெய்ய னாயி னவன்வெய்யை நீயாயி
னன்னைநோ தக்கதோ வில்லைம ‡னின்னெஞ்ச
மன்னநெஞ் சாகப் பெறின்

எ - து: அதுகேட்ட தோழி, அவன் ஆயருடையமகனாயிருப்பானாயின், நீ ஆய்ச்சாதியிற் பிறந்த மகளாயிருப்பையாயின்; (உ)†அவன் உன்னைவிரும்பியிருப்பானாயின், நீ அவனை விரும்பியிருப்பையாயின், தாய் மிகவும்!நோவத் ‡தக்கதொருகாரிய மில்லைகாணென்றாள்; அதுகேட்டதலைவி, அன்னையுடைய நெஞ்சு நின்னுடைய நெஞ்சாகப் பெறின் அவள் || நோவத்தக்கதோ இல்லை யென்றாள். எ - று.

உ௩. அன்னையோ

எ - து: அதுகேட்ட தோழி, இன்னும் ÷ அத்தன்மையையோவென்றாள். எ - று.

என்றது, யான் இத்துணையெல்லாம் கூறவும் கொள்ளாத தன்மையை யோ? எ - று.

உச (௩)ஆயர் மகனையுங் காதலை + கைம்மிக
(௪)ஞாயையு மஞ்சுதி யாயி னரிதரோ

நீயுற்ற நோய்க்கு மருந்து

க. "தண்ணிய சிறிய வெய்ய தழற்சொலாற் சாற்று கின்றான்" (சீவக. எசஎ:) என்புழி 'வெய்ய' என்பதற்கு, விரும்பப்படுதலின் வெய்ய வென்றாரென்று விசேடவுரையெழுதி, 'நின்வெய்யனாயின்' என்பதை மேற்கோள்காட்டினார். நச்.

உ. "தாம்வீழ்வார் தம்வீழப் பெற்றவர் பெற்றாரே, காமத்துக் காழில் கனி" குறள். ககசக.

ந. 'ஆயர் வேட்டுவர்' என்னும் (தொல். அகத். உக.) சூத்திரவுரையில், 'ஆயர் வேட்டுவரென்னும் இரண்டுபெயரே எடுத்தோதினாரேனும் ஒன்றென முடித்தலான் அந்நிலங்கட்குரிய ஏனைப் பெயர்களான் வருவனவுங் கொள்க' என்று கூறி, "ஆயர்மகளேயும்.........நோய்க்கு மருந்து" என்பதை மேற்கோள்காட்டுவர். நச்.

ஞாய் - நின்றாய்; (அ) "யாயு ஞாயும் யாரா கியரோ" (குறுந். சo.) என்பதனால் யாயென்பது தன்மைப் பெயரடியாகவும் ஞாயென்பது முன்னிலைப் பெயரடியாகவும் பிறந்த முறைப் பெயரென்று துணிய

(பிரதிபேதம்) * நின்னெஞ்சமென்னெஞ்சாகப், † இவன், ‡ தக்கதோர், || நோகத்தக்கதோ. + அத்தன்மையாயவென்றான், ⊹ மைமிக.

## நான்காவது முல்லை எ. 

எ - து: *மைம்மிக ஆயர்மகளையும் காதலித்தலையுடையையாய்ச் *மைம்மிகயாயையும் அஞ்சியிரா†நின்றாயாயின், இனி நீயுற்ற காமநோய்க்கும்மருந்து அரிதென்றாள். எ - று.

அரோ, அசை.

உஎ மருந்தின்றியா னுற்ற துயராயி னெல்லா
வருந்துமே வனல்லனோ யான்

எ - து: அதுகேட்ட தலைவி, எடா! யானுற்ற வருத்தத்திற்கு மருந்தில்லையாயின், இனி வருந்தியே விடுவேனல்லனோ என்றாள். எ - று.

உகூ வருந்தாதி

(க)மண்ணியா சற்று(உ)நின் கூழையுமோறவன்

கண்ணிதந் திட்ட தெனக்கேட்டுத் திண்ணிதாத்
தெய்வமால் காட்டிற் றிவட்கென நின்னைப்
பொய்யில் ‡பொதுவற் கடைசூழ்ந்தார் தந்தையோ
டையன்மா ரெல்லா மொருங்கு.

எ - து: அதுகேட்ட தோழீ, இனி வருந்தாதேகொள்; கழுவி அழுக்கற்ற நின்னுடைய மயிரிடத்தே எத அவன் கண்ணியைத் தந்ததென்று பிறர் சொல்லக் கேட்டு, தந்தையோடே தமையன்மாரெல்லாரும் சேரக் கூடியிருந்து, தெய்வமாகிய மால் இவளுக்கு இவனைத் || திண்ணிதாகக்கொண்டு வந்து காட்டிற்றென மகிழ்ந்து, நின்னை அந்தக் களவொழுக்கத்தைப் பிறர் அறியாமல் ஒழுகவல்ல பொதுவனுக்கு அடுத்தலைச்சூழ்ந்தார் காணென்றாள். எ - று.

லாகும். பதிப்பில் ஞகரம் யகரமாக மாறியதனால் ஞயமாறிக்கிடந்த இப்பகுதியைத் திருத்தி யின்புறுத்தியது தமிழ்நெறி விளக்கமே. யாயென்பது தன்மையொடடுத்த முறைப்பெயரென்பதுமட்டும் தொல்காப்பிய உரைகளிற் குறிக்கப்பட்டுள்ளது; ஞாயென்பது முன்னிலையொடடுத்த முறைப்பெயராதலை (அ) "ஞாயர் பயிற்ற" (இ) "ஞாயர்பா லுண்டி" (ஈ) "ஞாயர்மாட்டைப்பால்" கலி. அ௬: கஉ; அ௫: உஅ, ௬௪. என இந்நூலிற் பலவிடத்தும் வருதலும் வலியுறுத்தும். இவைஇவ்வரம்புகடந்துதாயென்னும்பொருளிலும்வருதலுண்டு.

க. "மாசற மண்ணுற்ற மணியேசு மிருங் கூந்தல்" கலி. எ௭: கக. என்பதும் அதன் குறிப்புக்களும் பார்க்க.

உ. "அவன்கண்ணி நீபுனைந்தா யாயி னமரு, மவன்க ணடைசூழ்ந்தார் நின்னை" கலி. ககூ: கஎ - கஅ.

(பிரதிபேதம்) * கைமிக, † நின்முய் இனிச், ‡ பொதுயர்க்குடை, || திண்ணியதாக.



இதனால், தலைவிக்குப் புணர்ச்சியுவகை பிறந்தது.

இது கொச்சகவெண்பாவும் தனிச்சொல்லும் ஐஞ்சீரடுக்கிய கொச்சக *வெண்பாவும் ஐஞ்சீரடுக்கிய குறவெண்பாட்டும் ஈரடியாலென்றும் கொச்

சகவெண்பாவும் †முச்சீரடியானென்றும் இருசீரடியானென்றும் செப்பவெண் பாட்டும் தனிச்சொல்லும் குறுவெண்பாட்டும் கொச்சகவெண்பாவும் தனிச் சொல்லும் சுரிதகமும்பெற்ற கொச்சகக்கலி. (எ)

(கஏஅ) (க)இகல்வேந்தன் சேனை யிறுத்தவாய் போல
அகலல்குறுேள் கண்ணென மூவழிப் பெருகி
நுதலடி நுசுப்பென மூவழிச் சிறுகிக்
கவல்யாற் காமனும் படைவிடு வனப்பினோ
டகலாங்க ணளைமாறி யலமந்து பெயருங்கா
லைகைவல்லேன் யானென்றென் னுயிரோடு படைதொட்ட
இகலாட்டி நின்னை யெவன்பிழைத்தே னெல்லாயான்;
அஃதவல மன்று மன;
கூ ஆய மொமரானு லாய்த்தியேம் யாமிகக்
காயாம்பூங் கண்ணிக் கருந்துவ ராடையை
மேயு நிரைமுன்னர்க் கோலூன்றி நின்றாயோ
ராயனை யல்லை பிறவோ வமரருண்
ஞாயிற்றுப் புத்தேண் மகன்;
கச அதனுன் வாய்வாளேன்;
முல்லை முகையு முருந்து நிரைத்தன்ன
பல்லும் பணைத்தோளும் பேரம ருண்கண்ணு
நல்லேன்யா னென்று நலத்தகை நம்பிய
சொல்லாட்டி நின்னொடு சொல்லாற்று கிற்பார்யார்;
கசு சொல்லாதி;
நின்னைத் தகைத்தனே னல்லல்காண் மன்;
உக மண்டாத கூறி மழருமுக் காகின்றே
கண்ட பொழுதே கடவரைப் போலநீ

---

†. புணர்த லென்னு முரிப்பொருள் வந்த முல்லைப்பாட்டுக்கு இச் செய்யுள் மேற்கோள்; நாற்கவி. கு. உஇ.

(பிரதிபேதம்) * வெண்பாட்டு மீரடியாமென்றுங்கொச்சகவெண்பாவுமைஞ்சீரடியாமென்றும்செப்பெண், † ஐஞ்சீரடியாமென்றும் இரு.

## நான்காவது முல்லை அ. 

பண்டம் வினைய படிற்றாற் றொடீஇயபிற்
கொண்ட தெவனெல்லா யான் ;
கொண்டது;
௪௬ அளைமாறிப் பெயர்தருவா யறிதியோ வஞ்ஞான்று
தளவமலர் ததைந்ததோர் கானச்சிற் றாற்றய
லிளமாங்காய் போழ்ந்தன்ன கண்ணினா லென்னெஞ்சங்
களமாக்கொண் டாண்டாயோர் கள்வியை யல்லையோ; [கும்;
நின்னெஞ்சங், களமாக்கொண் டியாமாள வெமக்கெவ னெளிதா
௫௧ புனத்துளா னெந்தைக்குப் புகாவுய்த்துக் கொடுப்பதோ
வினத்துளா னென்னைக்குக் கலத்தொடு செல்வதோ
தினைக்காலு ளியாய்விட்ட கன்றுமேய்க் கிற்பதோ;
அனைத்தாக;
௫௫ வெண்ணெய்த் தெழிகேட்கு மண்மையாற் சேய்த்தன்றி
யண்ணணித் தூராயி னன்பகற் போழ்தாயிற்
கண்ணேக் கொழிக்குங் கவின்பெறு பெண்ணீர்மை
மயிலெருத்து வண்ணத்து மாயோய்மற் றின்னா
வெயிலொ டெவன்விரைந்து சேறி யுதுக்காண்
பிடிதுஞ்சு வன்ன வறைமேல நுங்கின்
றடிகண் புரையுங் குறுஞ்சுனை யாடிப்
பனிப்பூந் தளவொடு முல்லை பறித்துத்
தனிக்காயாந் தண்பொழி லெம்மொடு வைகிப்
பனிப்படச் செல்வாய்நும் மூர்க்கு ;
இனிச்செல்வேம்யாம்;

சசு மாமருண் டன்ன மழைக்கட்சிற் றுய்த்தியர்
நீமருட்டுஞ் சொற்கண் மருள்வார்க் குரையவை
யாமுனியா வேறுபோல் வைகற் பதின்மரைக்
காமுற்றுச் செல்வாயோ கட்குத்திக் கள்வனே
நீயெவன் செய்தி பிறர்க்கு;
யாமெவன் செய்து நினக்கு;
௩௨ கொலையுண்கட் கூரெயிற்றுக் கொய்தளிர் மேனி
யினைவனப்பின் மாயோய் நின்னிற் சிறந்தார்
நிலவுலகத் தின்மை தெளிநீ வருதி

௩௧௪ கலித்தொகை ௬0 அ.

மலையொடு மார்பமைந்த செல்வ னடிமைத்
தலையினுற் றொட்டுற்றேன் சூள் ;
௩௭ ஆங்குணரார் நேர்ப வதுபொய்ப்பாய் நீயாயிற்
றேங்கொள் பொருப்பன் சிறுகுடி யெம்மாயர்
வேந்தூட் டரவத்து நின்பெண்டிர் காணமற்
காஞ்சித்தா துக்கன்ன தாதெரு மன்றத்துத்
தூங்குந் குரவையு ணின்பெண்டிர் கேளாமை
யாம்பற் குழலாற் பயிர்பயி ரெப்படப்பைக்
காஞ்சிக்கீழ்ச் செய்தேங் குறி.

இஃது "அடியோர் பாங்கினும் வினைவலர் பாங்கினும் கடிவரை யில புறத் தென்மனார் புலவர்"(க)என்பதனுற் பிறர் ஏவிய தொழிலேச்செய்தல் வல்ல அகப்புறத் தலைவனும் தலைவியும் முன்னொருகாற் கூடிப் பின்னர் அவனெதிர்ப்பட்டுழி அவன்வயிற் பரத்தைமையால் ஊடிக் குறிநேர்ந்தது.

இதன் பொருள்.

இகல்வேந்தன் (௨) சேனை யிறுத்தவாய் போல
(௩)வகலல்குறோள் கண்ணென மூவழிப் பெருகி
நுதலடி நுசுப்பென மூவழிச் சிறுகிக்
கவலையாற்(௪) காமனும் ‡படைவிடு வனப்பினோ
டகலாங்க ணளையாடி ||யலமந்து பெயருங்கா
னகைவல்லேன் யானென்றென் னுயிரோடு படைதொட்ட
விகலாட்டி நின்னை யெவன்பிழைத்தே னெல்லாயான்

---

க. தொல். அகத். சூ. ௨௩.

௨. 'சேனை யிறுத்தவாய்போல' என்பது இறுத்தலென்பது வந்து விடுத லென்னும் பொருளில் வருதற்கு மேற்கோள்; சிலப்: ௪: ௪௨. அடியார்க்கு நல்.

௩. "பெருந்தோண் மடந்தை" (சிலப். ௩: ௬.) என்பதற்கு, மகளிர்க்குத் தோள்பெருக்கை இலக்கணமென்று விசேடவுரை எழுதி 'அகலல்கு றோள் கண்ணென மூவழிப் பெருகி' என்பதை மேற்கோள்காட்டுவர் உரைகாரரிருவரும்,

௪. (அ) "உருவி லாள னொருபெருஞ் சிலையொடு விரைமலர் வாளி வெறுநிலத் தெறிய" சிலப். ௩௦: ௨௫ - ௨௬. (ஆ) "படையிட்டு நடுங் குங் காமன்" மணி. ௩:௨௩.எனவருபவையும் இங்கேநோக்கற்பாலன.

(பிரதிபேதம்) ✻ வினவர் பாங்கினும், † வல்லாதவகப், ‡ படையிடுவனப். || அலம்வந்து.

நான்காவது முல்லை அ. ௬௩௫

எ-து: அகன்றவல்குல் தோள் கண் என்று சொன்ன மூன்றிடமும் பெருத்து நுதல் அடி இடை என்று சொன்ன மூன்றிடமுஞ் சிறுத்துக் காமனும் பிறர்க்கு மனக்கவலை செய்தலோடே தன் அம்பை ✻விடுதற்குக் காரணமான அழகோடே(க) மாரிடத்தே † அலமந்து மோரைவிற்று நீ மீளுங் காலத்தே யான்நகுதலைவல்லேனென்று நக்கு, பின்னர் இகலிடத்தே சென்று விட்ட பாண்டியன்சேனை உயிரோடு போம்படி படை தொடு மாறுபோல என் னுயிரோடு போம்படி படையைத்,தொட்ட மாறுபாட்டையுடையவளே ! எடி !

யான் நின்னை எப்படித் தப்பினேன் கூறென்றான். எ - று.

இகல்வாய்பிறத்த வேர்தன்சேனைபோல என மாறுக.

அ ‡அஃதிவண் அன்று அன

எ - து: அதுகேட்ட தலைவி, அனைமாறித் திரிகின்றது மிகவும் எங்குலத்திற்குத் தீதன்று. எ - று.

க (உ)ஆயரெமாயினல் ஆய்த்திய யாமிகக்
காயாம்பூங் கண்ணித் (ங)தநறுவ ராடையை
(ச)மேயு நிரைமுன்னர்க் (ரு)கோலூன்றி நின்றாயோ
ராயனை ||யல்லை பிறவோ வமரருண்
ஞாயிற் றாப் புத்தேன் மகன்

எ - து: ×என்சுற்றத்தார் ஆயராயினல், யாங்கள் மிகவும் ஆய்த்தியரேம்; அதுகிடக்க, நீதான் காயாம்பூவாற்செய்த கண்ணியையும் துவருட்டின கரிய ஆடையையும் ÷முடையாய்; மேய்கின்ற நிரைகளுக்குமுன்னே ஒருகோலை

க. அகலாங்கள் - அகன்ற மாரிடத்தே. மது. ௩உஎ.
உ. பார்ப்பார் அரசர் இடையர் குறவர்முதலியவர்பால்ஒருவரையொருவர் ஒவ்வாமற் கிடக்குஞ் சாதியியல்பாகிய தன்மை யென்னு மெய்ப்பாட்டின் இடையர் தன்மைக்கு, "ஆயரெமாயினல்.........புத்தேள் மகன்" (ஒரு பிரதியில் "காயாம்பூங்......ஆயனையல்லை") என்பது மேற்கோள்; தொல். மெய்ப்பாட்டியல். சூ. கஉ. இளம்.
ங. "அந்துவ ராடைப் பொதுவனோடு" (கலி. கoஉ: ௩எ.) என்பதும் அதன் குறிப்பும் பார்க்க.
ச. (அ) "மேயுநிரை.........மகன்" என்பது தலைவன் வினைவல பாங்கினன் என்பதற்கும் தொல். அகத். சூ. உ௩. ௩ச; (ஆ) பிறவென்பது அசைநிலையாய்வருதற்கும், நன். இடை. சூ. உஉ. மயிலை. விருத்தி. இரா. மேற்கோள்.
ரு. "தண்கோ லூன்றிய தனிநிலை யிடையன்" அகம். உஎச: அ.

(பிரதிபேதம்) * விடுத்தற்கு. † அலம்வந்து, ‡ அஃதுதவல, || அல்லபிறவோ. × சுற்றத்தார், ÷ உடையையாய், உடையாய்.

லன்றி அர்கிரை மேய்த்து நின்ற நீ இடையரூர் தன்மையை உடையையல்லே; வேறாகத் தேவர்களுள் ஒருவருகிய தெய்வத்தின் மகனோ? கூறென்றாள். எ - று.

மகன், கன்னன்; *இஃது இகழ்ச்சி. ஆய்த்தியேம் யாமாயின் என்றும் பாடம்.

கச அதனுன் வாய்வாளேன்

(ந)முல்லை முகையு முருந்து நிரைத்தன்ன
பல்லும் பணைத்தோளும் பேரம ருண்கண்ணு
நல்லேன்யா னென்று நலத்தகை நப்பிய
சொல்லாட்டி நின்னெடு †சொல்லாற்று கிற்பார்யார்

எ - து: அதுகேட்டவன் நீ இங்ஙனம் ‡ இகழ்ந்துகூறுதலால் நின்னெடு ஒன்றுங் ||கூறேன்; முல்லையினது முகையையும் (உ)பீலிமுருந்தையும் நிரைத்தாலொத்த பல்லும் (ந)பணைபோலுந் தோளும் பெரிய அமர்செய்யும் உண்கண்ணும் ÷யான் நல்லேனென்று, நின்னுடைய தகுதியைப் பிறர் நச்சுத லன்றி நீதானே நச்சியிருக்கின்ற ×சொல்லையுடையவளே! நின்னேடு மறுமாற்றஞ் சொல்லுதலை யார் கிகழ்த்துவாரென்றான். எ - று.

[முல்லை](பல்லு)முதலியன, சினைவினை முதலொடு முடிந்தது. †ஆற்றுகிற்பார். வினைத்திரிசொல்.

கரு சொல்லாதி

எ - து: அதுகேட்டவள், அங்ஙனமாயின் ஒன்றுஞ் சொல்லாதே தொலைவென்றாள், எ - று.

உ0 நின்னைத் தகைத்தனேன்

எ - து: அதுகேட்டவன், **நின்னைப் போகாமல் விலக்கினேனென்றான். எ - று.

அல்லல் காண்மன்

எ - து: அதுகேட்டவன், இவன் நம்மிடத்து நிகழ்த்துகின்றதோர் வருத்தத்தைப் பாராயென நெஞ்சொடு கூறினன். எ - று.

---

க. (அ)உருவென்னு மெய்ப்பாட்டிற்கு, "முல்லை முகையு............யார்" என்பது மேற்கோள்; தொல். மெய்ப். சூ. உ0 பேர். (ஆ) "முல்லை முகையு முருந்துநிரைத்தன்ன, பல்லவர்" (கலி. கO௩: க-எ) என்பதும்

அதன்குறிப்பும் இங்கே ஒப்புநோக்கற்பாலன.

உ. பீலி - மயிலிறகு. ௩. பிணை - மூங்கில்.

(பிரதிபேதம்) *இறைகட்டின, †சொல்லாற்றிற்பார், ‡ மகிழ்ந்து. || கூறேனென்றான். என்ற முல்லை, ÷ யானல்லனென்று, × சொல்லுமுடையவனே, ✢ 'குற்றிற்பார், **போகாமல் இினவிலக்கி னென்னென்றான்.

## நான்காவது முல்லை அ. ௩௯௯

உக (க)மண்டாத கூறி மழஇீழக் (உ)*காகின்றே
கண்ட பொழுதே கடவரைப் போலநீ
பண்டம் வினைய படிற்றுற் றொடைஇயரிற்
கொண்ட தெவனெல்லா யான்

எ - து: கூறி, பின்னும் மனம் மயங்குகலையுடைய குழவிப்பருவத்துக்கு † ஆகின்று; என்மனம் மிக்கு விரும்பிச் ‡செல்லாத சொற்களைச் சொல்லி என்னைக் கண்டபொழுதே (௩)தனிசு கடவாரிடத்துக் கொடுத்தவர்கள் ||அவ வர்களுக்குள்ள பண்டங்களை உசாவுமாறுபோல நீயும் என்னிடத்துள்ள பண்டங்களை இவை யாவை என்று வினவின வஞ்சனையாலே எனது வட்டியைப் பிடித்தற்கு எடா! நின்னிடத்து யாம் வாங்கிக்கொண்ட பொருள் எப்பொருள் என்றாள்? எ - று.

(ச)குழக்கு, "தாங்கக்கு ×வண்ணகக்கு" (ரு)என்றாற்போல் நின்றது.

உரு கொண்டது

எ - து: அதுகேட்ட(வன்) நீ என்னிடத்து வாங்கிக்கொண்ட பொருள் கூறக்கேள். எ - று.

உக அளைமாறிப் பெயர்தருவா யறிதியோ வஞ்ஞான்று
÷தளவமலர் ததைந்ததோர் கானச்சிற் றாற்றய
விளமாங்காய் போழ்ந்தன்ன கண்ணினா லென்னெஞ்சங்
களமாக்கொண் டாண்டாயோர் கள்வியை யல்லையோ [கும்
நின்னெஞ்சங், களமாக்கொண் டியாமாள லெமக்கெவ னெளிதா

---

க. "மண்டாத சொல்லி" கலி. ௬0: உ.

உ. கிடைத்த கையெழுத்துப்பிரதிகளுள் ஒன்றிலேனும்'ஆகின்றேன்' என னகரவீறான பாடம் இல்லை. முன்பதிப்பில் 'ஆகின்றேன்' என்று

மூலமும் 'ஆகா நின்றேன்' என்று உரையும் உள்ளன. அவ்வாறு படிக்கும்படி ஏடுகளிலிருப்பினும் அவற்றை "ஆகின்றேன்" எனவும் 'ஆகா நின்று என்' எனவும் கொள்ளலாமென்று தோற்றுகிறது.

௩. தனிச — கடன். பழ. ௬௮.

௪. குழவென்பது இளமைப் பொருட்டென்பதை அறிஞர் பலரும் அறிவர். இங்கே குழக்கென்பதற்கு எடுத்துக்காட்டியிருக்கும் மேற்கோளை நோக்க, அச்சொல் குழமென மகர வீறாகவும் இருக்குமோவென்று ஐயமுண்டாகிறது.

௫. "தாங்கக்கும் வண்ணகக்கும்" என்பது: யா. கா. ஒழி. ௭.

(பிரதிபேதம்) * ஆக்கின்றகண்ட, † ஆகாநின்றென்மனம், ‡ சொல்லாதசொற், || அவர்களுக்குள்ள. × வண்ணக்குவென்றுற், ┼ தனமலர்.





௩௧ (௧)புனத்துளா னெந்தைக்குப் (௨)புகாவுய்த்துக் கொடுப்பதோ
இனத்துளா *னென்னைக்குக் கலத்தொடு செல்வதோ
தினைக்காலுள் †யாய்விட்ட கன்றுமேய்க் கிற்பதோ

எ - து: அந்நாளிலே மோர்விற்று மீள்கின்ற நீ செம்முல்லை நெருங்கின தோர் கானத்திடத்துச் ‡சிறிய யாற்றினயலிடத்தே (௩)||இளையமாவடுவைப் பிளந்தாலொத்த கண்ணாலே எனக்குரித்தாகிய என்னெஞ்சை நினக்கு இருப்பிடமாக வாங்கிக்கொண்டு அடிமைத் தொழில்கொண்டாய்; ஒரு கள்வியையல்லையோ? அது நீயறியாயோ என்றான்; அது கேட்டவள், நின்னெஞ்சை எனக்குஇருப்பிடமாக ┼வாங்கிச்சேர்ந்துயாம் அடிமைத்தொழில்கொள்ளுதல் எமக்கு எங்ஙனம் எளிதாயிருக்கும்? நின்னெஞ்சு புனத்திடத்தானாகிய(௪)என் தமையனுக்கு உணவைக்கொண்டுசென்று கொடுக்குமதொன்றோ? பசுத்திரளிடத்தானாகிய என் தந்தைக்குக் கறவைக்கலங்கொண்டு ×செல்லுமதொன்றோ? தினை அரிந்த ┼ தாளிடத்தே, யாய் மேயவிட்ட கன்று மேய்க்குமதொன்றோ? அன்றே! ஆதலால் அரிதேகாணென்றாள். எ - று.

௩௪ அனைத்தாக

எ - து: அதுகேட்டவன், இனி நீ எவின தொழில்களை என்னெஞ்சு

செய்வதொன்றாக என்றான். எ - று.

---

க. தலைவி வினைவல பாங்கின ளென்பதற்கு "புனத்துளா............ மேய்க்கிற்பதோ" என்பதை, (தொல். அகத். சூ. உங.) மேற்கோள் காட்டி, இஃது 'எமரேவலான் யாம் செய்வதன்றி யாங்களேவ நின் னெஞ்சம் இத்தொழில்கள் செய்கின்றனவில்லை யென்றலின், வினை வல பாங்கினளாய தலைவி கூற்றாயிற்று' என விளக்கினர். நச்.

உ. புகா-உணவு; தொல். கள. சூ. கக: க. அற. ககக, கஉஉ.

ங. (அ) "வடிவிடை போழ்ந்தகன்ற கண்ணாய்" கார். க. (ஆ) "வடிப் போழ்ந் தன்ன வாளரிநெடுங்கண்" (இ) "வடிப்போழ்ந் தன்ன வா ளரித் தடங்கண்" பெருங். (க) சக: உஉங; (உ) ச: கஉ. என்பவையும் கலி. சச: உக-ஆம் அடியும் அதன் குறிப்பும் ஒப்புநோக்கற்பாலன.

ச. என்னை யென்பதற்கு என் தமையனென்ற பொருளும் எந்தை யென்பதற்கு என் தகப்பனென்ற பொருளுமே காணப்படுவதனால், இங்கே எதோ ஒரு முறைபற்றி அச்சொற்களை மாற்றி இயைத்தா ரென்று தோற்றுகிறது. அன்றி எந்தையென்பதற்கு என் தமைய னென்ற பொருளு முண்டெனின் பிரதிபேதத்தால் ஆற்றொழுக் காகவே பொருள் அமையும்.

(பிரதிபேதம்) *எந்தைக்கு. † யாம்விட்ட. ‡ சிற்றாற்ற, சிற்றியாற்ற. || இனமாவமேவ, ÷ வாங்கிக்கொண்டு அடிமைத், × செல்லுமதொன்றே, + தானிடத்தேயா யா மேயவிட்ட.

௩௫ வெண்ணெய்த் *தெழிகேட்கு மண்மையாற் சேய்த்தன்றி
(௧)யண்ணணித் தூராயி னன்பகற் † போழ்தாயிற்
(௨)கண்ணேனக் கொழிக்குங் கவின்பெறு பெண்ணீர்மை
மயிலெருத்து வண்ணத்து மாயோய்மற் றின்ன
வெயிலொ டெவன்விரைந்து சேறி (௩)யுதுக்காண்
(௪) ‡பிடிதுஞ்சு வன்ன வறைமேல நுங்கின்
றடிகண் புரையுங் (௫)குறுஞ்சுனை யாடிப்
(௭)பனிப்பூந் (௮)தளவொடு முல்லை பறித்துத்
தனிக்காயாந் தண்பொழி லெம்மொடு வைகிப்
பனிப்படச் செல்வாய்நும் மூர்க்கு

௧. "இப்புனத்தின் மருங்கண் ணனையதண் டேரவந்த நீங்கொரு வான் கலையே" (கோவையார். ௫௩.) என்பதன் உரையில், 'மருங்கென்பது மருங்கணென ஈறுதிரிந்துநின்றது. அணித்தாகவென்னும் பொருட்டாய அண், அண்ணனக் குறைந்து நின்ற தெனினு மமையும்' எனப் பேராசிரியர் எழுதியிருப்பதும் தொல்காப்பியவுரையில் அண்ணணி யென்பது அடையடுத்ததென்ற நச்சினார்க்கினியரெழுதியிருத்தலும் இங்கே அறியத்தக்கன.

௨. (அ) "கண்கவர் காரிகை"... .....(ஆ) "கண்டவர் மனமுங் கண்ணுங் கவர்ந்திட வனப்பு வாய்ந்த, வொண்டொடி" நைடத. பேர்புரி. ௫. என்பவையும் (இ) "வாங்கெழி னல்லாரும்" (கலி. ௧0௪: ௩௧.) என்பதற்கு, 'நோக்கினோர் கண்ணைவாங்கிக்கொள்ளும் அழகினையுடைய ஆய்ச்சியரும்' என்றெழுதியிருக்கு முரையும் இங்கே நோக்கற்பாலன.

௩. "உதுக்காண்" என்பது சுட்டு முதல் உகர ஈறுகிய சொல்லின்முன் வல்லெழுத்து மிகு வந்ததற்கு மேற்கோள்; தொல். உயிர். ௫. ௩௧. நச். குறுந். ௧௧௧; ஐங்குறு. ௧0௧, ௪௫௩; புறம். ௩0௭: ௩.

௪. "சுரும்புணக் களித்த புகர்முக வேழ, மிரும்பிணர்த் துறுகற் பிடி செத்துத் தழூஉம், குன்று" ஐங்குறுநூறு. ௨௩௯.

௫. "குறுஞ்சுனைப் புறவம்" காஞ்சி. திருநாட்டுப். ௯௪.

௬. "பனிவளர் தளவின் சிரல்வாய்ச் செம்முகை"

௭. (அ) "தண்டுளிக் கேற்ற பைங்கொடி முல்லை, முகைதலை திறந்த நாற்றம் புதன்மிசைப், பூமலர் தளவமொடு தேங்கமழ்பு கஞல" (ஆ) "முல்லை, போதவிழ் தளவமொடு" (இ) "நெடுங்கொடி முல்லையொடு தளவமலர் சுதிப" (ஈ) "கல்மேலர் புறவிற் கவினிப் புதன்மிசை, முல்லை தளவொடு போதவிழ" (உ) "வெருகு வேட்பச் சிரிப்பனபோன்ம்

(பிரதிபேதம்) * தொழில்கேட்கு, † பொழுதாயின், ‡ பிடித்தஞ்சு வன்னவறைமேலுள்ளின்



எ - து: என்று, பின்னர்க் கடைந்தமோரைக் கையால் *அலைக்கும் ஓசைகேட்கும் அணுமையினுலே தூரம் அன்றாய் ஊர் மிகவும் அணித்தாயின், பொழுது உச்சியம் பொழுதாயின், கண் வேறொரு வடிவை நோக்குதலைத் தவிர்க்கும் அழகைப்பெறுகின்ற பெண்டன்மையினையும் மயிலினுடைய கழுத்தினுடைய நிறத்தையுமுடையமாயோளே! இப்படி வெய்தாகிய பொழுதோடே விரைந்து செல்லாநின்றாய்; இதனால் மற்றுப் பெறும்பயனென்? காயாம் பூவையுடைய குளிர்ந்த பொழிலே அவ்விடத்தே பாராய்; அவ்விடத்திற் பிடி துஞ்சுவனவற்றையொத்த †பாறையிடத்தனவாகிய (கூ) துங்கினது வெட்டின கண்ணையொக்கும் (உ) நீர் நிறைந்த அணிமையசுனைகளிலே ஆடித் ‡குளிர்ச்சியையுடைத்தாகியபூக்களையுடைய (ங) செம்முல்லைமலரோடே முல்லைமலரையும் பறித்துத் தனிமைய அப்பொழிலிடத்தே எம்முடனே தங்கிப் பொழுது குளிர்ச்சியுண்டாக நம்மூர்க்குச் செல்வாயென்றான். எ - று.

௨௰ இனிச் ||செல்வேம்யாம்

எ - து: அதுகேட்டவள், நீ போகவேண்டா என்கின்றாயாதலின் யாம் போவேமென ஊடல்தோன்றக் கூறினள். எ - று.

௨௪ (ச) மாமருண் டன்ன மழைக்கட்சிற் றுப்பந்தியர்
நீமருட்டுஞ் சொற்கண் மருள்வார்க் குரையவை
யாமுனியா வேறுபோல் வைகற் பதின்மரைக்
காமுற்றுச் செல்வாபோர் கட்குத்திக் கள்வனே

---

முகைத்த முல்லை............குறுகிக் கூறியிறு கூந்தியர்கட் கொண்ட

கொடித் தளவமே" என்பவற்றால் தளவமும் முல்லையும் வேறுவேறு ஆதலை அறிக.

க. "நுங்கின் தடிகண்ணிலுள்ள நீர் சுனையின் நீருக்கும் அதன் நீர்நிறைவு சுனையின் நீர் நிறைவுக்கும் உவமை.

உ. "அகளத்தன்ன நிறைசுனைப் புறவின்" மலை. கO௫.

௩. *தளவம் செம்முல்லைக்குப் பெயராய்வருதலை (அ) "சிரல்வா யுற்ற தளவின்" (ஆ) "புதன்மிசைத் தளவி னிதன்முட் செந்நனை" (இ) "சிரல்வாய் வனப்பின வாகி நிரலொப்ப, வீர்ந்தண்டளவந் தகைத்தன" என்பவற்றாலும் இந்நூற்பக்கம் ௬௧௧: ௯; ௬௪௪: எ (௭.) குறிப்புக்களாலும் அறிக. இது முல்லையென்னும் பொருளிலும் வரும்.

௪. தலைவி குறிப்பானன்றிக் கூற்றால் வழிபாடு மறுத்தற்கு, "மாமருண் டன்ன... ...ளக்கு" என்பது மேற்கோள்; தொல். களவி. சூ. உ௦. இளம்.

(பிரதிபேதம்) *அலைக்கும் நுரைஒலிகேட்டும். † பாறைப்படத்தக்கஅயாவே. ‡ குளிச்சி, செல்வேம், எ-து: அது.



நீயெவன் செய்தி பிறர்க்கு
யாமெவன் செய்தும் நினக்கு

எ - து: கூறி, பின்னும் *மான் மருண்டு நோக்கினொலொத்த குளிர்ச்சியை யுடைய கண்ணையுடைய சிறியஆய்ந்தியராய் நீமயக்கிக்கூறுஞ் சொல்லிடத்தே மயங்குவார்க்கு அம்மொழிகளைக் கூறு; யான் அதற்கு மருளேன்; நீதான் பல பசுக்களையும் தெவிட்டாமற் கூடும் ஏறுபோல நாடோறும் பதின்மரை ஒருவரைப்போலே விருப்பமுற்று அவர்மேற் செல்வாய்; ஒரு கட்குறியாகிய கள்வன்; ஆதலால் நீ பிறர்க்கு என்ன நன்மை செய்வாய்? இத்தன்மையை யுடைய நினக்கு யாம் என்ன நன்மை செய்வேமென்றாள். எ - று.

கட்குறிக்கள்வன் என்றது, (௧)†"விழித்திருக்கபிண்டையைக்கொள்வான்" என்னும் பழமொழி. ௬, அசை. நீ அம்மகளிரையும் அவர் கருத்து முற்ற நுகராது அவர்வருந்தநீங்குவையென்பதுதோன்ற 'நீயெவன்செய்தி' என்றாள். 'யாமெவன் செய்தும்' என்றது எம்மிடத்து நீங்காத அன்புடையையல்லை என்பது தோன்ற நின்றது.

௯உ கொலையுண்கட் கூரெயிற்றுங் கொடிநுளிர் பேடி

பிணைவளைப்பின் மாமேயாய் நின்னிற் சிறந்தார்
நிலவுலகத் தின்மை தெளிநீ வருதி
மலையொடு மார்பமைந்த செல்வ னடியைத்
(உ)தலையினாற் றொட்டுற்றேன் சூள்

எ - து: அதுகேட்டவன், கொலைத்தொழிலையுடைய கண்ணினையும் கூரிய எயிற்றினையும் கொய்யப்படுந் தளிர்போலும் நிறத்தினையும் கண்டார் வருந்தும் அழகினையுமுடைய மாயோளே! யான் விரும்புதற்கு உரியாராய் நின்னிற்காட்டிற் சிறந்தமகளிர் மண்ணுலகத்தில் இல்லாமையை நீதானே தெளிவாய்; இனி நீ நினைந்த அவளாக நின்றென்று யான் தெளிவித்தற்கு நீ அணுக வருவாய்; மார்பு மலையோடு ஒப்பமைந்த திருமாலடியைத் தலையி னாலே வணங்கிக் கையினாற் றொட்டுச் சூளுற்றேனென்றான். எ - று.

நீஎ ‡ஆங்குணரார் நேர்ப வதுபொய்ப்பாய் நீயாயிற்
(௩)றேங்கொள் பொருநப்பன் சிறுகுடி யெம்மாய்

க. 'விழித்திருக்கச்[சே](செய்தே) விழியைக் கொண்டுபோய் விடுவான் என ஒருவன் திறமை மிகுதியைச் சிறப்பித்தற்கு வழங்கும் வாக்கியம் இப்பழமொழியின் பொருட்டென்ற தோற்றுகிறது.
உ. "தலைதொட்டேன் றண்பரங் குன்று" பரி. ௬: கஎ.
௩. தலைவி மறுத்தெதிர்கோடலுக்கு, "தேன்கொள் .......... குறி" என்பது மேற்கோள்; தொல். களவி. சூ. உ0. இளம்.
(பா - பேதம்) * மாமணமருண்டு. † மிழித்திருக்க. ‡ ஆங்குணர்வார்கோவதே.



வேய்நூட் டரவத்து நின்பெண்டிர் காணுமற்
(க)காஞ்சித்தா துக்கன்ன (உ)தாதெரு மன்றத்துத்
தூங்குங் குரவையு ணின்பெண்டிர் கேளாமை
(௩)யாம்பற் குழலாற் பயிர்பயி றெம்படப்பைக்
காஞ்சிக்கீழ்ச் செய்தேங் குறி

எ - து: அதுகேட்டவள், அப்படியை மெய்யென்று உணரும் அறியா

* மகளிர் கூட்டத்திற்கு உடன்படுவோர்; அச்சுஞறவு பொய்க்குமவன் நீ; நின் வருத்தத்தை ஆராய்ந்து பார்க்கில் அதற்கு உடன்படுதலே வேண்டுதலின் எம்முடைய புழைக்கடையிற் காஞ்சிமரத்தின் கீழே குறியிடஞ்செய்தேம்; ஆண்டு வருங்கால் தேனைத் தன்னிடத்தே கொண்ட (ச) பொதியின்மலையை யுடையவனுடைய சிறுகுடியில்வாழும் எம் ஆயர் அவ்வேந்தன் இனிதிருந்து வாழ்வதற்கு அந்நிலத்திற் றெய்வத்திற்கு மடைகொடுக்கும் ஆரவாரத்தாலே வந்த நின்னுடைய பெண்டிர் நின்னைக் காணமல், காஞ்சிப்பூவின் தாது உதிர்ந்தாற்போன்ற தாதாகியஎருவையுடைய மன்றத்திடத்து ஆடும் குரவைக் கூத்திடத்து வந்த நின்னுடைய பெண்டிர் தேளாமல், நீசெய்யுக்(ங)குறியை

---

க. (அ) "புன்காஞ்சித் தாதுதன் புறம்புதையக் கிளியெனக்கண், டன்புகொண் மடப்பெடை யலமந்தாங் ககல்வதனை, யென்புருகு குமைழஇ யிருஞ்சிறகர் குலைத்துகுத்துத், தன்பெடையைக் குயிறழுவத் தலைவந்த திளவேனில்" (சீவக. கஅசு.) என்பதனல் காஞ்சித் தாது பச்சைநிறமுடையதென்பது அறியலாகும் (ஆ) "குயிற்கு ழாங்குடை காஞ்சியின் கோமளத் தாது, வெயிற்கு ழாமறைத் திருவிசும் பிருள் செய" என்பது காஞ்சிப்புராணம்.

உ. (அ) "தாதெரு மன்றத் தயர்வர் தழூஉ" கலி. க0ங: கஉ. (ஆ) "தா தெரு மன்றந் தானுடன் கழிந்து" (இ) "தாதெருமன் றத்தாடுங் குரவையோ தகவுடைத்தே"(ஈ)"தாதெரு மன்றத்து மாதரியெழுந்து" (சிலப். கஃ: க0உ, கள: 'மாயவன்றன்', உள: எச எனத் தாதெருக் கூறப்பட்டிருக்கும் இடங்களையும் அதற்கு இங்கே காஞ்சித்தாதை உவமை கூறியிருப்பதையும் நோக்க, தாதெருவென்றது சாணத்தை யென்று தோற்றுகிறது. இது யானை குதிரைகளின் இலத்தி முதலிய வற்றிற்கும் வரும்.

ங. ஆம்பற் குழலென்பது வெண்கலத்தால் ஆம்பற்பூவடிவாக அணைசு பண்ணிச்செறித்த குழலென்று விளக்குவர் அடியார்க்குநல்லார்.

ச. இந்நூற் பக்கம் ககேடு: க-ஆம் குறிப்புப் பார்க்க.

டு. "நின்னு ரகம்புகுர் தார்க்குறி காட்டு தெகேதகையே" தஞ்சை. கஅஅ.

(பிரதிபேதம்) *மகளிர்க்கூட்டத்திற்கு.

(க) ஆம்பலென்னும் பண்ணையுடைய குழலாலே குறிசெய்து வருவாயாக என்றான். எ - று.

இதனால், இருவர்க்கும் புணர்ச்சியுவகைபிறந்தது.

இதனுள், தலைவன் வினைவலபாங்கினனாயவாறு காண்க. இது கைக்கிளை.

இது தரவும் சொற்சீரடியும் நெடுவெண்பாட்டும் சொற்சீரடியும் கொச்சகமும் தனிச்சொல்லும் சொற்சீரடியும் நெடுவெண்பாட்டும் தனிச்சொல்லும் ஒருதாழிசையும் ஐஞ்சீரடியாறொன்றும் கொச்சகமும் தனிச்சொல்லும் நெடுவெண்பாட்டும் சொற்சீரடியும் நெடுவெண்பாட்டும் மூச்சீரடியொன்றும் நெடுவெண்பாட்டும் வெள்ளைச்சுரிதகமும் பெற்று வந்த கொச்சகக்கலி. (அ)

(க0கூ.) காராரப் பெய்த கடிகொள் வியன்புலத்துப்
பேராது சென்று பெரும்பதவப் புன்மாந்தி
நீரார் நிழல குடஞ்சுட் டினத்துள்ளும்
போராரா வேற்றின் பொருநர் இளம்பாண்டி
௫ தேரூரச் செம்மாந் ததுபோல் மதைஇனள்
பேரூருஞ் சிற்றூருங் கௌவை யெடுப்பவள்போல்
மோரோடு வந்தா ளதைகண்டை யாமோடுஞ்
சொல்லியா என்றே வனப்பு;
கூ பண்ணித் தமர்தந் தொருபுறந் தைஇய
கண்ணி யெடுக்கல்லாக் கோடேந் தகலல்குல்
புண்ணில்லார் புண்ணாக நோக்கு முழுமெய்யுங்
கண்ணளோ வாய மகள்;
கங இவடான், திருத்தாச் சுமட்டின ளேனைத்தோள் வீசி
வரிக்கூழ வட்டி தழீஇ யரிக்குழை
யாடற் றகையள் கழுத்தினும் வாலிது
நுண்ணிதாத் தோன்று நுசுப்பு;
கஎ இடைதெரியா வேள ரிருவருந் தந்த
முடைவனப் பெல்லா மிவட்கீத்தார் கொல்லோ
படையிடுவான் மற்கண்டீர் காமன் மடையடும்
பாலொடு கோட்டம் புகின்;

க. (அ) "இயவர், தீங்குழ லாம்பலி னினிய விமிரும்" ஐங். உகடு. (ஆ) "ஆய ரினம்பெயர்த் தாம்ப லடைதர" திணைமொழியைம். உ௪.



உக இவடான், வருந்தநோய் செய்திறப்பி னல்லான் மருந்தல்லள்
யார்க்கு மணங்காதல் சான்றுளென் றார்ப்பெண்டிர்
மாங்காய் நறுங்காடி கூட்டுவேம் யாந்த
மெழுகின் கிளையொடு போகென்று தத்தங்
கொழுநரைப் போகாமற் காத்து முழுநாளும்
வாயி லடைப்ப வரும்.

இது வினைவலபாங்கிற் றலைவியைத்தண்ட வினைவலபாங்கிற் றலைவன் "காமஞ் சாலா விளமை யோள்வயி, னேமஞ் சாலா விடும்பை யெய்தி"(க) கூறியது.

இதன் பொருள்.

காரார‌ப் பெய்த கடிகொள் வியன்புலத்துப்
போது சென்று பெரும்பதவப் புன்மாந்தி
நீரார் நிழல (உ) குடஞ்சுட் டினத்துள்ளும்
(௩)போராரா வேற்றின் பொருநா (௪)கிளம்(௫)பாண்டி
(௬) தேறுநச் (௭)செம்மரந் தநுபோன் *மதைஇனள்
பேருருஞ் சிற்றாருங் கௌவை யெடுப்பவள்போன்
(எ) †மோரோடு வந்தா டகைகண்டை யாரோடுஞ்
சொல்லியா ளன்றே வனப்பு

க. தொல். அகத். சூ. ௭௦. இச்சூத்திரத்தின் இருவுரையிலும் இச்செய்யுள் இச்செய்திக்கே மேற்கோள்.

உ. கலி. ௧௦௭: உ-ஆம் அடியையும் அதன் குறிப்பையும் பார்க்க.

௩. மத வென்னு முரிச்சொல் மிகுதிப்பொருளில் வருமென்பதற்கு "போராரா வேற்றின்..........மதைஇனள்" என்பது (தொல். உரிச். சூ. அ௦. நச்.) உரையிலும். "காகிளம் பாண்டில்.........மதைஇனள்" என்பது (தொல். உரிச். சூ. ௭௭. "மிகுதியும்" தெய்.) உரையிலும் மேற்கோள்.

௪. "செல்லு மழவிடைபோற் செம்மாந்து" நல. சுயம். ௧௫௪.

௫. (அ)பாண்டில், தேர்பூணு மெருதென்பர், பதிற்றுப்பத்திலுரைகாரர்; பதிற். கஃ: கo. (ஆ) எருத்தைப் பாண்டி லென்பது தெலுங்குச் சொல்லென்பர்; இ - வி. சூ. கஃ. நன். பெயரி. சூ. கக. இரா;

௬. செம்மாத்தல். பழ. ௩கஙி, ௩க௩.

௭. 'கண்டை' என்பது அசைநிலையாய் வந்ததற்கு, "மோரோடு.......... வனப்பு" என்பது மேற்கோள்; தொல். எச்ச. சூ. ௩o. 'கேட்டை யென்று' தெய்.

(பிரதிபேதம்) * மழைஇயினன், † மோருடன் வந்தா.



எ - து: மழைநிறையப்பெய்த விளக்கங்கொண்ட அகற்சியையுடையநிலத்தே *சென்றுநின்று அவ்விடத்தேநின்ற(க)பெரியஅறகாகியபுல்லை நிறையத்தின்று நீர் நிறைந்த நிழலிடத்தனவாய (உ)இன்னதனைக் குடம்பால் போதுமென்று கருதப்படும் பசுத்திரளில் †வைத்துக்கொண்டும் எனையவற்றிற்கு (௩) ஒப்புச் சொல்லப்படும் காது (ச) போர்த்தொழில்அமையாத எற்றினுக்கின்ற இளைய எருது(ரு)கொல்லர்வண்டியைஊராநிற்க இளமையால்இறுமாக்குமாறுபோலத் தலையில் மோர்ப்பானையுடனே அழகாலும் இளமையாலும் மிகுதியையுடைய ளாய்ப் பெரிய ஊர்களையுஞ் சிறிய ஊர்களையும் ஆரவாரத்தை உண்டாக்கு வாள்போலே மோரோடே வந்தவளழகை நெஞ்சே காண்பாயாக; இவள்தான் மிக்க வனப்புடைய மகளிரெல்லாரொடும் தன் அழகு ஒவ்வாமை சொல்லப் பட்டவள், எ - று.

இது சினைவினை முதலொடு முடிந்தது.

௯ (கூ)‡பன்னித் தமர்தந் தொருபுறங் கைஇய
கண்ணி ||யெடுக்கலாக் கோடீட் டகலல்குற்

க. பெரிய அறுகு - யானை யறுகு.

உ. இன்னதனைக் குடம் பால் போதும் - இத்தனை குடம் பால் கறக்கும்.

௩. "பொருக" என்பதற்கு உவமிக்கப்படுவா யென்று பொருள் கூறி, 'பொருவப் படுமவன் பொருக னென நின்றது' என்றும் (முருகு.

உஎக.) ஒப்பற்றவனேயென்று பொருள் கூறி, 'பொருகனென்றது தான் பிறர்க்கு உவமிக்கப்படுவோனென்னும் பொருட்டு' என்றும் (மது. சஉ.) இவரால் எழுதப்பெற்றிருக்கும் விசேடவுரை வாக்கியங்களும் இங்கே அறிதற் பாலன.

௪. "கொய்புற் கொடுத்துக் குறைத்தென்றுந் தீற்றினும், வையம்பூண் கல்லா சிறுகுண்டை" நாலடி. ௩௫௦.

௫. 'கள்ளிக் கோட்டை முதலிய இடங்களில் மாடுகட்டிய கூட்டு வண்டி கொல்லர் வண்டி யென வழங்கப்படுகின்றதென்பர்' என்பது சீவக. ௩-ஆம் பதிப்பு அரும்பத. பக். ௧௧௫. இது கொல்லா வண்டியெனவும் கொல்லரப்பண்டியெனவும் சிலப். உரையிற் காணப்படுகின்றது.

௬. "சிறந்ததுபயிற்றலிறந்ததன் பயனே" என்னும் (தொல்.களவி. ௩.) சூத்திரத்தின் விசேடவுரையில் 'உலகத்துத் தலைமகனும் தலைமகளுமாக நம்மால்வேண்டப்பட்டார் அந்தணர்முதலாகிய நான்குவருணத்திலும் ஆயர் வேட்டுவர் குறவர் பரதவ ரென்னும் தொடக்கத்திலும் அக் குலத்தா ராகிய குறு நில மன்னர் மாட்டும் உளரால ரன்றே. அவ

(பிரதிபேதம்) * கன்று நின்றவிடத்தே நின்றபெரிய, † வைத்துக்கொண்டு வினய. ‡ மன்னித் தமதத்தொரு. || எடுக்கல்லா.





புண்ணில்லார் புண்ணாக நோக்குந் (௩)முழுமெய்யுங் *வாய மகள்

எ - து: சுற்றத்தார் கட்டிக்கொண்டு †வர்து, மயிர்முடியில் ஒருபுறத்தே செருகிவைத்த கண்ணியைச்சுமக்கமாட்டாத பக்கம் எத்தின அகன்றவல்குலையுடைய இவ்வாயர் மகள், மனத்திற் (௨)காமவேட்கையில்லாத ‡இருடிகளும் புண்பட்டு நெஞ்சு வருந்தும்படி பார்க்கும்; அதுவேயன்றி மெய்முழுதுங் கண்ணையுடையவளோ? எ - று.

||என்பது,(௩)கண்கள்செய்கின்றவருத்தம்போல மெய்ம்முழுதும்வருத்துதலின், மெய்முழுதுங் கண்ணளோ் என்றதாயிற்று.

கூ. (ச)இவடான் ÷ திருத்தாச் சுமட்டின ளேணைக்தோள் வீசி
வரிக் × கூழ வட்டி தழீஇ யரிக்குழை
யாடற் றகையள் கழுத்திலுா் ┼ வாலிது
நுண்ணிதாய்த் தோன்று நுசுப்பு

எ - து: இவள் தான் பல நிறத்தையுடைய செல்லையுடையவாகிய (ரு)வட்டியை ஒருகையால் அணைத்து மற்றைத்தோளை இளமைச் செருக்குத்

செல்வானிலும் செல்வத்தாலும் குலத்தாலும் வடிவாலு முயர்ந்த தலைமகனும் தலைமகளு மாயினர் மாட்டே ஐயம் நிகழ்வது. அல்லாதார் மாட்டு அவ்வழி மரபினையே சுட்டியுணர நிற்கும்" என்று எழுதி "பண்ணித் ........ ..மகள்" என்னும் பகுதியை ஐயமின்றிச் சுட்டி புணர்த்தமைக்கு மேற்கோள்காட்டினர் இளம்.

க. "முழுமெயும்" சீவக. ௩௪௦. ௨௧௫௧; 'முழுமெயும் - மெய்முழுதுமென மாறுக' என்பர் அடியார்க்கு நல்லார்; சிலப். ௪: ௯.

௨. (அ)"காமமொடு, கடுஞ்சினங் கடிந்த காட்சியர்.........முனிவர்" முருகு. ௱௩௪ - ௱௩௭. (ஆ) "பெண்டிரு முண்டியு மின்பமென் றுலகிற், கொண்டார் குறாஉங் கொள்ளாத் துன்பம், கண்டன ராகிக் கடவுளர் வரைந்த, காமம்" சிலப். ௧௪: ௩௧ - ௩௨.

௩. (அ) "கண்ணுற் கலைஇய நோய்செய்யு, நடாஅக் கரும்பமன்ற தோளாரை" கலி. ௧௧௨: ௫-௬. (ஆ) "இருநோக் கிவளுண்க ணுள்ள தொருநோக்கு, நோய்நோக்கு" குறள். ௧௦௯௧.

௪. ஐஞ்சீரடுக்கி வந்ததற்கு "இவடான், திருந்தாச்............நுசுப்பு" என்னும்" பகுதி மேற்கோள்; தொல். செய். சூ. ௧௫௪. ௩௭.

௫. வட்டி - கடகப்பெட்டி, இஃது உட்புறம் பனங்குருத்தாலும் வெளிப் புறம் பனையகணியாலும் தெற்றி யிடையப்படுவது.

(பிரதிபேதம்) * ஆயர்மகள், †வந்த.........சொருவையைத்த, ‡இருடிகளுக்குமுட்படடெஞ்ச ‖ என்றது. ÷ திருத்தாச், × கழைவட்டி, ┼ வாலிதி நுண்ணிதாத்தோன்று.

## நான்காவது முல்லை க்கு ௭௦௭

தோன்ற வீசித் தன் அழகிற்கு திருத்தியிரா த (க) சுமையினையுடையளாய்

மெய்க்கட் பூண்டனவன்றிக் கழுத்திடத்திலும் அழகையுடைய மகரக்குழை யாதேனுண்டான அழகையுடையவன்; அதுவேயன்றி அல்குலர் தோளுஞ் சுமந்து இளைத்த நுசுப்புக் கண்ணியெடுக்கலா மென்மைக்கேற்ப நுண்ணிதாய் ஈன்றுய்த் தோன்றுநிற்கும். எ - று.

கஎ இடைதெரியா மேவ ளிருவருந் தந்த
†முடைவனப் பெல்லா மிவட்கீத்தார் கொல்லோ
‡படையிடுவான் மற்கண்டீர் காமன் (உ) மடையடும்
பாலொடு கோட்டம் புகின்

எ-து: தம்மில்வேறு ||பெயர்விளங்கிஅழகையுடையாராகிய(ங)உருப்பசியும் திலோத்தமையும் தம்முடைய தம்முடைய அழகையெல்லாம் இவட்குக் கொடுத்தார் கொல்லோ? அது தெரிந்ததில்லை; + இவன் தெய்வத்திற்குப் பலியாகச்சமைக்கும் பாலோடே காயன்கோயிலிலேசெல்லில்(ச) அக்காமனும் நெஞ்சழிந்து தன்கையிற் படையை மிகவும் × போகவேன். எ - று.

க. "தந்தை மிலேச்சுமடன்" என்புழி, சுமடென்பது சுமையென்னும் பொருட்டுப்போலும்; "குழிசி பூஞ்சுமட்டிரீஇ" என்புழி இது சும்மா டென்னும் பொருளில் வருகிறது.

உ. "பான்மடை கொடுத்துப் பண்பிற் பெயர்வோ, ளாயர் முதுமகள்" (சிலப். கடு: கஎ - கககூ.) என்பதனாலும் ஆய்ச்சியர் தெய்வத் தருள்பெறப் பலியாக அட்டபாலளித்தல் அறிய லாகும்.

ங. உருப்பசியும் திலோத்தமையும் அழகிய மகளிர்க்கு உவமை கூறும்படி மிகச் சிறந்த அழகுடையாராய் விளங்கும் தேவதாசியர்; இவர்களுள் உருப்பசியாவாள் திருமாலின் கூறாகிய நாராயணமுனிவர் வதரிகாசிரமத்துத் தவஞ் செய்வதை அழித்தற் பொருட்டுத் தேவேந்திரனால் விடுக்கப்பட்ட தேவதாசியர்கள் வெட்கியோடும்படி அம்முனிவரால் தமது தொடையில் உண்டாகப்பெற்றவளென்றும் ஊரு (தொடை) வில் தோன்றினமையால் அவளுக்கு ஊர்வசி யென்று பெயர்வந்த தென்றும் சொல்லுவர். அப்பெயர் உருப்பசி யெனத்திரிந்து நின்றது. திலோத்தமையாவாள் பிரமதேவரால் அழகுடையபொருளோவ்வொன் றினுமுள்ள சிறந்த அழகை எள்ளளவு எள்ளளவாக எடுத்துச்சேர்த்துப் படைக்கப் பெற்றவளென்ப. இப்பெயரே இப்பொருளை அறிவிக்கும்.

௩. "ஜிலே வல்லான் போலுஞ் செறிவினன்" கலி. (௧௩௩: ௬௪.) என்று சிறப்பிக்கப் படுதல் கருதி, காமனும் என உம்மை கொடுத்தார்.

(பிரதிபேதம்) * கன்றுபதொன்றுநிற்கும், † உடையவனைப்பெல்லாமிவட்கிய்த்தார், ‡ படைவிவோன், ‖ போர்விளக்கி, ÷ அயன், × போயேன்.



காயன் மாயோன்மகனாதலின் அவனும் அங்கிலத்திற்குத் தெய்வமாதல் "அவ்வகைபிறவும்" (௧) என்றவழி வகை என்றதனாற் கொள்ளப்பட்டது. தெரியாவென்பது *செய்தெனெச்சம். இருவர், திருமகளும் † பூமகளுமெனினுமாம். (௨)கண்டீர் வினாவொடு சிவணி நின்ற அசை.

௨௧ (௩)இவ்டான்

இவடான் ‡என்று நெஞ்சொடு வினவினன்.

வருந்தநோய் செய்திறப்பி னல்லான் மருந்தல்லள்

யார்க்கு மணங்காதல் சான்றுமொன் றார்ப்பெண்டிர்

மாங்காய் ‖நறுங்காடி கூட்டுவேம் யாங்கு

மெழுநின் (௪)÷கிளைபொடு போகென்று தத்தங்

கொழுநரைப் போகாமற் காத்து முழுநாளும்

வாயி லடைப்ப வரும்.

எ - து: அறவேயுமன்றித் தன்னை நோக்கினவெல்லார்க்கும் வருத்தமாதல் அமைந்தவளென்று கருதிஇவ்வூர்களிற் பெண்டிரெல்லாரும் மோருக்கு மருக மாங்காயை நறிய ×ஊறுகாயாகக் கூட்டி நுகரக்கடவேம்; நீ எவ்விடத்தும் ÷ போய் மோர்முதலியன விற்றுத்திரியும் நின் சுற்றத்தாருடனே போவாயாக என்று கூறித் தம்முடைய கணவரைப் புறத்துப் போகாமற் காத்துக்கொண்டு இவள்வருங்காலமேயன்றி ஒருநாள்முழுதும் வாயிலே இடை

௧. தொல் அகத். சூ. ௧௮. இவ்வுரைகாரர் தொல். அகத். ரு - ஆம் சூத்திரவுரையில் "படையிவோன்... ...புகின்" என்னும் பகுதியை மேற்கோள் காட்டி இக்குறிப்பையும் எழுதியுள்ளார்.

௨. "படையிவோன் ........புகின்" என்னும் பகுதி கண்டீரென்பது

அசைநிலையாய்வருதற்கு மேற்; தொல். எச்ச. சூ. உக. 'கண்டீர்' தெய்.
ரு. ஐஞ்சிறடுக்கிய சரிதகத்தான்வந்ததற்கு "இவடான், வருந்தநோய்......
..... வரும்" என்னும் பகுதி மேற்கோள்· தொல்.செய்.சூ. கநிசு. நச்.
சு. "வினையொடுங் காக்கதன் கொழுநன் மார்பே" குறுந். அo. என்னுந்
தொடர் இங்கே நோக்கற்பாலது.
௭. காடியென்பது ஊறுகாயென்னும் பொருளில் வருதலை, "காடி
வைத்த கலனுடை மூக்கின்" என்புழி, 'புளியங்காய் நெல்லிக்காய்
முதலியன ஊறவிட்டு வைத்ததனைக் காடியென்றார்' என்று இவர்
எழுதியிருக்கும் விளக்கத்தால் அறிக.

(பிரதிபேதம்) * செய்ததெனெச்சம், † பூமகளுமாம் கண்டீர், ‡ என்றது தெஞ்சொடு
|| நறுங்கடி 'கட்டு,' ÷ வினையொடும் போவென்று, × ஊறுகறியாகக்,
+ போயம்மோர்.



யிட்டுக்கொண்டு நிற்கும்படியாக*வாரா நிற்கும் ; இவள் தான் மனம்வருத்தும்
படி நோயைச்செய்து போவதன்றி அந் நோய்தீர்க்கும் *மருந்தல்லளெனச்
சொல்லெதிர் பெறாஅன் சொல்லி யின்புற்றான். எ - று.

சுற்றத்தொடு போவென்றார், அவரோடு இவள் போங்காலத்து, தங்
கணவர்க்குப்பின் †சேறல் இயையா[ன]தென்பது பற்றி.

இதனால், இவனுக்கு அசைவு பிறந்தது.

இது காமஞ்சாலாவிளமையோளென்னும்(க)சூத்திரத்து விளைவலபாங்கி
னோரும் இங்ஙனங் கூறலா மென்றமைத்தாம்.

மருந்தல்லளென்றது, காமஞ்சாலா விளமையோளென்றது.

‡மோர்விற்கின்றமை கூற விளைவலபாங்கினனாயிற்று.

இஃது இவடாளென ஐஞ்சீர் அடுக்கிய சரிதகத்தான் இற்ற கலிவெண்
பாட்டு. (க)

(ககo.) கடிகொ ளிருங்காப்பிற் புல்லினத் தாயர்
குடிதொறு நல்லாரை வேண்டுதி யெல்லா
விடுதேன் மருந்தோநின் வேட்கை தொடுதொத்
தூன்னித்தர் தாம்கே நகைகுறித் தெம்மைத்
தினைத்தற் கெளியமாக் கண்டை யளைக்கெளியாள்

வெண்ணெய்க்கு மன்னோ வெனக்கொண்டா யொண்ணுதா
லாங்குநீ கூறி னனைத்தாக நீங்குக;
௮ அச்சந்தான் மாறி யசைவினாற் போத்தந்து
நிச்சந் தடுமாறு மெல்லிய லாய்மகள்
மத்தம் பிணித்த கயிறுபோ னின்னலஞ்
சுற்றிச் சுழலுமென் னெஞ்சு;
௧௨ விடிந்த பொழுதினு மில்வயிற் போகாது
கொடுந்தொழுவி னுட்பட்ட கன்றிற்குச் சூழுங்
கடுஞ்சூலா னாகுபோ னிற்கண்டு நாளு
நடுங்க லுற்றதென் னெஞ்சு;
௧௬ எவ்வந் துதா வெந்திறத் தெஞ்ஞான்று
நெய்கடை பாலிற் பயனாது மின்றாகிக்

---

க. தொல். அகத். சூ. ௫௦.

(பிரதிபேதம்) * மருந்தல்லன், எ - று. மருந்தல்லனென்றது காயஞ்............சென்றது மோரை விற்கின்றமைகூற.........னாயிற்று. இது இடையனென மறுத்துரைக்க...பாட்டு. †சேறல்லையாலையான் என்பது.



கைதோயன் மாத்திரை யல்லது செய்தி
யறியா தளித்தென் னுயிர்;
௨௦ அன்னையோ, மன்றத்துக் கண்டாங்கே சான்றார் மகளிரை
யின்றி யமையேனென் றின்னவுஞ் சொல்லுவாய்
நின்றாய்நீ சென்றீ யெமர்காண்பர் நாளையுங்
கன்றொடு சேறும் புலத்து.

இது வினைவலபாங்கினல் *வெண்ணெய் (க) நொடைக்குச் சென்ற தலைவியைக்கண்டு வினைவலபாங்கிற்றலைவன் மெய்தீண்டித் தனது ஆற்றாமையை அறிவித்துழி, அவள் ஈண்டுப் பிறரறிவர், நாளைக்கன்றொடு †சேறுமென இடங்கூறியது.

இதன் பொருள்.

கடிகொ ளிருங்(உ)காப்பிற்(ங)புல்லினத் தாயர்
குடிதொறு நல்லாரை வேண்டுதி யெல்லா
விடுதேன் மருந்தோகின் ‡வேட்கை தொடுதரத்
துன்னித்தந் தாங்கே நகைகுறித் தெம்மைத்
திளைத்தற் கெளியமாக் கண்டை யளைக்கெளியாள்
||வெண்ணெய்க்கு மன்ன ளெனக்கொண்டா ÷யொண்ணுதா
லாங்குநீ கூறி னனைத்தாக நீங்குக

எ - து: எடா! வரைவுகொண்ட பெரிய குறும்பிடத்து இருக்கின்ற ஆட்டிடையருடைய குடிதோறுமுள்ள மகளிரை விரும்பாநின்றாய்; =நினது காம வேட்கை எறிந்த தேளுக்குக் கடிப்பற +அப்பொழுதே இட்டுத் தீர்க்கும் மருந்துபோல வேட்கைதோன்றியபொழுதே கூடத்தீர்க்க வேண்டுவதொன்றோ? அல்லவே! நின்னோடு நர்மசெய்தலைக் குறித்து நீ என் மெய்யைத் தீண்டுதற்கு யாம் நின்னை அணைந்து மெய்யைத் தந்த ╪அப்பொழுதே, எம்மைப் புணர்ச்சிக்கும் ×எளியமாக நீ மனத்தாலேகண்டாய்; அங்ஙனங் கண்டது, மோரை வேண்டினார்க்குச் சிறிது மோரைவார்த்து எளியளானவ ளொருத்தி வெண்ணெயை வேண்டினார்க்கு**வெண்ணெயைஇட்டு எளியளா

. . . . . . . . . . . .

க. கொடைக்கு - விற்பதற்கு. இது கொடுவென்னும் பகுதியடியாகப் பிறந்த தொழிற் பெயர்.

உ. காப்பினென்றும் படிக்கலாம்.

ங. "புல்லினத்தாயர்" (கலி. க0௩: எ.) என்பது மதன்குறிப்பும்பார்க்க.

(பிரதிபேதம்) * வெண்ணெ, † சென்றுமென, ‡ வாழ்க்கைதொடிதர, || வெண்ணெக்கும் ÷ஒன்னுதலாங்கு, =நின்காமவாட்டை, ╪இப்பொழுதே, ×எளியேமாதல். ** வெண்ணெயை.

## நான்காவது முல்லை க0. எகக

விருப்பள் என்று நெஞ்சாலே * கருதினாற்போலே இருந்ததென்றான்; அது கேட்ட தலைவன் ஒள்ளிய நுதலினையுடையாய்! அங்ஙனம் நீ கூட்டத்தை

மறுத்துக் கூறுவையாயின், அக்கூட்டம் இல்லையாவதாக இனி நின்னை விட்டு நீங்குக என்றான். எ - று.

அ அச்சத்தான் மாறி யசைவினாற் போத்தந்து
நிச்சந் தடுமாறு மெல்லிய லாய்மகன்
(க)மத்தம் பிணித்த கயிறுபோ னின்னலஞ்
சுற்றிச் சுழலுமென் னெஞ்சு

எ - து: மெல்லிய இயல்பினையுடைய ஆயச்சாதியிற் பிறந்த மகன்|| மத்தைச் † சுற்றிய கயிறுபோல ‡நின்னுடைய நலத்தைச் சூழ்ந்துகொண்டு சுழன்று திரிகின்ற என்னுடைய நெஞ்சு நீ கூறிய கூற்றினால் தனக்கு உண்டாகிய அச்சத்தினாலே நின்னிடத்துநின்று மீண்டு தான் நிலைபெறமாட்டாது பின்னரும் அசைகின்ற அசைவாலே என்னிடத்தினின்றும் புறப்பட்டு நாடோறும் மீளத் தடுமாறுகிற்கும் என்றான். எ - று.

கஉ. விடிந்த பொழுதினு மில்லயிற் போகாது
(உ)கொடுங்தொழுவி னுட்பட்ட கன்றிற் றுச் சூழுங்
(௩)கடுஞ்சூலா நாகுபோ னிற்கண்டு நாளும்
||நடுங்கஞ ருற்றதென் னெஞ்சு

க. (அ) "மத்தம் புல்லிய கயிற்றின் மற்றவ, ரத்த லைவிடி னித்த லைவிடார்" சீவக. சஉ௩. (ஆ) "போயொருகான் மீளும் புகுந்தொருகான் மீண்டேகு. மாயர் கொணர்ந்த வடுபசலின்—றேயல். கடைவார்தங் கைபோலு மாயிற்றே காலன், வடிவாய வேலான் மனம்" நள. கலி தொடர். ௪௦௩.

உ. "நோக்கினின் றுள்சிறைப் பட்டதன், காவற்கண் திற்புனிற் றுவான கார்மயிற் சாயலே" சீவக. ககஜ௯. (ஆ) "கன்று தடையுண் டெதி ரழைக்கத் ததறிக் கனைக்கும் புனிற்றுப்போல்" பெரிய.சுழறிற். ௪௩௫. (இ) 'கன்று பிடியுறத் தீர்க்குறு. தாயைப்போல" கம்ப. பிணிவீட்டு. ௩௪. (ஈ) "கன்றொழி புனிற்று வெண்ணக் கதறினர்" கந்த. பானு. உ௦௫.(உ) "அனைத்தாவின்ற, கன்னெஞ்சு விளைத்தினைந்து மறுகாநின்ற கபிலையைப்போலென் பட்டாள்" வில்லி. பதினேழாம்போர். உ௯௭. என்பவையும் (ஊ) இந்நூற்பக்கம் ௪அ௫: உ-வது குறிப்பில் இவ்விடத்திற்குப் பொருந்துவனவும் ஈண்டு அறிதற்பாலன.

௯. கடுஞ்சூல் என்பது (அ) "கடுஞ்சூன் மந்தி" பெரும். ௩௩௫. (ஆ) "பிடிச்சூற்ற, கடுஞ்சூல் வயாவிற்கு" கலி. ௪௦: உ௬-உ௭. (இ) "கடுஞ்

(பிரதிபேதம்) * கருநிறைப்போலே, † சுழற்றிய. ‡ சின்னலஞ்சூழ்ந்து. || மிக்கருரிட்டதென்.



எ - து: என்று, பின்னும் முதற்சூல்கொண்ட பசு, இல்லிடத்தினின்றுக் *தூரிய இடத்தில் இடப்படாத வளர்ந்த தொழுவினுள்ளே கட்டிவைத்த தன் கன்றிற்குப் பொழுது விடிந்த காலத்திலும் மேயப்போகாது சூழ்ந்துதிரியும்; அந்நாகு போலே நின்னைக் கண்டு என்னெஞ்சு நாடோறும் (க) நடுக்குகின்ற வருத்தத்தை உற்றதுகாணென்றான். எ - று.

(உ)நாகு, சண்டு இளமை.

௧௩ எவ்வ மிகுதர வெந்திறத் தென்றான்று
(௩)செய்கடை பாலிற் பயன்யாது மின்றாகிக்
கைதேரயன் மாத்திரை யல்லது செய்தி
யறியா தளித்தென் னுயிர்

எ - து: †என்று பின்னரும் என்னிடத்து ‡எக்காளும் வருத்தம் மிகுகையி ஞலே அளித்தக்க என்னுடைய உயிர் மருந்தையிட்டு செய்யைக் கடைந்து வாங்கின பாலிடத்து நுகர்வார்க்குச் சிறிதும் ||பயன்படுதலில்லையாய் அவர் கைசென்று தோய்ந்து விடுகின்ற அளவாய்விட்டது; அதுவும் ஒழிய மேல் தான் செய்வதோர் செயலையும் அறியாதென்றான். எ - று.

என்றதனல், நீ என் உயிரிடத்துள்ள நன்மையை ஒருவழியாலே வாங்கிக் கொண்டு விட்டாயென்றும் அது பின்னர் நீ பயன் கொள்ளுங்காலத்து நினக்கு ஓர் இன்பக் + தருதல் ஆற்றாதென்றுங் கூறினானாயிற்று.

---

சூன் மடப்பிடி" அகம். எ௯: ௮. என விலங்குகட்கும், (ஈ) "கடுஞ் சூன் மகளிர்" மது. ௬௦௧; (உ) "கடுஞ்சூற் சிறுவன்" (ஊ) "கடுஞ் சூன் மகளே" ஐங். ௩௦௧, ௩௮௪; (எ) "கடுஞ்சூன் மகளிர்" மணி. எ: ௮௨. என மக்கட்கும் கூறப்படுதலுமன்றி. (ஏ) "கடுஞ்சூல் முன் டகம் கதிர்மணி கழாஅலவும்" சிறுபாண். ௧௪௮. என ஓரறிவுயிர்க்குங் கூறப்படுகிறது.

௧. "நடுக்கஞர் - நடுக்குதற்கு ஏதுவாய அஞர்" கலி. ௫௩: ௧௮; குறள். ௧௦௮௪. உரைபார்க்க.

௨. நாகு, ஈண்டு இளமை யென்றது: நாகென்பதனை, (தொல். மர. சூ. ௬.) பெண்பாற் பெயராகக் கொள்ளாது (தொல். மர. சூ. ௨௧.) இளமைப் பெயராகக்கொண்டு இளமையையுடைய கன்றென்று பொருள்கொள்ளவேண்டுமென்று கருதிப்போலும்; இஃது இப்பொருளில் வருவது, "நல்லாவின் கன்றாயி னாகும் விலைபெறூஉம்" (நாலடி. ௧௩௫.) என்பதனாலும் அறியலாகும்.

௫. பாலைக் காய்ச்சாமலே இயந்திரத்தினுதவியால் அதிலுள்ள வெண்ணெயை யெடுத்துவிட்டு, சென்னை முதலிய இடங்களில் விற்கும் பால் உண்பவர்க்குப் பயன்படாமை இங்கே அறிதற்பாலது.

(பிரதிபேதம்) * தூரிய இடப்படாத. † பின்னரும். ‡ எத்தாரும். ‖ பயன்படுதலில்லையாய வாகச்சென்ற. ✠ தருமாதலாற்றுதென்றும்.



(௩) அன்னையோ, மன்றத்துக் கண்டாங்கே சான்றார் மகளிரை
†யின்றி யமைவேனென் றின்னவுஞ் சொல்லுவாய்
நின்றாய்நீ சென்றீ யெமர் காண்பர் ‡நாளையுங்
கன்றொடு சேறும் புலத்து

எ - து: அதுகேட்டவள், நீ அத்தன்மையையுடையையோ என அருள் செய்து, பலருந் திரிகின்ற மன்றத்திலே எதிர்ப்பட்ட அப்பொழுதேநின்னைப் போலன்றி அமைதியை யுடையோர் மகளிரை இவ்விடத்துப் புணர்ச்சி யின்றாயின் உயிர்வாழேனென்று நின்றாய்; இவ்விடத்து நின்றால் எம்முடையசுற்றத்தார் காண்பர்; இனிஇன்றேயன்றி நாளையும் புலத்திலே கன்று மேய்த்தற்குப் போவேம்; ஆண்டு வந்து இத்தன்மையன ‖ உரைகளை பேரச் சொல்லுவாய்; நீதான்இனி ஈண்டுநில்லாமற்போவென இடங்கொடுத்தாள்-எ-று.

இதனால், இருவர்க்கும் புணர்ச்சிவேட்கை பிறந்தது.

இது நெடுவெண்பாட்டும் ×பின்னர் மூன்றுவெண்பாட்டும் தனிச்சொல்லும் சுரிதகமும் பெற்ற அகப்புறக் கலிவெண்பாட்டு. (௫0)

(௧௧௧.) (௨) தீம்பால் கறந்த கலமாற்றிக் (௫)கன்றெல்லாந்
தாம்பிற் பிணித்து மனைநிறீஇ யாய்தந்த

௧. பழிதீர் முறுவல் சிறிதே தோற்றலென்பதற்கு, (அ) "அன்னையோ... ........புலத்து" என்னும் பகுதியை மேற்கோள் காட்டி, இதனுள் 'அன்னையோ' என்பது நகையொடு கூடிய சொல் என்பர் இளம்பூரணர்; தொல். களவி. சூ. ௨௦. (ஆ) வறிது நகை தோற்றற்கு "அன்னையோ... ...சொல்லுவாய்" என்னும் பகுதியை மேற்கோள் காட்டுவர் நாற்கவிராசநம்பியும்; நாற்கவி. சூ. ௧௨௭.

௨. (அ) "ஆயர் வேட்டுவர்" என்னும் (தொல். அகத். ௨௧.) சூத்திர வுரையில், 'ஆயர் வேட்டுவரென்னும் இரண்டு பெயரே எடுத்து ஓதினரேனும் ஒன்றெனமுடித்தலான் அந்நிலக்கட்குரிய வினைப்பெயர்களான் வருவனவுங் கொள்க' என்றுகூறி, அதற்கு இச்செய்யுளை மேற்கோள் காட்டினர் நச்சினார்க்கினியர்; (ஆ) இதனைத் தலைமகள் உள்ளப் புணர்ச்சியின் உரிமைபூண்டிருந்தவாற்றிற்கும் வரைந்தெய்தக் கூறலுற்ற வாற்றிற்கும் (தொல். களவி. சூ. ௮.) (இ) * பிறதளையான் (* இயற்றளையான் என்றும் பிரதிபேதம்) வந்த கலிவெண்பாட்டுக்கும் (தொல். செய். சூ. ௧௫௬. 'ஒருபொருள்') மேற்கோள் காட்டினர் இளம்பூரணர். (ஈ) இந்நூற்பக்கம் ௭௧௪: ௧-ஆம் குறிப்பும்பார்க்க.

௩. (அ) "சிறுதாம்பு தொடுத்த பசலைக்கன்றின்" முல்லைப்பாட்டு. ௧௨. (ஆ) "கன்று தாம்பறுத்து" சீவக. ௪௨௨.

(பிரதிபேதம்) * கண்டாங்குச் சான்றோர், † அன்றியமையலனென், ‡ காலைபெல் கன்றொடு, ‖ உற்றமேற். × பின்னிரண்டுவெண்பாட்டும், பின்னீரண்டுவெண்பாட்டும்.

90

(க)பூங்கரை நீலம் *புடைதாழ மெய்யசைஇப்(உ)பாங்கரு
முல்லையுந் †தாய (ங)பாட்டங்காற் றோழிநம்
(ச)புல்லினத் தாயர் மகளிரோ டெல்லா
மொருங்கு விளையாட வவ்வழி வந்த
(ரு)குருந்தம்பூங் கண்ணிப் பொதுவன்மற் றென்னை
‡முற்றிழை யேஎர் மடநல்லாய் நீயாடுஞ்
சிற்றில் புனைகோ சிறிதென்றா னெல்லாநீ
பெற்றேம்யா மென்று பிறர்செய்த வில்லிருப்பாய்
கற்ற திலைமன்ற காணென்றேன் ‖முற்றிழாய்
(௬)தாதுசூழ் ÷கூந்தற் றகைபெறத் தைஇய
கோதை புனைகோ நினக்கென்றா னெல்லாநீ
யேதிலார் தந்தபூக் ×கொள்வாய் மனைமிகப்
பேதையை மன்ற பெரிதென்றேன் +மாதரா
யைய (எ)பிதிர்ந்த (அ)சுணங்கணி மென்முலைமேற்
றொய்யி லெழுதுகோ மற்றென்றான் யாம்பிறர்

---

க. "பூங்கரை நீலந் தழீஇ" கலி. ககரு: கச.

உ. 'பாங்கரும்' என்பதை நான்காமடியின் முதற்சீராகக்கொண்டு அதனை ஐஞ்சீரடியாக்கலுமாம்.

ங. "பாங்கரும் பாட்டங்காற் கன்றொடு செல்வேம்" கலி, ககக: க.

ச. இந்நூற்பக்கம் கஅ௨: க-ஆங் குறிப்புப்பார்க்க.

ரு. (அ) "குருந்தங் கண்ணிக் கோவலர்" ஐங். சஙக. (ஆ) "குருந்தலை வான்படலை சூடிச் 'சுரும்பார்ப்ப, வாயன் புகுதரும் போழ்தினான்" ஐந் - எழு. உஅ. (இ) "குருந்தமென் கண்ணி சூடுங் கோவலர் கொழுந்து" பாகவதம். (கo) வேய்ங்குழலிசைத்த. கக.

௬. "தாதுசூழ் கூந்தல்" என்பதனோடு, (அ) "கொய்பூந், தாதுகொண் டனகத் தப்பி" சீவக. உகசஅ; (ஆ) "போதுகொண் டணியிற் பொறுக்க லாற்றாத், தாதுகொண் டிருந்த தாழிருங் கூந்தலர்" பெருங். (க) சங: கசo - கசக. என்பவை ஒப்புநோக்கற்பாலன.

எ. (அ) "சுணங்கு பிதிர்ந்து........வெம்முலை" சிறுபாண். உச - உக.

(ஆ) "பிதிரு முல்லைமேற் சுணங்கு" திணைமொழி. உஅ. (இ) "பிதிர் சுணங்கணி வெம்முலை" நைடத. வேற்றுரு. க.

அ. "சுணங்கணி வனமுலை" நற். கஃ: க; கலி. சுo: க.

(பிரதிபேதம்) * புலைத்தழு, † தாயப்பாட்டக்கால், ‡ முற்றிலைழயொணமட, முற்றிலை வேர்மட. ‖முற்றிய. ÷ கூர்தறலை. × கொள்வானனி, ✣ ஆயிழாய்.



*செய்புற நோக்கி யிருந்துமோ நீபெரிது
மையலை மாதோ †விடுகென்றேன் றையலாய்
சொல்லிய வாறெல்லா மாறுமா றியான்பெயர்ப்ப
வல்லாந்தான் போலப் பெயர்ந்தா னவனைநீ
யாயர் மகளி (க)ரியல்புரைத் (உ)தெந்தையும்
(ஙு)யாயு மறிய வுரைத்தியின் யானுற்ற
நோயுங் களைகுவை மன்.

இது தலைவி ஆயத்திடைத் தலைவனைக் கண்டவாறும் அவனைக்கூறி யனவுங்கூறி, தோழியைத் தலைவனை வரைவுகடாவி யாய்க்கு அறத்தொடு நிற்கவேண்டுமென்றது.

இதன் பொருள்.

தோழீ! இனிய பாலைக் கறந்த கலங்களை அவ்விடத்து நின்றும் எடுத்துவைத்துக் கன்றுகளையெல்லாந் தாம்பாற் கட்டி மனைக்கண்ணே நிறுத்தித் தாய்தந்த பூத்தொழிலினையுங் கரையினையுமுடைய நிலத்தையுடைய ஆடை பக்கத்தே தாழாநிற்க மெய்யை அசைத்துப் (சு) பாகற்கொடியும் முல்லைக்கொடியும்பரந்த (ரு)முற்றாட்டாகிய தோட்டத்திடத்தே நம்முடைய ஆட்டினத்தையுடைய ஆயர்மகளிரோடே(சா)மற்றை இருகூற்றில் ‡ஆயர்மகளி ரெல்லாருஞ் சேர விளையாடாநிற்ப அவ்விடத்தேவந்த குருந்தம்பூவாற் செய்த கண்ணியையுடைய பொதுவன் ‖பின்னை என்னைநோக்கிச் சூழ்ந்த அணிகலன் களையும் ÷ அழகினையும் மடப்பத்தையுமுடைய நல்லாய்! நீ இழைத்து விளை யாடுஞ் சிற்றிலை யானுஞ் சிறிது புனைவேனோ என்றான்; யான் அதற்கு எடா!

---

க. 'இயல்' என்பது 'இலக்கணம்' என்னும் பொருளில் வருதல் பெரு வழக்கு. 'இயல்பு' என்பதும் அப்பொருளில்வருதலை(அ)"அர்நான்கே

மொழிபுணரியல்பே" (சூ) "இயல்புற காடின்" என்னும் தொல்காப்பியப்பகுதிகட்கு இவரெழுதியிருக்கும் உரையாலுமறிக.

௨. "எந்தையும்............மன்" என்பது குரவரை வரைவெதிர் கொள்ளுவித்தற்கு மேற்கோள்; நாற்கவி. சூ. ௧௬௪.

௩. "வாவி யுறைபு மடவனமே யென்னுடைய, ஆவி புகுந்தளித்தா யாதியால் - காவினிடைத், தேர்வேந்தற் கென்னிலைமை சென்றுரைத்தி" நள. சுயம்வர. ௫௭.

௪. இந்நூற்பக்கம் ௬௩௮: ௫-ஆம் குறிப்புப் பார்க்க.

௫. முற்றூட்டு - சர்வமானியம்.

௬. மற்றை இருகூறு - பசுவினம், எருமையினம்.

(பிரதிபேதம்) * செய்யுற. † விடுவென்றேன். ‡ ஆயமகளிர், || பின்னேபென்ன. ÷ அழிவையுமுடையமடப்பத்தையுடைய கல்லாளே.



வரைந்துகொண்டு எமக்கு நூரில்லை அமைத்தலறியாயாய்த் தன் சுற்றத்தார் எடுத்த இல்லிலே இவளிருக்க யாம்பெற்றேமென்று நினைத்திருக்குமவன் நீ; ஆதலால், உறுதியாக நீ உலகியலிற்சுற்றதொன்றும் இல்லைக்காணென்றேன்; *அதன்பின்புமுற்றிழாய்! கட்டினமாலையை நினக்குத் தாதுசூழ்ந்தகூந்தலிலே அழகு பெறப் புனைவேனோ என்றான்; யான் †அதற்கு எடா! நீ வரைந்துகொண்டு, விடாமற் கோதை புனைதல் அறியாயாய், (௪)எஞ் சுற்றத்தார் மிகக் கொண்டுவந்து சூட்டின பூவை மிகப் பூவென்றுகொள்ளுமவன் நீ; ‡ஆதலால் உலகில் உறுதியாகப் பெரிதும் பேதைத்தன்மையையுடையை என்றேன்; அதன்பின்பு || மாதராய்! வியக்கத்தக்க சிதறின சுணங்கு அணிந்த மெல்லிய (௫)முலைமேலே தொய்யில்எழுதுங் குழம்பால் எழுதுவேனோ என்றான்; யான் அதற்கு நீ வரைந்துகொண்டு வெளியாக எழுதுதல் நின் மனத்து இல்லை, யாம் எப்பொழுதும் (௬) என்சுற்றத்தார் கோலஞ்செய்து எழுதுங்காலம் பார்த்து ÷இருப்பேமோ? இனி இங்ஙனம் இருத்தலாற்றேம், ∴இங்ஙனங்கூறுதலின் நீ பெரிதும் மயக்கத்தையுடையை, இங்ஙனம் × அன்புள்ளார்போலக் கூறுகின்றாய், அவற்றைத்தவிர் என்று கூறினேன்; தையலாய்! அவற்றின் பின்னர் அவன் சொன்ன நெறிகளெல்லாவற்றையும் ÷இங்ஙனம் மாறாய்

மாருய் யான் மருக்க, = இனிக் களவு நிகழாதென்று(ச) ** அலமந்தான் போலே மீண்டு போயினன் ; அவனை நீ ஆயர்மகளிரை ††வரைந்துகொள்ளும் இலக்கணத்தை அறிவித்து, பின்னர் என்னுடைய தந்தையும் (ரு) யாயும் இக்களவொழுக்கம் அறியும்படி அறத்தொடு ‡‡ நிலைவகையால் உரைப்பை

க. "பண்ணித்தமர்தந் தொருபுறந் தைஇய, கண்ணி" கலி. க0௧: ௬-௧0.

உ. "இளமுலைமேற், றொய்யி லெழுதவும் வல்லன்" கலி. ௧௪௩: ௩உ-௩௩.

௩. "என்றோளன்மேற், கரும்பெழுது தொய்யிற்கு" (கலி. ௬௩: ௬ - எ.) என்பதனுரையால் மகளிர்க்கு அவர்களைவரேயன்றிச் சுற்றத்தாரும் கோலஞ்செய்தலுண்டென்பது அறியலாகும்.

௪. அலமருதல் - சுழலுதல்; என்றது, மனமயங்குதலை. இப்பொருளில் அல்லாத்தலென்னுஞ்சொல் வருதலை, (அ) "அல்லாந்தா ரலவுற" (கலி. உ௧: உ) (ஆ) "அல்லாந் தவணங்கெ" (இ) "அல்லாந் தகன் றோயி வாழ்கடல்போ லாயிற்றே" (ஈ) "அலமந் தல்லாப்ப போன் றூரே" (சீவக. உ௧௬௩, உ௧௧௪, உ௧௧௬) என்பவற்றின் உரையாலும் அறிக. (உ) "அல்லாப்புற் றஞ்சினான்" (சீவக. ௩0௧எ) என்புழி, அல்லாப்பென்பதற்கு வருத்தமென்னும்பொருளுங்காணப்படுகிறது.

௫. யாய் - என் தாய். (அ) "யாயு ஞாயும் யாரா கியரோ" குறுந். ௪0. (ஆ) "யாயேகண்ணினும் கடுங்காதலனே" அகம். ௪௬: ௧; (இ) "நீனின்ற

(பிரதிபேதம்) * அதன்பின்பு கட்டினமாலையை நினக்கு முற்றினதாக, † அதற்துவரைந்து, ‡ குதலாலுறநீயாக, ‖ குயிழாய், ÷ இருப்போமோ. ∴ அங்கனம், × அன்புள்ளனைப்போல, ✠ இங்ஙனமாருயான். = இக்களவு, ** அலமாந்தான். †† யந்துகொள்ளும். ‡‡ நிலைவகையாயுரைப்பையாயின்.



யாயின், அவன் உற்ற நோயன்றி யான் உற்ற நோயையும் மிகப்போக்குவை; இதனைக் குறிக்கொள் என்றாள். எ - று.

இதனால், தலைவிக்கு அசைவு பிறந்தது.

இது (க)பன்னீரடியின் இகந்து தளையும் விரவி ஐஞ்சீரடியும்வந்து ஒரு பொருணுதலாது வந்த கலிவெண்பாட்டு. (௧௧)

(கக௨.) யாரிவ னென்னை விலக்குவா னீருளர்
பூந்தா மரைப்போது தந்த விரவுந்தார்க்
கல்லாப் பொதுவனை நீமாறு நின்னொடு
சொல்லலோம் பென்று ரெமர் ;
ரு எல்லா, கடாஅய கண்ணாற் கலைஇயநோய் செய்யு
நடாஅக் கரும்பமன்ற தோளாரைக் காணின்
விடாஅலோம் பென்று ரெமர் ;
அ கடாஅயார், நல்லாரைக் காணின் விலக்கி நயந்தவர்
பல்லித மூன்கண்ணுந் தோளும் புகழ்பாட
நல்லது கற்பித்தார் மன்ற நுமர்பெரிதும்
வல்ல ரெமர்கட் செயல் ;
க௨ ஓஒ, வழங்காப் பொழுதுநீ கன்றுமேய்ப் பாய்போல்
வழங்க லறிவா ருரையாரே லெம்மை
யிகழ்ந்தாரே யன்றோ வெமர் ;
ஒக்கு, மறிவல்யா னெல்லா விடு ;
கரு விடேன்யா, னென்னீ குறித்த திருங்கூந்தா
லின்னையென் முன்னின்று
சொல்லலோம் பென்றமை யன்றி யவனைநீ
புல்லலோம் பென்ற துடையரோ மெல்ல

---

படிவத்தா னெடியோனை முதற்பயர்., தாயென்று முதுமறை ப. யி லும், யாயென் றல்ல தியாத்து . யலவே" (தொல். செய். சூ. கசக. பேர். உரை.மேற்கோள்) என்பவையும் இது தன்மையொடடுத்தபெய ரென்று நல்லாடரும் தன்மையொடொட்டிய பெயரென்று நச்சினார்க் கினியரும் எழுதியிருப்பவையும் இங்கே அறிதற்பாலன.

க. பன்னிரண்டடியின் இகந்து ஒரு பொருளுதலாதுவரும் கலிவெண் பாட்டுக்கு இச்செய்யுள்மேற்கோள்; தொல். செய். சூ. கருரு. பேர். நச்.

௨0. முயங்குநின் முள்ளெயி றுண்கு மெவன்கொலோ
மாயப் பொதுவ னுரைத்த வுரையெல்லாம்
வாயாவ தாயிற் றலைப்பட்டாம் பொய்யாயிற்
சாயலின் மார்பிற் கமழ்தார் குழைத்தநின்
ஞாயித முண்கண் பசப்பத் தடமென்றோள்
சாயினு மேஎ ருடைத்து.

இது வினைவலபாங்கிற் றலைவியை ஆற்றிடைக் கண்டு வினைவலபாங்கிற்றலைவன் விலக்கி நகையாடி இருவருஞ் சிலமொழி கூறியவழி அவள் கூட்டத்திற்கு உடம்பட்டது. இது (க)கைக்கிளை.

இதன் பொருள்.

(உ)யாரிவ னென்னை விலக்குவா னீ(ங)குளர்
பூந்தா மரைப்போது தந்த விரவுத்தார்க்
(ச)கல்லாப் பொதுவனை நீமாறு நின்னொடு
சொல்லலோம் பென்று ரெமர்

எ - து: என்னை விலக்கு வானுகிய இவன் எமக்கு என்ன உறவுடையனென (ரு)முன்னிலைப்புறமொழியாகப் †புலர்துகூறி, பின்னர் அவனைநோக்கி நீரிலே‡அசைகின்ற பொலிவையுடைய தாமரையினது பூவை எமக்கு விளை

க. (அ) "கல்லாப் பொதுவனை நீமாறு" எனப்பொதுவியர் கூறலும் "ஈடாஅக் கரும்பமன்ற தோளாரைக் காணின், விடாஅலோம் பென்று ரெமர்" எனப் பொதுவர் கூறலும் மிக்க காமத்து மிடலாகிய பெருந்திணை யாதலின் முல்லையுட் கோத்தாரென (தொல். அகத். சூ. கஙு.) உரையில் இவரே வேறு திணையாக எழுதியிருப்பது இங்கே ஆராயத் தக்கது.

உ. தலைவன் சொல்லெதிர் தலைவி உடம்பாடிருப்பவும் இசைவில்லாதாரைப்போல அல்ல கூற்றுக் கூறுதற்கு, 'யாரிவ னென்னை......... .........ரெமர்' என்பதனை மேற்கோள் காட்டி, 'எவன்கொலோ...... .........ஏருடைத்து' என உடம்பாடு கூறினாதலின் முற்கூறியது அல்ல கூற்றாயிற்று என்பர் இளம்பூரணர்; தொல். களவி. சூ. கக.

ங. உளர்தல் - அசைதல்.

௪. "கல்லாக் கோவலர்" (ஐங். ௩0௪) என்பது இங்கு ஒப்புநோக்கற் பாலது.

௫. 'யாரைநீ யென்னை விலக்குவாய்' என்றது "யாரிவனென்னை விலக்கு வான்" என்றது முன்னிலையிற் புறமாக மொழிந்தது.

(பிரதிபேதம்) * நீருணபூந்தாமரை. † புலாந்த. ‡ அசைக்கின்ற பூவையுடையதாமரை.



யாடத் தந்த, (க)பலமலர் விரவுதலையுடைத்தாகிய தாரினையுடைய, *நினது சாதித்தன்மை கல்லாதபடி இயல்பாகப்பட்ட இடையனுந் தன்மையை உடையை; இவ்வொழுக்கம் அறிந்தாரைப்போல எம்முடைய சுற்றத்தார் நின்னொடு சிலசொல்லுதலைப் பாதுகாத்துக்கொள் என்றார்; ஆதலால் நீ ஈண்டு நில்லாது போ என்றாள். எ - று.

"எந்நில மருங்கிற் †பூவும்" (௨)என்பதனால், தாமரை கூறினர்.

௫ எல்லா, கடாஅய (௩)கண்ணாற் கலைஇயநோய் செய்யு
நடாஅக் (௪)கரும்பமன்ற தோளாரைக் காணின்
விடாஅலோம் பென்றா ரெமர்

எ - து: அதுகேட்டவன் ஏஏ! வேட்கை செலுத்தின கண்ணாலே மனத்தைக் கலக்கின காமநோயை உண்டாக்கும் எழுதுகரும்பு நெருங்கின தோளினையுடைய மகளிரைக் கண்டாயாயிற் போகவிடாதே கொள்; அவர் செய்தநோயை அவரைக் கொண்டே பரிகரித்துக்கொள்ளென்று கூறினர் எம்முடைய சுற்றத்தார் என்றான். எ - று.

அ கடாஅயார், நல்லாரைக் காணின் விலக்கி நயந்தவர்
பல்லித ழுண்கண்ணுந் தோளும் புகழ்பாட
நல்லது கற்பித்தார் மன்ற நுமர்பெரிதும்
வல்ல ரெமர்கட் செயல்

எ - து: அதுகேட்டவள் அந்நோய் பரிகரித்துக்கொள்ளென்று கூறி னவர்கள் அதுவேயன்றி நல்ல மகளிரைக் கண்டாயாயிற் போகாமல் தடுத்து விரும்பி அவருடைய (௫) பல பூக்களையும் போலுங் கண்ணையும் புகழப்பண்

௧. (அ) "பிடவமுங்...... ..கோடலும் ........காயாவும் பிறவு, மணிகொள மலைந்த கண்ணியர்" (ஆ) "மெல்லிணர்க் கொன்றையு மென்மலர்க்

காயாவும், புல்லிலை வெட்சியும் பிடவுந் தளவுங், குல்லையுங் குருந்தங் கோடலும் பாங்கரும், கல்லவுங் கடத்தவுங் கமழ்கண்ணி மலைந்தனர்" கலி. க0௩: உ - ௬; க0௩: க - ௪ என்பனவையும் இந்நூற்பக்கம் ௬௩அ: உ-ஆம் குறிப்பும் ஒப்புநோக்கற்பாலன.

௨. தொல். அகத். ௬. கக.

௩. இந்நூற்பக்கம் எ0௪: ௩-ஆங் குறிப்புப்பார்க்க.

௪. "தோண்மேற், கரும்பெழுது தொய்யிற்கு" கலி. ௬௩. எ - அ என்பதும் அதன் குறிப்பும் இங்கே அறிதற்பாலன.

௫. பல பூக்களென்பதற்கு, மகளிர் கண்ணுக்கு உவமையாகக் கூறப்படுமே செந்தாமரை,குவளை,கருநெய்தல்,கருவிளை,காமுதலியமலர்களென்று

பிரதிபேதம்) * சாதித்தன்மையைக்கல்லாதவடிவியல்பாக. † பூவும்புள்ளும்.



நோனையும் பாடும்படியாக நல்லதொரு தொழில் கற்பித்தார்; அவர்தாம் அறுதியாக; எம்முடைய சுற்றத்தாரிடத்து அவர் வரைவுநேர்தற்குச் செய்யுஞ் செயலை நம்முடைய சுற்றத்தார் பெரிதும் வல்லராயிருந்தாரென்றாள். எ-று.

*இஃது, இகழ்ச்சி.

க௨ ஓஓ. (ஃ)வழங்காப் பொழுதுநீ கன்றுமேய்ப் பாய்போல்
வழங்க லறிவா ருரையாரே †லெள்ளா
யிகழ்ந்தாரே யன்றோ வெமர்

எ - து: அதுகேட்டவன் நன் மனத்தேனே! என வியந்து, பின்னர் வெயில்வெம்மையால் ஒருவரும் வழங்காத உச்சிக்காலத்தே நீ கன்று‡மேய்ப் பாய்போலப் பிறர்க்கு நோயைச்செய்து திரிகின்ற தன்மையை அறிந்திருக் கின்றவர்கள் இப்படித் திரிகின்றாளென்று எனக்குரையாதிருப்பாராயில் எம்முடைய சுற்றத்தார் எம்மை இகழ்ந்தாரேயல்லவோ என்றான். எ - று.

க௩ ஒக்கு, மறிவல்யா னெல்லா விடு

எ - து: அதுகேட்டவள் நீ கூறியது ஒக்கும்; எடா! இது பொய் யென்று யான் அறியவேண்டா; இக்கூற்றைக் கைவிடென்றாள். எ - று.

க௪ விடேன்யா, னென்னீ குறித்த திருங்காந்தா
னின்னையென் முன்னின்று
சொல்லலோம் பென்றமை யன்றி யவனை நீ

புல்லலோம் பென்ற துடையரோ மெல்ல
||முயங்குநின் முள்ளெயி றுண்டு மெவன்கொலோ
மாயப் பொதுவ னுரைத்த வுரையெல்லாம்

---

கொள்ளலாம். இவ்வுரையாசிரியர் இதழென்பதைச் சினையாகு பெயராக்கிப் பல்விதழென்பதற்கு, பல பூவென்று பொருள் கூறினர். இதற்கே பலவாகிய இதழினையுடையதென்று அன்மொழித் தொகையாக்கிப் பூவென்ற பொருள் கூறுவாருமுளர். 'பல்லித ழுண்கண்' என்னுந்தொடர்மொழி, (நற். ௨௪௦: ௧௧; குறுந். ௫; ஐங். ௭௦, ௧௬௦, ௩௩௪, ௩௫௧, ௪௭௧; கலி. ௪௫: ௧௧, ௧௦௦: ௧௦) பலவிடங்களிலும் வருதல்காண்க.

௧. வினைவல பாங்கின ளாய தலைவியை நோக்கித் தலைவன் கூறியதற்கு, "வழங்காப் பொழுதுநீ.........வெமர்" என்பது மேற்கோள்; தொல். அகத். ௫. ௨௩. நச்.

(பிரதிபேதம்) * இறைகெட்சி. † என்னை. ‡ மேப்பட்டாரைப்போலே. || முயங்கின் முள்ளெயிறுண்டுமெவன்.



வாபாவ தாயிற் றலைப்பட்டாம் பொய்யாயிற்
(௧)சாயலின் மார்பிற் கமழ்(௨)தார் *குழைத்தநின்
ஞயித ழுண்கண் பசப்பத் தடமென்றோள்
சாயினு மேன முடைத்து

எ - று: அதுகேட்டவன் யான் நின்னை விடேன்; கரிய கூந்தலை

புடையாய்! யான் கூறிய கூற்றை நீ பொய்யாகக் குறித்ததென்? யான் பொய்கூறிற்றிலேன்; அது நிற்க, நின் சுற்றத்தார் நின்னை என்முன்னே நின்று சில சொல்லுதலைப் பாதுகாத்துக்கொள்ளெனச் சொன்னமையன்றி அவளை நீ புல்லுதலைப் பாதுகாத்துக்கொள்ளென்ற வார்த்தையை அவர் உடையரோ? இல்லையன்றே! ஆகலால் நீ மெத்தென முயங்குவாய், அப்பொழுது யான் நின் கூரிய (௩) எயிற்றை உண்பேனென்றான்; அதுகேட்டவள், இவன் கூறியது எத்தன்மைத்தோவென நெஞ்சொடு உசாவி, பின்னும் தன்னெஞ்சை நோக்கி, பொய்யை வல்ல பொதுவன் கூறிய கூற்றெல்லாம் மெய்யாயிருப்பதோர் வார்த்தை யாயில் அவனிடத்து † மனைவாழ்க்கையிலே பட்டேமாகின்றேம்; அன்றி அது பொய்யாயிற்றேல் மென்மை இனிதாகிய மார்பிற் கமழ்கின்ற மாலையை வருத்தின நின்னுடைய அழகிய இதழ்போலுங் (௪) கண்கள் பசலைநிறங் கொள்ளப் ‡ பெருமையையுடைய மெல்லியதோள் பின்னர் மெலியினும் நின் மேனி இப்பொழுது பெறுகின்ற அழகையுடைத்துக் காண் எனக் கூட்டத்திற்கு உடம்பட்டுக் கூறினாள். எ - று.

குழைத்த என்னும் பெயரெச்சம் நின் என்னும் பெயரொடு முடிந்தது. கன்று மேய்ப்பாய் போ வென்பதனால், வினைவல பாங்காயிற்று. நோயு

---

௧. (அ) "ஊரன் மார்பே,...... ..இன்சா யற்றே" (ஐங். ௧௪.) என்பதும் (ஆ) "இன்சாயன் மார்பன்" (கலி. ௬௫: ௫.) என்பதும் அதன் குறிப்பும் ஈண்டு அறிதற்பாலன.

௨. நார்குழைதலைக்குறித்து, சீவக. ௨௦௩௪, ௨௦௪௨; பு - வெ. பெருந். ௧௨; இவற்றில் வருபவையும் "குழைந்தநின் றோரும்" (கலி. ௧௧: ௧௧ - ௧௨.) என்பதும் அதன் குறிப்பும் இங்கே நோக்கற்பாலன.

௩. (அ) "கரும்பின், காலரி கடிகைக் கண்ணயின் றன்ன, வாலெயி றூறிய வசையி றீநீர்" குறுந். ௨௧௭. (ஆ) "முள்ளுறழ் முளையெயிற் றமிழ்துறழ் தீநீரைக், கள்ளினு மகிழ்செய்யுமெனவுரைத்தும்" கலி. ௪: ௧௩ - ௧௪. (இ) "பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி, வாலெயி றூறிய நீர்" குறள். ௧௧௨௧. என்பவையும் (ஈ) இந்நூற்பக்கம் ௩௩: ௧-ஆம்குறிப்பில் இவ்விடத்துக்குப்பொருந்துவனவும் அப்பக்கம் ௩ - ஆம் குறிப்பும் பார்க்க.

௪. இந்நூற்பக்கம் ௨௭௪: ௫ - ஆம் குறிப்புப் பார்க்க.

(பிரதிபேதம்) * குழைத்தவென், † மகளாட்டையிலே. ‡ பெருமையையுடைய தோள்.
91



மின்பமும்" என்னும்(க)சூத்திரத்து, "உறுப்புடை யதுபோ லுணர்வுடையது போன், மறுத்துரைப் பதுபோ னெஞ்சொடு *புணர்த்தும்" என்பதனால் உறுப் புடைத்தாகக் கூறினான்.

இதனால், இருவர்க்கும் புணர்ச்சியுவகை பிறந்தது.

இது முச்சீரடியும் இருசீரடியும் இடையேவந்த கொச்சகக் கலி. (௧௨)

(௧௧௩.) நலமிக நந்திய நயவரு தடமென்றோ
ளலமர லமருண்க ணந்நல்லாய் நீயுறீஇ
யுலமர லுயவுநோய்க் குய்யுமா றுரைத்துச்செல் ;
௪ பேரேமுற் றார்போல முன்னின்று விலக்குவா
யாரெல்லா நின்னை யறிந்ததூஉ மில்வழி ;
௬ தளரியா லென்னறிதல் வேண்டிற் பகையஞ்சாப்
புல்லினத் தாயர் மகனேன் மற்றியான் ;
௮ ஒக்குமன் ;
புல்லினத் தாயனை நீயாயிற் குடஞ்சுட்டு
நல்லினத் தாய ரெமர் ;
௧௧ எல்லா ;
நின்னொடு சொல்லி னேதமோ வில்லைமன் ;
ஏதமன் றெல்லை வருவான் விடு ;
௧௪ விடேன் ;
உடம்பட்டு நீப்பார் கிளவி மடம்பட்டு
மெல்லிய வாத லறியினு மெல்லியா
னின்மொழிகொண் டியானோ விடுவேன்மற் றென்மொழிகொண்
டென்னெஞ்ச மேவல் செயின் ;
௧௯ நெஞ்சேவல் செய்யா தெனநின்றாய்க் கெஞ்சிய

காதல்கொள் காமங் கலக்குற வேதிலார்
பொய்ம்மொழி தேறுவ தென் ;
உஉ. தெளிந்தேன் றெரியிழா யான் ;
உங. பல்கால்யாங் கான்யாற் றவிர்மணற் றண்பொழி
லல்க லகலறை யாயமொ டாடி

க. தொல். பொருளி. சூ. உ.
(பிரதிபேதம்) * சொர்தமென்பதனுல், சொர்த்த மென்பதனுல்.

நான்காவது முல்லை கக. எஉ.ங.

முல்லை குருந்தொடு மூச்சிவேய்ந் தெல்லை
பிரவுற்ற தின்னங் கழிப்பி
யரவுற் றுருமி னதிருங் குரல்போற் பொருமுர
ணல்லேறு நாகுட னின்றன
பல்லா னினநிரை நாமுடன் செலற்கே.

இது வினைவலபாங்கிற் றலைவியை ஆற்றிடைக்கண்டு அவனை வினைவலபாங்கிற் றலைவன் விலக்கி அவளோடு சிறிது கூறியவழி அவள் *கூடலுறுகின்றாள் கூறியது. இது கைக்கிளை.

இதன் பொருள்.

நலமிக நந்திய நயவரு தடமென்றோ
(க)ளலமர (உ)லமருண்க ணல்லாய்†நீயுற்றி
(ங)யுலமா லுயவுநோய்க் குய்யுமா றுரைத்துச்செல்

எ - து: நன்மை மிகப் பெருகிய விருப்பம் வருகின்ற பெருமையை யுடைய மெல்லிய தோளினையும் சுழலுதலுடைய, மருளோடு பொருந்தின கண்ணினையும் அழகினையுமுடைய நல்லாளே! நீ ‡உற்றதனால் உழத்தலையுடைய வருத்து நோய்க்கு (ஃ) உய்யும் நெறியைக் கூறிப் பின்புபோ என விலக்கினேன். எ - று.

ச (ரு)||பேரேமுற் றார்போல முன்னின்று விலக்குவா
யாரெல்லா நின்னை யறிந்ததூஉ மில்வழி

க. "அலமர லுண்கண்ணர்" (கலி. எ.ங: கஉ) என்பதும் இச்சூற்பக்கம்

௪௪௧: ௨-ஆம் குறிப்பும் பார்க்க.

௨. அமர்க்கண் கலி ௪௦: ௧; நெ: ௨௩.

௩. (அ) "உலமரல் வருத்த முறுதும்" அகம். ௧௮: ௧௩; (ஆ) "யா முலமர" கலி. ௮௩: ௨.

௪. உய்யும் நெறி - தப்பிப் பிழைக்கும் வழி; உயவு நோயைப் போக்குகின்ற வழியென்றுமாம்.

௫. (அ) எல்லான் என்பது எல்லாவென அண்மைக்கண் ஈறழிந்ததென்று கொண்டு, "பேரேமுற் றார்போல......யாரெல்லா" என்னும்பகுதியை மேற்கோள்காட்டுவர், மயிலைநாதர்; நன். பெயரி. ௫. ௯௦. (ஆ) "எழுத விரண்டு முளவென மொழிப" என்புழி, எழுதல் மயங்குதலை யுணர்த்திவருதற்கு, "பேரேமுற் றார்போலமுன்னின் றுவிலக்குவாய்"

(பிரதிபேதம்) * உடம்பட்டானாக அவன் கூறியது. இக், † நீயுரியைவுலமால், ‡ உறழ் சூழ்தலையுடைய, || பேரேமுற் றப்போல.



எ - து: அதுகேட்டவன், எடா! நின்னை முன்பு கண்டு அறிந்ததூஉமில்லாத என்னிடத்தே பெரிய பித்தேறினாரைப் போல முன்னே நின்று (௧)விலக்குகின்ற நீ யார்தான் என்றான். எ - று.

௬ (௨)தளரியா லென்னறிதல் வேண்டிற் பகையஞ்சாப்
(௩)புல்லினத் தாயர் மகனேன் மற்றியான்

எ - து: அதுகேட்டவன், என்னை நீ அறிதலை விரும்பின் மனந்தளர்கின்ற இயல்பினையுடையாய்! யான் பகைக்கு அஞ்சாத ஆட்டினத்தையுடைய ஆயரானவர்க்கு ஒருமகனாத * லானேனென்று தன் செல்வக்குடிப் பிறப்பு உணர்த்தினான். எ - று.

௮ † ஒக்குமன்
புல்லினத் தாயனை நீ யாயிற்(௪) குடஞ்சுட்டு
நல்லினத் தாய ரெமர்

எ - து: அதுகேட்டவன், அது மிகவும் ஒக்குமென அதற்குடம்பட்டு,

பின்னர் நீ ஆட்டினத்தையுடைய ஆயனுக் தன்மையையுடையையாயின் எம்முடைய சுற்றத்தார் நம் இனத்திற் சிறந்த இன்னதனைக் குடம் பால் போதுமென்று கருதப்படும் பசுவினத்தையுடைய இடையரெனத்தன்செல்வக் குடிப்பிறப்பு உணர்த்தினான், எ - று.

௧௧ எல்லா

நின்னொடு சொல்லி னேதமோ இல்லைமன்

எ - து: அதுகேட்டவன், எடீ! இன்னஞ் சிறந்த நின்னோடே சில மொழி கூறின் மிகக் குற்றமோ இல்லை என்றான். எ - று.

௧௩. ‡ஏதமன் றெல்லை வருவான் விடு

எ - து: அதுகேட்டவள், இருவரும் ஒத்த குடியாயிற் பின்னைச் சில ||கூறிற் குற்றமென்? யான் காலைவருதற்கு இப்பொழுது போகவிடு ன். எ - று.

என்பது மேற்கோள்; தொல். கள. சூ. ௧௮. நச். (இ) "எம்மை, முன்னைநின் றங்கே விலக்கிய வெல்லாநீ, யென்னேமுற் றாஅய் விடு" (கலி. ௧௧௭: ௨ - ௪.) என்பது இதனோடு ஒப்புநோக்கற்பாலது. (ந) "பேரே 'முறைநர்" என்பது நற். ௨௨௦: எ. (உ) இந்நூற்பக்கம் ௫௯: ௪-ஆம் குறிப்பும் பார்க்க.

௧. "நின்னைத் தகைத்தனென்" கலி. ௧௦௮: ௨௦.

௨. "தளரிய வவரோடு" கலி. ௧௧: ௧௭. என்பதும் அதன் குறிப்பும் பார்க்க.

௩. கலி. ௧௦௭: ௨. அடியையும் அதன் குறிப்பையும் பார்க்க.

௪. இந்நூற்பக்கம் ௧௮௭: ௨ - ஆம் குறிப்புப் பார்க்க.

(பிரதிபேதம், *உடைபேனென்று, † ஓக்கும்புல்லி. ‡ஏதமன்றெல்லை, ||கூறிக்குற்றமென்.



௧௪ விடேன்

உடம்பட்டு நீப்பார் கிளவி மடம்பட்டு
மெல்லிய *வாத லறிவினு மெல்லியா [ணோய்
(௧) னின்மொழிகொண் டியானோ † விடுவேன்மற் றென்மொழி
டென்னெஞ்ச மேவல் செயின்

எ - து: அதுகேட்டவன், யான் விடேனென்று கூறி, பின்னரும் (உ)என்னுடைய வார்த்தையைக்கேட்டு என் நெஞ்சம் அறியாமையிலேபுகுந்து எனக்கு ஏவலைச்செய்யுமாயின், உலகத்தில் ஒருகாரியக்கூற்றால் (௩) உடன்பட்டு மனத்தால் உடன்படாதார் கூற்றுச் செவிக்கு மெய்தென்றிருக்கலை அறிந்திருந்தே‡னாயினும், மெல்லியஇயல்பினையுடையாய்! நின்னுடைய வஞ்சமானமொழியை உண்மையாகக்கொண்டு யானோ போகவிடுவேன்; அதனாற் பெற்றதென்? அஃது ஏவல்செய்யாதாயிற்றே என்றான். எ - று.

க௯ நெஞ்சேவல் செய்யா தெனநின்றாய்க் கெஞ்சிய
(௪)காதல்கொள் காமங் கலக்குற (௫)வேதிலார்
‖பொய்ம்மொழி தேறுவ தென்

எ - து: நின்னைக் கைகடந்து நின்ற காதலைக்கொண்ட காமங் கலக்குறுகையினாலே என்னெஞ்சு எனக்கு ஏவலைச்செய்யாதெனச் சொல்லிநின்ற உனக்கு ஏதிலார் கூறிய பொய்யாகிய வார்த்தையைத் தெளியுந்தன்மை எங்ஙனே உண்டாயிற்று என்றாள். எ - று.

---

க. "நின்மொழி..........செயின்" என்பது மறுத்துரைப்பதுபோல் தலைமகன் கூற்று உவகைபற்றிவந்ததற்கு மேற்கோள்; தொல். பொருள். ௬. உ. இளம்.

உ. "அவர்நெஞ் சவர்க்காதல் கண்டு மெவனெஞ்சே, நீயெமக் காகா தது" குறள். கஉ௯க.

௩. (அ) "மனத்தி னமையா தவரை யெனைத்தொன்றுஞ், சொல்லினாற் றேறற்பாற் றன்று" (ஆ) "நட்டார்போ னல்லவை சொல்லினு மொட்டார்சொ, லொல்லை யுணரப் படும்" குறள். அஉ௫, அஉ௬.

௪. (அ) "காதற் காமங் காமத்துச் சிறந்தது" பரி. ௯: க௪. (ஆ) "காதல் செய் காமங் கனற்ற" பு-வெ. கைக்கிளை. பெண்பாற். ௪.

௫. "ஏதிலார் யாதும் புகல விறைமகன், கோதொரீஇக் கொள்கை முதற்குறைவு - நேர்நின்று, காக்கை வெளிதென்பா ரென்சொலார் தாய்க்கொலை, சால்புடைத் தென்பாரு முண்டு" நீதிநெறி. ௩௩.

(பிரதிபேதம்) * அகலறியினும். † விடுவேனென்மொழி, ‡ ஆயினும், ‖ நின்மொழி.

எதிலாரென்றது, தான் எதிலேனல்லேனென்னும்பொருண்மை குறிப்பாய்த் தோன்றக் கூறியது. பொய்ம்மொழியென்றது தான் உண்மைகூறவும் பொய்யாகக் கொண்டானென்பது தோன்றக் கூறியது.

உ௨ தெளிந்தேன் *தெரியிழா யான்

எ - து: அதுகேட்டவன், தெரிந்த இழையினையுடையாய்! நீ இப்பொழுது கூறிய கூற்றால் நீ முன்னர் 'வருவான் விடு' என்றது உண்மையென்று யான் †தெளிந்தேன் என்றான். எ - று.

உ௩ பல்கால்யாங் கான்யாற் றவிர்மணற் றண்பொழி
லல்க லகலறை யாயமொ டாடி
முல்லை குருந்தொடு முச்சிவேய்ந் தெல்லை
யிரவுற்ற ‡தின்னங் கழிப்பி
யரவுற்(க)றுருமி னதிருங் குரல்போற் பொருமுரா
ணல்லேறு நாகுட னின்றன
பல்லா னினநிரை நாமுடன் செலற்கே

எ - து: என்று பின்னர், யாம் முல்லைப்பூவைக் குருந்தம்பூவோடே முடியிலே சூடிப் பலகாலுங் காட்டாற்றில் விளங்குகின்ற மணலையுடைய குளிர்ந்த பொழிலிடத்து யாம் முன்பு || தங்கும் அகன்ற பாறையிலே ஆயத்தோடே விளையாடுகையினாலே பகற்பொழுது போய் இராப்பொழுது வந்து தோன்றிற்று; அது வருவதற்குமுன்னர்ப் போகாமல் + தாழ்க்கின் நம்மைக் கோபிப்பார்கள்; அதனை உணராது நீ இன்னங் காலங்கழியாநின்றாய்; பல பசுவினத்தினுடைய நிரைக்குள்ளே,(உ)பாம்புசேர்கையினாலே அதிரும் உருமினுடைய குரல்போல அதிரும் பொருகின்ற மாறுபாட்டினையுடைய நல்ல (௩)ஏறுநாகுடனே தம்மிற் கூடி நின்றன; அவைபோல நாமுங்கூடிச் சேரப்போதற்குக் கட்டத்திற்கு உடம்படுவாயாக என்றான். எ - று.

---

க. (அ) "வானேறு வானத் துரற்ற வயமுரா, ணானேற் றெருத்த லதனோ டெதிர்செறுப்ப" கார். ௧௦. (ஆ) "இடியார் கடுமுழக் கேறு" தே. (இ) "இடிக்குர லானேற் றினமெதிர் செறுப்ப" கல். ௬௪: ௧௦. (ஈ) "(அடலேறு)இடியிட்டதிர்கா ரெதிரேற்றெழுந் தாங்கு நோக்கி" திருவிளை. மாயப்பசுவை வதைத்த. ௧௮.

உ. இந்நூற்பக்கம் உ௪௪: ரு-ஆம் குறிப்புப் பார்க்க.

௩. "மல்லன் மறுகின் மடவார் குடைஞகச், செல்லு மழவிடைபோற் செம் மாந்து" நள. சுயம். ௧௫௪.

பிரதிபேதம்) * தெரிமிழாய் எ-து. † தெரிக்தேன். ‡ இன்னும். || நக்கும்பாறையிலே ✠ தாட்கின்.



"ஓங்குசினைத் தொடுத்த*வூசல் பாம்பென, முழுமுத றமிய வருமெறிந் தன்றே"(௧)என்றார் பிறரும்.

(உ)யாங் கூட ஆயத்தோடு ஆடியெனத் தானுங்கூட ஆடினுனென்றதனு னும், பொழுது †வைகிப்போதற்குத் தாம் தமக்குரியரல்லரென்றமையானும், ஏறும் நாகுங் கூடப் போமாறுபோல நாமுங் கூடப்போக என்றமையானும், விளைவல பாங்கினராயிற்று. அரவுறவெனத் திரிக்க.

இதனால், இருவர்க்கும் புணர்ச்சிவேட்கை பிறந்தது.

இது தரவும் இரண்டடியான் இரண்டு கொச்சகமும் தனிச்சொல்லும் குறுவெண்பாட்டும் தனிச்சொல்லும் ஓரடியான் இரண்டும் தனிச்சொல்லும் நெடுவெண்பாட்டும் குறுவெண்பாட்டும் சிந்தடி ‡யோரடியா னென்றும் சொற்சீரடியும் ஐஞ்சீரும் வந்து (௩) போக்கிலக்கண ||மில்லாத ஆசிரியச் சுரிதகமும் பெற்ற ✠ உறழ்கலி. (௧௩)

(௧௧௪.) வாரி நெறிப்பட் டிரும்புறந் தாஅழ்ந்த
வோரிப் புதல்வ னழுதன னென்பவோ
புதுவ மலர்தைஇ யெமரென் பெயரால்
வதுவை யயர்வாரைக் கண்டு மதியறியா
வேழையை யென்றகல நக்குவந் தீயாய்நீ
தோழி யவனுழைச் சென்று ;
எ சென்றியா னறிவேன் கூறுக மற்றினி ;

௧. அகம். ௬௮: ௯ - எ

உ. "அடியோர் பாங்கினும்" என்னும் தொல். அகத். உ௩-ஆம் சூத்திர

வுரையிலும் இவ்வுரையாசிரியர் தலைவனும் தலைவியும் வினைவல பாங்கின ரென்பதற்கு "பல்கால்யாங்......செலற்கே" என்னும்பகுதியை மேற்கோள்காட்டி, இக்குறிப்புக்குச் சிறிது வேறாக "இது தாழ்த்துப் போதற்குத் தலைமையின்றிக் கடிதிற்போகல் வேண்டுமென்றமையானும், கல்லேறும் நாகும்போல் நாமுங் கூடப் போகல் வேண்டுமென்றமையானும் தலைவன் வினைவலபாங்கின னாயிற்றெனக. வினைவல்லானென்றதுபாங்கினென்றதனால்தமரேவல்செய்வதுபெறுதும்; இஃது அவ்வர்நிலத்து இழிந்தோர்க்கு என்றும் தொழிலேயாய் நிகழும்" என்று எழுதியிருக்கின்றார்.

௫. இது போக்கிலக்கணமில்லாத 'ஆசிரியச்சுரிதகம் பெற்று உறழ்கலி யாயிற்றென்பர் பேராசிரியரும். நச்சினார்க்கினியரும் அவ்வாறே கூறுவர். தொல். செய். சூ. கசுக.

(பிரதிபேதம்) * பூதலம்பாம்பென, † வையிற்போதற்கு. ‡ ஓடியாளென்றுமஞ்சிரும். ‖ இல்வழிஆசிரியச், உறழ்தாழிசைக்கலி.



௮ சொல்லறியாப் பேதை மடவைமற் றெல்லா
நினக்கொரூஉ மற்றென் றகலகலு நீடின்று
நினக்கு வருவதாக் காண்பா யனைத்தாகச்
சொல்லிய சொல்லும் வியங்கொளக் கூறு ;
௧௨ தருமணற் றாழப்பெய் தில்பூவ லூட்டி
யெருமைப் பெடையோ டெமரீங் கயரும்
பெருமண மெல்லாந் தனித்தே யொழிய
வரிமணன் முன்றுறைச் சிற்றில் புனைந்த
திருநுத லாயத்தார் தம்முட் புணர்ந்த
வொருமணந் தானறியு மாயி னெனைத்துந்
தெருமரல் கைவிட் டிருக்கோ வலர்ந்த
விரிநீ ருடுக்கை யுலகம் பெறினும்

மருநெறி யாயர் மகளிர்க்
கிருமணங் கூடுத லில்லியல் பன்றே.

இஃது "ஆங்கதன் புறத்துப் புரைபட வந்த மறுத்தலோடுதொகைஇ (க) *என்பது, அவன் வரைவுவேண்டின †இடத்து அவ்வரைவு புறத்த தாகியவழித் தலைவி தன்னுயர்வு உண்டாகத் தோன்றிய மறுத்தலோடே முற்கூறியவற்றைத் ‡தொகுத்து" என்று பொருள்கூறி, "அதன்புறமெனவே அறத்தொடு அயலாகிய நொதுமலர்வரைவாயிற்று" என்றும்; உயர்வு, (உ)குடிப் பிறப்புங் கற்பும்; அதற்கேற்பப் பிறர்வரைவு மறுத்துத் ‖ தலைவன் வரையுமாறு ¶ கூறேனத் தோழிக்குக் = கூறியது.

இதன் பொருள்.

வாரி நெறிப்பட் டிரும்புறக் ÷ தாழுந்த
(ங)வோரிப் புதல்வ னழுதன +னென்பவோ

---

க. தொல். களவி. சூ. உக. இதனுரையில் இவர் இச்செய்திக்கே இச் செய்யுளைமேற்கோள்காட்டி, சிறிதவேறுபட இக்குறிப்பையும் எழுதி யிருக்கிறார்.

உ. (அ) "இற்பிறப்பு மொழுக்கு மிழுக்க மில், கற்பும் யான்பிறர்க் கெவ்வைக் காட்டேன்" (ஆ) "இற்பிறப் பென்ப தொன்று மிரும் பொறையென்ப தொ;ன்றும், கற்பெனும் பெயரதொன்றும் களிநடம் புரியக் கண்டேன்" க. ப. சூடாமணி. கஎ, திருவடி. கஉ.

ங. ஓரி-ஆண்பிள்ளையின் உலைமயிர்.

(பிரதிபேதம்) * என்றது. † இடத்தே வரைவு. இடத்தவரைவு. ‡தொகுத்தென்பதற்குப் பொருள். அதன்புறமெனவேநொதுமலர்வரைவாயிற்று. உயர்வு. ‖ தலைவனை வரையுமாறு. = கூறிறுவ். + தாழ்ந்த. ÷ என்பவோ வோரும்புதல.

நான்காவது முல்லை கச. 

புதுவ மலர்தைஇ யெமீரென் பெயரால்
வதுவை யயர்வாரைக் * கண்டு மதியறியா
வேழைமை யென்றகல நக்குவந் தீயாயிீ
தோழி யவனுழைச் சென்று

†எ-து: தோழீ! புதியனவாகிய மலர்களைச் சூடி எம்முடைய சுற்றத்தார் என்பெயரைச் சொல்லிப் பெண்பிள்ளைக்கலியாணஞ் செய்கின்றவர்

களைக் ‡கண்டு வைத்தும் கோதி நெறித்தற்றொழிலிலே பட்டுப் பெரிய முதுகிலே தாழ்ந்துகிடக்கின்ற மயிரினையுடைய புதல்வன் அழுதனென்பவோ? அங்ஙனங் கூறுவார்களாயின், நீ அவனிடத்தே சென்று இவ்வதுவை நின்னை விட்டு அகலாதிருக்க அது நின்னிடத்தே ஆம்படி வரைந்துகொள்ளும் மதியை அறியாதஏழைத்தன்மையையுடையையென்று சிரித்துவா||வென்றாள். எ-று.

கோதி நெறித்து முதுகிலே கிடக்கின்ற மயிரினையுடைய புதல்வனென்றதனாற் பயன், மயிர்முடி கூடி இளமை முதிர்ந்து காமச்செவ்வி அறிந்து களவொழுக்கத்திற்கு உரியனாயும் தான் வரைந்துகொள்ளுந் தன்மை அறியாமல் இருமுதுகுரவர்கீழே நிற்கின்ற பிள்ளையாயிருக்கின்றவனென்பது உணர்த்திற்று.

அழுதனென்பவோ என்றது, (க)கொதுமலர்வரைவுவந் தூழியும் தான் வரைவின்முயலாது வருந்தினனென்று ஊரிலுள்ளார் கூறுவார்களோ என்றவாறு. இஃது அழுகையென்னும் மெய்ப்பாடு. பெயராலென்பது உருபுமயக்கம்.

௭ சென்றியா னறிவேன் கூறுக மற்றினி

எ-து: அதுகேட்ட தோழி ஆண்டுச்சென்று அவனிலைமை அறிவேன்; பின்னை, அவற்குக் கூறுவனவற்றை இனிக் கூறுவாயாக என்றாள். எ-று.

௮ சொல்லறியாப் பேதை மடவரற் றெல்லா
நினக்கொருஉ ÷ மற்றொன் றகலகலு நீடின்று
நினக்கு வருவதாக் காண்பா யனைத்தாகச்
சொல்லிய சொல்லும் வியங்கொளக் × கூறு

எ-து: அதுகேட்ட தலைவி, மடவாய்! நீ அவனிடத்தே சென்று எடா! நின்குரவரை நோக்கி இவ்வதுவை என்னிடத்தே + யாகவேண்டு

க. கொதுமலர் - அயலார்.

(பிரதிபேதம்) * கண்டுவிலக்கியபடி, † எ-து. கோதி நெறித்தும்.........தாழ்ந்துகிடக்கின்ற

புதல்வனென்றதுற பயன்.........கனவொழுக்கத்தித்து மூரியறுயுர்.........
மெய்ப்பாடு. தோழீ! புதப்பாலை. ¦ தண்டுமைத்துமேரிப்புதல்வன், ‖ என்
றான். பெயரலென்பது, = யாற்றினி, ÷ மற்றென்றகல். எ-து: அதகேட்ட
தலைவி மடவாய் என்றான்.........விருப்பனமைபற்றி. அகலரிடின்று நினைந்து.
+ கூறு என்பது மடவாய்! , × தகவேண்டுமென்று.

92



மென்று சொல்லுஞ் சொல்லை அறியாதபேதை; ஆகையினாலே *இவ்வதுவை
னைக்குரித்தன்றி அகலும்; அவ்வகற்சிதான் நீட்டித்தலில்லை; அது நொது
மலர்க்கின்றி நினக்குவருவதாக நெஞ்சாலே காண்பாய்; அங்ஙனங் †காணு
யாயின் அது நின்னை ஒருவுமென்று நீங்கு; அங்ஙனம் நீங்கும்பொழுது
இவ்வதுவை தனக்குரித்தாக முயலும்படி நீ சொல்லிய சொற்றாலும் முன்பு
வரைவுகடாயவுஞ் ‡சொல்லாத அவன் நினையாமல்(௧)நின்னவலை அவன்மனங்
காரியமென்றே கொள்ளும்படி கூறுவாயாக ‖என்றான். எ - று.

மடவாயென்றான், ஆண்டுக்கூறுவனவற்றைத்(௨)தான் அறியாள்போலத்
தன்னை வினயினமைபற்றி.

௧௨ (௩) தரு(௪)மணற் றாழப்பெய் தில்(௫)பூவ லூட்டி
யெருமைப் பெடையோ டெமரீங் கயரும்
பெருமண மெல்லாந் (௬)தனித்தே (எ)யொழிய
(அ)வரிமணன் முன்றுறைச் சிறுசில் ÷ புனைந்த

---

௧. "விரைந்து தொழில்கேட்கு ஞால நிரந்தினிது, சொல்லுதல் வல்
லார்ப்பெறின்" குறள். ௬௪அ.

௨. "தானறிந்து கூறுந் தலைமற் றிடையது, கோனறைந்த தென்று
கூற்மால்" பாரதம்.

௩. (அ) "தருமணன் ஞெமிரிய திருநகர் முற்றத்து" நெடுநல். ௯0. நற்.
௪௩. உ பெருங். (௧) ௪எ: ௧௭.(ஆ) "தருமணன் ஞெமிரிய திருநகர்
முற்றம்" அகம். ௧அஎ. ௬. (இ) "தருமணன் முற்றத்து" மது. ௬அ௪;
பெருங். (௧) ௩௪: ௪0.(ஈ) "தருமணன் ஞெமிரிய திருநா ணருங்கிறை."
மணி. ௧அ: ௪௪. (உ) "தருமணற் பேரில்" (ஊ) "தருமணற் பந்தர்"
(எ) "தருமணன் ஞெமரிய தண்பூம் பந்தருள்" பெருங். (௧) ௩௩:

௧௩௪; ௩௪: ௪௧; (௪) ௯: ௧௨.

௪. "வரைப்பின் மணற்றாழப் பெய்து" கலி. ௧௧௫: ௧௧.

௫. (அ) "பூவலூட்டிய புனையாண் பந்தர்க், காவற்சிற்றிற் கடிமனை" சிலப். ௧௬: ௫ - ௬. (ஆ) "பூவற் படுவில்" புறம். ௩௧௯: ௧. (இ) "பூவலங் குன்றம்" கலைவழி. ௧௨.

௬. "தனித்து" என்பதைத் தனிக்கவெனத் திரித்து, யான் தனியே நீங்கினேனாக என்க.

௭. 'ஒழிய' என்பதற்கு அவனையன்றி வேறு சிலரிடத்தே தங்குகையி லென்பதைப் பொருளாகக்கொள்க; ஒழிதல் - தங்குதல். இஃது இப்பொருட்டாதலை 'ஒழிய' 'ஒழிந்திட்டான்' (சீவக. ௨௩௩௧, ௨௫௦௪) என்பவற்றுக் கெழுதியிருக்கும் உரையான் உணர்க.

௮. "வரிமணல்" பட். ௬௦. கலி. ௧௨௭. ௫.

(பிரதிபேதம்) * பின்னிய்யதனை, † காணாயாயிற பின்னையது, ‡ சொல்லாக அவன். || என்முன்றருமணல், ÷ புணர்தற்கிருதல்.

நான்காவது முல்லை க௪. ௭௩௧

திருநுத லாயத்தார் *தம்முட் புணர்ந்த
வொருமணந் தானறியு மாயி னெனைத்துந்
தெருமரல் கைவிட் டிருக்கோ †வலர்ந்த
விரிநீ ருடுக்கை(க)யுலகம் பெறினு
மருநெறி யாயர் மகளிர்க்
கிருமணங் ‡கூடுத லில்லியல் பன்றே

எ-து: என்று பின்னும் தோழியை நோக்கி, ஆராய்ந்து பார்க்கில் அறிவினை யுடைத்தாகிய மனவினையுடைய (௨.) துறையின்முன்னே சிற்றிலிழைத்து விளையாடிய அழகிய நுதலினையுடைய ஆயத்தார் தம்முன்னே சென்று ||யான் தனியே நீங்கினேனாக அவன் புணர்ந்த ஒருமணத்தை நம்முடைய நெஞ்சு தான் அறியும்; அங்ஙனம் அறிகின்றாகிற்கவும். (௩.)கொண்டுவந்து குவித்த மணலைத் தங்கப் பரப்பி இல்லின் (௪)செம்மண்ணைப்பூசித் தெய்வமாக வைக்க (௫)எருமையாகிய பேட்டின்கொம்போடே எம்முடையசுற்றத்தார் இவ்விடத்து நடத்தும் பெண்பிள்ளைக் கல்யாணமெல்லாம் அவனை யின்றி வேறுசில

ரிடத்தே தங்குலையினாலே இருமணம் ÷உண்டாகாநின்றது; இவ்விருமணம் பரந்த திரை விரிகின்ற கடலை உடுக்கையாகவுடைய உலகத்தைப் பெறினும் அரிய நெறியையுடைய ஆயர்மகளிர்க்கு உண்டாதல் குடிப்பிறப்பிற்கு இயல் பன்றென்று யான் தெருமருதலைச் ×சிறிது கைவிட்டிருக்கவோ? கைவிட் டிருக்கின், குடிப்பழுதுமாய்க் கற்பும் நீங்குமன்றோ என்றாள். எ - று.

இனி, இருமணங்கூடுதல் இயல்பன்றாயிருக்க ஒருமணந்தான் அறியு மாயிற் பெருமணமெல்லாந் தனித்தே +ஒழியச்செய்தே தெருமரல் கைவிட் டிருக்கோ என்றுற் பொருண்முடியாமை காண்க.

இதனால், தலைவிக்குத் தம் மிறையால் அச்சமே தோன்றிற்று.

---

௧. "பழியெனி, னுலகுடன் பெறினுங் கொள்ளலர்" புறம். ௧௮௨: ௫ - ௬.

௨. "முன்றுறை" என்பதற்குத் 'துறை முன்' என்றே பொருள் கூறுவர், பிறரும்; பரி. ௧௨: ௩௬: புறம். ௧௩௬: ௨௫.

௩. "தாயே, புனைமா ணிஞ்சி பூவ லூட்டி, மனைமணை லமைத்து மாலை காற்றி, யுவர்நினி தயரும்" அகம். ௧௬௫: ௨ - ௫.

௪. "பூவலூட்டி" (அகம். ௧௬௫: ௩) என்பதற்கு, சுவரைப் புதுக்கோலஞ் செய்து என்றும் பூவல் - சிவப்பு என்றும் குறிப்புக் காணப்படுகிறது.

௫. இச்செய்தி வேறெங்கும் கண்டதன்று.

(பிரதிபேதம்) * தம்மிற்புணர்ந்த, † மலர்ந்த, ‡ கூறுதல். || யாவிக்கினோருக. + உண்டா கின்றது, × சிறிதக்கை, + ஒழிகைசெய்தே.

௭௩௨ **கலித்தொகை ௧௧௫.**

எருமைப் பெடையென்றது *"பேடையும் பெடையும்" என்னும் (௧) சூத்திரத்து நாடினென்றதனால் அமைத்தாம்.

(௨)இது வெள்ளைக்கொச்சகமும் ஓரடியானேன் றும் கொச்சகமும் போக் கிலக்கண †மில்லாத ஆசிரியச்சுரிதகமும் பெற்ற உறழ்கலி. (௧௪)

(௧௧௫.) தோழிநாங், காணாமை யுண்ட கடுங்கள்ளை மெய்கூர
நாணாது சென்று நடுங்க வுரைத்தாங்குக்
கரந்ததூஉங் கையொடு கோட்பட்டாங் கண்டாய்நம்

புல்லினத் தாயமகன் சூடி வந்ததோர்
முல்லை யொருகாழுங் கண்ணியு மெல்லியால்
கூந்தலுட் பெய்து முடித்தேன்மற் றோழியாய்
வெண்ணெ யுரைஇ விரித்த கதுப்போடே
யன்னையு மத்தனு மில்லரா யாய்நாண
வன்னைமுன் வீழ்ந்தன்றப் பூ ;
அதனை, வினவலுஞ் செய்யாள் சினவலுஞ் செய்யா
ளெருப்புக்கை தொட்டவர் போல விதிர்த்திட்டு
நீங்கிப் புறங்கடைப் போயினாள் யானுமென்
சாந்துளர் கூழை முடியா நிலந்தாழ்ந்த
பூங்கரை நீலந் தழீஇத் தளர்பொல்கிப்
பாங்கருங் கானத் தொளித்தே னதற்கெல்லா
வீங்கெவ னஞ்சுவது ;
அஞ்சல், அவன் கண்ணி நீபுனைந்தா யாயி னமரு
மவன்க ணடைசூழ்ந்தார் நின்னை யகன்கண்
வரைப்பின் மணற்றாழப் பெய்து திரைப்பில்
வதுவையு மீங்கே யயர்ப வதுவேயா
மல்கலுஞ் சூழ்ந்த வினை.

இது தலைவிகளவுவெளிப்பட்டதென்று அஞ்சித்தோழிக்குச்‡சொல்ல, || நமர் நின்னை அவற்கே கொடுக்கச் சூழ்ந்தாரெனச் சொல்லி அச்சம் நீக்கியது.

---

க. தொல். மரபியல். சூ. ௫௪.

உ. இச்செய்யுள் போக்கிலக்கணமில்லாத ஆரியச் சரிதகம்பெற்ற உறழ் கலிக்கு மேற்கோள்; தொல். செய். சூ. கடுசு. பேர். நச்.

(பிரதிபேதம் * பேடை பெடையும், பெட்டையும் பெடையும், † இல்லாயாயினிய. ‡ சொல்லியேயென்னே. || எமர்.

இதன் பொருள்.

(க)தோழிநாக், (உ)காணுமை(ந)யுண்ட கடுங்கள்ளை மெய்கூர
(ச)நாணாது சென்று நடுங்க வுரைத்தாங்குக்
காந்தனுடன் (ரு)கையொடு கோட்பட்டாங் கண்டாய்நம்
(சு)புல்லினத் தாய மகன்சூடி வந்தகோர்
(ஏ) முல்லை யொருகாழுங் கண்ணியு மெல்லியால்
கூந்தலுட் பெய்து முடித்தேன்மற் றோழியாய்
(எ)†வெண்ணெ யுரைஇ விரித்த கதுப்போடே
யன்னையு மத்தனு ‡மில்லரா யாய்நாண
வன்னைமுன் வீழ்ந்தன்றப் பூ

---

க. ‘ஆயர்வேட்டுவர்’ என்னும் (தொல். அகத். உக.) சூத்திரவுரையில் ‘ஆயர்வேட்டுவரென்னும் இரண்டு பெயரே எடுத்தோதினுரேனும் ஒன்றென முடித்தலான் அந்நிலக்கட்குரிய வினைப்பெயர்களான் வருவனவுங் கொள்க’ என்று கூறி, “தோழி நாம்..............மகன்” என்னும் பகுதியை மேற்கோள் காட்டுவர். நச.

உ. (அ) “கம்மு ஞுனுகர் போலத் தம்முண், மதுமறைத் துண்டோர் மகிழ்ச்சிபோல, வுள்ளத் துள்ளே மகிழ்ப” தொல். களவி. சூ. உக. நச்; நாற். சூ. கசக. மேற். (ஆ) “கள்ளொற்றிக் கண்சாய் பவர்” குறள். கஉஎ. (இ) “மட்டொளித் துண்ணு மாந்தர் மாண்புபோன் மறைந்து வண்ணப், பட்டொளித் தொழிய வல்குற் பசுங்கதிர்க் கலா பந்தோன்ற” சீவக. உஙகங.

ங. “அந்தீந்தேறன் மாந்தினர் மயங்கி ...............புலவிக்காலத்துப் போற்று துரைத்த காவியங்கண்ணார் கட்டுரை யெட்டுக்கு, நாவொடு நவிலா நகைபடு கிளவியும்” சிலப். கச: கஙங - கஙக.

ச. “நாணென்னு நல்லான் புறங்கொடுக்குங் கள்ளென்னும், பேணுப் பெருங்குற்றத் தார்க்கு” குறள். கஉச.

ரு. “தலைப்பெய்து, கையொடு கண்டாய்” கலி. கறி: உஎ - உஅ என்பதும் அதன் குறிப்பும் இங்கே அறிதற்பாலன.

சு. “புல்லினத் தாயர்மகன்” (கலி. க0ங: சஎ) என்பதும் அதன்குறிப்பும் பார்க்க.

எ. "ஓன் கூந்த லுளரச், சிறுமுல்லை நாறியதற்கு" (கலி. ௧0௯: ௩௬-௩௭.) என்றதற்கு, 'ஐவகைப்பட்ட கூந்தலை ஆற்ற அது வெண்ணெயின் நாற்றம் நீங்கிச் சிறிய முல்லைப்பூவின் நாற்றம் மேவி மிக நாறியதற்கு' என்று எழுதியிருக்குமுறை ஈண்டு அறிதற்பாலது.

(பிரதிபேதம்) * ஆயர்மகன். † வெண்ணெய்நாறு. ‡ இல்லாரைப்போல.



*ஈ-து: மெல்லிய இயல்பினையுடையாய்! நம்பாட்டினத்தையுடைய (க)ஆயர்மகன் சூடிவந்ததொரு முல்லைத்தொடையினையும் அதனோடு †செய்த தோர்(உ)கண்ணியையும் கூந்தலிலேயிட்டுமிகவும் ‡முடித்தேன்; தோழீ! அப்பூச் செவிலித்தாய் ||வெண்ணெய்தேய்க்கவிரித்த மயிரோடே நற்றாயுந் தந்தை முதலியோரும் இவ்விடத்தேயிராநிற்க நற்றாயுங் கெட்டுநாணும்படியாகச் செவிலிமுன்னே வீழ்ந்தது; ஆகையினாலே () தோழீ! பிறர் காணாமையுண்ட (௩)கள்ளின் களிப்பு மெய்யிடத்தே தோன்றியிருகையினாலே பின்னை காணு மற்சென்று பிறர் நகைக்கும்படி அக்கமெங்கள்ளைத் தாமுண்டபடியை உரைத் தாற்போல ÷காம் காந்தகனவொழுக்கமுங் கையோடே பிடித்துக்கொள்ளப் பட்டேங் காணென்றாள். எ-று.

அதனை, +வினவலுஞ் செய்யாள் சினவலுஞ் செய்யா
ணெருப்புக்கை தொட்டவர் போல விதிர்த்திட்டு
நீங்கிப் புறங்கடைப் போயினாள் யானுமென்
சாந்துளர் கூழை முடியா நிலந்தாழ்ந்த
(௪)பூங்கரை நீலந் தழீஇத் தளர்பொல்கிப்
(௫)பாங்கருங் கானத் தொளித்தே னதற்கெல்லா
விங்கெவ ×னஞ்சு வது

எ-து: பின்னரும் அப்பூவை வந்தபடி என்னென்று கேட்டலுஞ் செய் யாளாய்ச் சினத்தலுஞ் செய்யாளாய் நெருப்பைக் கையாலே தீண்டினவர்கள் =அக்கையைப் பிதிர்க்கு மாறுபோலக் கையைப் பிதிர்த்து நீங்கிப் புறமாகிய புறத்தேபோனாள்; அவள்போனபின்பு யானும் என்னுடைய மயிர்ச் ∴சந்தனம் பூசி உலர்த்தின மயிரை முடித்து நிலத்தே ** தாழ்ந்த பூத்தொழிலையுடைத்

க. (அ) "முல்லைக் கண்ணிப் பல்லான் கோவலர்" பதிற். ௨௧: ௨௦.

(ஆ) "முல்லையங் கண்ணிசிந்தக் கால்விசை முறுக்கியாய, ரொல்லென வொலிப்ப வோடி" சீவக. சஙஅ.

உ. "கூழையு ளேதிலான், கைபுனை கண்ணி முடித்தாள்" கலி. கoஎ: கச - கடு.

௩. "மெய்க்கண், மகிழா னறிப கரு" நான்மணி. எக.

௪. "பூங்கரை நீலம் புடைதாழ" கலி. ககக: ௩.

௫. "பாங்கரும் பாட்டங்கால்" கலி. ககக: க.

(பிரதிபேதம்) * எ - து. மெல்லியலாய் கம்மாட்டினத்தை. † செய்தவழியினையுடைய கண்ணியையும். ‡ முடித்தேன் அப்பூ. || வெண்ணெய்தேய்க்க. எண்ணெய்தேய்க்க () தோழி. + காங்காந்த ஒழுக்கமும். + வினவுறுஞ்சொல்லான் வினவுறுஞ் சொல்லான். × அஞ்சுவது அஞ்சல், எ-து: = தங்கையைப், ∴ சந்தமெழுதி புலர்த்தின, ** தாழ்ந்தபூந்தொழில்.



தாகிய கரையினையுடைய நீல ஆடையைக் கையாலே செறிதேறத் தழுவிக் கொண்டு அச்சத்தால் தளர்ந்து நடந்து பக்கத்திலுண்டான செல்லுதற்கரிய கானத்திலே சென்று ஒளித்தே னென்றாள்; அதுகேட்டதோழி, ஏடீ! அப்பூ வீழ்ந்ததற்கு நீ அவ்விடத்தே அஞ்சுவது என்னகாரியத்திற் *கென்றாள். எ-து.

கஎ அஞ்சல், (க) அவன்கண்ணி நீபுனைந்தா யாயி னமரு
மவன்க ணடைசூழ்ந்தார் நின்னை யகன்கண்
வரைப்பில் (உ) மணற்றாழப் † பெய்து திரைப்பில்
வதுவையு மீங்கே யயர்ப வதுவேயா
மல்கலுஞ் சூழ்ந்த வினை

எ - து: என்று பின்னும் நின் தலைவன் கண்ணியை நீ சூடினையாயின் அதற்கேற்ப நம்முடைய சுற்றத்தாரும் நின்னை அவனிடத்தே அடுத்தலைச் சூழ்ந்தார்; அதுவேயன்றி அகன்ற இடத்தையுடைய முற்றத்தே மணலைத் ‡ தங்கப்பெய்து திரையிட்டுக் கல்யாணமும் இப்பொழுதே செய்வார்கள்; பகலேயன்றிப் போன இரவிலும் ஆராய்ந்த காரியம் || அக்காரியமேயாம்: நீ அஞ்சாதேகொள்ளென்றாள். எ - து.

இதனால், தலைவிக்குப் புணர்ச்சியுவகை பிறந்தது.

+இஃது ஐஞ்சீரடுக்கி வந்த தரவும் பாட்டின் சுரிதகமும் பெற்ற கலி வெண்பா. (கஞ)

(ககரு.) பாங்கரும் பாட்டங்கால் கன்றொடு செல்வேமெந்
தாம்பி னொருதலை பற்றினை யீங்கெம்மை
முன்னைநின் றாங்கே விலக்கிய வெல்லாநீ
யென்னையே முற்றாய் விடு;
ரு விடேஎன், தொடீஇய செல்வார்த் துமித்தெதிர் மண்டுங்
கடுவய நாகுபோ னோக்கித் தொடுமையா
னீங்கிச் சினவுவாய் மற்று;
அ நீநீங்கு; கன்றுசேர்ந் தார்கட் கதவிற்றாச் சென்றாங்கு
வன்கண்ண னாய்வர லோம்பு;
க0 யாய்வருக வொன்றோ பிறர்வருக மற்றுநின்
கோவரினு மிங்கே வருக தளரேன்யா
னீயருளி நல்கப் பெறின்;
கஉ நின்னையான் சொல்லினவும் பேணாய் நினைஇக்
கனைபெய லேற்றிற் றலைசாய்த் தெனையதூஉ
மாறெதிர் கூறி மயக்குப் படுகுவாய்
கலத்தொடியாஞ் செல்வுழி நாடிப் புலத்தும்
வருவையா னாணிலி நீ.

இது வினைவலபாங்கிற் றலைவியை ஆற்றிடைக்கண்டு விலக்கிய

---

க. "நின் உழையு னேறவன், கண்ணிதந் திட்ட தெனக்கேட்டு............ நின்னையப், பொய்யில் பொதுவற் கடைசூழ்ந்தார் தந்தையோ, டையன்மா ரெல்லா மொருங்கு" கலி. க0எ: ௩0 - ௩௪.

உ. "மணற்சூழப் பெய்து" (கலி. ககச: கஎ) என்பதும் அதன் குறிப்பும் பார்க்க.

(பிரதிபேதம்) *என்னுழை அவன்கண்ணி, †பெய்து மதலையும், ‡தங்கப்பெய்த கல்லி யாணமிப்பொழுதே. || அக்காரியமேயாமின்பஞ்சாதே, +இணைஞ்சீரடுக்கி.

தலைவனோடு அவள் சில மொழிகூறித் தறியிடங் கூறியது.

இதன் பொருள்.

(௧)பாங்கரும் (௨)பாட்டங்காற் (௩)கன்றோடு செல்வேமெம்
† தாம்பி னொருதலை பற்றினை யீங்(௪)கெம்மை
முன்னைநின் றங்கே விலக்கிய வெல்லாநீ
‡ யென்னை (௫)யே முற்றாய் விடு

எ - து: மனைப் ||பக்கத்திற், பிறர் சேருதற்கரிய, நாம் பயிர் செய்யுந் தோட்டத்திடத்தேகன்றோடுபோகாநின்றேம்; அம்மனம்போகின்றஎம்முடைய கையில் தாம்பின் ஒரு தலையைப் பிடித்தனையாய் எம்மை இவ்விடத்தே ÷ முன் பேயும் ஒருதர் நின்று விலக்கினாற்போல விலக்குதற்கு, எடா! நீ என்ன பித்தேறினாய்? நீ என்னைப் போகவிடு என்றாள். எ - று.

. . . . . . . . . . . . . . . . .

௧. "பாங்கரும் கானத்து" கலி. ௧௧௫: ௧௫.

௨. "பாட்டங்கால்" கலி. ௧௧௧: ௪.

௩. "கன்றெல்லாந் தாம்பில்" கலி. ௧௧௨: ௧ - ௨. என்பதும் அதன் குறிப்பும் பார்க்க.

௪. "பேரேமுற்றார்போல முன்னின்று விலக்குவாய், யாரெல்லா நின்கை யறிந்தனவை யில்வழி" கலி. ௧௧௩: ௪ - ௫.

௫. இந் நூற்பக்கம் ௭௨௧: ௫ - ஆம் குறிப்புப் பார்க்க

(பிரதிபேதம்) * விலக்கியவந்தனையாேடு, † தாம்பிலொருதலை, ‡ என்னை முற்றாஅவாவிடு, || பக்கத்திற்சேருதற்கரிய நாம்பயிரைச்செய்யும், ÷ முன்பேயுமொருத்தர் நின்று விலக்கினாற்போல.

## நான்காவது முல்லை கலி. ௭௩௭

௫ * விடேஎன், (௧)தொடீஇய செல்வார்த் தமித்தெதிர் மண்டுங் கடு †வய நாகுபோ லோக்கித் (௨)தொடுவாயி னீங்கிச் சினவுவாய் ‡ மற்று

எ - து: அதுகேட்டவன், யான் நின்னைப் போகவிடேன்; தன்னைத்

நீண்டெதற்குச் செல்லுமவர்களை இடையே விலக்கி எதிரே மிக்குச்செல்லுங் கடிய வலியினையுடைய காருபோலே செறுத்துநோக்கித் தொழுவின் வாயிலி னின்றும் போந்து நின்று பின்னைச் சினப்பா ||யென்றான். எ - று.

அ நீங்கு, கன்றுசேர்ந் தார்கட் ÷ கத (ங)விற்றுச் சென்றாங்கு
வன்கண்ண னாய்வர லோம்பு

எ - து: அதுகேட்டவள், நீ இவ்விடத்து நின்றும் போ; அதுவென் னெனில் தன்னுடைய கன்றைச் சேர்ந்தார்மேலே கோபத்தையுடைய புனிற் றாச் ×சென்றாற்போல நீ என்மேலே வந்தது காணில் யாய் தறுகண்மையை யுடையளாய் வந்துசீறுதலுமுண்டுகாண்; அவ்வரவை நீபேணிக் +கொள்வா யென்றாள். எ - று.

க0 யாய்வருக வொன்றோ பிறர்வருக மற்றுநின்
கோவரினு மிங்கே வருக *×தளரேன்யா
(ச)னீயருளி நல்கப் பெறின்

---

க. வயாவென்பது வேட்கைப் பெருக்கத்தை யுணர்த்துமென்பதற்கு, "தொடீஇய செல்வார்த் துமித்தெதிர் மண்டுங், கடுவயா காருபோ னோக்கி"என்பதனை மேற்கோள்காட்டி, வயாவென்பது கன்றின்மேற் காதன்மிகுதி குறித்து நின்றதென்பர், தெய்வச்சிலையார்; தொல். உரி. ரு. கஎ. 'வயாவென்'

உ. எழுப்புதல் எடுப்புதலென வருதல்போல, தொழு, தொடுவென ழகரம் டகரமாய் வந்ததுபோலும்.

ங. (அ) "ஈற்றா, அச்சப்பொருளில் ஒன்றாகக் (தொல். மெய்ப். ரு. க) கூறப்பட்டிருத்தலும் (ஆ) "கடுஞ்சூலா காருபோ னிற்கண்டு காளை, நடுங்கஞர் உற்றதென் னெஞ்சு" (கலி. கக0: கச- கரு) என்பதும் (இ) "கன்றமர் கறவை மான, முன்சமத் தெதிர்ந்ததன் றோழற்கு வருமே" (புறம்: உஎரு: அ - கூ.) என்பதும் ஈண்டு அறிதற்பாலன.

ச. (அ) "நின்றோழி யென்னை, யருளியல் வேண்வேல்" (ஆ) "களிறன் னான் றன்னையொரு, பெண்டி ரருளக் கிடந்த தெவன்கொலோ"

(பிரதிபேதம்) * விடேன் தொடிய செல்வோர்த். †.வயாகாருபோனோக்கிக் கொலையையா. ‡ மற்று நீங்கு. எ-து: || என்றான் தன் கன்று, + கதவிற்றாய், × சென் றாற்போல, செற்றாற்போல, + கொள்வோன்றான். யாய்.

எ - து: அதுகேட்டவன், நீ அருள்செய்து என்னைக் கூடப்பெறின், அவ்விடத்தே ஒன்று தாய் வருக; ஒன்று அயலார் வருக; அவர்களேயன்றிப் பின்னை நின் தந்தை தான் வரினும் வருக; அதற்கு யான் வருந்தேனென் றான். எ - று.

கஅ *நின்னையான் சொல்லினவும் பேணாய் நினைஇக்
(க)கனைபெய †லேற்றிற் றலைசாய்த் தெனையதூஉ
மாறெதிர் கூறி மயக்குப் படுகுவாய்
கலத்தொடியாஞ் செல்வுழி நாடிப் புலத்தும்
‡வருவையா னுணிலி நீ

எ-து: அதுகேட்டதலைவி, நின்னையான் எத்தன்மையவாகவுஞ்சொன்ன ‖வார்த்தைகளைப் பரிகரியாயாய்க் கூட்டத்தையே நினைந்து செறிந்த மழை யிடத்து எறுபோலே தலையைச் சாய்த்து யான் கூறியதற்கு எதிராகச் சில சொற்களைக் கூறி இங்ஙனம் மயக்கமுறுகின்றவனே! நாணமில்லாதவனே! நீ கறவைக்கலத்தோடே யாஞ் செல்லும் பசுமேய்க்கின்ற இடத்தையும் நாடி என் தமையன்மார் நிற்கும் புலத்திலும் வருவையாயிருந்தாய்; ஆண்டுக் கூடுது மெனக் குறியிடங் கூறினாள். எ - று.

இதனால், ÷இருவர்க்கும் புணர்ச்சியுவகை பிறந்தது.
இஃது ஐஞ்சீரடுக்கிவந்த கலிவெண்பாட்டு. (கசு)

(ககஎ.) மாண வுருக்கிய நன்பொன் மணியுறீஇப்
பேணித் துடைத்தன்ன மேனியாய் கோங்கின்
முதிரா விளமுகை யொப்ப வெதிரிய
தொய்யில் பொறித்த வனமுலையாய் மற்றுநின்
கைய தெவன்மற் றுரை;

சு கையதை, சேரிக் கிழவன் மகளேன்யான் மற்றிஃதோர்
மாதர்ப் புலைத்தி விலையாகச் செய்ததோர்
போழிற் புனைந்த வரிப்புட்டில் புட்டிலு ளென்னுள
காண்டக்கா யெற்காட்டிக் காண்;

(௩) "இருளுறழ் கூந்தலா ளென்னை, யருளுறச் செயினுமக் கறலுமா ரதுவே" (௪) "நீகல்லி னுண்டென் னுயிர்" கலி. ௬௬: ௧௬ - ௧௭, ௬௬ - ௨௦; ௪௪௦: ௯௯ - ௯௪; ௧௪: ௧௨.

௪. "களைபெயல்" (கலி. ௪௫: ௪) என்பதும் அதன் குறிப்பும் பார்க்க.

(பிரதிபேதம்) * கிளையியான், † எற்றித் தலைசாய்த்து, ‡ வருகுலையயால், || வார்த்தைகளையும். பரிகரியாய், ÷ இருவரும் புணர்ச்சியுலைக பெற்றிறுர் இதை அறிசி



காணினி, தோட்டார்*கதுப்பினென் றோழி யவரொடு
காட்டுச்சார்க் கொய்த சிறுமுல்லை மற்றிவை
முல்லை யினையயாயின் முற்றிய கூழையா
யெல்விற்றுப் போழ்தாயி னீதோளிக் கண்டேனுற்
செல்லென்று நின்னை விடுவேன்யான் மற்றெனக்கு
மெல்லிய தோரா வறிவு,

*இஃது ஆற்றிடைத்தலைவன் தலைவியைப் பகயதுவினும்சேர்ந்தது.

இதன் பொருள்.

மாயா வருங்கிய கன்(௧)பொன் மணியுரிஇப்
பெயனிக் குழைத்தன்ன பெடியாய்(௨) கோங்கின்
முதிரா விழமுகை பொரப்ப வெதிரி

. . .

௧. "பொன்னுரை மணியன்ன மாமைக்கண்" (கலி. ௪அ: ௧௭) என்பதும் அதன் குறிப்பும் ஒப்புநோக்கற்பாலன.

௨. கோங்கு பாலைநிலத்துக்குரித்தாகக் கூறப்படுவது; பொரியரையுடையது; வேனிற்காலத்து மலரும் இயல்பினது; பிரதகத்செய்கையில் மதவரிக்குதலை கேட்டு மலர்வதாகக் கூறப்படுவது. இம்மலர் பொன்னிறமும் விரிந்து தோன்றலுமுடையதாதலால், இதற்கு விளக்கும் பொற்கிண்ணமும் பொற்றட்டும் பொற்றகட்டுத்தட்டும்பொற்குடையும் சரிதகம்மென்னுமாபரணமும் உவமையாகக் கூறப்படுகின்றன. இவை

(அ) "அமர்முலை டகரமே ரான கோங்கமு, மெல்வழு மெல்லடி பின்னை வுருவகைத், தலைவனே டவ்வுழிச் சார்ந்தின்புற, நிலைபெறு பஞ்சியி னெறிக நிற்க்குமே" எனவும் (ஆ) "பொரியரைக் கோங்கின் பொன் மருள் பசவீ" எனவும் (இ) "இவர்ந்லைக் கோங்கம பயந்த, வவ்மிகு கொழுமுகை யுடையும் பொழுதே" (ஈ) "வேனிற் கோங்கின் பூம் பொருட்டு" எனவும் (உ) "மாங்க யாதர் குதலையைக் கேட்டலுர், தேங்கொள் போது சினைதொறும் பூத்தலால்" எனவும் (ஊ) "பொன் போதலர் கோங் கோங்கு சோலை" எனவும் (எ) "கோங்கின், கா லுறச் சுழன்ற கண்கமழ் பனிமலர், கைவிடு சுடரிற் றேன்றும்" (ஏ) "செல்சுடர் செடுங்கொடி போலப், பல்பூங் கோங்க மணிந்த காடே" எனவும (ஐ) "வள்ளப்போற் கோங்கு மலருந் திருநாடன்" எனவும் (ஒ) "கோங்கலர் சேர்ந்த மாங்கனி தன்னைப், பாக்குற விருந்த பல்பொறி மஞ்ஞையைச், செம்பொற்றட்டிற் றீம்பா லேந்திப், பைங்கிளி யூட்டுமோர் பாவையா மென்றும்" எனவும் (ஓ) "பொன்

(பிரதிபேதம்.) * இவ தூம்பிடைதக்கவில்லை.

## ஏசும் கலித்தொகைக்கள்.

(க)தொய்யில் பொறித்த வனமுலையாய் மற்றுநின்
கைய தெவன்மற் றுரை

எ - து: மாட்சிமைப்பட உருக்கி ஓடவைத்த நல்ல பொன்னிலே நீல மணியை அழுத்திப் பேணி ஒப்பமிட்டாற்போன்ற கரிய நிறத்தையுடையாய்! முதிராத கோங்கினது இளைய முகையையொப்பத் தோன்றின தொய்யி லெழுதினவனமுலையையுடையாய்! பின்னை நின் கையிடத்தது யாதுதான் உரையென்றான். எ - ற.

௬ கையதை, சேரிக் கிழவன் மகளேன்யான் மற்றிஃதோர்
மாதர்ப் புலைத்தி விலைபாகச் செய்ததோர்
போழிற் புனைந்த வரிப்புட்டில் புட்டிலு ளென்னுள
காண்டக்கா யெற்காட்டிக் காண்

எ - து: அதுகேட்டவள், என் கையிடத்தது, இச்சேரிக்குரிய இடை

யர்மகளாயிருப்பேன் யான், பின்னை என் கையில் இருக்கின்ற இது காதலை யுடைய புலத்தி விற்கப்படுவதொன்றாக முடைந்ததொரு புட்டில்; அது தான் பின்பு பனங் குருத்தின் வகிராற் பொத்தின தொழிலையுடைய புட்டி லென்றாள். அதுகேட்டவன், (உ) காட்சித்தக்கவளே! இப்புட்டிலுள் என்ன பண்டங்களுள? அவற்றை எனக்குக் காட்டிக்கா†ணென்றான். எ - று

---

செய் கன்னம் பொலிய வெள்ளி, நுண்கோ லறைகுறைந் துதிர்வன போல, வரவ வண்டின மூதுதொறும் குலைத், தோங்குசினை நறவீ கோங்கல ருறைப்ப" எனவும் (ஔ) "புல்லிதழ்க் கோங்கின் மெல் லிதழ்க் குடைப்பூ" (ஃ) "குடைமாக மெனவேர்இக் கோங்கம்போ துவிழ்ந்தனவே" (அஅ) "குடையவிழ்வன கொழுமலரின குளிர்களி யன கோங்கம்" (ஆஆ) கோங்கு பொற்குடை கொண்டு கவித்தன" எனவும் (இஇ) "கைவல் வினைவன் தையுபு சொரிந்த, சுரிதக வுரு வின வாகிப் பெரிய, கோங்கங் குவிமுகை யவிழ" எனவும் வருவன வற்றால் அறியலாகும். இதன் முகை பொன்னிறமுடையதென்பது கலி. ௫௬: ௧௨-ஆம். அடியாலுணரப்படும். இதன் காய் சால்போன்ற தென்றும் பஞ்சுடையதென்றும் கூறுவர்; இதன் அரும்பும் மகளிர் கொங்கையும் ஒன்றற்கொன்று உவமையாகக் கூறப்படுதலை இந்நூற் பக்கம் ௩௫௪. உ - ஆம் குறிப்பால் உணர்க.

க. (அ) "தொய்யில் பொறித்த சுணங்கெதி ரிளமுலை" மது. ௪௧௬. (ஆ) "தொய்யில் பொறித்த வனமுலை" (இ) "தொய்யில் பொறித்த வழி" கலி. ௬௭: ௧௨; ௭௪: ௬.

உ. காண் - அழகுமாம்.

(பிரதிபேதம்) *கரண்டக்காய் காட்டிக்காண். † என்றான் தோட்டார்.

## நான்காவது முல்லை கலி.



காணிநி, (க)தோட்டார் கதுப்பினென் றோழி யவரொடு
காட்டுச்சார்க் கொய்த சிறுமுல்லை மற்றிவை
முல்லை யிவையாயின் முற்றிய கூழையா

யெல்லிற்றுப் போழ்தாயி னீதோளிக் கண்டேனுற்
(உ)செல்லென்று நின்னை விடுவேன்யான் மற்றெனக்கு
மெல்லிய தோரா வறிவு.

எ - து: அதுகேட்டவள், இனிக்காண்பாயாக; பின்னை இவை புதுப்பூவாலே நிறையப்பட்ட மயிரினையுடைய என் தோழி ஆயத்தாருடனே காட்டிடத்தே பறித்த சிறுமுல்லையென்றாள்; அது கேட்டவன், முடிகூடின மயிரினையுடையாய்! யான் தனியே இவ்விடத்தே கண்டேனல்; இருந்நறுவை முல்லைப்பூவாயின், இவை தொடுத்துமுடித்து நான் சூடுதற்குப் பொழுதாயின், ஒளி இத்தன்மைத்தாயிராநின்றது; நின் நினைவு போக்கில்லையாயில் யான் போவென்று விடுவதுஞ் செய்வேன்; பின்னை எனக்கு நின்னைப் போகவிடுதலை †ஓராது இவன் என் அறிவு இளைத்திராநின்றது; இனி இக் கூட்டத்திற்கு உடம்படல் நில்லேன்றான். எ - று.

இது (௩)‡இதோளி யதோளியெனச் சுட்டு நீண்டு நின்றது; இது சுட்டு முதலாகிய இகரவீற்று வல்லெழுத்து மிக்கு நின்றது.

---

க. (அ) "தோட்டார் கதுப்பினள்" குறள். கஎ0௯. (ஆ) 'தோட்டார் குழலியொடு" சிலப். கடு: ககஅ.

உ. "நின்மொழிகொண் டியானோ விடுவேன்மற் றென்மொழியொன், றென்னெஞ்ச மேவல் செயின்" கலி. கக௩: கஎ - கஅ.

௩. "ஒரு காலத்து வழங்கப்பட்ட சொல் ஒரு காலத்து வாராதாகலும் பொருள் வேறுபடுதலுமுடைய; அதோளி இதோளி உதோளி எனவும் குயின் எனவும் நின்ற இவை ஒருகாலத்துளவாகி இக்காலத்தில வாயின. இவை முற்காலத்துளவென்பதேகொண்டு வீழ்ந்தகாலத்தும் செய்யுள் செய்யப்படா. அவை ஆசிரியர் நூல் செய்த காலத்து உளவாயினும் கடைச்சங்கத்தார் காலத்து வீழ்ந்தமையிற் பாட்டிலுள்

தொகையினும் அவற்றை காட்டிக்கொண்டு செய்யுள் செய்திலர்; அவற்றுக்கு இது மாபிலக்கண மாகலி னென்பது" என்ற பேராசிரியரும் "ஒருகாலத்து வழங்கிய சொற்கள் ஒருகாலத்து வழங்காதனவுமுள" என்பதற்கு, அதோளி இதோளி உதோளி குயின் என்பவற்றை மேற்கோள் காட்டி, 'இவை இடைச்சங்கத்திற் காகாவாயின'

பிரதிபேதம்) * என்டேறு பிருந்தினை, † ஒராதவனன்றறிவு, ஓராய் வவனைறறிவு ‡ இது தொளி யீதொளியென,



இதனால், இருவர்க்கும் புணர்ச்சியுவகை *பிறந்தது.

---

என்று நச்சினார்க்கினியரும், "மரபேதானும்" என்னும் (தொல். செய். ௮௦.) சூத்திரத்தினுரையில் எழுதி யிருக்கிறார்கள்; 'இவை இடைச் சங்கத்திற் காகாவாயின' என்ற நச்சினார்க்கினியருக்குக் கடைச்சங்கத்திற் காகுமென்பது கருத்தென்று கொள்ளலாகாது; இச்சொற்கள் வழக்கி னில்லையென்பதே கருத்தென்று கொள்ள வேண்டும். ஆனால், 'சுட்டு முதலாகிய விகாரவிறுதியும்' என்னும் (தொல். தொகை. கஎ) சூத்திரவுரையில் இளம்பூரணர்சுட்டுமுதலாகிய இகாரவிறுதிக்கு, அதோளி, இதோளி, உதோளி என்னுஞ் சொற்களை உதாரணங்காட்டி யிருக்கிறார். நச்சினார்க்கினியரும் அவரையே பின்பற்றி அச்சூத்திரவுரையில் அப்பகுதிக்கு அச்சொற்களையே உதாரணங் காட்டி யிருப்பதோடு 'அதோளி - அவ்விடமென்னும் பொருட்டு' என்று குறிப்பும் எழுதியிருக்கிறார். "ஞநமவவென்னும் புள்ளிமுன்னர் யஃகா னிற்றன் மெய்பெற் றன்றே" என்னும் (தொல். நூன்மரபு உஎ.) சூத்திரத்துரையில், இங்ஙனம் ஆசிரியர் சூத்திரஞ்செய்தலின் அக்காலத்து இந்நான்கு புள்ளிகளின் முன்னும் யகாரம் வரப்பெற்று ஒரு மொழியாக வழங்கிய சொற்கள் உளவென்பது பெற்றாம். அவை இக்காலத்து இறந்தன என்று கூறுபவராகிய இவர், அதோளி முதலியசொற்கள் முற்காலத்துளவாகி இவர்காலத்து இலையாயின் 'சுட்டு

முதலாகிய விகாரவிறுதியும்' என்னுஞ்சூத்திரவுரையிலும் 'இங்ஙனம் ஆசிரியர்சூத்திரஞ்செய்தலின் அக்காலத்துச், சுட்டுமுதல் இகரவீறுன சொற்கள் உளவென்பது பெற்றாம்; அவை இக்காலத்து இறந்தன; என்றன்றோ கூறவேண்டும். இவர் கூற்றுள்ளே முன்னுக்குப் பின் முரணுகின்றதே எனின் முரணாது அமைத்துக்கொள்ளல் வேண்டும். நாமறிந்த அளவில் இச்சொற்குப் பொருளறிவித்தவர் இவரே. அங்கு, அதோளியென்பதற்கு அவ்விடமென்று பொருள்கூறி யிருப்பது போலவே இந்நூலிலும் இச்செய்யுளில் 'இதோளி' என்னுஞ் சொல்லுக்கு 'இவ்விடம்' என்று பொருள் கூறியிருக்கின்றார். இவற்றையும் செய்யுளியலுரையில் இவர் எழுதியிருப்பதையும் நோக்கின், இச் சொற்கள் மிகுதியாக வழங்காமை கருதிச் செய்யுளியலில் அவ்வாறு எழுதினாரென்றும் இவை அருகி வழங்குமென்பதே இவர் கருத்தென் றும் கொள்ளுதலேதகுதியாம். "கதிர்த்ததண் பூணி கம்புடாழ் பீலிக் கணைகுரா ஞாரைவண் டானம்" (சீவக. ௨௧௦௮.) என்பதனுரையில் 'பூணிகம்பு என்பன இறந்தவழக்கு' என்று இவர் எழுதியுள்ள (பிரதிபேதம்) * தோன்றிற்று.

## கலித்தொகை ௧௧௭.



இது கொச்சகக் கலி. (௧௭)

*முல்லைக்கலி முற்றும்.



கருத்தையும் நோக்குக. 'இதோளி' என்னுஞ்சொல் ஒன்றே முதல் நீண்டாவது இந்நூலிற் காணப்படுகின்றது; அதோளி உதோளி யென்பன நாமறிந்த அளவில் திரிடத்துங் காணப்படவில்லை. வடமலையாளமாகிய தளிச்சேரிப்பக்கத்து இப்போதும் ஒளியென்பது இடமென்னும் பொருளில் பெரியோரைச் சுட்டி உயர்சொற் கிளவியாய் வழங்குமென்ப; இச்சொற்கள்பண்டைக்காலத்தே சுற்றிகரக்குறைந்து வகர சுருயும் வழங்கின வென்பது நோல். புள்ளி. ௧௦௩-ஆம் சூத்திர வுரைகளிலுள்ள உதாரணங்களால் அறியலாகும். கன்னடத்தில் அதரோன் இகரோன் என்பன அதில் இதிலென்னும் பொருளில் வழங்குமென்பதும் இங்கே கருதத்தக்கது. அன்றியும் இக்காலத்து அவ்விடம் இவ்விடமென்னும் பொருளில் வழங்கும் அதோ இதோ என்னுஞ் சொற்களும் அதோள் இதோள் என்பவற்றின் சிதைவோஎன்றும் ஐயமுண்டாகிறது. இவற்றைப் பாகதச் சிதைவென்பாருமுளர். இவற்றுள், இதோவென்பது சிவஞானமுனிவராற் செய்யுளிலும் பல இடத்து எடுத்தாளப்படுகிறது. "மற்றிதா தோன்றுகின்ற, சோலைசூழ் வரையினொற்றி" (சீவக. ௧௨௩௨) என்புழி, இதா வென்பது இவ்விடமென்னும் பொருளில் சிந்தாமணியிலும் வந்துள்ளது. அங்கு 'இதா, திசைச்சொல்' என்று இவ்வுரையாசிரியர் குறிப்பு எழுதியிருக்கிறார்.

(பிரதிபேதம்) * முல்லைப்பாட்டு முற்றும், முல்லை முற்றும்.

உ

வருணன் துணை.

---

# கலித்தொகை

## மூலமும்

## ஐந்தாவது நெய்தற்கலி.



(ககஅ.) வெல்புகழ் மன்னவன் விளங்கிய வொழுக்கத்தா
னல்லாற்றி னுயிர்காத்து நடுக்கறத் தான்செய்த
தொல்வினைப் பயன்றுய்ப்பத் துறக்கம்வேட் டெழுந்தாற்போற்
பல்கதிர் ஞாயிறு பகலாற்றி மலைசேர
ரு வானூது கனூழ்கொண்ட வுலகத்து மற்றவ
னேனையா னளிப்பான்போ லிகலிருண் மதிசிப்பக்
குடைநிழ லாண்டார்க்கு மாளிய வருவார்க்கு
மிடைநின்ற காலம்போ லிறுத்தந்த மருண்மாலை;
கூ மாலைநீ, தூவறத் துறந்தாரை நினைத்தலிற் கயம்பூத்த
போதுபோற் குவிந்தவென் னெழினல மெள்ளுவா
யாய்சிறை வண்டார்ப்பச் சினைப்பூப்போற் றளைவிட்ட
காதலர்ப் புணர்ந்தவர் காரிகை கடிகல்லாய்;
கரு மாலைநீ, தையெனக் கோவலர் தனிக்குழ லிசைகேட்டுப்
பையென்ற நெஞ்சத்தேம் பக்கம்பா ராட்டுவாய்
செவ்வழியாழ் நரம்பன்ன கிளவியார் பாராட்டும்
பொய்தீர்ந்த புணர்ச்சியுட் புதுநலங் கடிகல்லாய்;
கஎ மாலைநீ, தகைமிக்க தாழ்சினைப் பதிசேர்ந்து புள்ளார்ப்பப்
பகைமிக்க நெஞ்சத்தேம் புன்கைபா ராட்டுவாய்

94

தகைமிக்க புணர்ச்சியார் தாழ்கொடி நறுமுல்லை
முகைமுகந் திறந்தன்ன முறுவலுங் கடிகல்லாய்;

எனவாங்கு;

௨௨ மாலையு மலரு நோனு தெம்வயி
னெஞ்சமு மெஞ்சுமற் றில்ல வெஞ்சி
யுள்ளா தமைந்தோ ருள்ளு
முள்ளி யுள்ள முள்ளு ளுவந்தே.

இது பிரிவிடையாற்றுத தலைவி மாலைப்பொழுது கண்டு அதனேடு புலம்பித் தோழிகேட்ப அதனேடு புலந்தது.

இதன் பொருள்.

(க)வெல்புகழ் மன்னவன் விளங்கிய வொழுக்கத்தா
னல்லாற்றி னுயிர்காத்து நடுக்கறத் (உ)தான்செய்த
தொல்வினைப்*பயன் றுய்ப்பத் துறக்கம்வேட்†டெழுந்தாற்போற்
(௩)பல்கதிர் ஞாயிறு பகலாற்றி மலைசேர
௫ வானுத ‡லுழ்கொண்ட வுலகத்து மற்றவ
னேனையா னளிப்பான்போ லிகலிருண் ||மதிசீப்பக்

க. (அ) "வென்றிப் பல்புகழ்" மலை. ௫௪௪: (ஆ) "மறம் வீங்கு பல்புகழ்" பதிற். ௧௨: ௬. என்பவைகளும் (இ) இந்நூற்பக்கம் ௧௪௫: ௭ - ஆம் குறிப்பும் ஒப்புநோக்குக.

உ. (அ) "அறம்பெரி தாற்றி யதன்பயன் கொண்மார், சிறந்தோ ருலகம் படருநர் போல" பரி. ௧௧: ௬௦ - ௬௧. (ஆ) "வினைந்தார் வினையின் விழுப்பயன் றுய்க்குந், துளங்கா விழுச்சீர்த் துறக்கம்" பரி. 'வானுர்' ௬௪ - ௬௭. (இ) "புண்ணியம் புரிந்தோர் புகுவது துறக்க மென்னுமீ தருமறைப் பொருளே" (ஈ) "எண்ணிய வின்ப மன்றித் துன்பங்க ளில்லை யான, புண்ணியம் புரிந்தோர் வைகுந் துறக்கமே போன்ற தன்றே" (உ) "மாண்டதோர் நலத்திற் றமென் றுணர்த்துதல் வாய் மைத் தன்றால், வேண்டிய வேண்டி னெய்தி வெறுப்பின்றி விழைந்த துய்க்கு, மீண்டரும் போக வின்ப மீறில தியாண்டுக் கண்டா, மாண் டது துறக்க மஃதே யருமறைத் துணிவு மம்மா" கம்ப. நகரப். ௫.

சவரிபிறப்பு, க. கடறுவு. கச.

ந. "கல் சேர் தன்றே பல்கதிர் ஞாயிறு" அகம். கஉ0: ரு.

(பிரதிபேதம்) * பயன்றய்ப்பான், † உழந்தாற், ‡ கவிழ்கொண்ட, ‖ மசிப்ப, மசிறப்ப.

## ஐந்தாவது நெய்தல் க.



குடைநிழ (க)*லாண்டாற்கு மாளிப வருவாற்கு
மிடைநின்ற காலம்போ லிறுத்தந்த மருண்மாலை

எ - து: (உ)பகைவரிடத்துப் போர்த்தொழில்நிகழ்த்த வல்ல விளங்கிய ஒழுக்கத்தாலே வெல்கின்ற புகழையுடைய அரசன் நல்ல தருமநூனெறியாலே (ங) பல்லுயிர்களையும் பாதுகாத்துத் தீவினையால் உளதான நடுக்கம் மனத்திலில்லையாம்படி தான்செய்த பழவினையின்பயனை நுகர்தற்குச் சுவர்க்கத்தை விரும்பிப் போனாற்போல பலகதிரையுடைய (ச) ஞாயிறு தனக்குப் பகையாகிய இருளைக் கெடுத்து உலகத்திற்குப் பகற்பொழுதை முறைமையாற் செலுத்தி மலையிலே சென்று சேராநிற்க, அமையாதே கலக்கங்கொண்ட உலகத்தினிடத்தே பின்னை †அவ்வரசனுக்குப்பகைவனாகிய அரசன் வந்து அவ்வுலகைச் சிறிதே அளிப்பான்போல, தனக்கு மாறுபாட்டையுடைய இருளை மதி போக்காநிற்க, அந்தக்குடையால் நிழல்செய்து ஆண்ட அரசனுக்கும் அவ்வுலகை ஆளவரும் அரசனுக்கும் நடுவுநின்ற வருத்தந்தருகின்ற காலம்போல வந்துவிட்ட மாலாய்! நீ மருட்சியையுடைய மாலையாய் இருந்தாயென்றான். எ - று.

ரு மாலைநீ, (ச)‡தூஉறத் துறந்தாரை நினைத்தலிற் கயம்பூத்த
போதுபோற் குவிந்தவென் னெழினல மெள்ளுவாய்

க "புற்கென்று ரந்தி புனைமலர்க்க ணீரரும்ப, நிற்கின்ற தந்தோ நிலங்காப்பான்-முற்கொண், டடைகின்ற வேந்தர்க்கு மாண்டஞ்சி னோர்க்கு, மிடைநின்ற காலம்போ லின்று" நள. சுயம்வர. ௬00.

௨. "விரியிருட் பகையை யோட்டித் திசைகளை வென்று மேனின், றொருதனித் திகிரியுந்தி யுயர்புகழ் நிறவி னானு, மிருசிலந்தேவர்க்கு முள்ளத் திருந்தன னென்ன வீர்த், செருவலி வீர னென்னச் செங்கதிர்ச் செல்வன் சென்றான்" கம்ப. கங்கைப். ௪௭.

௩. "மன்னுயி ரோம்பி யருளாள்வாற் கில்லென்ப, தன்னுயி ரஞ்சும் வினை" குறள். ௨௪௪.

௪. (அ) "விரிகதிர்பரப்பி.........மல்லன் மூதூர் மாலைவந் திறுத்தென......
......அந்திவானத்து வெண்பிறை தோன்றிப், புன்கண்மாலைக் குறும் பெறிந்தோட்டி" சிலப். ௪: க - ௨௦.

௫. (அ) "இனந்தூய்மை தூவா வரும்" (குறள். ௪௫௫.) என்பதன் விசேட வுரையில், தூவென்பது பற்றுக்கோடென்னும் பொருளில் வருதற்கு, 'தூவறத் துறந்தானை' என்பதனை மேற்கோள் காட்டுவர், பரி. தாவென்பதேயன்றித் தூவென்பதும் வலியென்னும் பொருளில் வருமென்பதை, (ஆ) "தூவறுத்தலின்" மது. க௮௮. (இ) "தூவெ கிர்ந்து" பதிற். ௮: ௩௪. (ஈ) "தூவாகாது" (உ) "தூவறத் துறந்த னன்" (ஊ) "தூவற கீபப" கலி. ௧௭: ௨௦, க௫க: ௧, ௧௪௯: ௧௧.

(பிரதிபேதம்) * ஆண்டோர்க்கும், ஆண்டார்க்கும். † அரசனுடையபகைவரெல்லாம். ‡ தாவற.

## எ௪௮ கலித்தொகை ௧௧௮.

யாப்பிறை வண்டார்ப்பச் சினைப்பூப்போற் றளைவிட்ட
(க)காதலர்ப் *புணர்ந்தவர் காரிகை கடிகல்லாய்

எ * து: அதற்குக் காரணம் என்னெனில், நமக்கு வலியில்லையாம்படி நம்மைத் துறந்தவரை நினைக்கையினாலே (உ)கயங்கள்பூத்த போதுபோலே நின்னைக்கண்டு மனங்குவித்த என்னுடைய அழகினையுடைய நலத்தை இழக்கின்ற நீ அழகிய † சிறகினையுடைய வண்டுகள் ஆரவாரிக்கும்படி முறுக்கு நெகிழ்ந்த கோட்டுப்பூப்போலே மன ‡நெகிழ்ந்த காதலரைக் கூடியிருக்கின்ற மகளிருடைய அழகைப் போக்கமாட்டாயென்று அதன் மருட்சி கூறினாள். எ - று.

||இதனால், நீ வருத்தினவர்களை வருத்தியே விடுவையென்றும் × மகிழ்ந்தவர்களை மகிழப்பண்ணியே விடுவையென்றும் அதன் அருளின்மைநோக்கி மருட்சியையுடைய மாலையாய் இருந்தாயென்றாள்.

இறுத்தக்கமாலாய் ! நீ மருண்மாலையாய் இருந்தாயென மேல்வரும் 'மாலைநீ' என்பனவற்றையும் இங்ஙனங்கூட்டிப் பொருள்கூறிக்கொள்க.

கக. (ங)மாலைநீ, தையெனக் கோவலர் தனிக்குழ லிசைகேட்டுப்
பையென்ற நெஞ்சத்தேம் பக்கம்பா ராட்டுவாய்
(ச)செவ்வழியாழ் நரம்பன்ன = கிளவியார் பாராட்டும்
பொய்தீர்ந்த புணர்ச்சியுட் புதுநலங் கடிகல்லாய்

எ - து: கோவலருடைய தனித்தகுழலோசை தையென்னும் ஓசைபட ஒலிப்ப அதுகேட்டுக் குறைந்த நெஞ்சத்தை ÷ யுடையேம் பக்கத்தேநின்று

---

என வருபவையும் வலியுறுத்தும். (எ) "தூவறந் துறத்தல்" கலி. கஉக: க-ஆம் அடிக்குறிப்புப் பார்க்க.

க. "தாழ்துணை துறந்தோர் தனித்துய ரெய்தக், காதலர்ப் புணர்ந்தோர் களிமகிழ் வெய்த,........மாலைவந் திறுத்தென" சிலப். ச: கரு - உ0.

உ. (அ) "கோட்டுப்பூப் போல மலர்ந்துபிற் கூம்பாது; வேட்டதே வேட் டதா நட்பாட்சி - தோட்ட, கயப்பூப்போன் முன்மலர்ந்து பிற் கூம்பு வாரை, நயப்பாரு நட்பாரு மில்" நாலடி. உகரு. (ஆ) "உலகந் தழீஇய தொட்ப மலர்தலுங், கூம்பலு மில்ல தறிவு" குறள். சஉரு. (இ) "நலமிக வுயர்ந்தோர் தம்மை நண்புறத் தழுவிக்கொள்க, நிலவிய கயத்துப் பூவை நிகர்தரா துயர்ந்த கோட்டு, மலரென வவர்பானிற்க வாக்கமிக் கதேத்த காலே, மலர்வதும் வறங்கூர் காலைக் கூம்பலு மொழிக ஸ்மக்தா" விநாயக. அரசியற்கை. ரு.

ரு. ஞாயிறு முதலியன சொல்லுக போலவும் கேட்குக போலவும் சொல்லி னமையப் பெறுமென்புழி, கேட்குமபோலவப் பொழுதொடு

(பிரதிபேதம்) * புணர்ந்தவர்க்கரிதை, † நிறைவினையுடைய, ‡ செறிழ்ந்த காதலரை. || இதனுல் வருந்தின. × மகிழ்ந்தவரை, = இனியாரைப் பாராட்டும், ÷ உடையேமுடைய பக்கத்தே.

## ஐந்தாவது நெய்தல் .ரு. ௭௪௩

உயிரைக்கொள்ளாதே விடுதுநிந்துப் பாராட்டுகின்ற நீ தங்கணவர் பிரிந்த காலத்துச் (க) செவ்வழியென்னும் பண்ணையுடைய யாழினது நரம்போசை போலவருந்திக்கூறும் மொழியினையுடையமகளிர் அக்கணவர்(?) வருந்தின எம் போற் (உ) கனவிற் புணர்ச்சியின்றிப் பாராட்டப்படும் கனவிற்புணர்ச்சியிற் பெற்ற புதியநலத்தைக் கடியமாட்டாய். எ - று.

களமாலை, † தகைமிக்க தாழ்சினைப் பதிசேர்ந்து புள்ளாரப்பப்
‡ பகைமிக்க நெஞ்சத்தேம் || புன்மைபா ராட்டுவாய்
தகைமிக்க ÷ புணர்ச்சியார் தாழ்கொடி நறுமுல்லை
முகைமுகந் திறந்தன்ன முறுவலுங் கடிகல்லாய்

எ - து: அழகு மிக்க தாழ்ந்த சினைகளில் தமக்கிருப்பிடத்தே(ரு.)பேடுஞ் சேவலுமாகச் சேர்ந்து பறவைகள் ஆரவாரியாநிற்க, மற்றுள்ள பகைகளாலும்

வருத்தமிக்க நெஞ்சத்தினை ×யுடையேம் புன்மையையாங்கள் இறந்துபடாத படி பண்ணி விளைத்துப் பாராட்டுகின்றீர் அழகு மிக்ககூட்டத்தையுடைய ✝ மகளிரது தாழ்ந்த கொடியினையுடைய கரிய முல்லையினுடைய முகையின் முகத்தை வண்டுகள் திறந்தாற்போல ஆடவரால் திறக்கப்படும் முறைவலையுங் கடியமாட்டாய். எ - று.

⁎⁎எனவாங்கு அசை.

உஉ. ††மாலையு மலருநோனா தெம்வயி
னெஞ்சமு மெஞ்சுமற் றில்ல வெஞ்சி
‡‡உள்ளா தமைந்தோ ருள்ளு
முள்ளி லுள்ள முள்ளுள் ளுவந்தே

---

கூறியதற்கு, "மாலைநீ, தையெனக் கோவலர்........பக்கம்பா ராட்டு வாய்" என்பதுமேற்கோள்; தொல். செய். சூ. ககO. 'நூற்று' இளம்.

க. "நனவிற் புணர்ச்சி நடக்கலு மாங்கே, கனவிற் புணர்ச்சி கடிதுமா மன்றே" கலி. ருக: ருடு - ருசு.

உ. (அ) "என் கிளவிபோற் செவ்வழி யாழிசை" கலி. கசரு: ருஅ. (ஆ) "செவ்வழி நல்யா, ழிசையோர்த் தன்ன வின்றீங் கிளவி, யணங்குசா லரிவையை" அகம். உகஉ: கூ - அ.

ரு. பேடென்பது பெண்பறவையென்னும் பொருளில் இவ்வுரைகளிலும் கம்பர் வில்லிபுத்தூராழ்வார் குமரகுருபர சுவாமிகள் சீகாழி அருணாசலக் கவிராயர் முதலியவர் செய்யுட்களிலும் வந்துள்ளது.

(பிரதிபேதம்) ⁎ வருத்தின் எம்போற். † நகைமிகத்தாழிசை, ‡ புரிமிக்க, ‖ பண்பைபாராட்டு வாய், ÷ புணர்ச்சியொற்றும், புணர்ச்சியொய்தாழ், × உடையேமுடைய பன்மையை, ✝ மகளிருடைய தாழ்ந்த, ⁎⁎ ஆங்க, மாலை, †† மாலையுமலரு, ‡‡ உள்ளஞ்சமைந்தோருள்ள முள்ளிலுள்ள.



எ - து: நம்மைப் பிரிந்து உள்ளில்லாத உள்ளத்தாலே நம்மை நினை

யாமல் அமைந்திருந்தோரை உள்ளே உள்ளி உவந்து உன்னும் நம்முடைய நெஞ்சமும் இம் மாலையையும் [redacted]ரார் கூறும் அலரையும் பொறாதே நம்மை விட்டுப் போகாநின்றது; இனி என்செய்வேமென வருந்திக் கூறினன். எ-று.

இதனால், தலைவிக்கு இழிவு பிறந்தது.

இது "கடைநவின் றொழுகு மாங்கென் கிளவி" (க)என்ற இலக்கணஞ் சிதைய இடையிடை சொற்சீரடி வருதலின் ஒத்தாழிசையாகாது எண்ணிடையிட்டுச் சின்னங்குன்றிய(உ)கொச்சகமாயிற்று.

இது முதலிய மூன்றுபாட்டும் (௩)மாலைக்காலத்தைக்கூறினமையின் "காரு மாலையுமுல்லை" என்னும் (௪) பொதுவிதிபற்றி முல்லையுட் கோத்தல்வேண்டு மெனின், அது பெரும்பான்மைபற்றிக்கூறியது; மாலை எற்பாட்டின் பின் நிகழுங் காலமாதலின் அதற்கிவைபுபட்டு செய்தற்கும் உரித்தாயிற்று. அது

---

க. தொல். செய். சூ. கருடு.

உ. (அ)இச்செய்யுளை 'தாழிசைதோறும் தனிச்சொற்பெற்றுவந்த நேரிசை யொத்தாழிசைக்கலிப்பா' என்றுகூறி, "வெல்புகழ்............மருண் மாலை" இது தரவு "மாலைநீ, தூவறத்........காரிகை கடிகல்லாய்" "மாலைநீ, தையெனக்........புதுநலங் கடிகல்லாய்" "மாலைநீ, தகை மிக்க........முறைவலுங்கடிகல்லாய்" இவை மூன்றுந்தாழிசை. ஆங்க-தனிச்சொல் "மாலையு............ளுவந்தே" இது சுரிதகம் என்று விளக்கினர் இளம்; (தொல். செய். சூ. கருக. 'போக்கியல்') பேராசிரியர்க்கும் நச்சினார்க்கினியர்க்கும்இது உடம்பாடன்றென்பது.(ஆ)பேரா சிரியர் இச்செய்யுள் தரவுந் தாழிசையும் போக்கும் முறையானே வந்த தாயினும் 'இடைநிலைக்கிளவி தாழிசைப்பின்னர், கடைநவின்றொழுகு மாங்கென் கிளவி' (தொல். செய். சூ. கருடு.) என்னும் இலக்கணஞ் சிதைய[த் தரவிறுதியினுந்] தாழிசை[யிறுதி]கடோறுஞ் சொற்சீர்பல வருதலான் ஒத்தாழிசையெனப்படாது அதன்வகைத்தாய் எண்ணிடை யிட்டுச் சின்னங் குன்றியதூஉ(கொச்சக)மாயிற் றென்பதாலும் நச்சி னார்க்கினியர் அதனையே தழுவி, "இது 'கடைநவின் றொழுகு மாங் கென் கிளவி' என்னும் இலக்கணஞ் சிதைய இடையிடை சொற்சீரடி பலவருதலின் ஒத்தாழிசையாகாது எண்ணிடையிட்டுச் சின்னங்

குன்றிய சொச்சகமாயிற்று" என்று எழுதுவதாலும்விளங்கும். தொல். செய். சூ. கருரு.

ங. "கலியுள், மாலைக்காலம் நெய்தலின்கண் வந்தது"; தொல். அகத். சூ. அ. கச.

ச. தொல். அகத். சூ. கூ.

(பிரதிபேதம்) *மாலையுமிவ்வாறாம் கூறும்.



"திணைமயக்குறுதலும்" என்னும் (க) சூத்திரத்து "நிலனொருங்குமயங்குதலின்று" என்றதனாற் காலமொருங்கு மயங்குமென்றது கொண்டு சான்றோர் பலருஞ் செய்யுள்செய்தார். "கானன் மாலைக் கழிப்பூக் †கூம்ப" என்னும் (உ)அகப்பாட்டும் நெய்தற்கண் மாலைவந்தது. "தொல்லூழிதடுமாறி" என்னும் (ங) நெய்தற்கலியுட் கங்குலும் மாலையும் முன்பனியும் வந்தவாறுகாண்க. இந்நிலத்து மாலைவந்த பாட்டுக்கள் ‡பலவுமுள. பிற சான்றோர்செய்யுட்களுட் காலம் மயங்குமாறு பலவுங் கண்டுகொள்க. (க)

(கககூ.) அகன்ஞாலம் விளக்குந்தன் (ச)பல்கதிர் வயங்கிப்
பகனுங்கி யதுபோலப் (ரு)படுசுடர் கல்சேர
விகன்மிகு நேமியா னிறம்போல ||விருளிவர
(சு)நிலவுக்காண் பதுபோல வணி× மதி யேர்தரக்
கண்(எ)பாயல் பெற்றபோற் (அ)கணைக்÷கால மலர்கூம்பத்
(கூ)தஞ்+புகழ் கேட்டார்போற் றலைசாய்த்து மரந்துஞ்ச

க. தொல். அகத். சூ. கஉ.
உ. அகம். சo.
ங. கலி. கஉக.
ச. "பல்கதிர் மண்டிலங் கல்சேர்பு மறைய" குறிஞ்சி. உகக.
ரு. "ஒண்சுடர் கல்சேர" கலி. கஉக: க.
சு. பிறிதொடு படாது பிறப்பொடு நோக்கி முன்னைத்தான் உவமை கூறு தற்கு இவ்வடியை மேற்கோள்காட்டி, இது காணப் பிறிதாகிய பொரு

ளோடு உவமை கூறுமையிற் பிறிதொடுபடாதாயிற் றென்றும், மதியின தெழுச்சியை நோக்குதலிற் பிறப்பொடுநோக்கிற்றென்றும் கூறுவர், இளம்; தொல் உவமை. சூ. உ௩. 'பிறிதொடு'

எ. "பாயல்கொள் பவைபோலக் கயமலர் வாய்கூம்ப" கலி. க௩.௪: அ.

அ. கணைக்காலென்பது, நீர்ப்பூக்களுள் நற். உ௩௦,ஐங்.௬அ; ஆம்பலுக்கும், நற். உ௯உ, குவளைக்கும், நற். க௩அ, குறுந். க. செய்தலுக்கும் வருத லோடு திணைமொழி. ௩உ- இல் மருதக்கும் அடையாக வந்துள்ளது.

௯. (அ) "சான்றோர், புகழு முன்னர் நாணுப" குறுந். உ௫உ. (ஆ) "கோ வெனப் பெயரிய காலை யாங்கது, தன்பெயராகலி னாண்" (இ) "பரந் தோ ரெல்லாம் புகழத் தலைபணிந், திறைஞ்சியோனே" புறம். க௫உ: உக-உஉ, உஅ௫: க௩ -க௪. (ஈ) "பிறர் தன்னைப் பேணுங்கா னாணலும் .........ளராண்மை யென்னுஞ் செருக்கு" திரிகடுகம். ௯.

(பிரதிபேதம்) * இலையென்றதனால், † கூம்பும், கம்பும். ‡ பலவுமுளவென்றுணர்க. பிறசான், || இருள்வர, × மதிபோதரக், + காலையர், காலார், ┼ புகழக்கேட்டார்.



முறுவல்*கொள் பவைபோல முகையவிழ்பு புதனந்தச்
சிறு (க)வெதிர்ங் குழல்போலச் சுரும்பிமிர்ந் (உ)திம்மெனப்
(௩)பறவைதம் பார்ப்புள்ளக் (௪)கறவைதம் பதிவயிற்
கன்றமர் விருப்பொடு மன்றுநிறை புகுதா
மாவதி சேர பாலை வாள்கொளா
(௫)வந்தி யந்தண ரெதிர்கொள வயர்ந்து
செந்தீச் செவ்வழ †ரொடங்க வந்ததை
(௬)வாலிழை மகளி ‡ருயிர்பொதி யவிழ்க்குங்

௪. "ஆரும் வெதிரும்.... ..........மெல்லெழுத்து மிகுதன் மெய்பெறத் தோன்றும்" (தொல். புள்ளிமயங். சூ. ௫அ.) என்பதனால், வெதிர்ங் குழலென வந்தது.

உ. "இம்மென" கலி. ௩௯: ௫; க௨௩: ௩.

௩. பார்ப்பென்பது பறவையின் இளமைப் பெயராய் வருதற்கு, "பறவை தம்பார்ப்புள்ள" என்பது மேற்கோள்; தொல். மரபி. ௬. ௪. 'பார்ப்பும்' இளம். இச்சொல் பார்வலெனவும் வழங்கும்.

௪. (அ) "ஆன் கணங், கன்றுபயிர் குரல மன்று நிறைபுகுதர" குறிஞ்சி. ௨௧௭ - ௨௧௮. (ஆ) "மதவுநடை நல்லான், வீங்குமாண் செருத்த தீம்பால் பிலிற்றக், கன்றுபயிர் குரல மன்றுநிறை புகுதரு, மாலையும்" அகம். ௧௪: ௯ - ௧௨. (இ) "சேதா, முலைபொழி தீம்பாலெழுதுகளவிப்பக், கன்று நினைகுரலமன்றுவழிப்பட" மணி. ௫: ௧௩௦ - ௧௩௨. (ஈ) "கறவை கன்று வயிற்பட" குறுந். ௧௦௮.

௫. (அ) "அந்தியந்தண ரயர" குறிஞ்சி. ௨௨௫. (ஆ) "அந்தி யந்தணர் செந்தீப்பேண்" மணி. ௫: ௧௩௩. (இ) "கருதி யந்தணர் யாவருந் தங்கடன் கழிப்பச், சுருதியென்னும் வெஞ் சாபமே லம்புகை தொடுத்துப், பருதி தன்பெரும் பகைவர்மேல் விடுத்தலிற் பார்த்த, குருதி யாமென நிவந்தெழச் சிவந்தது குடபால்" வில்லி. கிருட்டினன்றூது. ௮௯. (ஈ) "(மறையவன்) வாம்பரித் தடந்தேர்ப் பரிதிவா னவன்போய் மறிதிரைக் குடகடல் குளிப்ப, வாம்பல்வா யவிழு மாலையங் காலத் தந்திவந்தனைத்தொழின் முடித்துத், தீம்புனற் றுறைநின் றகன்று" பிரமோத்தர. உமாமகேசவரபூசை. ௭.

௬. "மாலையோவல்லை" என்னுங் குறளின் விசேடவுரையில் "வாவிழை மகளிருயிர்பொதி யவிழ்க்குங், காலை" என்றாற்போல ஈண்டுப் பொதுமையாற் கூறப்பட்ட தென்பர் பரி; குறள். ௧௨௨௧.

(பிரதிபேதம்) * சொல்பவர்போல, † தடக்க, ‡ உயிர்ப்பொதி.

## ஐந்தாவது நெய்தல் ௨. எரு௩

கடு காலை யாவ தறியார்
(௧)மாலை (௨)யென்மனார் மயங்கி யோரே.

இது பிரிவிடை மாலைப்பொழுது கண்டு ஆற்றாத தலைவி தோழிக்கு உரைத்தது.

௧. மன் அசைநிலைக்கண் வந்ததற்கு, "மாலை யென்மனார் மயங்கியோரே" என்பது மேற்கோள்; நன். இடை. சூ. கரு. மயிலை. இவ்வடியே தமிழ். உக௪ - ஆம் செய்யுளிலும் மூன்றும் அடியாக வந்துள்ளது.

௨. (அ) என்மனா ரென்பது, இடைச்சொல் தான்சாரப்படுஞ் சொல்லிற்கு வேறாய் வருதலே யன்றி அதற்கு உறுப்பாயும் வருமென்பதற்கு மேற்கோள்; தொல். இடை. சூ. க. சே. (ஆ) "என்மனாரென்பது செய்யுண் முடிபெய்தி நின்றதோ ரார்ஈற்று எதிர்கால முற்றுச்சொல்,... ..... ....... ..... ...........என்ப என்னு முற்றுச் சொல்லினது பகரங் குறைத்து மன்னும் ஆருமென இரண்டிடைச்சொற்பெய்து விரித்தாரென்று உரையாசிரியர் கூறினாராலெனின்;-என்மனாரென்பது இடர்ப்பட்டுழிச் சிறபான்மை வாராது, நூலுள்ளும் சான்றோர் செய்யுளுள்ளும் பயின்று வருதலானும், இசைநிறையென்பது மறுத்துப் பொருள் கூறுகின்றார் பின்னும்! இசைநிறையென்றல்மேற்கோண்மலைவாதலானும் அவர்க்கு அதுகருத்தன்றென்க. மாணக்கர்க்கு உணர்வு பெருகல் வேண்டி வெளிப்படக் கூறாது உய்த்துணரவைத்தல் அவர்க்கு இயல்பாகலாற் செய்யுண்முடி பென்பது கூறாராயினார்" (தொல். கிளவி. சூ. க.) என்றும் (இ) இதனை வினைத்திரிசொல் லென்பாருமுள ரென்றும். (தொல். எச்ச. சூ. க.) கூறுவர் சேனாவரையர்; (ஈ) "என்பவென்னு முற்றுச்சொல் 'குறைக்கும்வழிக் குறைத்தலும்' என்பதனாற் பகரங்குறைத்து, 'விரிக்கும்வழி விரித்தல்'. என்பதனால் 'மன்' 'ஆர்' என்பன இரண்டிடைச்சொற் பெய்து விரித்து, என்மனா ரென்றாயிற்று" என்று (இறை. சூ. க.) இறையனா ரகப்பொரு ளுரைகாரரும் (தொல். கிளவி. சூ. க) கல்லாடனாரும் (உ) என்பவென்னுமொழி, ஈற்றுப் பகரங்கெட்டு மன் ஆரென்னும் இடைச்சொற்களைப்பெற்று என்மனா ரென முடிந்ததென்று (யா - வி. சூ. உக.) யா - வி. உரைகாரரும் உரையாசிரியரெனப் பேர்பெற்ற இளம்பூரணர் கொள்கையையே பின்பற்றுவர்; (ஊ) "என்மனாரென்பது செய்யுண்முடி பாயதோ ரார்ஈற்று முற்றுச்சொல்; மன் எதிர்காலவிடைநிலை. அது 'உயர்திணை யென்மனார் மக்கட்சுட்டே' என்னுஞ் சூத்திரத்துச் சேனாவரைய ருரையானுமறிக" என்று கூறுவர் சிவஞானமுனிவர்; சிவஞான

## எ௱சு கலித்தொகை கதகூ.

### இதன் பொருள்.

அகன்ற (க)உலகத்தை எவ்வுயிர்க்குந் தோற்றுவிக்குந் தன்னுடைய பல கிரணங்களைத் தனக்கு வாயாகக்கொண்டு (உ)கான்ற பகற்காலத்தை மீண்டும் அவ்வாயாலே விழுங்கினாற்போல அவற்றைச் சுருக்கிக்கொண்டு படுகின்ற சுடர் அத்தகிரியைச் சேர்கையினாலே போரின்கண் மிகுகின்றசக்கரப்படையை யுடைய மாயோனிறம்போல இயல்பாகவுள்ள இருள் பரந்துவாராநிற்க, அதனைப் பொறாதே தன் நிலவாலே ஓட்டிப் புறங்காண்பானைப்போலே அழகினையுடைய மதி தோன்ற, கணவரைக் கூடித் துயிலைப்பெற்ற கண்கள் போலே இரண்ட தண்டுகளையுடையுவாகிய தாமரை (ங) முதலியன குவிய, தம்புகழ்களைக் கேட்ட சான்றோரைப்போலே தலையைச் சாய்த்து மரங்கள் துயில, சிறுதூறுகள் பிரிந்த மகளிரை (ச)இகழ்ந்து சிரிப்பனவைபோலே முகைகள் அவிழ்ந்து விளங்க, சிறிய மூங்கிலாகிய குழல்போலச் சுரும்புகள் ஆர்ப்பரவஞ்செய்து பாட, புட்கள் தம் பார்ப்புக்களை நினைத்துக் குடம்பையைச் சேரப், பசுக்கள் தாந் தங்கும் ஊர்களிடத்திற் கன்றின்மேல் அமர்ந்த விருப்பத்தோடே மன்றுக ணிறையப் புகுதலைச்செய்ய, மாக்கள் தாந் தங்குமிடத்தே சென்று தங்க, அந்தணர் தாஞ் செய்யுந் தொழில்களைச் செய்து அந்திக்காலத்தை எதிர்கொள்ள, (ரு)மகளிர் செந்தீயால் உண்டான விளக்கை ஏற்றத் தொடங்க, மாலை விளக்கங்கொள்ள வந்ததனை அறிவுகெட்டோர் வாலிய இழையினையுடைய மகளிருயிரை அதனைப் பொதிந்துகின்ற உடலினின்றும்

---

க. "இருவிழிகள் வாண்முகத்தி லிருந்தாலும் வானிரவி யெழுந்தாலன்றிக், கருதுநிலப்பல்பொருளுங் காண்டலரிதாம்" திருக்குற்றலப். தாற்பயன். க.

உ. (அ)"வெயில்கான் றிருள்சீத் தெழுவெங்கதிர்ச் செல்வன் மைந்தன்"

கூ௪ம. இராவணவதை. ௬எ. (ஆ) "பாயிருள் பருகுப பகலேக்கான் றெழுங், காயெரிக் கதிரவன்" திருவானைக்கா. தீர்த்தவிசேடம். ௬௬.

௯. முதலியனவென்றது, குவளை செய்தல்களை; இவை காலை மலர்ந்து மாலைக் குவிவனவென்றே பண்டைநூல்கள் கூறுகின்றன; இதற்கு மாறாக, குவளை மாலை மலர்ந்து காலைக் குவியுமென்று பிற்காலத்து நூல்கள் கூறுகின்றன. இவற்றின் உண்மை நோக்கி அறியத்தக்கது.

௪. "முல்லைத், தொகுமுகை யிலங்கெயி றாக, நகுமே தோழி" குறுந். ௧௬௬.

௫. (அ) "வளமனைப், பூந்தொடி மகளிர் சுடர்தலைக் கொளுவி, யந்தி யந்தண ரயர" குறிஞ்சி. ௨௨௫ - ௨௨௫. (ஆ) "உள்ளினே னல்லனோ யானே யுள்ளிய, வினைமுடித் தன்ன வினியோள், மனைமாண் சுடரொடு படர்பொழு தெனவே" நற். ௩: எ - ௯. (இ) "எல்லவ மகளிர் மணிவிளக் கெடுப்ப, மல்லன் மூதூர் மாலைவந் திறுத்தென" சிலப். ௪: ௬௬ - ௨௦.



போக்கும் காலத்தினது இயல்பிரிவதறியாராய் மாலைக்காலமென்று அதுவும் ஒருகாலமாகக் கூறுகிற்பரென ஆற்றுளாய்த் தோழிக்குக் கூறினாள். எ - று.

கல்சேர்வையினுலே * இருள் இவாாநிற்க † அதுபொழுது மதிதோன்ற என ஒருவினையாகமுடிக்க. "பகல்கான் றெழுதரும் பல்கதிர்ப் ‡ பருதி" (௧) என்றார் பிறரும்.

‖ மதியேர்தா என்பது முதலிய செயவெனெச்சங்களெல்லாம் நிகழ்கால முணர்த்திநின்று ÷ மாலைவாள்கொள[ா] என்னுஞ்செய[யா]வெனெச்சத்தோடு முடிந்தன. அது பின் வந்ததை என்னுந் தொழிற்பெயர்த்திரிசொல்லோடு முடிந்தது.

மயங்கியோர் என்றது தோழியைக்கருதி. × "திணை மயங்குறுதலும்" (௨) என்றதனுற் கருப்பொருண்மயங்குதலும் அமைத்தாம்.

இனி மாலை ✝ வாழ்கொளவென்று பாடமாயின் அப்பாடத்திற்கு, மாலை தான் வாழ்தல்கொள்ள வந்ததனை என்க.

** அளறுடங்க என்பதும் பாடம்.

இதனால், தலைவிக்கு இழிவுபிறந்தது.

இஃது அடக்கியலின்றி அடிநிமிர்ந்தோடிய கொச்சகவொருபோகின் பகுதியாய்த் தனிச்சொல்லும் அடக்கியலுமின்றிச் சுரிதகம் பெற்று அடிநிமிர்ந்தோடிய †† அகநிலைக்கொச்சகம். (உ)

(கஉ0.) அருமைசால் காட்சியா னறனேக்கா னயஞ்செய்யான்
வெருவுற வுய்த்தவ னெஞ்சம்போற் பைபய
விருநிர்ப் புலம்பூரக் கனைசுடர் கல்சேர
வுரவுத்தகை மழுங்கித்தன் னிடும்பையா லொருவனை
யிரப்பவ னெஞ்சம்போற் புல்லென்று புறமாறிக்
கரப்பவ னெஞ்சம்போன் மரமெல்லா மிலைகூம்பத்
தோற்றஞ்சால் செக்கருட் பிறைநுதி யெயிறாக
நாற்றிசையு நடுக்குறூஉ மடங்கற் காலைக்
கூற்றுநக் கதுபோ லுட்குவரு கடிமாலை;

க. பெரும்பாண். உ.

உ. தொல். அகத். ரு. கஉ.

(பிரதிபேதம்) * இருள்வாரகிற்க, † அத பொருமசி, ‡ பரிசு. ¦ மதிபோதா, ÷ மாலை வாழ்கொள வென்னுஞ் செய்யாவென னு மெச்சத். × நினையயச்குறுதலும் என்பதனுற் றரும்பொருள், ✝ வாழ்கொளவென்ற பாடத்திற்கு மாலைதான் வாழ்தல், ** அழறுடங்க. †† வகைக்கலைக்.



மாலைநீ, உள்ளங்கொண்டகன்றவர் துணைதாராப்பொழுதின்கண்
வெள்ளமா னிறநோக்கிக் கணைதொடுக்குங் கொடியான்போ
லல்லற்பட் டிருந்தாரை யயர்ப்பிய வந்தாயோ
மாலைநீ, சுரமில் காதல ரிகந்தருளா விடனேக்கிப்

போர்தொலைக் கிருந்தாரைப் பாடெள்ளி நகுவார்போ
லாரஞ ருற்றுரை யணங்கிய வந்தாயோ ;
௧௬ மாலைநீ, தந்தாதல் சான்றவர் களைதாராப் பொழுதின்கண்
வெந்ததோர் புண்ணின்கண் வேல்கொண்டு நுழைப்பான்போற்
காய்ந்தநோ யுழப்பாரைக் கலக்கிய வந்தாயோ;

எனவாங்கு;

௨0 இடனின் றலைத்தரு மின்னுசெய் மாலை
துனிகொ டுயர்தீரக் காதலர் துணைதர
மெல்லியான் பருவத்து மேனின்ற கடும்பகை
யொல்லென நீக்கி யொருவாது காத்தோம்பு
நல்லிறை தோன்றக் கெட்டாங்
கில்லா கின்று பெருளகத் தொளிந்தே.

இது பிரிவிடையாற்றத தலைவி, மாலைப்பொழுதுகண்டு கழிய ஆற்ற ளாயின இடத்துத் தலைவன்வரவும் அவளது அகமலர்ச்சியுங் கண்டார் கூறியது.

இதன் பொருள்.

அருமர்ந்த காட்சியா னறனொக்கா * னயஞ்செய்யான்
வெருவுற வுய்த்தவ னெஞ்சம்போற் பைபய
விருடேர்பு புலம்பூரக் (க)கனைசுடர் கல்சேர
வுரவுத்தகை (௨)மழுங்கித்தன் னிடும்பையா லொருவனை
௫ யிரப்பவ னெஞ்சம்போற் புல்லென்று புறமாறிக்
கரப்பவ னெஞ்சம்போன் மரமெல்லா மிலைகூம்பத்

---

௧. (அ) "கனைசுடர் கல்சேர்பு மறைய" அகம். சஎ: க. (ஆ) "படுசுடர் கல்சேர" (இ) "ஒண்சுடர் கல்சேர" (ஈ) "கல்சேர்பு ஞாயிறு கதிர் வாங்கி மறைதலின்" கலி. ௧௧௧: ௨, ௧௨௧: ௧, ௧௩௪: ௪.

௨. மழுங்க லென்பது 'மழுகல்' எனவும் 'மாழ்கல்' எனவும் வழங்கும்.
(பிரதிபேதம்) * அறஞ்செய்யான், பயஞ்செய்யான்.

தோற்றஞ்சால் செக்கருட் (௧)பிறைநுதி யெயிறாக
நாற்றிசையு நடுக்குறூஉ மடங்கற் காலைக்
கூற்றுநக் கதுபோலு முட்குவரு கடுமாலை

எ - து: (௨)அருள் ஒருகாலத்தும் இல்லையான அறிவாலே (௩) அறஞ்செய்தல் இருமைக்கும் பயன்தருமென்று கருதானாய், பண்புஞ்செய்யானாய், எல்லாரும்வெருவுதலுறும்படி தனக்குள்ளாரைப் பயன்படாமற்செலுத்தினவனுடைய நெஞ்சின் மருட்சிபோலே, மெத்தென மெத்தென இருளாலே உலகம் நிறைந்து கணவரைப் பிரிந்தோர்க்குத் தனிமைமேலிடும்படி செறிந்த சுடரையுடைய ஞாயிறு *அத்தகிரியைச்சேர, மிடியாலே இரத்தற்கு நினைவன் வலியின்றகைமை கெட்டுச்சென்று ஒருவனை வேண்டுகின்றவனுடைய நெஞ்சு போலே, மரமெல்லாம் மூதற் பொலிவழிந்து, பின்பு அம்மரமெல்லாம் இரப்பாரைக்கண்டுஇருந்தவிடத்தினின்றும் எழுந்திருந்துபோய் மறைகின்றவனெஞ்சு கண்ணோடாதுகுவியுமாறுபோல, இலைகளெல்லாங் குவிய வருகின்ற மாலாய்! நீதான் காலநிக்குஞ் சேரக்கமுறம் ... ழிமுடிவாகிய காலத்திலே

கூற்றுவன் விளக்கம் அமைந்த செக்கர்வானிடத்துத் தோன்றின நுதியையுடைய பிறை தனக்கு எயிறாகக்கொண்டு(ஊ)பல்லுயிரையுஞ் சேக்கச்சாடற்கு நக்காற்போலும் உட்குதலையுடைய கடியமாலையாயிருந்தாய். எ - று.

௧. (அ) "ஒன்றேயெயிற்ற தொருபெரும்பே யுலகம் விழுங்க வங்காந்து, நின்றாற்போல நிழலுமிழ்ந்து நெடுவெண்டிங்க ளொளிர்விலங்க, வின்றீர குருதி வானவா யங்காந் தென்னை விழுங்குவா, னன்றே வந்து இம்மாலே யளியே னாவி யாதாய்கொல்" சீவக. ௧௧௧௦. (ஆ) "வீழ் மலர்த் தென்றலாம் வீசுபாசமும், மெரிந்தசெக்கரு மிருளுநுங் காட்டலா, வரியவட் டனதரு மந்தி மாலையாம், கருநிறச் செம்மயிர்க் காலன் றேன்றினன்" கம்ப. மிதிலைக்காட்சிப். ௬௨. (இ) "கூற்றங் கரந்து கொடியபுன் மாலை வடிவுகொண்டு, தோற்றுஞ் சிறு பிறை யேயெயி றாகத் துறையிருந்து, தேற்றந் தரும்பெடை யன்ன

முஞ் சேவலுஞ் சேக்கைபுகு, மாற்றூர் திறமறி யேனவ ரோவென் றகன் றனவே" அம்பிகாபதிகோவை. ககச.

உ. (அ) "மெல்லே, னருளிற் பிறக்கு மறநெறி" நான்மணி. எ. (ஆ) "அறனு, மருளுடையான் கண்ணதே யாகும்" சிறுபஞ்ச. ரு.

ரு. (அ) "தருமமென் றொருபொரு ளுளது மாவிலா, விருமையி னின்பமு மெளிதி னாக்குமால்" கந்த......... (ஆ) "அறமே, யிருமை யுந்துணை யாகுவ தன்றிமற் றில்லை"

ச. (அ) "மன்னுயிர்ப் பன்மையுங் கூற்றத் தொருமையு, நின்னொடு தூக்கிய" புறம். கக: ரு - ச. (ஆ) எருமைக் கம்பரி யூர்வோ னுயிர்த் தொகை, யொருபக லெல்லையி லுண்ணு மென்ப, தாங்ய வாச (பிரதிபேதம்) * அத்தமிரியை.

எருஅ கலித்தொகை க௨0.

முன்னர் நின்றமாலே உட்குதலையுடைய மாலையெனப் பின்னர் வந்த * மாலே விசேடித்துநின்றது.

க0 மாலைநீ, உள்ளங்கொண்டகன்றவர் துணைதாராப்பொழுதின்கண் வெள்ளமா (க)னிறநோக்கிக் கணைதொடுக்குங் கொடியான்போ லல்லற்பட் டிருந்தாரை யயர்ப்பிய வந்தாயோ

எ - து: இங்ஙனங் கடிய நீ என்னெஞ்சதனைத் தம்மிடத்தே கொண்டு நீங்கினவர் எனக்குத் துணையாந்தன்மையைத் தாராத காலத்திலே வெள்ளத் திலே அகப்பட்டுக் கரையேற மாட்டாத மானினது மருமத்தைப் பார்த்து அம்பைத் தொடுக்குங் கொடியவனைப்போல அல்லலிலே அழுந்தியிருந்த வென்னைக் கையறவெய்துவிக்க வந்தாயோ? எ - று.

மாலை நீ என வருகின்றவற்றையும் தாவொடு கூட்டி முற் கூறியவாறே பொருளுரைக்க.

கக. மாலைநீ, ஈரமில் காதல ரிகந்தருளா (உ)விடனோக்கிப் (ரு)போர்(ச)தொலைந் திருந்தாரைப் பாடெண்ணிப் புகுவார்போ லாரஞ ருற்றாரை யணங்கிய வந்தாயோ

எ - று: இவ்வனம் கடிய நீ அருளில்லாத காதலர் விட்டுநீங்கி அருளா திருந்த காலத்தைப் பார்த்துப் (ரு) போரிலே தோற்றிருந்தவர்களை அவர்கள் பட்ட தோல்வியை இகழ்ந்து சிரிப்பாரைப்போலே பொறுத்தற்கரிய வருத்த முற்ற என்னை வருத்துவிக்கவந்தாயோ ? எ - று.

ரமர்க்களத் தறிய, நூழி லாட்டிய சூழ்கழல் வேந்தன்" சிலப்: உசு: உகடு - உகஅ.

க. (அ) "சிலைமாண் கடுவினை கலைசிறத் தழுத்தி" (ஆ) "வரிமர னேன் ஞாண் வன்சிலைக் கொளீஇ, யருசிறத் தழுத்திய வம்பினர் பலருட, னண்ணல் யானை வெண்கோடு கொண்டு" (இ) "வெள்வேல், லாத னெழினி யருசிறத் தழுத்திய, பெருங்களிற் றெவ்வம் போல" என்பவையும் இந்நூற்பக்கம் ௩௧௬: க - ஆம் குறிப்பும் பார்க்க.

உ. இடன் - காலம். கலி. கஉக: உரு.

ரு. "போர்.........வந்தாயோ" என்பது செய்கை யல்லாத மாலைப் பொழுதினைச் செய்யாமரபிற் றொழிற்படுத்தடக்கி உவமவாயிற்படுத்த தென்பர். நச்; தொல். பொருளி. சூ. உ.

ச. "ஒருவனை யொருவ னடுதலுந் தொலைதலும், புதுவ தன்று" புறம். எகு: க - உ.

ரு. (அ) " தனக்கிரிந் தானைப் பெயர்புற நகுமே " புறம். உஅச: அ; (ஆ) "வானக மண்ணு மெல்லா நகுகெடு வயிறத் தோள, ஞனகும் (பிரதிபேதம்) * மாலையை விசேடித்த.

## ஐந்தாவது நெய்தல் ரு. எருக

போர்தொலைந்திருந்தார், தொழிலின்றொழில் தொழிலுடையதன்மேல் நின்றது.

கரு (க)மாலைநீ, தந்காதல் சான்றவர் களைதாராப் பொழுதின்கண்

(உ) வெந்ததோர் புண்ணின்கண் வேல்கொண்டு நுழைப்பான்

காய்ந்தநோ யுழப்பாரைக் கலக்கிய வந்தாயோ [போற்

எ - து: இங்ஙனம் *கடிய நீ எனக்குப் பற்றுக்கோடாதலை அமைந்தவர் என் வருத்தத்தைப் போக்குதலைச்செய்யாத காலத்தே முன்பேவெந்ததொரு புண்ணிலே பின்பு ஒருவேலைக்கொண்டு சொருகுவாரைப்போலே மெய் வெதும்புதற்குக் காரணமான காமநோயிலே அழுந்துகின்ற என்னையுள்ளி உள்ள அறிவையுங் கலங்குவிக்க வந்தாயோ ? எ - று.

† எனவாங்கு

எ - து: என்று அவள் கூறும்படியாக. எ - று.

ஆங்கு, அசை.

இடனின் றலைத்தரு மின்னாச்செய் மாலை
துனிகொ டுயர்தீரக் காதலர் துனைதர
(௩) மெல்லியான் பருவத்து மேனின்ற கடும்பகை
யொல்லென நீக்கி யொருவாது ‡ காத்தோம்பு
நல்லிறை தோன்றக் கெட்டாங்
கில்லா கின்று விருளகந் தொளித்தே

. . . .

பகைவ ரெல்லா கருவரென் றதற்கு காரணன்" கம்ப. கும்ப. ௬௪.
(இ) "முன்னை வைகலின் முரிந்தன னென்றே, பன்னு மோர்வகை பரந்ததுமன்றிப், பின்னு மிப்பகல் பிழைத்தன னென்று, மென்னை யாவர்களு மென்னுவர் மாதோ" கந்த. மூன்றுநாட்பானு. ௧௪௮.

௧. பொழுதொடு கேட்குநபோலக் கூறியதற்கு, "(மாலைநீ............) காய்ந்த நோயுழப்பாரைக் கலக்கிய வந்தாயோ [..........  .....மாலை]" என்பது மேற்கோள்; தொல். செய். சூ. ௨௦௦. நச்.

௨. (அ) "மாலை, வெந்துயர்க் கண்ணின் வேலிட்டதுபோல், வந்திறுத் தன்றால் வலியெனக் கில்லென" (பெருங். (௧) ௩௩: ௧௪ - ௧௫.) என்பதும் (ஆ) "வெந்தபுண் வேலெறிந் தற்றால்" (கலி. ௮௩: ௩௦) என்பதும் அதன் குறிப்பும் பார்க்க.

௩. "நல்லற நெறிநிறீஇ யுலகாண்ட வரசன்பி, னல்லது மலைந்திருந் தற நெறி நிறுக்கல்லா, மெல்லியான் பருவம்போன் மயங்கிரு டலைவர, வெல்லைக்கு வரம்பாய விடும்பைகூர் மருண்மாலை" கலி. ௧௨௧: ௪-௭.

(பிரதிபேதம்) *கடியநீ, † எனவாங்கென்றில் ஆங்கசை. ‡ காத்தாற்று நல்லிறை.

(இ-ள்) ஆற்றுதற்கோரிடமின்றாக அலைத்தலைச்செய்யும் பொல்லாங்கே செய்யும் மாலைக்காலத்தாலே வெறுப்புக்கொண்ட வருத்தந்திரும்படி காதலர் விரைந்து வருகையினாலே, அம்மாலை இராக்காலத்திடத்தே சென்றொளித்தது. காற்படையாலே இளைத்த †அரசன் இளைத்த பருவத்தே அவனுக்கு மேலாய் வந்த ‡கடியபகையானது அக்கப் பகைமையை விரையப்போக்கி நீங்காமல் நின்று காத்து நடத்தும் நல்ல இறைவன் வந்து தோன்றக் கெட்டுப்போனாற் போலே, இல்லையாகாநின்றதெனக் கண்டோர் கூறினார். எ - று.

|| பகை கெட்டாங்கு மாலை ஒளித்து இல்லாகின்றதெனக.

இதனால், கண்டோர்க்கு ஆக்கம்பற்றிய மருட்கை பிறந்தது.

(க)இஃது இடையிடை சொற்சீரடிவந்து எண்ணிடையிட்டுச் சின்னங் குன்றிய கொச்சகம். (க)

(கஉக.) ஒண்சுடர் கல்சேர வுலகூருந் தகையது
தெண்கட லழுவத்துத் திரைநீக்கா வெழுதரூஉந்
தண்கதிர் மதியத் தணிநிலா நிறைத்தரப்
புள்ளின மிரைமாந்திப் புகல்சேர வொலியான்று
வள்ளிதழ் கூம்பிய மணிமரு ளிருங்கழி
பள்ளிபுக் கதுபோலும் பரப்புநீர்த் தண்சேர்ப்ப;
எ தாங்கருங் காமத்தைத் தணந்துநீ புறமாறத்
தூங்குநீ ரிமிழ்திரை துணையாகி யொலிக்குமே
யுறையொடு வைகிய போதுபோ லொய்யென
நிறையாற்ற திறிதரூஉ நீர்நீந்து கண்ணுட்கு;
கக வாராய்நீ புறமாற வருந்திய மேனியாட்
காரிருட் டுணையாகி யசைவளி யலைக்குமே

க. (அ) இச்செய்யுளுக்கு (தொல். செய். சூ. கருசு. நச்.) இக்குறிப்பே சிறிது வேறுபடக் காணப்படுகின்றது; (ஆ) பேராசிரியரும் "அரு

டீர்த்த காட்சியா னதனேக்கா னயஞ்செய்யான்" எனவும்............
அடக்கியலின்றி அடிகிமிர்ந்தொழுகியது போலும் கொச்சகம் வரும்
கால், ஒத்தாழிசையும் வண்ணகமும்போலத் தனிச்சொற்பெற்றும்
பெறாதும் வரும்" என்று கூறி, இதனைத் தனிச்சொற் பெற்று வந்த
தற்கு உதாரணங்காட்டினர்; தொல். செய். சூ. ககூ.

(பிரதிபேதம்) * ஈ-து என்று அவன் கூறும்படியாகஆற்றுதற்கு. † அமிஞ்சிறந்த. ‡ கடி பகைபறிந்த, அப்பகை, கடிபகையான அந்தப்பகை, || பகைகெட்டாக் கேன்க மாலே.

## ஐந்தாவது நெய்தல் கூ. எஅக

காழ்தண்டா துகிர்ந்துசீ வூழுற்ற கோடல்வீ
யிதழ்சோருங் குலைபோல விறைநீவு வளையாட்கு;

கஅ இன்றுணை நீப்ப விரவினுட் டுணையாகித்
தன்றுணைப் பிரிந்தயாஅத் தனிக்குரு குசவுமே
பொன்சுடர் ஞாயிற்று விளக்கத்தா னொளிசாம்பு
நண்பகன் மதியம்போ னலஞ்சாய்ந்த வணியாட்கு;
எனவாங்கு;

உ0 எறிதிரை தந்திட விழிந்தமீ னின்றுறை
மறிதிரை வருந்தாமற் கொண்டாங்கு நெறிதாழ்ந்து
சாயினள் வருந்தியா ளிடும்பை
பாய்பரிக் கடுந்திண்டேர் களைமினோ விடனே.

இது தலைவன் ஒருவழித் தணந்தவிடத்துத் தலைவி ஆற்றாமைகூறி வரையக் கருதினையாயின் இஃதிடமெனச்சொல்லியது.

இதன் பொருள்.

ஒண்(க)சுடர் கல்சேர வுலகூருந் தகையது
தெண்(உ)கட லழுவத்துத் திரை *நீக்கா வெழுதரூஉக்
தண்கதிர் மதியத் தணிநிலா †நிறைத்தரப்
புள்ளினம் மிரைமாந்திப் புகல்சேர வொலியான்று
(ரு) வள்ளிதழ் கூம்பிய (ச)மணிமரு ளிருங்கழி
பள்ளி‡புக் கதுபோலும் பரப்புநீர்த் தண்சேர்ப்ப

எ - து: ஒள்ளிய ஞாயிறு அத்தகிரியைச் சேர்தலானும் உலகெல்லாந் தன் ஒளிபரக்குந் || தன்மையதாகித் தெளிந்த கடற்பரப்பிற் றிரையைநீக்கித்

---

க. இந்நூற்பக்கம் ௭௫௧: க - ஆம் குறிப்புப் பார்க்க.

உ. (அ) "கடலழுவ நீந்தி" சீவக. ௫௦௪. (ஆ) "கருங்கட லழுவத்து" பெருங். (க) ௪௫: ௮௮.

௩. பிறிது பொருளோடு உவமை கூறாது பொருள்தோற்றிய விடத்தோடு நோக்கி முன்னமரபால் உவமை கூறியதற்கு, "வள்ளிதழ்........தண் சேர்ப்ப" என்பது மேற்கோள்; தொல். உவமை, சூ. ௨௩. 'பிறிதொடு' இனம்.

௪. "இனமீ னிருங்கழி யோத முலாவ, மணிநீர் பரக்குந் துறைவ" திணைமொழி. ௪௪.

(பிரதிபேதம்) * நீங்காவெழுதரும். † பிறந்ததர, பிவத்தர. ‡ புக்கபோதும், || [illegible]யதாகி.





தோன்றுந் தண்ணியதாகிய கதிரையுடைய மதியத்தினது அழகையுடைய நிலாமிகுதலைச்செய்கையினாலும் (க)பறவைகள்இரையை நிறையத்தின்று தாந் தங்கும்(உ)புகல்களைச் சேர்கையினாலே தன்னிடத்து ஆரவாரம் அடங்கப்பட்டு வளவிய இதழ்களுங் குவிந்த நீலமணியென்று மருளும் பெரியகழி துயில் கொண்ட தன்மையை யொக்குங் கடலையுடைய குளிர்ந்த சேர்ப்பனே! எ-று.

தகையதாகி எழுதரும் மதி. ஞாயிறு படுதலும் மதியந் தோன்றுதலும் பறவைகள் புகல்சேர்தற்குக் காரணமென்றுகொள்க.

அவை சேர்கையினாலே ஒலியவிந்து *போயவதைப் பள்ளிபுக்காற்போலே இருந்ததென்றது தன்குறிப்பை அதன்மேலேற்றிக்கூறியதோர்உவமவிசேடம். இஃது "ஓரீஇக்கூறலுமரீஇயபண்பே" என்னும்(௩)உவம†வியற்சூத்திரத்தில் அடக்கினும். இதழ் கூம்புதலும்‡துயிற்கு அடையாய் நின்றது.

ஞாயிறு கல்சேர்ந்ததனைத் தலைவன் இட்டுப்பிரிந்து தன் மனையிலே சேர்ந்திருத்தலிற் களவு புலப்படாத தன்மையாகவும் மதியத்தின் நிலாப் பரந்ததனை அவ்விடத்துக் காவலின் விளக்கமாகவும் பறவைகளின் ஆரவாரங் கெட்டதனை இவ்விரண்டினாலும் அவர்தூற்றுகின்ற மகளிரொலி அவிந்து

இவ்வூர் துயில்கின்றாற்போலிருந்த தன்மையாகவும்உள்ளுறை யுவமங்கூறுக.

எ தாங்கருங் காமத்தைத் தணந்துநீ புறமாறத்
தூங்குநீ ரிமிழ்திரை துணையாகி யொலிக்குமே
(ச)புறையொடு வைகிய போதுபோ லொய்யென
(ரு)நிறையான இழிதரூஉ (சு)நீர்நீந்து கண்ணாட்கு

எ - து: நீ இட்டுவைத்துப் பிரிந்து நின்னாரிடத்தே உறைந்து முன்பு நின்னெஞ்சில் தாங்குதற்கரிதாய்ப் போந்த காமத்தை நின்னிடத்தினின்றுங் கைவிடுகையினாலே துளியோடே தங்கின பூப்போலே நிறக்குமளவில் அமையாதே விரைய விழும் நீரிலேகிடந்து நீந்துகின்ற கண்ணையுடையவட்கு

---

க. "பறவைபாட் டடங்கினவே பகல்செய்வான் மறைந்தனனே" சிலப். எ: சஉ.
உ. புகவென்றது, புகுமிடமாகிய மரப்பொந்து கூடு முதலியவற்றை.
ங. தோல். உவம. சு. கங.
ச. "நீலக் காரெதிர் பனிபோ, லினைநோக் குண்கண் ணீர்நில் லாவே" (கலி. எ: கக - கஉ) என்பதும் அதன் குறிப்பும் ஒப்புநோக்கற்பாலன.
ரு. "நிறைநிலா நோய்கூர நெடுங்கணீ ருகுத்தனவே" சிலப். எ: சஉ.
சு. (அ)"உள்ளம்போன் றுள்வழிச் செல்கற்பின் வெள்ளநீர், நீந்தலமன்னோ வென் கண்" குறள். ககஎ0. (ஆ) "நெடும்பெருங்க ணீர்நின நீர்" பு - வெ. பெருந்திணைப். பெண்பாற். அ.

பிரதிபேதம்)* பொய்கைபள்ளி, † இவளிடத்தினும்.

ஐந்தாவது நெய்தல் ச. எச்சு.

அசைகின்ற கடலிலே எழுந்து முழக்குகின்ற திரைதான் துணையாகி நின்று ஆரவாரியாநிற்கும். எ - று.

(க) *வருத்துகின்ற திரை தான் துணையாக †ஒலிக்குமென்று அஃது (உ)இறந்துபடுத்தாது நின்றமைபற்றிக் கூறினான்.

கக (௩)வாராய்நீ புறமாற வருந்திய மேனியாட்
காரிருட் டுணையாகி பசைவளி யலைக்குமே
கமழ்தண்டா துதிர்ந்துக (௪)வூழுற்ற கோடல்வீ
யிதழ்‡சோருங் குலைபோல விறைநீவு வளையாட்கு

எ - து: நீ ஈண்டு வாராயாய் நின்மனையிடத்தே இருந்து வருந்திய மேனியையுடையவட்கு நீ வைத்த வேட்கை நின்னிடத்தினின்றும் கைவிடுகையினாலே கமழ்கின்ற தண்ணியதாது உதிர்ந்து சிந்தும்படி முறைமையுற்ற இதழ்கள்வீழுங் குலையினையுடைய கோடல்வீபோல இறையினின்றும் கழலும் வளையினையுடையாட்கு நிறைந்த இராக்காலத்தே அசைந்து வருகின்ற காற்றுத்தான் துணையாகின்ற வருத்தாநிற்கும். எ - று.

இனி மேனியாட்கு வருந்திய நீ வாராயாய்ப்புறமாற என்றுமாம்.

கரு இன்றுணை ||பிரிந்தயாஅங் கனிக்(௫)குருகு துசவுமே
...

க. "கத்தும் கடலும் ..........பெரும்பகை யாய்விட்ட வாமொரு பைந்தொடிக்கே" என்பது இங்கே கருதற்பாலது.

உ. இறந்து படுத்தல் - இறந்துபடச் செய்தல்.

௩. வேற்றுமையமிக்கினுள் முருகு ஒருபொருண்மேற் பலவடுக்கிவந்து ஒரு வினையான் முடிதற்கு, "வாராய்க்...... ..வளையாட்கு" என்னும் பகுதியை மேற்கோள்காட்டி. 'இதனுள் ஈான்காவது அடுக்கிவந்து அலைக்குமென்பதனோடு முடிந்தவாறு கண்டுகொள்க' என்பர், தெய்; தொல். வேற்றுமையமங்கி. சூ. கஅ. 'உருபுதொடர்ந்து'

௪. "அலங்கிதழ்க் கோடல் வீயுகுபவைபோ, லிலங்கே ரெல்வளை யிறையூருமமே" (கலி. எ: கரு - கசு) என்பதும் அதன் குறிப்பும் இந்நூற் பக்கம் சுகக: சு-ஆம் குறிப்பும் பார்க்க.

௫. குருகு: நெய்தனிலத்துக்குரித்தாகக் கூறப்படும் ஒருபறவை; கரிய காலையும் வெண்ணிறத்தையும் உடையது; பனைமடலிற் கூடுகட்டிக் கொண்டு வசிப்பது; மீன் யாமை முதலிய நீர்வாழுயிர்களை யுண்டு உயிர் வாழ்வது; துணைபிரிந்திருப்பின் வருந்தி அதனை அழைக்கும் இயல்பினது; நள்ளிரவில் உயவுவது; இதற்குச் சங்கும் இதன் காலுக்குத்

(பிரதிபேதம் * வருந்தவின்றதைான். †அலக்குமென்றது இறந்து. ‡சேரும். ||பிரிந்தயாம்

பொண்சுடர் * ஞாயிற்று விளக்கத்தா னொளிசாம்பு
† நண்பகன் மதியம்போ னலஞ்சாய்ந்த வணியாட்கு

---

தினையரிதாளும் வெண்டாழம்பூவுக்கும் வெண் கூதாளம்பூவுக்கும் இதுவும் உவமையாகக் கூறப்படும்; இதனிறகும் தூவியென்று அருகி வழங்கும்; இதனைக் கொக்கென்பாரும் நாரையென்பாரும் அன்னமென்பாருமுளர்; இப்பெயர் நீர்வாழ் பறவைக்கெல்லாம் பொதுவாய் வருமாயினும் (அ) "கொக்கினங்காள் குருகினங்காள்" என வேறு வேறு விளிக்கப்படுதலின், கொக்கு அன்றென்றும் கருங்கால் கூறப்படுதலின் நாரையும் அன்னமும் அன்றென்றும் துணியலாகும். இதன் இன்குரலுக்கு யாழொலியும் இதன் கூட்டத்தின் ஆர்ப்புக்குத் தேர்மணியொலியும் உவமையாகக் கூறப்படுகின்றன. இது வெண்ணிறமுடைமையால் வெள்ளாங்குருகென்றும் வழங்கும். அதனோடு சிறுமையென்னும், அடையுமடுத்துச் சிறுவெள்ளாங் குருகென்றும் வழங்கும்; அது யானையங் குருகினும் இது சிறிதென்பது பற்றிப் போலும். (ஆ) "புன்னை, வாலிணர்ப் படுசினைக் குருகிறை கொள்ளு, மல்குறு கான லோங்குமண லடைகரை" (இ) "கருங்கால் வெண் குருகு" (ஈ) "பெண்ணை, வீங்குமடற் குடம்பைப் பைதல்வெண் குருகு, நள்ளென் யாமத் துயவுதோ றுருகி" (உ) "பெண்ணைத் தோடுமட லேறிக், கோவோய்ப் பேடைக் குடம்பைச் சேரிய, வுயிர்செலக் கடைஇப் புணர்துணைப், பயிர்த லானா பைதலங்குருகே" (ஊ) "நெய்த் தலைக் கொழுமீ னருந்த வினக்குருகு, குப்பை வெண்மண லேறி" (எ) "குருகுடைத் துண்ட வெள்ளகட் டியாமை" (ஏ) "கோடுதுணர்ந் தன்ன குருகொழுக்கு" (ஐ) "தினைத்தா ளன்ன சிறுபசுங் கால, வொழுகுநீ ராரல் பார்க்குங், குருகுமுண்டு" (ஒ) "தாழை குருகீனுந் தண்ணந் துறைவனை" (ஓ) "தாழை வெண்பூக், குருகென மலரும் பெருந்துறை" (ஔ) "பிணர்முடத் தாழை விரிமலர் குருகென, நெடுங் கழிக் குறுங்கயல் கெய்தலுண மறைக்கும்" (ஃ) "குருகிருந் தன்ன, வண்பிணி யவிழ்ந்த வெண்கூ தாளத், தலங்குகுலை யவரி" (அஅ)

"துறைபோ கறுவைத் தூமடி யன்ன, நிறங்கிளர் தூவிச் சிறு வெள்ளாங் குருகே" (ஆறு) "யாழ், நரம்பிசைத் தன்ன வின்குரற் குருகின்" (இஇ) "விருந்தின் வெண்குரு கார்ப்பின்.......பண்ணமை நெடுந்தேர்ப் பாணியி னொலிக்குந், தண்ணந் துறைவன்" (௯௯) "வெள் ளாங்குருகின் பிள்ளை" (உஉ) "யானையங் குருகின் கானலம் பெருந் தோ, டட்ட மன்ன ஞாற்பிசை வெரூஉக், குட்டுவன் மரந்தை" என வருபவை இங்கே அறிதற்பாலன. வடமொழியில் 'க்ரௌஞ்சகிரி' என்பது தமிழில் 'குருகுபெயர்க் குன்றம்' என்று கூறப்படுதலானும்

(பிரதிபேதம்) * குயிற்றுவிளக்கத், † கன்பகல்.

## ஐந்தாவது நெய்தல் ரு. எஃரு

எ - து: இனிய துணையாயநீ கைவிட்டு உன்மனையிடத்தே இருக்கையி ஞலே ஒள்ளிய சுடரையுடைய (க)ஞாயிற்றினது மிக்க ஒளியாலே தன் ஒளி கெடுகின்ற உச்சிக்காலத்து மதிபோலே நன்மைகெட்ட முகத்தினையுடை யாட்கு இராக்காலத்திடத்தே தன் சேவலைப் பிரிந்து வருந்துந் *தனிக்குருகு தான் துணையாகி உசாவாநிற்கும். எ - று.

எனவாங்கு, அசை.

உ0 எறிதிரை தந்திட விழிந்தமீ னின்றுறை
மறிதிரை வருந்தாமற் கொண்டாங்கு நெறிதாழ்ந்து
சாயினள் வருந்தியா ளிடும்பை
பாய்பரிக் கடுந்திண்டேர் களையினோ விடனே

எ - து: இனிய துறையிடத்தே எறிகின்ற திரை எறக் கொண்டுவந்து †போகவிகையினால் எக்கரிலேகிடந்த மீனை மீள்கின்ற அத்திரை வருந்தாவபடி கைக்கொண்டுபோன தன்மைபோலே நீ முன்பு நடத்தின நெறி தாழ்கையி ஞலே மெலிந்தனளாய் வருந்தினவளுடையவருத்தத்தைப் பாய்ந்துசெல்லும் பரிபூண்ட கடிய திண்ணிய தேர் வெளியாக வரைவோடே வந்து களையு மாயின் நல்லகாலமென வரைவுகடாயினாள். எ - று.

இதனால், தலைவற்கு அசைவு பிறந்தது.

இஃது ஒத்தாழிசைக் கலி. (௭)

(௩உஉ.) கோதை யாயமு மன்னையு மறிவுறப்
போதெழி லுண்கண் புகழ்நல னிழப்பக்
காதல்செய் தருளாது துறந்தார்பாட் டின்றிச்
சிறிய துனித்தனை துன்னுசெய் தமர்ந்தனை
பல்வுரு றடுக்கினை யினைபேங்கி யழுதனை
யலவலை யுடைமை யென்றி தோழீ ;
கேளினி;

---

க்ரௌஞ்சமென்பது அன்றிலின் பெயரென்பராதலாலும் அன்றி லுக்கு(ஊஊ)"தடவுநிலைப்பெண்ணைக், கொழுமடலிழைத்தசிறுபொறி குடம்பைக், கருங்காலன்றிற் காமர் கடுஞ்சூல், வயவுப்பெடை யகவும் பானாட்கங்குல்"எனப் பனைமடல்வாழ்க்கையும் கருங்காலுடைமையும் துணைபிரியா வியல்பும் கூறப்படுதலாலும் குருகென்பது அன்றிலா யிருக்கலாமென்று தோற்றுகிறது; இன்னும் ஆராய்தற்பாலது. அன்றிலின்செய்தி கலி. கஉக: கஉ-ஆம் அடிக்குறிப்பிற் காணலாகும்.

க. (அ) "பகலாங்கட் பைபெய்ந்த மதியம்போல்" கலி. ௩௭௩: ௨; (ஆ) "விரிகதிர்ப் பரிதி முன்னர் வெண்மதி மழுங்கும்" நைடத. போர். ௨.

(பிரதிபேதம்) * தனிக்குருகுதலை. † போமேகையினுலே.



அ மாணெழின் மாதர் மகளிரோ டமைந்தவன்
காணும்பண் பிலனுத லறிவேன்மன் னறியினும்
பேணி யவன்சிறி தளித்தக் காலென்

ஞணி னெஞ்ச நெகிழ்தலுங் காண்பல் ;
கஅ இருளுறு ழிருங்கூந்தன் மகளிரோ டமைந்தவன்
றெருளும்பண் பிலனாத லறிவேன்மன் னறியினு
மருளி யவன்சிறி தளித்தக் காலென்
மருளி நெஞ்ச மகிழ்தலுங் காண்பல் ;
கசு ஒள்ளிழை மாதர் மகளிரோ டமைந்தவ
னுள்ளும்பண் பிலனாத லறிவேன்மன் னறியினும்
புல்லி யவன்சிறி தளித்தக் காலென்
னல்ல னெஞ்ச மடங்கலுங் காண்பல் ;
உ0 அதனால்;
யாம நடுநாட் டுயில்கொண் டொளித்த
காம நோயிற் கழீஇய நெஞ்சந்
தானவர் பாற்பட்ட தாயி
னுமுயிர் வாழ்தலோ நகைநனி யுடைத்தே.

இது காமஞ்சாலா இளமையோள்வயிற் பின் களவொழுக்கம் ஒழுகிய தலைவன் இடையிட்டுப் பிரிந்து தொன்முறை மனைவியரொடு புணர்ச்சி யெய்தி இருந்தானாக, அதனையறிந்து ஆற்றளாய தலைவி *ஆற்றாமையைக் கண்டு வினாய தோழிக்கு அத்தலைவி அவனெஞ்சு நெகிழுகின்றவாறுந் தன்னெஞ்சு அவன் வயத்ததாயவாறுங் கூறியது. "மறையின் வந்த மனையோள் செய் வினை, பொறையின்று பெருகிய †பருவரற் கண்ணும்" (க) என்பதனானும் "பின்முறை யாக்கிய பெரும்பொருள் வதுவை" என்னும் (உ) சூத்திரத்தானு முணர்க.

இதன் பொருள்.

கோதை யாயமு மன்னையு மறிவுறப்
போதெழி லுண்கண் புகழ்நல னிழப்பக்
காதல்செய் தருளாது துறந்தார்மாட் டேதின்றிச்

க. தொல். கற். சூ. சO.

உ. தொல். கற். சூ. கக.

(பிரதிபேதம்) * ஆற்றாமைகண்டு, † பருவரற்கண் என்பதனானும்.

சிறிய துனித்தனை துன்னைசெய் தார்த்தனை
பலவுந றடுக்கினை பினைபேங்கி யழுதனை
யலவலை யுடையை யென்றி தோழி
கேளினி

எ-து: (க) கோதைபோல ஒழுங்குவிட்டு விளையாடும் ஆயத்தாரும் தாயும் அறிதலுறும்படி பூவினது அழகையுடைய கண்கள் புகழ்ந்த நலத்தை இழக்கும்படி முன்னர் நம்மிடத்தே மிக்க காதலை நிகழ்த்திப் பின்னர் நமக்கு அருளாதே ஒருகாரணமுமின்றி நம்மைத் துறந்தாரிடத்தே முன்னர்ச்சிறியவாக வெறுத்தனை; பின்னர் அவர் நமக்குப் பொருந்தாக் குறைகளைச் செய்கையினாலே அக்குறைகள் பல வாறுமாக அடுக்கிக்கூறி அதிலே அமர்ந்தனை; அதுவேயுமன்றி வருந்திஏங்கி அழுவதுஞ்செய்தாய்; ஆகலானீ (உ) அலமருதலை யுடையையாயிருந்தாயென்று சொல்லாநின்றாய்; தோழீ! இனி அலமாலைக் கேளென்றாள். எ - று.

ஏது, வடமொழி திரிந்து விகாரமாய் நின்றது.

அ (ங)மாணெழின் மாதர் மகளிரோ டமைந்தவன்
காணும்பண் பிலனாக லறிவேன்மன் னறியினும்
பேணி யவன்சிறி தளிக்கக் காலென்
னாணி னெஞ்ச நெகிழ்தலுங் காண்பல்

---

க. (அ) "இணர்நிலைக் கடம்பின் திரளரை வளைஇய, துணையறை மாலையிற் கைபிணி விடேஎம்" குறிஞ்சி. கஎசு-கஎஎ. (ஆ) "கோதை யாயமொ டோரை தழீஇ" அகம். சக: கக. (இ) "கடம்பு சூடிய கன்னிமாலை போற், றொடர்ந்து கைவிடாத் தோழி மாரொடும்" சீவக. ககo.

உ. அலவல்-அலமருதல் போலும்; "அலவுற்று" (குறிஞ்சி. எ) என்பதற்கு, 'அலம் வந்து' என்று பொருளெழுதப் பட்டிருத்தலும் காண்க. 'அலவலை' எனின் மனத்திற் றோன்றியதை ஆராயாது செய்தலாம்;

"அலவலை யில்லாக் குடியும்" திரிகடுகம். ௯௪. "அலவலைச் செய்திக் 'கஞ்சினன்" மணி ௭: ௫௧. 'அலவலை நீர்த்தா லத்தைநின் னலரென" பெருங். (௧) ௯௯: ௯௮௧. எனவருதல்காண்க. "அலவலைத்து வாழ் பவர்" பழ. ௯௨௯. என்பதற்கு, 'நாணமில்லாததன்மையைச் செய்து வாழ்பவர்' என்ற பொருள்செய்திருப்பது நோக்கி அலவலை யென்ப தற்கு, நாணமின்மை யென்று பொருள் கொள்வாருமுளர். பின் "நாணி னெஞ்சம்" என வருதலும் நோக்குக.

௯. கலி. ௧௭ - ஆம் செய்யுட்டாழிசைகள் இங்கே ஒப்புநோக்கற்பாலன. (பிரதிபேதம்' * இன்றியே நம்மை.

௭௩௮ கலித்தொகை ௧௨௨.

௭ - து: மாட்சிமையையுடைய அழகினையுங் காதலையுமுடையமனைவிய ரோடே அவன் பொருந்தி நம்வருத்தத்தைப் பார்க்குங் குணமிலனாயிருத்தலை மிகவும் அறிவேன்; அறிந்திருப்பினும் அவன் வந்து என்னைப் (௧) பேணிச் சிறிதாக அளிக்க என்னுடைய நாணமில்லாத நெஞ்சம் என்வயத்ததன்றி அவனிடத்தே நெகிழ்ந்து செல்லுதலையுங் கண்டிருப்பேன். ௭ - று.

௧௨ (௨)இருளற விருங்கூந்தன் மகளிரோ டமைந்தவன்
றெருளும்பண் பிலனாத லறிவேன்மன் னறிபினு
மருளி யவன்சிறி தளித்தக் காலென்
மருளி நெஞ்ச மகிழ்தலுங் காண்பல்

௭ - து: இருளோடே மாறுபடுகின்ற கரிய கூந்தலையுடைய நொன் முறை மனைவியரோடே அவன் பொருந்தி நம் வருத்தத்தைத் தெளியுங் குண மிலனாயிருத்தலை மிகவும் அறிவேன்; அறிந்திருப்பினும் ஒருகால் அருள் பண்ணி அவன் சிறிதாக அளிக்க என்னுடைய மருளியாகிய *நெஞ்சம் அதற்கு மகிழ்தலையுங் கண்டிருப்பேன். ௭ - று.

௧௩ ஒள்ளிழை மாதர் மகளிரோ டமைந்தவ
னுள்ளும்பண் பிலனாத லறிவேன்மன் னறிபினும்
புல்லி யவன்சிறி தளித்தக் காலென்
னல்ல னெஞ்ச மடங்கலுங் காண்பல்

எ-து: ஒள்ளிய இழையினையுங் காதலையுமுடைய தொன்முறைமனைவிய ேோடே அவன் பொருந்தி நம்மை நினைக்கும் குணமிலனுதலை † மிகவும் அறிவேன்; அறிந்திருப்பினும் அவன் சிறிதாகப்புல்லி அளிக்க என்னுடைய வருத்தத்தையுடைய நெஞ்சம் வருத்தமீளுதலும் கண்டிருப்பேன். எ - று.

உ0 அதனால்

(ங)யாம நடுநாட் டுயில்கொண் டொளித்த
காம நோயிற் கழீஇய(ச)நெஞ்சந்

---

க. "ஞெளிசிறந் திழிதருங் கண்ணினீ ரறல்வார, வினிதமர் காதல னிறைஞ்சித்தன் னடிசேர்பு, நனிவிரைந் தளித்தலி னகுபவன் முகம் போல" கலி. எக: ச - க.

உ. "இருளறு மிருங்கூந்த லிவண்மாட்டு" கலி. சக: கஅ.

ங. "யாமத்து துயிலல வலமரு மென்றோழி" (கலி. சுடு: கஅ.) என்பதும் அதன் குறிப்பும் பார்க்க.

ச. கலி. சஎ: கக-உக, எஎ: உக-உச-ஆம் அடிகளும் அவற்றின் குறிப்புக் களில் இவ்விடத்துக்குப் பொருந்துவனவும் இங்கே அறிதற் பாலன.

(பிரதிபேதம்) * நெஞ்சமிழத்தலையும், † மிகவறிவேன்.

## ஐந்தாவது நெய்தல் கூ. எகக

* தானவர் பாற்பட்ட தாயி
னுமயிர் வாழ்கலோ நகைநனி யுடைத்தே

எ - து: ஆகையினாலே காமநோயாலே மிக்க நெஞ்சந்தான்(க)நடுநாள் யாமத்தில் நாங்கொள்ளுந் துயிலைவாங்கிக் கொண்டு ஒளித்தவர் பகுதியிலே பட்டுவிட்டதாயின், இனி நாமிருந்து உயிர்வாழ்கையோ மிகப் பிறர் சிரித்தலை யுடைத்தென்று தோழி வரைவுகடாவுதற்குக் கூறினாள். எ - று.

இதனால், 'தன்வயினுரிமையும் அவன்வயிற் பரத்தையும்' (உ) கூறினாள்.

இதனால், தலைவிக்கு †இழிவு பிறந்தது.

இது, கேளினி எனச் சொற்சீரடிவந்தமையிற் கொச்சகம். (கூ)

(கஉங.) (ங.)கருங்கோட்டு நறும்புன்னை மலர்சினை மிசைதொறுஞ்
சுரும்பார்க்குங் குரலினை டிருந்தும்பி யியைபூத
வொருங்குட னிம்மென விமிர்தலிற் பாடலோ
டரும்பொருண் மரபின்மால் யாழ்கேளாக் கிடந்தான்போற்
பெருங்கடற் றுயில்கொள்ளும் வண்டிமிர் நறுங்கானல்;

௬ காணாமை யிருள்பரப்பிக் கையற்ற கங்குலான்
மாணாநோய் செய்தான்கட் சென்றாய்மற் றவனீ
காணவும் பெற்றாயோ காணாயோ மடநெஞ்சே;

௯ கொல்லேற்றுச் சுறவினங் கடிகொண்ட மருண்மாலை
யல்லினைச் செய்தான்கட் சென்றாய்மற் றவனீ
புல்லவும் பெற்றாயோ புல்லாயோ மடநெஞ்சே;

கஉ. வெறிகொண்ட புள்ளினம் வதிசேரும் பொழுதினாற்
செறிவளை நெகிழ்த்தான்கட் சென்றாய்மற் றவனீ
யறியவும் பெற்றாயோ வறியாயோ மடநெஞ்சே;
எனவாங்கு;

---

க. நடுநாள் - இடையாமம்; "நடுநாள் யாமத்தும் பகலுந் துஞ்சான்" புறம். கஅக: ங.

உ. தொல். கள. சூ. உ0.

ங. இச்செய்யுள், தரவகப்பட்ட மரபிற்றாகித் தாழிசை வந்ததற்கும் (தொல். செய். சூ. கஙச. பேர்.) தரவிற்கு அடிமயக்காகச் சுரிதகம் நான்கடியாய்ச் சுருங்கி வந்ததற்கும் (தொல். செய். சூ. கஙஎ. பேர்) மேற்கோள்.

(பிரதிபேதம்) * தாமரை, † இனிவு.

கசு. எல்லியு மிரவுந் துயிறறந்து பல்லூ
ழுரும்பட சவலநோய் செய்தான்கட் பெறலாசை இ
யிருங்கழி யோதம்போற் றமொறி
வருந்தினை யளியவென் மடங்கெழு நெஞ்சே.

இது காப்புமிகுதிக்கண் ஆற்றத தலைவி தலைவன்பாற்சென்ற நெஞ்சினை நோக்கி அழிந்து கூறியது.

இதன் பொருள்.

(க)கருங்கோட்டு நறும்புன்னை மலர்சினை *மிசைதொறுஞ்
சுரும்பார்க்குங் குரலினோ (உ)டிருந்தும்பி †யிமிழ்பூத
வொருங்குட னிம்மென விமிர்தலிற் பாடலோ
டரும்பொருண் மரபின்மால்(ங)‡யாழ்கேளாக் கிடந்தான்போற்
பெருங்கட றுயில்கொள்ளும் வண்டிமிர் நறுங்கானல்

எ - து: கரியகொம்பினையுடைய ||புன்னையின் சிறிய சினையில் நறிய தாகிய ÷மலர்தோறும் (ச)மலருஞ்செவ்வி பார்த்து நுகருதற்குச் சுரும்பினம் ஆரவாரிக்கும் ஓசையோடே +கரிய தும்பிகளும் ஒருங்கியைந்து ஊதவெழுந்த குரலுஞ் சேர இம்மெனும் ஓசைபட ஒலிக்கையினாலே அவற்றைக்கேட்டு யாவராலும் பெறுதற்கரியபொருளாகிய முறைமையினையுடைய திருமால்

---

க. (அ) "இரும்பி னன்ன கருங்கோட்டுப் புன்னை" (ஆ) "கருங்கோட்டுப் புன்னை மலரிற் றாதருந்தி, யிருங்களிப் பிரச மூத" நற். உசக: க, ருகக: க - கo; (இ) "கருங்கோட்டுப் புன்னைப் பூம்பொழில்" குறுந். கஉரு. (ஈ) "கருங்கோட்டுப் புன்னைத் தங்குந் துறைவற்கு" ஐங். கசுக; (உ) "பெருங்காற் புன்னைக் கருங்கோட்டு" பெருங். (க) சo: கஅ. (ஊ) "இரும்புகவைத் தன்ன கருங்கோட்டுப் புன்னை" கலி. ருக: கக என்பவற்றால் புன்னை கருங்கோட்டதென்பது விளங்கும். அம்மரத்தைப்பற்றிய மற்றைச் செய்திகள் கலி. கருக: கரு - ஆம அடிக்குறிப்பிற் காணலாகும்.

உ. (அ) "இருந்தும்பி யிமிழ்பூத" கலி. கஉஎ: ருக. (ஆ) "திருந்தி னிளிவண்டு பாட விருந்தும்பி, யின்குழ லூதும் பொழுது" கார். கடு.

ங. யாழ் கேட்டா னென்று மிடத்து யாழிற் பிறந்த இசையை யாழென்

றலால், அது பிறந்தவழிக் கூறலென்னும் ஆகுபெயரென்பர் தெய்வச்; தோல். வேற்றுமைமயங்கி. கூ. கo. 'முதலிற்'

௪. "மலராக்காற், செல்லாவாஞ் செம்பொறி வண்டினம்" நாலடி. உ௮௩.

(பிரதிபேதம்) * மீமிசைச் சுரும்பார்க்குங் குழலினொடு, † இசையூத, ‡ யாழ்கொளக்கிடக், || புன்னையிலுடைய தெரிய, + மலர்மிசைதொறும், ╪ கரியதாகிய.



பாட்டோடே யாழையுங்கேட்டுப் பள்ளிகொண்டவனைப்போலப் பெரிதாகிய கடலும் ஒலியவிந்து உறக்கத்தைக்கொள்ளும் வண்டு ஒலிக்கின்ற கானலின் கண்ணே. எ - று.

நெஞ்சே சென்றாய் என மேலே கூட்டுக.

இருகும் வடிந்தகாலத்து மிக்க ஒலியின்மை பற்றிக் கூறிற்று.

புன்னை மலருஞ் செவ்விபார்த்து அவற்றை நுகர்தற்குரியன நுகர்கின்றமையுங் கண்டு யாமுங் காமச்செவ்வி அறிந்து நந் தலைவர் நுகரப்பெற்றிலேமேயென்று வருந்தியும், பாட்டையும் யாழையும்போலும் இசைகேட்டுக் கடலுட்படத் துயில்கின்ற காலத்தே யாமும் அவற்றைக் கேட்டுத் தலைவனிடத்தே துயிலப் பெறுகின்றிலேமேயென்று வருந்தியும், நெஞ்சசென்றதெனமேலே வருகின்ற இரங்கற்பொருட்கு முன்னின்ற கருப்பொருள் இறைச்சிப்பொருளாய் நின்று உபகாரப்பட்டு நின்றது. இஃது, "இறைச்சி தானே பொருட்புறத் ததுவே" (க) என்பதனான் உணர்க.

கூ (உ)காணுமை யிருள்பரப்பிக் கையற்ற * கங்குலான்
(ரூ)மாணுநோய் செய்தான்கட் சென்றாய்பற் றவனை(௪)நீ
காணவும் பெற்றாயோ காணுயோ மடநெஞ்சே

எ - து: அறியாமையுடைய நெஞ்சே! கானலின்கண்ணே பொருள்களைக் கண்கள் காணுதபடி இருளைத்தான் பரப்பி உயிர்களெல்லாஞ் செயலறுதற்குக் காரணமான கங்குலிடத்தே ஒரு மருந்தாலும் மாட்சிமைப்படாத காமநோயைச் செய்தவனிடத்தே †போனாய்; போன நீ பின்னை அவனைக் கண்ணுற் காண என்கின்ற அவ்வளவுதானும் பெற்றாயோ, அவனைக் காணுதிருந்தாயோ கூறென்றான். எ - று.

உம்மை இழிவுசிறப்பு. ‡இனிக் காணப்பெற்றாயோ இல்லையோ என ||ஒகாரத்தைஐயமாக்கி உரைத்தலறிக, நீஅவனைக் காணப்பட்டாயெனக்கூறி ÷ஒகாரத்தினை இரக்கமாக்கிக் கூறலுமாம்.

இது +நயமாம்துச் சென்றமை கூறினன்.

---

க. தொல். பொருளி. சூ. கஅ.

உ. "காணுமை..........காணுயோ மடநெஞ்சே" என்பது தாழிசை யெனவும் இடைநிலைப் பாட்டெனவும் படுமென்பர் பேராசிரியர்; தொல். செய். சூ. கங.உ' நச்சினார்க்கினியரும் அவ்வாறே கூறுவர்; தொல். செய். சூ. கங.எ.

ங. (அ) "மாணுகோயுழப்பதை" கலி. கங.உ: கக. மாணுமை அளவிறத்த லென்னும் பொருளிலும் வரும்.

ச. நெஞ்சொடு கேட்குக போலக் கூறியதற்கு "நீ...... ......நெஞ்சே" என்பது மேற்கோள்; தொல். செய். சூ. உ00. கச.

(பிரதிபேதம்) * கல்குல்லாய், † போதும்பல், ‡ இனிப்பெற்றாயோ, || ஓகாரமையை ÷இரக்க மாகக்கூற, +நயமாமத்த.

## எஎஉ  கலித்தொகை கஉங.

க. (க)கொல்லேற்றுச் (உ)சுறவினங் கடிகொண்ட பருண்மாலை
அல்லிநோய் செய்தான்கட் சென்றாய்மற் றவனைநீ
புல்லவும் பெற்றாயோ புல்லாயோ மடநெஞ்சே

எ - து: மடநெஞ்சே! கானலின்கண்ணே கொல்கின்ற(ங)ஏறுமியசுறவி னுடைய திரள் போவாரைப் போகாமற்காத்தலைக்கொண்ட மயக்கத்தை யுடைய மாலைக்காலத்தே வருத்தத்தையுடைய காமநோயைச் செய்தவனிடத் தேபோனாய்; போன நீ பின்னை அவனைப் புல்லஎன்கின்ற அவ்வளவுதானும் பெற்றாயோ, புல்லாதிருந்தாயோ கூறென்றாள். எ - று.

இனிப் புல்லப்பெற்றாயோ இல்லையோ என ஒகாரத்தை ஐயமாக்கி உரைத்தலறிக, *நீ அவனைப் புல்லப்பட்டாயெனக்கூறிஒகாரத்தினை இரக்க மாக்கிக் கூறலுமாம்.

கஉ. †வெறிகொண்ட (ச) புள்ளினம் ‡வதிசேரும் பொழுதினுற்
செறிவளை நெகிழ்த்தான்கட் சென்றாய்மற் றவனை(ரு)நீ
அறியவும் பெற்றாயோ அறியாயோ மடநெஞ்சே

௧. தொல். செய். சூ. ௧௩௪. நச். மேற்கோளில் 'கொல்லேற்று' என்னும் தாழிசை மூன்றாவதாகவும் 'வெறிகொண்ட' என்னும்தாழிசை இரண்டாவதாகவும் காணப்படுகின்றது.

௨. "செழுங்கதிர் மண்டில, மால்வரை மறைய..............மல்குகழித், துணைச்சுறா வழங்கலும் வழங்கும்"

௩. (அ) "கடல்வாழ் சுறவு மேறெனப் படுமே" தொல். மர. சூ. ௪. (ஆ) "சுறவுப்பிற ழிருங்கழி நீந்தி" தொல். கள. சூ. ௨௩. நச். மேற்கோள். என்பனவும் (இ) "கோட்சுறா வினத்தொடு" (சீவக. ௬௫) என்பதன் விசேடவுரையில் 'முன்னே கழியிணைந்தமைபெறுதலின், சுறவு கூறினர்' என்று எழுதியிருப்பதும் (ஈ) கடல் 'மகராலயம்' என்று கூறப்படுதலும் நோக்க, சுறவு நெய்தனிலத்திற்கே உரியதென்று கொள்ளலாகும். (உ) மேலுள்ள தொல்காப்பியச் சூத்திரத்தின் இளம்பூரணருரையில், 'பிள்ளைச்சுறவு, யாற்றுச் சுறவு உண்மையின், செய்யுட்காவது கடல்வாழ் சுறவொன்றே யெனப் பிரித்தான்' என ஒரு குறிப்புக் காணப்படுகின்றது. இச்செய்தி ஆராய்தற்பாலது.

௪. "புள்ளின மிரைமார்ந்திப் புகல்சேர" கலி. ௧௨௨: ௪.

௫. "நீ...................நெஞ்சே" என்பது உணர்வுடையதுபோலக் கூறியதற்கு மேற்கோள்; தொல். பொருளி. சூ, ௨. நச்.

(பிரதிபேதம்) * தானலினப் புலப்பட்டா, † பொறிகொண்ட, வெறிகொண்ட. ‡ பரிசேரும்போழ்தினால்.

எ - து: மடநெஞ்சே! அக்கானலின்கண்ணே ஒழுங்குகொண்ட பறவைத்திரள் தாந் தங்கும் இடத்தே சென்றுசேரும் மாலைக்காலத்தே முன்பு செறிந்தவனை கழலப் பண்ணினனிடத்தே போனாய்; போன நீ பின்னை அவனை மனத்தினை* அறிய என்னின்ற அவ்வளவுதானும் பெற்றாயோ, அது தானும் அறியாதிருந்தாயோ கூறென்றாள். எ - று.

இனி அறியப் பெற்றாயோ இல்லையோ என ஒகாரத்தை ஐயமாக்கி உரைத்தலுமாம், நீதான் அவனாலறியப்பட்டாயென உரைத்து ஒகாரத்தை இரக்கமாக்கலுமாம்.

†எனவாங்கு அசை.

கக எல்லையு மிரவுந் துயிறுறந்து பல்லூர்
(க)அரும்பட ரவலநோய் செய்தான்கட் பெறனசைஇ
யிருங்கழி யோதம்போற் (உ)றடுமாறி
வருந்தினை ‡வளியவென் மடங்கெழு நெஞ்சே

எ - து: அது கூறாமையின், பின்னும் அறியாமை பொருந்திய அளிக்கத் தக்க என்னெஞ்சே! பொறுத்தற்கரிய வருத்தத்தையுடைய காமநோயைச் செய்தவனிடத்தே பகலுமிரவுந் துயிலைக் கைவிட்டுக் கரியகழியில் ஓதம் போவதுவருவதாய்த் தடுமாறுந்தன்மைபோல நீயும் பலமுறையாகச் சென்றும் வந்துந் தடுமாறி அவனைப் பெறுதல் நச்சி முடிவில் வருந்திவிட்டாய்; ‡அதன்றோ நீபெற்றதென நெஞ்சினைநோக்கி அழிந்துகூறினாள். எ - று.

இஃது "உறுப்புடை யதுபோ லுணர்வுடை யதுபோன், மறுத்துரைப் பதுபோ னெஞ்சொடு புணர்த்தும்" (ரு.) என்பதனாற்கூறியது.

---

க. "அரும்பட ரவலநோ யாற்றுவ னென்றாது" (கலி.உஅ:கஂ.) என்பதும் அதன் குறிப்பும் பார்க்க.

உ. (அ) "மணிநிற நெய்த லிருங்கழிச் சேர்ப்ப, னணிநல முண்டகன்று னென்றுகொ லெம்போற், றிண்மண லெக்கர்மே லோதம் பெயரத், துணிமுந்நீர் துஞ்சா தது" (ஆ) "பறைவா யொலியோதம் பத்தர் குகளுங், துறைசேர் சிறுகுடியார் துஞ்சினுந் துஞ்சாய், நிறையின் மருண்மாலை யெம்போல நீத்த, துறைவ னுடையையோ நீவாழி வீராய்" (இ)"வருதி பெயர்தி வருந்துதி துஞ்சாய், பொருதி புலம்புதி

நீயுங் - கருதுங்காற், பண்டினை யல்லையாற் பாழித்தோட் கோதை யைக், கண்டனையோ வாழி கடல்" (௩) "போவாய் வருவாய் புரண்டு விழுந்திரங்கி, நாவாய் குழற நலங்குறவாய்..........ஆர்கலியே"
௩. தொல். பொருளி. கு. ௨.

(பிரதிபேதம்) * நீ அறிய, † ஆங்க னல்லையும், ‡ அளியையென். || இனைஞரே. ÷ செஞ்சொடு இனைத்தலென்பதனுல்.



இதனுல், தலைவிக்கு இழிவு தோன்றிற்று.
இஃது ஒத்தாழிசைக்கலி. (௧)

௧உ௪.) ஞாலமூன் றடித்தாய முதல்வற்கு முதுமுறைப்
பாலன்ன மேனியா னணிபெறத் தைஇய
நீலநீ ருடைபோலத் தகைபெற்ற வெண்டிரை
வாலெக்கர் வாய்சூழும் வயங்குநீர்த் தண்சேர்ப்ப;
௫ ஊரல ரெடுத்தரற்ற வுள்ளாய்நீ துறத்தலிற்
கூருந்தன் னெவ்வநோ யென்னையு மறைத்தாண்மற்
காரிகை பெற்றதன் கவின்வாடக் கலுழ்பாங்கே
பீரலரணிகொண்ட பிறைநுத லல்லாக்கால்;
௯ இணைபிவ்வூ ரலர்தூற்ற வெய்யாய்நீ துறத்தலிற்
புணையில்லா வெவ்வநோ யென்னையு மறைத்தாண்மற்
றுணையாருட் டகைபெற்ற தொன்னல மிழந்தினி
யணிவனப் பிழந்ததன் னணைமென்றோ ளல்லாக்கால்;
௧௩. இன்றிவ்வூ ரலர்தூற்ற வெய்யாய்நீ துறத்தலி
னின்றதன் னெவ்வநோ யென்னையு மறைத்தாண்மன்
வென்றவே லுதியேய்க்கும் விறனல னிழந்தினி
நின்றுநீ ருகக்கலுழு நெடும்பெருங்க ணல்லாக்கால்;
௧௭ அதனுல்;
பிரிவில்லாய் போலநீ தெய்வத்திற் றெளித்தக்கா

லரிதென்று டணிந்தவ ளாய்நலம் பெயர்தரப்
புரியுளைக் கலிமான்றேர் கடவுபு
விரிதண் டார் வியன்மார்ப விரைகநின் செலவே.

இது "வெளிப்பட வரைதல் படாமை வரைதலென், றாயிரண்டென்ப வரைத லாறே" (க) என்பதனுற் களவு வெளிப்பட்டபின் வரையாது போதல்வயிற் பிரிந்துவந்தானைத் தோழி எதிர்ப்பட்டுநின்று தலைவியது ஆற்றாமை கூறி வரைவுகடாயது.

இதன் போருள்.

க. தொல். களவு. சூ. ச௯.

## ஐந்தாவது நெய்தல் எ. எஎடு

(க௨௪.) ஞாலமூன் றடிக்தாய முதல்வற்கு முதுமுறைப்
(க)பாலன்ன மேனியா னணிபெறத் தைஇய
(உ)நீலநீ ருடைபோலத் தகைபெற்ற வெண்டிரை
வாலெக்கர் வாய்சூழும் வயக்குநீர்த் தண்சேர்ப்ப

எ-து: (க)உலகமூன்றையும் தன் திருவடியாலே அளந்த எப்பொருட்கும் அடியாயிருக்கின்றவனுக்கு மூத்தமுறைமையினையுடைய(௩)நம்பிமூத்தபிரான் அழகுபெற உடுத்த நீலத்தினது நீர்மையையுடைய ஆடையை ஒக்கும்படி அழகைப்பெற்ற வெண்டிரையினையுடைய கடல் வெண்மையையுடைய இடுமணலிடத்தே வந்து சூழ்ந்து விளங்குகின்ற † நீரையுடைய தண்ணிய ‡சேர்ப்பனே. எ - று.

வெண்மை திரைக்கு அடையாய்த் திரை ஆகுபெயராய் நின்றது; ‖ நீல வுடைக்கு வெண்மை ஒப்பன்மையின்.

கடல் தன்கரையை இகவாமை நிற்கின்ற சேர்ப்பனென்றதனுல், நீயும் குடிப்பிறந்தார்க்குவரைந்துகொண்டுஇல்லறநிகழ்த்தவேண்டுமென்று + கூறிய கரையைக் கடவாமல் வரைந்துகோடல் வேண்டு+மென்று உள்ளுறையுவமங் கொள்க.

௫ ஊரல ரெடுத் ×தாற்ற வுள்ளாய்நீ (௫)றைத்தலிற்
கூறுந்தன் னெவ்வநோ யென்னையு மறைத்தாண்மற்

க. "பானிற வண்ணன்போல்" கலி. ௧0௪: அ.
உ. (அ) "அலத்தான் முன்னம் பிளந்தபகை யடர்ப்பான் கருதிப் பிளப் புண்ட, சலத்தால் யமுனை பிணித்ததெனத் தயங்கும் படிசேர் தானை யினன்" வில்லி. கிளைபதி. ௪0. (ஆ) "துளங்கொளி நீலநுண் டுகிலு டுத்தகல், விளங்கலி றன்னவன் விராமனேடு" (இ) "கொய்யு காண்மலர் விரைகமழ் யமுனை கொய்யாத, செய்ய பொற்றளர்த் தேர்தொடை யொன்றொடு செறிந்த, செய்யி ரும்குழ லிரேவதி கொழுநற்கு செய்யா, வைய நீலநுண் டுகிலிரண் டளித்ததையன்றே" பாகவ. அக்குரூரன்வர்த: கக. நம்பிமூத்தபிரான் கோகுல. அ.
௩. "மூவுலகு மீரடியான் முறைநிரம்பா வகைமுடியத், தாவியசே வடி" சிலப். கஎ.
௪. இந்நூற்பக்கம் ௪௪௪: உ - ஆம் குறிப்புப் பார்க்க.
௫. "தன்னெவ்வங் கூறினு நீசெய்த வருளின்மை, யென்னையு மறைத்தா னென் றேழி" (கலி ௪௪; அ - க) என்பதும் அதன் குறிப்புக்களில் இவ்விடத்திற்கு ஒத்தனவும் இங்கே ஒப்புநோக்கற்பாலன.

(பிரதிபேதம்) * உடையேபோற்றகை, † நிரைபையுடைய, ‡ சேர்ப்பனே கடல் தன் கரையை ......... உள்ளுறை உவமங்கொள்க வென்புழி நிரைக்கு. ‖ நீலவாடைக்கு. = ஒப்பன்மையின் ஊரலர், + கூறிக் கரையை. ✝ என்ற உள்ளுறை, × ஆர்ப்பவுள்ளாய்.



காரிகை பெற்றதன் கவின்வாடக் கலுழ்பாங்கே
(க)பேரல ரணிகொண்ட பிறைநுத லல்லரக்கால்

எ - து: காரிகைபெற்ற *தன் அழகு கெடும்படி மனங்கலங்குதலாலே அப்பொழுதே பீர்க்கினது பூவினது அழகைத் தன்னிடத்தேகொண்ட பிறைபோலும் நுதலல்லாத இடத்து, இவ்வூரிலுள்ளார் அலரை உயர்த்துக் கூப்பிடும்படி நீ இவளைக் கைவிடுகையினாலே மிகுகின்ற தன்னுடைய வருத்

தத்தையுடைய (௨) காமகோவை என்னையும் உட்பட மறைத்தாள்; அதனாற் பெற்றதென்? நுதல் புலப்படுத்தா †நின்றதே. எ - று.

காரிகைபெற்ற தன் கவின் - பிறர் இவளழகைப் பெறுதற்குக் காரணமான தன் அழகு; என்றது ‡பிறர் (௩) மகளுக்கு ஒப்புக் கூறுமிடத்து இவள் உவமையாய் நிற்பளென்பதாம்.

இணைபில்லூ ரலர்தூற்ற (௪)வெய்யாய்நீ துறத்தலிற்
புணையில்லா வெவ்வநோ யென்னையு மறைத்தாண்மற்
றுணையாருட் டகை||பெற்ற தொன்னல மிழந்தினி
யணிவனப் +பிழந்ததன் (௫)னணைமென்றோ ளெல்லாக்கால்

௧. "நுதல், பீரல ரணிகொண்ட பிறைவனப் பிழவாக்கால்" (கலி. ௱௩. ௪௪ - ௪௫.) என்பதும் அதன் குறிப்பும் பார்க்க.

௨. "என்றுதன் னகம்புடை' யியலக் காளையா, லொன்றிய வுள்ளநோ யொளிக்க லுற்றன, வின்றிவ ளகத்தது காமநோ யெனப், பொன் றவழ் பசலைமெய் புகல லுற்றதே" சூளா. கல்யாண. ௨௧௧.

௩. (அ) "உரவோ ரெண்ணினு மடவோ ரெண்ணினும், பிறர்க்கு நீ வாயி னல்லது நினக்குப், பிறருவம மாகா வொருபெரு வேந்தே" பதிற். ௭௩: ௧ - ௩. என்பதும் (ஆ) "சூர்மருங் கறுத்த மொய்ம்பின் மதவலி, போர்மிகு பொருந" (திருமுருகு. ௨௭௫. ௬.) என்புழி, "பொருந" என்பதற்கு,'உவமிக்கப்படுவாய்' என்று உரையும்,'பொருவப்படுமவன், பொருநனென நின்றது' என்று விசேடவுரையும் (இ) "பொருப்பிற் பொருந" (மது.௪௨) என்புழி, "பொருந" என்பதற்கு 'ஒப்பற்றவனே' என்று உரையும் 'பொருநனென்றது தான் பிறர்க்கு உவமிக்கப்படுவோ னென்னும், பொருட்டு' என்று எழுதியிருக்கும் விசேடவுரையும், (ஈ) "ஒரு வீரு முவமைக்கெதி ரில்லாவிற லுரவோன்" வில்லி. மணிமான். ௨௮ என்பதும் ஈண்டு அறிதற் பாலன.

௪. "எய்யா மையே யறியா மையே" தொல். உரி. சூ. ௪௪.

௫. "அணைமென்றோள்" பரி. ௭: ௫௫. இந்நூல் ௪௦௦: ௪.குறிப்புப் பார்க்க.

(பிரதிபேதம்) * தன்கவின் பிறர் இவ............நிற்பளென்பதாம். தன் அழகு கெடும்படி. † நின்றதே இணையில்லூர், ‡பிறமகளுக்கு. || பெற்றதொன், + இழந்தன்னணையின,

எ - து: தோழியர் தோள்களில் அழகுபெற்ற இயற்கை நலத்தையும் இப்பொழுது இழந்து, நீ அணிதவாத் பெற்ற செயற்கை நலத்தையும் இழந்த தன்னுடைய அணைபோன்ற மெல்லியதோ ளல்லாத இடத்து, தம்மிற்கூடி இவ்வூரிலுள்ளார் அலர் தூற்றும்படி இவள் வருத்தத்தை நீ அறியாயாய் நீ துறக்கையினுலே * உண்டான தனக்கு உவமை கூறவொண்ணாத வருத் தத்தையுடைய காமநோயை என்னையும் உட்பட மறைத்தாள்; அதனுற் பெற்றதென்? தோள் புலப்படுத்தா நின்றதே. எ - று.

கசு. இன்றிவ்வூ ரலர் தூற்ற வெய்யாய்நீ துறத்தலி
னின்றதன் னெவ்வநோ யென்னையு மறைத்தாண்மன்
வென்றவே லுதிமேய்க்கும் விறனல னிழந்தினி
†நின்றுநீ ருகக்கலுழ நெடும்பெருங்(க)க ணல்லாக்கால்

எ - து: வென்றவேலினது முனையையொக்கும் வெற்றியினையுடைய நலத்தை இப்பொழுது இழந்து நீர் நின்று உகும்படியாக அழுத நெடிய பெரியகண் அல்லாத இடத்து, இன்று இவ்வூரிலுள்ளார் அலர் தூற்றும்படி இவள் வருத்தத்தை அறியாயாய் நீ துறக்கையினுலே தன்னிடத்தே நின்ற எவ்வநோயை என்னையும் உட்பட மறைத்தாள்; அதனுற் பெற்றதென்; கண் புலப்படுத்தாநின்றதே. எ - று.

கஎ அதனுல்
பிரிவில்லாய் ‡போலநீ தெய்வத்திற் றெளிந்தக்கா
ளரிதென்று ணிந்தவ (உ) ளாய்நலம் பெயர்தாப்
புரியுளைக்|| கலிமான்றேர் கடவுபு
விரிதண்டார் வியன்மார்ப விரைகநின் செலவே

எ - து: அலர்ந்த குளிர்ந்த மாலையினையுடைய அகற்சியையுடைய மார்பனே! அவ்வருத்தத்தாலே பிரிவில்லாதாரைப்போலே நீ இயற்கைப் புணர்ச்சிப் பின்னர்த் தெய்வத்தாலே பிரியேனென்று தெளிவிக்க, அப்பிரி வின்மை அரிதென்றுகருதாளாய் அதனை உண்மை என்று துணிந்தவளுடைய கெட்ட நலம் பண்டுபோலே நன்றும்படி நின்னெஞ்சிலே புரிந்த உளையினை

யுடைய கலிமாப்பூண்ட தேரைச்செலுத்தாநின்று எம்மனையிடத்துச் செல்லும் நின் செலவை விரைவாயாகவென வரைவுகடாயினள். எ - று.

க. "கரப்பினுங் கையிகந் தொல்லாநின் னுண்கணு, னுரைக்கலுறவதொன் றுண்டு" குறள், கஉஎக.

உ. "மாணிழை யரிவை காணிய வொருநாட், பூண்க மாளநின் புரவி நெடுந்தேர்" பதிற். அக: ருக - ருஉ.

(பிரதிபேதம்) * உண்டானதற்கு உவமை, † நின்றநீ ருகக்கவிழும், ‡ போலத் தெய்வத் திற்றெளித்தசொல், || பரிமான், வயமான், செயிமான்.

98



அதனால் விரைகவென்க. ஆய்நலம் - நுணுகியநலம்.

இதனால், தலைவற்குப் புணர்ச்சியுவகை பிறந்தது.

இது (க) *நான்கடியே நான்கடித் தாவிற்கு மரபென்றதனாற் கொண்ட நான்கடித் தாழிசையும் நடைநவிலாது பொருள்பெற்ற தனிச்சொல்லும் தாவியலொத்து இறுதிநிலையுரைத்த சுரிதகமும் பெற்ற ஒத்தாழிசைக்கலி.(எ)

(கஉரு.) கண்டவ ரில்லென வுலகத்து ளுணராதார்
தங்காது தகைவின்றித் தாஞ்செய்யும் வினைகளு
ணெஞ்சறிந்த கொடியவை மறைப்பினு மறிபவர்
நெஞ்சத்துக் குறுகிய கரியில்லை யாகலின்
வண்பரி நவின்ற வயமான் செல்வ
நன்கதை யறியினு நயனில்லா நாட்டத்தா
லன்பிலை யெனவந்து கழறுவ லையகேள்;
மகிழ்செய் தேமொழித் தொய்யில்சூ ழிளமுலை
முகிழ்செய முள்கிய தொடர்பவ ளுண்க
ணவிழ்பனி யுறைப்பவு நல்காது விடுவா
யிமிழ்திரைக் கொண்க கொடியை காணீ;
இலங்கே ரெல்வளை யேர்தழை தைஇ
நலஞ்செல நல்கிய தொடர்பவள் சாஅய்ப்

௧. (அ) "இடையிலைப்பாட்டே, தரவகப்பட்ட மரபின தென்ப" என்னும் தொல். செய். ௧௩௪-ஆம் சூத்திரவுரையில் 'தரவிற் சுருங்கு மென்றது அகப்படுமென்றான், தரவோடு ஒத்து வருந் தாழிசை என்ப தூஉங் கோடற்கு. என்னை? மக்களகத்துப் பிறந்தான் என்றவழி அச்சாதியோடொக்கப் பிறந்தானென்பது படுமாகலின்' என்றுகூறி, அதற்கும் தொல். செய். ௧௩௭ - ஆம் சூத்திரவுரையில் அளவியலாற் சுரிதகமொத்ததென்பதற்கும் இச்செய்யுளை மேற்கோள் காட்டுவர் பேராசிரியர். (ஆ) நச்சினார்க்கினியர் தொல். செய். ௧௩௭ - ஆம் சூத்திரவுரையில், 'இது நாலடி யிழிபாகிய நான்கடித்தரவிற்கு மரபென்ற இலேசாற்கொண்ட நான்கடித்தாழிசை தம்முள் அளவொத்து வந்து நடை நவிலாது பொருள்பெற்ற தனிச்சொல்லும்பெற்றுத் தரவியலொத்து இறுதிநிலை யுரைத்த சுரிதகமும்பெற்ற வொத்தாழிசைக்கலிப்பா' என்று இங்குள்ள செய்தியையே தெளிவாக எழுதியிருக்கிறார்.

(பிரதிபேதம்) *. நான்கடிபோய நான்கடித்.

## ஐந்தாவது நெய்தல் அ. எ௪௯

புலந்தழப் புல்லாது விடுவா
யிலங்குநீர்ச் சேர்ப்ப கொடியை காணீ;

௧௬ இன்மணிச் சிலம்பிற் சின்மொழி யைம்பாற்
பின்னொடு கெழீஇய தடவர லல்கு
லுண்வரி வாட வாராது விடுவாய்
தண்ணந் துறைவ தகாஅய் காணீ;

எனவாங்கு;

௨௧ அனையலென் றனிபு பெருஅ நின்னின்
நிறைவரை நில்லா வினைய லிவட்கினிப்
பிறையேர் சுடர்நுதற் பசலை
பறையச் செல்லுநீ மணந்தனை விடினே.

இது வரைவுநீட ஆற்றாத தலைவிநிலைமை தலைவற்குத் தோழி கூறி அவனை நெருங்கி வரைவுகடாயது.

இதன் பொருள்.

(க) கண்டவ ரில்லென *வுலகத்து ளுணராதார்
தங்காது தகைவின்றித் தாஞ்செய்யும் வினைகளு
ணெஞ்சறிந்த கொடியவை †மறைப்பினு மறிபவர்
நெஞ்சத்துக் குறுகிய கரியில்லை யாகலின்
வண்பரி நவின்ற வயமான் செல்வ
நன்கதை யறியினு நயனில்லா (உ)நாட்டத்தா
லன்பிலை யெனவந்து கழறுவ லையகேள்

க. (அ) "தன்னெஞ் சறிவது பொய்யற்க பொய்த்தபின், தன்னெஞ்சே தன்னைச் சுடும்" என்னும் குறளின் உரையில் நெஞ்சு கரியாதற்கு, "கண்டவ ரில்லென.........கரியில்லை யாகலின்" என்னும் அடிகளை மேற்கோள்காட்டி, 'பொய்மறையாமையின் அது கூறலாகாதென்பது இதனாற் கூறப்பட்டது' என்பர், பரி; குறள். உகங. (ஆ) "தன்னைத்தன் னெஞ்சங் கரியாகத் தானடக்கிற், பின்னைத்தானெய்தா நலனில்லை" அறநெறி. உ௦எ. (இ) "வஞ்சித் தொழுகு மதியிலிகாள் யாவரையும், வஞ்சித்தோமென்று மகிழன்மின் -வஞ்சித்த, வெங்கு முளனொருவன் காணுங்கொ லென்றஞ்சி, யங்கங் குலைவ தறிவு" நீதிநெறி. கச. என்பவை இங்கே அறிதற்பாலன.

உ. நாட்டம் - ஆராய்ச்சி. புறம். ௩௫: கச. ௭௦: கக.

(பிரதிபேதம்) * உலகத்துணராதார், † மறைப்பவு மறைபாயா னெஞ்சத்திற குறுகிய.

எ - து: அறியாதவர்கள் தம் மனம் இதுசெய்யலாகாதென்று மீளாதே வேறு விலக்குவாரும் இன்றி உலகத்திற் கண்டவர்களும் இல்லையென்று கருதித் தாஞ்செய்யுந் தீவினைகளுள் தாம் நெஞ்சறியவே செய்த கொடிய தீவினைகளைப் பின்பு பிறர் அறியாமல் மறைத்தார்களாயினும் தாஞ் செய்தமையை அறிந்திருக்கின்றவர்கள் தம்முடைய நெஞ்சத்திற்காட்டில் அணுகிய சான்று வேறில்லையாகையினாலே வளவிய பரியிலேயயின்ற வலியினையுடைத் தாகிய குதிரையையுடைய செல்வனே! நின்னை யான் கழறவேண்டுவதில்லை. அக்கழறவேண்டாமையை நன்றாக அறிந்தேனாயினும் நின்னோடு யான் கொண்ட நலம்பாடில்லாத ஆராய்ச்சியாலே நீ அன்புடையை யல்லையென்று சொல்லிவந்து நின்னைக்கழறுவேன்; ஐயனே! நீ அதனைக்கேள். எ-று.

நயன் - உறவு(மாம்.)

அ (க)மகிழ்செய் தேமொழித் தொய்யில்சூ ழிளமுலை
முகிழ்செய (உ)*முள்கிய தொடர்பவ ளுண்க
(ந) ணவிழ்பனி யுறைப்பவு நல்கா து விடுவா
யிமிழ்திரைக் கொண்க கொடியை காணீ

எ - து: மகிழ்ச்சியைச் செய்கின்ற †இனிமையுடைத்தாகிய மொழியினையுடையாளுடைய தொய்யில் எழுதின இளையமுலை தோன்றுதலைச் ‡செய்யா நின்ற இளமைப்பருவத்தே நீ கூடிய தொடர்ச்சியை, அவள்கண் தோற்றுவித்தநீர் துளியாகவிழவும் அதுகண்டும்நல்காது விடுகின்றவனே! ஒலிக்கின்ற திரையையுடைய கொண்கனே! நீ மிகக் கொடியைகாண். எ - று.

கஉ (ச)இலங்(ரு)கே ரெல்வளை யேர்தழை தைஇ
நலஞ்செல நல்கிய தொடர்பவள் சாஅய்ப்
||புலந்தழப் புல்லா துவிடுவா
(சு)யிலங்குநீர்ச் சேர்ப்ப ×கொடியை காணீ

க. தோழி தலைவனை "அன்பிலை கொடியை" என்றற்கு, "மகிழ்செய் ..........சேர்ப்ப கொடியை காணீ" என்னும் பகுதிகள் மேற்கோள்; தொல். கற்பி. சூ. கங. 'பரத்தைவாயில்' இளம்.

உ. முள்குதல் - கூடுதல்: சீவக. சுஉ0, கூஅஎ, கசகரு, கருகச, ககஅக, உகஅச.

௩. வகர மகாமும் தம்முள் ஒன்றற்கொன்று எதுகையெனப்படும். உயி ரெதுகை, மூன்றுமெழுத்தொன்றெதுகை யென்பாருமுளர்.

௪. "இலங்கே ரெல்வளை" கலி. ௭: ௧௧; ௪௬: ௨௭.

௫. இந்நூற்பக்கம் ௩௫௪: ௪ - ஆம் குறிப்புப் பார்க்க.

௬. "இலங்குநீர்த் தண்சேர்ப்ப" கலி. ௧௨௯: ௫.

(பிரதிபேதம்) * முழ்வெ, † இனிமையையுடைத்தாகிய, ‡ செய்யாநிற்கின்ற. ‖ புலத்தபு " வலத்தழீஇப் புல்லாது(என்பது தொல். பிரதிபேதம்). × வலியை.



எ-து: எல்வளையினையுடையாளது அழகையுடைய(க)தழையை உடுத்து இலங்குகின்ற இளமைப்பருவத்து * எழுச்சியினுடைய நலம் மேன்மேல் வளர்ந்துசெல்லும்படி நீ நல்கிய தொடர்ச்சியை, அவள்மேனிசாய்ந்து நின்னை வெறுத்து அழாநிற்க அதுகண்டும் பொருந்தாதே கைவிடுகின்றவனே இலங்குகின்ற நீரையுடைய சேர்ப்பனே! நீ மிகக்கொடியைகாண். எ - று.

௧௬ (உ.) † இன்மணிச் (௩)சிலம்பிற் (௪)சின்மொழி பைம்பாற்
பின்னொலி ‡கெழீஇய தடவர வல்கு
லுண்வரி வாட வாராது விடுவாய்
(௫)தண்ணந் துறைவ தகாஅய் காணீ

எ - து: இனிதாகிய உள்ளீடுமணியையுடைத்தாகிய சிலம்பினையுடைய சிலவாகிய மொழியினையுடையாளுடைய மயிரைப் பின்னிமுடிக்கின்ற இளமைப்பருவத்தே வந்து பொருந்தின உறவின்பெருமை இடையறுது வாரா நிற்க, அவளல்குலின் நுண்ணிய வரி வாடும்படி அவள்பால் வாராமல் அவளைக் கைவிடுகின்றவனே! தண்ணந் துறைவனே! நீ இனித் தகுதிப்பா டுண்டாகாய் காண். எ - று.

எனவாங்கு, அசை.

௨௧ அனையவொன் றனிபதி பெரும நின்னின்
றிறைவரை நில்லா வளைய ‖விட்டிகின்
பிறையேர் சுடர்நுதற் × பசலை
மறையச் செல்லுநீ மணந்தனை விடுமே.

எ - து: பெருமா! அவளை யான் கூறிய அத்தன்மையையுடைய

ளென்று உட்கொண்டு அளிப்பாய் ; அளித்துவரைந்து தோள்மணந்தனையாய்

௧. தழை, இன்னதென்பதும் அதனை இளையமகளிர் குடிப்பரென்பதும் இந்நூற்பக்கம் ௬௯௩: ௪-ஆம் குறிப்பால் அறியலாகும்.

௨. தாழிசையில்லாத இடைநிலைப் பாட்டுக்கு "இன்மணிச்.......... தகாய் காணாய்" என்பது மேற்கோள்; தொல். செய். சூ. ௧௩௨. பேர். சூ. ௧௩௭. நச்.

௩. "ஆய்சிலம் பெழுந்தார்ப்ப வஞ்சில வியலுநின், பின்னுவிட் டிருவிய வைம்பால்கண்டு" கலி. ௫௭: ௭ - ௮.

௪. இந்நூற்பக்கம் ௩௫௪: ௪ ஆம் குறிப்புப் பார்க்க.

௫. விரிக்கும்வழி விரித்தலுக்கு, "தண்ணந் துறைவன்" என்பது மேற்கோள்; தொல். எச்ச. சூ. ௪௦௩. சேனா.

(பாடபேதம்) *எழிச்சி. †இன்மொழிச்சிலம்பின். இன்னொலிச் சிலம்பினின். இன்னரிச்சிலம்பின். ‡ தழீஇயதட. || அயட்சின். + பயமே.



விடின் நின்னையின்றி *இறையினெல்லையில்லாமற் கழன்ற வளையினையுடைய இவட்கு இனிப் பிறையையொக்குந்திருநுதலிற் றோன்றியபசலை ஒருகாலமும் வாராமல் மறையும்படியாகப் போமென வரைவுகடாயினள். எ - று.

இதனால், தலைவற்குப் புணர்ச்சியுவகை † பிறந்தது.

இது "பரத்தை மறுத்தல்வேண்டியும்" என்னும் (௧) சூத்திரத்தாற் கைகோளிரண்டற்கும் பொதுவாகப் பொருள் கூறவும் பெறும்.

இது தாழிசையல்லா இடைநிலைப் பாட்டுப்பெற்றுப் புல்லாது விடுவோ யெனக் குறைந்துவருதலின் யாப்பின்வேறுபட்டகொச்சகம். (௮)

(கஉ௫.) பொன்மலை சுடர்சேரப் புலம்பிய விடனோக்கித்
தன்மலைந் துலகேத்தத் தகைமதி யேர்தரச்
செக்கர்கொள் பொழுதினா னொலிநீவி யினநாரை
முக்கோல்கொ ளந்தணர் முதுமொழி நினைவார்போ
லெக்கர்மே லிறைகொள்ளு மிலங்குநீர்த் தண்சேர்ப்ப;
அணிச்சிறை யினக்குருகு கொலிக்குங்கா னின்றிண்டேர்
மணிக்குர லென்னவிவண் மதிக்குமன் மதித்தாங்கே
யுள்ளான்ற வொலியவா யிருப்பக்கண் டவைகானற்
புள்ளென வுணர்ந்துபிற் புலம்புகொண் டினையுமே;
நீர்நீவிக் கஞன்றபூக் கமழுங்கா னின்மார்பிற்
றார்நாற்ற மெனவிவண் மதிக்குமன் மதித்தாங்கே
யலர்பதத் தசைவளி வந்தொல்கக் கழிப்பூத்த
மலரென வுணர்ந்துபின் மம்மர்கொண் டினையுமே;
நீணகர் நிறையாற்று னினையுநள் வதிந்தக்காற்
றோண்மேலா யெனநின்னை மதிக்குமன் மதித்தாங்கே
கனவெனப் புல்லுங்காற் காணளாய்க் கண்டது
கனவென வுணர்ந்துபிற் கையற்றுக் கலங்குமே;

ஈனவாங்கு;

---

க. தொல். கம்௫ கள. இச்சூத்திரத்துரையிலும் இவர் இச்செய்யுளை இச்செய்திக்கே மேற்கோள்காட்டி, இதனைக் கைசோ விரண்டிற்குங் கொள்கவென்பர்.

(பிரதிபேதம்) * இனி இறையினெல்லை. † பிறந்தது. இது தாழிசை............கொச்சகம். இவ பரத்தை மறுத்தலேவேண்டியும்.



கசுஅ பலர்நினைந் தினையும் பைதலு னெஞ்சி
னலமர லேயு ழுழக்குமென் றோழி
மதிமருள் வாண்முகம் விளங்கப்

புதாகல போர்தரப் பூண்கதின் றேமோ.

**இது தோழி தலைவியது ஆற்றமை கூறித் தலைவனை வரைவுகடாயது.**

**இதன் பொருள்.**

பொன்மலை (௩)சுடர்சேரப் புலம்பிய விடனோக்கித்
தன்மலைந் துலகேத்தத் *தகைமதி யேர்தரச்
செக்கர்கொள் பொழுதினா னொலிநீவி யினநாரை
முக்கோல்கொ ளந்தணர் முதுமொழி நினைவார்போ
லெக்கர்மே லிறைகொள்ளு (௨)மிலங்குநீர்த் தண்சேர்ப்ப

எ-து:*(௩)பொன்னையுடைய அத்தகிரியிலே ஞாயிறு †சென்றுசேர, அஞ்ஞாயிறு †உடனேபட, ஞாயிறின்றி வருந்தின உலகைநோக்கி உலகங்கொண்டாடும்படியாகத் தலைமையினையுடைய மதி எழாநிற்க, செக்கர்வானத்தைக் கொண்ட அந்திக்காலத்தின்கண்ணே, (௪) முக்கோலைக் கையிலே கொண்ட அந்தணர் முதியமொழியை நினைக்கின்றவர்களைப்போலே, இனமான நாரைகள் ஆரவாரத்தைக் கைவிட்டு இடுமணன்மேலே இருத்தலைச் செய்யும் இலங்குகின்ற நீரையுடைய சேர்ப்பனே ! எ - று.

(௫) அந்தணர், காஷாயம் போர்த்த சூழாங்கள். முதுமொழி - பிரணவம். பெரியநாரைசிறகுசிவந்திருத்தலானும்மூக்குக்‡கரையிலேசென்று||குத்துதலானும் அதனை முக்கோலை ஊன்றியிருந்தஅந்தணரோடு ÷ ஒப்புரைத்தார்.

(௬)நாரை பகற்பொழுதெல்லாம் பல்லுயிர்க்கு வருத்தஞ்செய்து இரைகவர்ந்து அந்திக்காலத்து ஓர் ஆரவாரமின்றித் தீங்குசெய்யாதாரைப் போலே

---

௧. "தினக ரன்கரந் திகழ்க மண்டலம், பனிகொள் செக்கர்தம் படமதாகவே, யினிய வந்தனைக் கெறியும் வேலைசேர், புளித ரொத்ததப் புன்கண் மாலையே" வில்லி. சூதுபோர். ௧௪௨.

௨. "இலங்குநீர்ச் சேர்ப்ப" கலி: ௧௨௫: ௧௫.

௩. "அத்தமென்னும், பொன்னஞ் சிலம்பு கதிரோன் மறைதலும்" இறை. சூ. ௧௮. மேற்கோள்.

௪. இந்நூற்பக்கம் ௩௮: ௨ - ஆம் குறிப்புப் பார்க்க.

௫. "சிறுமீன் கவுட்கொண்ட செந்தாவி நாராய்" ஐந் - எழு. ௧௮.

௬. "கூர்வாய்ப் பறைதபு பெருங்கிழ நாரை, வஞ்சினை தூங்கி யாரவுண்ணு, நீங்காப் பழனப் பெருநகர்க் கூடல்" கல். ௩௧: ௨ - ௪.

